# தமிழ்ச் சோலை

அல்லது

# கட்டுரைத் திரட்டு

## (முதற் பகுதி)

ஆக்கியோர் :

திருவாளர் - திரு. வி. கலியாணசுந்தரனார்



சாது அச்சுக்கூடம்

மயிலாப்பூர், சென்னை-4

 1959 விலை ரூபா 5

# முகவுரை

போதகாசிரியத் தொழிலை விடுத்த பின்னைப் பத்திரிகாசிரியத் தொழிலை மேற்கொண்டேன். 'தேசபக்தன்', 'நவசக்தி' என்னும் இரண்டு பத்திரிகைகட்கு ஆசிரியனானேன்.

1917-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 7-ம் நாள் 'தேசபக்தன்' (தினப் பதிப்பு) ஆசிரிய பீடத்தில் அமர்ந்தேன்; 1920-ம் ஆண்டு ஜூலை மாதம் 22-ம் நாள் அதனினின்றும் விலகினேன். பின்னே 1920-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 22-ம் நாள் 'நவசக்தி' (வாரப் பதிப்பு) தொடங்கப்பட்டது. 'நவசக்தி' ஆசிரியனாகப் பதின்மூன்று ஆண்டு சேவை செய்தேன்.

'நவசக்தி'யின் பத்தாம் ஆண்டில் அரசாங்கத்தாரால் ஈடுகாணம் கேட்கப்பட்டது. அது காரணமாக 'நவசக்தி' ஆறுமாதகாலம் நிறுத்தப்பட்டது. இவ் வாறுமாதகாலத்தில் ஏற்பட்ட கஷ்ட நஷ்டங்கள், 'நவசக்தி'யை இடையிடையே கிரகணம் பற்றுமாறு செய்தன. அதன் பயனாக இப்பொழுது 'நவசக்தி' மீண்டும் நின்றிருக்கிறது.

'தேசபக்த'னும், 'நவசக்தி'யும் அரசியற் கிளர்ச்சிக்கெனத் தோற்றுவிக்கப்பட்ட பத்திரிகைகளாதலால், அவைகளில் பெரிதும் அவ்வப்போதைய அரசியல் நிலையை ஒட்டி ஆசிரியக் கட்டுரைகள் எழுதப்படுவது வழக்கம்; சிலபோது பொதுக் கட்டுரைகளும் எழுதப்படுவதுண்டு.

'தேசபக்த'னில் என்னால் எழுதப்பெற்ற பொதுக் கட்டுரைகளில் ஒரு சிறு பகுதி நூலாக வெளிவந்துள்ளது. அந்நூலின் பெயர் 'தேசபக்தாமிர்தம்' என்பது.

'நவசக்தி'யில் ஆசிரியக் கட்டுரைகளுடன், முதற் பக்கத்தில் 'சிலம்பொலி' என்னுந் தலைப்பின்கீழ் வேறு பல கட்டுரைகளும் என்னால் வரையப்பட்டுள்ளன. அவ்வாசிரியக் கட்டுரைகளிலும் 'சிலம்பொலி'க் கட்டுரைகளிலும் பொதுவாயுள்ளனவற்றை நூல்வடிவில் வெளியிடுமாறு தோழர் சிலர் விரும்பினர்.

அக்கட்டுரைகளை யெல்லாம் திரட்டி வெளியிடின் நூல் தொகையில் பெருகும். அவ்வளவு அநாவசியம். சில கட்டுரைகளைத் திரட்டி நூலாக்கி இரண்டொரு பகுதி களாக வெளியிடும் முயற்சியில் தலைப்பட்டேன்.

பலதிறக் கட்டுரைகளால் ஆக்கப்பெற்ற இந்நூலுக்கு எப்பெயர் சூட்டுவது என்று எண்ணலானேன். பலதிற மரஞ் செடி கொடி முதலியவற்றைக் கொண்ட சோலை மீது எனது எண்ணஞ் சென்றது. அவ்வெண்ணம், 'தமிழ்ச் சோலை' என்று பரிணமித்தது.

'தமிழ்ச் சோலை' ஓர் ஒழுங்குபட்ட நூலன்று. பல வேறு காலங்களில் பலவாறு எழுதப்பெற்ற கட்டுரைகளைக் கொண்ட ஒரு நூல் எங்ஙனம் ஒழுங்குபட்டதாகும்? பல வகைக் கலம்பகங்களைத் தொடர்புபடுத்தலும் அருமை யன்றோ? தலைப்புக்களை யொட்டி ஒருவழியில் கட்டுரைகள் கோவை செய்யப்பட் டிருக்கின்றன. பொருளில் சில தொடர்பு பெற்றும், சில தொடர்பு பெறாமலும் இருக்கும்.

இந்நூற் கட்டுரைகள் யாவும் 'நவசக்தி'யில் வெளி வந்தவை. அவைகளுள் பெரும்பான்மையன, 'நவசக்தி'க் கென்று எழுதப்பட்டன. சிறுபான்மையன, நண்பர்கள் விருப்பத்துக்கிணங்கி, அவர்களால் நடத்தப்பெறும் பத் திரிகைகட்கென்று வரையப்பெற்றன. மிகச் சில சொற் பொழிவுகளு மிருக்கின்றன. இவைகள் 'நவசக்தி'யில் வெளிவந்த முறைப்படி, கட்டுரைகளின் அடியில் நாட்கள் குறிக்கப்பட்டுள்ளன.

ஆசிரியர் முறையில் எழுதப்பெற்ற கட்டுரைகளில் தன்மைப் பன்மையும், மற்றக் கட்டுரைகளில் தன்மை ஒருமையும் பெய்யப்பட்டிருத்தல் கவனிக்கற்பாலது.

பத்திரிகைக் கட்டுரைகள் சுருங்கியமுறையில் எழுதப் படுவது வழக்கம். சில இடங்களில் விளக்கம் தேவையா யிருக்கும். இந்நூற்கண் அத்தேவை நேருமேல், என்னால் இயற்றப்பெற்றுள்ள வேறு நூல்களுடன் உறவு கொள்ளு மாறு நேயர்களை வேண்டுகிறேன். பிழை பொறுக்க.

**திருவாரூர் - வி. கலியாணசுந்தரன்**

# உள்ளுறை




# தமிழ்ச் சோலை

அல்லது

# கட்டுரைத் திரட்டு

## "நவசக்தி"

நவசக்தி என்பது புதிய சக்தி எனப் பொருள்படும். ஐரோப்பா கண்டத்தில் நடைபெற்று இப்பொழுது ஓய்வு பெற்றுள்ள மகாயுத்தம், ஒரு புது சக்தியை உலகமுழுவதும் எழுப்பி யிருக்கிறது. இலட்சக்கணக்கான உயிர்களையும், கோடிக்கணக்கான பொருளையும் உண்டு ஏப்பமிட்டுக்கொண் டிருக்கும் யுத்த தேவதை, உலகத்துக்கு வழங்கிய நுண் பொருள்கள் சில. அவைகளுள் ஒன்று, 'நவசக்தி'யை உலகத்தில் தோற்றுவித்தது. அந் நவசக்தி யாது என்னும் வினவைச் சிலர் பொறிக்கலாம். அதைக் கூறுதும்.

கொடுங்கோன்மையும், செல்வச் செருக்கும் உலகத்தைத் துன்புறுத்திக்கொண் டிருந்தன. சில இடங்களில் மாத்திரம் ஜனநாயக ஒலியும், தொழிலாளர் ஆரவாரமும் முழங்கிக்கொண் டிருந்தன. ஐரோப்பா யுத்தமானது, உலக முழுவதும் அவ்வொலியும் ஆரவாரமும் முழங்குமாறு செய்துவிட்டது. இப்பொழுது எங்கணும் ஜனநாயக எழுச்சியும், தொழிலாளர் கிளர்ச்சியும் கொழுந்து விட்டெரிகின்றன. சக்திகளாகிய பெண்மக்களும் தங்கள் உரிமை நாடிக் கிளர்ச்சி செய்கிறார்கள். ஜனநாயகத்தை அடக்கிக்

கொண்டிருந்த அசுர சக்தியும், தொழிலாளர்களை நசுக்கிக் கொண்டிருந்த பூத சக்தியும், பெண்மக்களை ஒடுக்கிக் கொண்டிருந்த மிருக சக்தியும் இனித் தலைகாட்டா. அவைகள் தலை சாய்ந்து கிடக்கின்றன. அவைகளின் வேகம் குன்றிவருகிறது. நீண்ட காலமாக உலகத்தை வதைத்து வந்த அசுர பூத மிருக சுபாவங்களைச் சிதைத் தழித் தொழிக்கவே 'நவசக்தி' உலகத்தில் தோன்றி யிருக்கிறது. அச்சக்தி, மலர்ந்த முகத்தோடும் புன்சிரிப்போடும் உதயமாகிறாள். அஞ்ஞான இருள் விலகுகிறது. கடவுள் படைப்புக்கு உட்பட்ட உயிர்களெல்லாம் தத்தம் சுதந்திரத் தொழிலை எதிர்பார்க்கின்றன. இனி, உலகமெங்குஞ் சுதந்திரம், சகோதரத்துவம், சமத்துவம் ஓங்கும். இவ்வுண்மை கண்டே நம் அரசர் பெருமானும் இப்பொழுது வழங்கப்பட்டுள்ள (மாண்டேகு-செம்ஸ்பர்ட்) சீர்திருத்த சாசனத்தில் தமது இலச்சினை பொறித்தபோது, 'நவயுகம்' தோன்றுகிறது என்று கூறியுள்ளார். மகாயுத்தத்தின் பின்னர், உலகம் தரிசித்துவரும் 'நவசக்தி' காலமாகிய இக்காலத்தில் வெளிவரும் இப்பத்திரிகைக்கு 'நவசக்தி' என்ற பெயரை நிறுவினோம். இப்பத்திரிகையில் வெளிவரும் பொருள்கள் நவசக்தியைத் தமிழ் நாட்டில் தாண்டவம் புரியச் செய்யும் என்பதில் ஐயமில்லை.

'நவசக்தி' என்பதற்குச் சாத்திரம் படித்தவர்கள் ஒன்பது சக்தி என்று பொருள் கூறுவார்கள். அவ்வொன்பது சக்திமார்களும் ஒன்பது வழியாக உலகத்தில் தொழில் புரிந்து வருவதாகப் புராணங்கள் கூறுகின்றன. அவ்வழியே நின்று நமது 'நவசக்தி'யும் தமிழ் நாட்டில் தொண்டு செய்து வருவள் என்று உறுதி கூறுகிறோம். அவ்வொன்பது வழிகள் வருமாறு :—

(1) மக்கள் சுதந்திரத்துக்கு அடிப்படையாக உள்ளது ஜனநாயக முறையாதலால், அதை நாடி உழைத்தல்.

(2) ஜனநாயக முறைக்கு அடிகோல வேண்டுவது தொழிலாளர் இயக்கமாதலால், அவ்வியக்கத்தை வளர்க்க முயலல்.

(3) தொழிலாளர் இயக்கத்தை வலுப்படுத்தவும், அவர்கள் குறைகளை நிவர்த்திக்கவும், அவர்கள்வழி ஆட்சி முறையைத் திருப்பவும், அவர்கட்கெனத் தனியாக உழைக்கவும் தொழிற் கட்சியை வகுத்தல்.

(4) இந்தியாவில் விவசாயம் கைத்தொழில் முதலியவற்றை ஓம்பலும், விவசாயிகளின் கஷ்டங்களைப் போக்க முயலலும், தொழிற்சாலைகளைப் பெருக்குதலும்.

(5) பெண்மக்கள் நலத்துக்குப் பாடுபடுதல்.

(6) தமிழ்மொழியையும், தமிழ்நாட்டுப் பழைய வழக்க ஒழுக்கங்கள் முதலியவற்றையும் செப்பஞ் செய்தல்.

(7) தமிழ் நாட்டில் தோன்றியுள்ள சாதிப்பகை, வகுப்புத் துவேஷம் முதலியவற்றை ஒழித்துச் சகோதர நேயத்தை வளர்த்தல்.

(8) தேசத்துக்குத் தீங்கிழைக்குங் கட்சிகளைக் கண்டித்து, அக்கட்சித் தலைவர்களை நேசித்துத், தேச வளர்ச்சியை நாடும் கட்சியில் அவர்களைத் திருப்ப முயலல்.

(9) இந்தியாவில் பிறந்த அனைவரையும் இந்தியராகக் கருதி, அவரை ஓரினமாக்கி, அவர் நலத்துக்காகத் தியாகஞ் செய்தல்.

இவ்வொன்பது கொள்கைகளையும் அடிப்படையாகக் கொண்டு, அவைகளினின்றும் காலத்துக்கேற்றவாறு பிரியும் பலவேறு கோட்பாடுகளை அநுவதித்து, உண்மைத் தலைவர்கள் ஆணைவழி நின்று, 'நவசக்தி' தன் தொண்டைச் செய்து வருவாள். (22-10-1920)

# தமிழ்நாடு

நமது இந்தியாதேசம் ஒரு கண்டம் போன்றது. கண்டம்போன்ற இத்தேசம் பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. அப்பகுதிகளுள் ஒன்றாயிருப்பது நம் தமிழ்நாடு. இத்தமிழ்நாட்டின் எல்லையை, 'வடவேங்கடந் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்' என்று தொல்காப்பியப் பாயிரம் வகுத்துக் கூறியிருக்கிறது. இவ்வெல்லைக்கு உட்பட்ட மக்கள் நாகரிகத்தில் பெரிதுஞ் சிறந்து விளங்கினார்கள். இவர் தம் நாகரிகத்தை அறிவிக்கும் கருவிகள் பண்டைத் தமிழ் நூல்களாகும்.

இப்பொழுது தமிழ்மக்கள் உலகத்தின் பல பாகங்களிலும் பரவியிருக்கிறார்கள். சில இடங்களில் குடிபுகுந்த தமிழ் மக்கள், தங்கள் பழமையை மறந்து புதுமையை மணந்து வாழ்கிறார்கள். உலகத்திலுள்ள நாகரிக இனத்தவர்களுள் தமிழ்மக்கள் தலையாயவர் என்று கூறுவது மிகையாகாது. நேற்றுத் தோன்றிய இனத்தவர்கள் தங்கள் முயற்சியால் எவ்வளவோ அருங்காரியங்கள் செய்கிறார்கள். பழங் கூட்டத்தவர்களாகிய தமிழ்மக்கள், தங்கள் நிலை, தங்கள் முன்னோர்கள் நிலை முதலியவற்றைக் கருதாது வாழ்ந்து வருவதால், அவர்கள் எல்லா வழியிலுஞ் சிறுமையுற்று வருகிறார்கள். ஆதலால், பண்டைத் தமிழ்நாட்டில் வாழுந் தமிழ்மக்களும், வேறு நாடுகளில் குடிபுகுந்து வாழுந் தமிழ் மக்களும் தங்கள் நிலையை வளம்படுத்த முயல்வார்களாக.

முதலாவது தமிழ்மக்கள் தங்கள் பழமையைப் பாராட்டப் பயிற்சி செய்தல் வேண்டும். நில நூல், தாவர நூல், உயிர் நூல் முதலிய நூல்களை ஆராய்ச்சிசெய்த கூர்த்தமதியினராகிய ஹெக்கல் முதலிய அறிஞர், மக்கள் முதல் முதல் தோன்றிய நிலத்தைக் குறிப்பிட்டிருப்பதைச் சரித்திரக்காரர் ஆராயும்பொழுது, அந்நிலம் பழந் தமிழ்நாடாகவே முடிந்திருக்கிறதென்று அவர் கருதுகிறார். இவ்வுண்மையை விரிப்பின் அது பெருகும்.

தமிழ்நாட்டிற்றோன்றிய முதன்மக்கள் பேசிய மொழியே தமிழ்மொழி யென்பது. எம்மொழியின் கூட்டுறவுமின்றித் தமிழ்மொழி இயங்கும் ஆற்றல் பெற்றிருப்ப தொன்றே அதன் தனிமையை வலியுறுத்தும். தமிழ்மக்களின் தொன்மையும் - அவர்களது மொழியின் தொன்மையும் - சரித்திர காலத்தையுங் கடந்து ஒளிர்வனவாம். பஃறுளி யாற்றின் நிலையைப் புறநானூறு முதலிய நூல்கள் கூறுகின்றன. அதன் அழிவைச் சிலப்பதிகாரம் முதலிய நூல்கள் கூறுகின்றன. பஃறுளியும், குமரியும், அவைகள் ஓடிய நாடும் கடலால் விழுங்கப்பட்டன. அந்நாட்டில் வாழ்ந்த மக்களிடைப் பூத்த நாகரிகமும் அறிவுமே இப்பொழுது உலகத்தில் பரந்தும் விரிந்தும் மருவியும் நிலவுகின்றன. சரித்திர காலத்துக்கு எத்துணையோ நூற்றாண்டுகளுக்கு முன்னர்த்தோன்றிய தமிழ் மக்கள் பேசிய மொழி, இன்னும் இறந்துபடாது நிலவி வருவதை, நுண்ணறிவால் ஆராய்வோர்க்கு, அம்மொழியின் தொன்மையும், வளமும், பண்பும் புலனாகும்.

பழந் தமிழ்நாட்டைக் கடல்கொண்டது. அதனாலும் தமிழ் அழியவில்லை. எத்துணையோ புதுமக்கள் தமிழ்நாட்டில் குடிபுகுந்தார்கள். அதனாலும் தமிழ் அழியவில்லை. தமிழைத் தொலைக்கவும் சிலர் முயன்றனர். அவர்தம் முயற்சியாலும் தமிழ் அழியவில்லை. தமிழ்மொழிக்குப் பின்னர் எத்துணையோ மொழிகள் தோன்றி இறந்தன. ஆனால் தமிழ் மொழியோ சாவா மூவா மருந்தாக உலகில் நிலவுகிறது. இம் மொழியினூடே எத்துணையோ மொழிகள் கலந்தன; கலக்கின்றன. அவைகளின் கலப்பாலாதல் தமிழ் அழிந்ததோ? இல்லை. தமிழின் தொன்மையும் தன்மையும் என்னே! என்னே!!

தமிழ் நாட்டில் வாழ்ந்த மக்களிற் சிலர், ஆரியர் குடி புகுந்த காலத்தில் ஆரிய மதத்தைத் தழுவினர்; மகமதியர் குடிபுகுந்த காலத்தில் மகமதிய மதத்தைத் தழுவினர்; மேல் நாட்டார் குடிபுகுந்த காலத்தில் கிறிஸ்துவ மதத்தைத் தழுவினர். இவரோடு கலவாத மக்கள் இன்னுந் தனியராய் வாழ்ந்து வருகிறார்கள். தமிழ்மக்கள் எம் மதத்தைத்

தழுவினும் தழுவுக. ஆனால் அவர்கள் தங்களைத் தமிழ்மக்கள் என்பதைமட்டும் மறத்தலாகாது. அவர்கள் தங்கள் முன்னோரிடத்தும், மொழியினிடத்தும், நாட்டினிடத்தும் என்றும் பற்றுடையவர்களாய் வாழ்தல் வேண்டும்.

பண்டைக்காலத்தில் தமிழ்மக்களுக்குள் சாதி வேற்றுமை இல்லை. அவர்கள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நிலப் பாகுபாடு செய்து, அந்நிலப் பெயரையே தங்களுக்குரிய வகுப்புப் பெயராக் கொண்டு வாழ்ந்து வந்தார்கள். தொழின்முறைபற்றி வந்த பெயர்கள், பிற்றைஞான்று பிறப்புப் பெயர்களாக மாற்றப்பட்டன. இன்னும், தன்னந்தனித் தமிழ் மக்களிடை (ஆதிதிராவிடர்களிடை) சாதிவேற்றுமை கிடையாது. இஃதொன்றே பண்டைத் தமிழ்மக்கள், பிறப்பால் சாதிவேற்றுமை கொண்டொழுகவில்லை என்னும் உண்மைக்குச் சான்று கூறுவதாகும்.

பண்டைக் காலத்து வாழ்ந்த தமிழ் மக்கள் சமய ஞானத்தில் சிறந்து விளங்கினார்கள். பண்டைத் தமிழ்மக்களை நாத்திகர்கள் என்று கூறுவது நூலாராய்ச்சி யில்லாதார் கூற்றாக முடியும். தொல்காப்பிய மென்னும் சீரிய தமிழ் நூலில் 'கந்தழி' என்னும் பொருளைப் பற்றிய வழக்கைக் காணலாம். 'கந்தழி' என்பது கட்டு அற்றது என்னும் பொருளையுடையது. பின்வந்தார், அதைத் தத்துவங் கடந்த தனிப் பரம்பொருள் என்று கூறலானார். கட்டற்றது என்பதும், தத்துவங் கடந்த தனிப் பரம்பொருள் என்பதும் ஒன்றே. கட்டை அல்லது தத்துவத்தைக் கடந்து பொலியும் ஒன்றையே கடவுள் என்று கூறுவது. கட்டற்ற இடமே அன்புமயம். இவ்வன்பையே தமிழ்மக்கள் 'கந்தழி' என்றும் 'கடவுள்' என்றும் போற்றி வந்தார்கள். இதனால், தமிழ்மக்கள் அன்பு அல்லது கடவுள் என்ற ஒரு கட்டுமில்லா ஒன்றை வணங்கி வந்தார்கள் என்பது தெரியவருகிறது. ஆகவே, அன்பாகிய கடவுளைத் தொழுந் தமிழ்மக்கள் சமயத்தை அன்பு சமயம் என்று கூறலாம். அன்பாகிய கடவுளைத் தமிழ் மக்கள், ஒழுக்கம் என்னும் மலரால் வழிபட்டு வந்தார்கள். 'ஒழுக்கம் விழுப்பந் தரலால் ஒழுக்கம்

உயிரினும் ஓம்பப் படும்' என்னுந் திருவள்ளுவர் மொழி ஈண்டுக் கருதற்பாலது. ஒழுக்கமாவது, (கொலை களவு கள் காமம் பொய் ஆகிய) மறச் செயல்களை விடுத்து, அறச் செயல் களைக் கடைப்பிடித்து நிற்பது.

பண்டைத் தமிழ்மக்களது அரசியல் எவராலும் போற் றுந்தகையது. அவ்வரசியல், செல்வர் ஏழை என்னும் வேற் றுமை விளைவியாதது; அது, கிராமத்தினின்றும் அரும்பியது. கிராமங்களில் மக்கள் வாழ்க்கைக்கு வேண்டிய துறைகள் எல்லாம் ஒழுங்குபெறப் பொலிந்திருந்தன. கிராமம்,கிராமத்தி லுள்ள அனைவர்க்கும் பொதுவா யிருந்தது. ஒவ்வொரு தொழிற் கூட்டத்தார் உழைப்புக்களெல்லாஞ் சேர்ந்தே கிராம வாழ்க்கையை நடத்திக்கொண்டிருந்தன. கிராமப் பஞ்சாயத்து, கிராம நீதியை வளர்த்து வந்தது. கிராமத்தில் வாழ்ந்த மக்கள் தங்களுக்கு வேண்டுவனவற்றைத் தங்கள் கிராமத்திலேயே பெரிதும் பெற்றுவந்தார்கள். கிராமத்துத் தலைவர்கள் விரும்பியவாறே மன்னன் ஆட்சி செய்வான். மற்றத் தொழிலாளர் போலவே மன்னனும் ஒரு தொழி லாளியாகவே கருதப்பட்டான். கொடிய விலங்குகள், கள்ளர், மாற்றார் முதலியோரால் கிராமவாசிகளுக்குத் தீங்கு நேராதவாறு காத்துக்கொள்ளுந் தொழிலை மன்னன் செய்து வருவான். அத்தொழிலுக்குக் கூலியாகக் கிராமத்து மக்கள் சிறு பகுதி கட்டுவார்கள். கிராமத்து மக்கள் பண்டைக் காலத்தில் தங்கள் கிராம விளைவைத் தாங்களே பயன்படுத்து வார்கள். கிராமத்தின் பொருள்கள் கிராமத்தார்க்கு உரியன வாக இருந்தன. கடவுள் படைப்புக்கு உட்பட்ட பொருள் கள் ஒரு கூட்டத்தவர்க்கு உரியனவாகவும் வேறு கூட்டத் தவர்க்கு உரியனவாகாமலும் அக்காலத்தில் பயன்படவில்லை. சுருங்கக் கூறின், ஏழை செல்வர் என்னும் வேற்றுமை விளைவியாத அரசியலைத் தமிழ் மக்கள் அவலம்பித்து வந்தார்கள் என்று கூறலாம்.

தமிழ் மக்கள், தங்கள் வாழ்க்கைக்கு வேண்டிய கல்வித் துறைகளை வளம்படுத்தி யிருந்தார்கள். தமிழில் மருத்துவ நூல், கோள்நூல், நீதிநூல், கடவுள்நூல், இலக்கண நூல்,

இலக்கியநூல் முதலிய நூல்களிருக்கின்றன. இந்நூல்களிற் சில, சரித்திர காலத்துக்கு முன்னரே யாக்கப்பட்டவை. தமிழ் மக்களின் 'தன்னாட்சி' வீழ்ந்துபட்டமையானும், பல நாட்டார் தமிழ் நாட்டில் புகுந்தமையானும் தமிழ் மொழிப் புலமையுடையார் தொகை அருகிற்று. இவ்விடையூறுகள் நிகழாதிருக்குமாயின், தமிழ்மொழி, உலகம் போற்றும் ஒரு பெரும் மொழியாக மாண்புற்றிருக்கும்.

இக்கால அறிஞர்கள் புதிதாகக் காணுஞ் சில பொருள்கள் பண்டைத் தமிழ் நூல்களில் மல்கிக் கிடக்கின்றன. இக்கால உலகத் திருத்தத்துக்கு வேண்டப்படும் பல செம்பொருள்களும் தமிழ் நூல்களில் பல்கிக் கிடக்கின்றன. இதனால் பண்டைத் தமிழ்ப்புலவர்கள் அறிவு உழைப்பின் பெற்றியை என்னென்று பாராட்டுவது? பண்டைத் தமிழ் நூல்களை முறையாக ஆராய்வோர்பால், அன்பு, அமைதி, பொறுமை, இன்னா செய்யாமை, இயற்கையின்பம் முதலிய நறுங்குணங்கள் பொலிதல் காணலாம். இடைக்காலத்துத் தமிழ் நூல்களிலும், தற்காலத்துத் தமிழ் நூல்களிலும் பல, தமிழ் நாட்டின் சிறப்பைக் குலைக்க வந்த கோடரிக்காம்புகளாய்த் தமிழுக்குக் கேடு சூழ்ந்து வருகின்றன.

பண்டைத் தமிழ் மக்கள், பெரிதும் கீரை வகைகளையும், கிழங்கு வகைகளையும், பழ வகைகளையும், நெல் கம்பு வரகு கேழ்வரகு முதலிய தானிய வகைகளையும், தேன் முதலியவற்றையும் உண்டு காலங்கழித்து வந்தார்கள். மலையும் கானும் ஆற்றோரமும் கடலோரமும் அவர்களுக்கு உறைவிடங்களாக இருந்தன. அன்னார் பெரிதும் இயற்கையோடு கலந்த வாழ்க்கையை மேற்கொண்டொழுகி வந்தனர். அக்காலத்தில் பெண்மக்கள் அடிமைகளாகப் பாவிக்கப்படவில்லை. அவர்களும் ஆண் மக்களைப்போல எல்லா உரிமைகளையும் பெற்றுவந்தார்கள்.

சுருங்கச் சொல்லின், தமிழ் நாடு பழைய காலத்தில் நாகரிகம் நிரம்பப் பெற்ற நாடாயிருந்தது என்று சொல்லலாம். அத்தகைய நாடு இந்நாளில் எந்நிலையிலிருக்கிறது? இதைக் கூர்த்த மதியொடு ஆராயும் ஒவ்வொரு தமிழ்மகனும்

தமிழ்மகளும் உலகத்தில் வாழவும் எண்ணங் கொள்வரோ? தமிழ் நாட்டின் வளம் எங்கே? தமிழ் நாட்டின் வனப்பு எங்கே? தமிழ் நாட்டின் நாகரிகம் எங்கே? தமிழ் நாட்டின் மக்கள் எங்கே? தமிழ் நாட்டின் அன்பெங்கே? தமிழ் நாடெங்கே? தமிழர்களே! சிந்தியுங்கள். அநாகரிக மிலேச்சர்களெல்லாம் நாகரிக மனிதர்களாகி விட்டார்களே! சரித்திர காலத்துக்கு முன்னரே, நாகரிக மனிதர்களாக வாழ்ந்த நீங்கள், இப்பொழுது தேவர்களாகவல்லவோ வாழ்தல் வேண்டும்? நீங்கள் செல்வங்களை இழந்து வறியவர்களாய் வாடுகிறீர்களே! உங்களைப்போல் வறியவர்களாய் வாழ்கிறவர்கள் உலகத்திலுண்டோ? தமிழர்களே! கண் விழியுங்கள்! எழுங்கள்!

தமிழ் நாட்டைப் பழைய நிலைக்குக் கொண்டுவர வேண்டுமாயின், தமிழ் மக்கள் பலதிற உழைப்புக்களில் தலைப்படல் வேண்டும். தமிழ் மக்கள், முதலாவது தங்கள் மொழியினிடத்துப் பற்றுக்கொள்ளல் வேண்டும். மேலே கூறியபடி, தமிழ் மக்கள் எம்மதத்தைப் பற்றி ஒழுகினும் ஒழுகுக. அவர்கள் மொழிப்பற்றை மட்டும் விடுதலாகாது.

நாட்டைப் பண்படுத்தும் கருவிகள் பல. அவைகளுள் சிறந்தது மொழி. ஆதலால் நாட்டவர்க்கு மொழிப்பற்று, இன்றியமையாதது. தமிழ் நாட்டில் திலகர் பெருமான் காந்தியடிகள் போன்ற தேசபக்தர்கள் தோன்றாமைக்குக் காரணம் தமிழர்களிடம் மொழிப்பற் றின்மையேயாகும்.

வங்காளிகள் வங்க மொழியில் அளவிறந்த காதல் கொண்டிருக்கிறார்கள். மஹாராஷ்டிரர் தம் மொழியில் பற்றுக்கொண்டே தேச சேவை செய்கின்றனர். அமிர்தசரஸ் காங்கரஸ் வரவேற்பு உபந்யாசமும், நாகபுரி காங்கரஸ் வரவேற்பு உபந்யாசமும் எம்மொழியில் நடைபெற்றன? ஹிந்தி ஹிந்துஸ்தானி பாஷைகளில் நடைபெற்றன. தமிழ் நாட்டில் காங்கரஸ் கூடின், தமிழில் வரவேற்பு உபந்யாசம் நிகழப்பெறுமோ? மொழியினிடத்துப் பற்றில்லாதார் தேச சேவை, இடம்பத்தை அடிப்படையாகக் கொண்டதாக முடியும்.

இப்பொழுது சில தலைவர்கள் கட்டுரைகளை முதலில் ஆங்கிலத்தில் எழுதிப் பின்னைத் தமிழில் மொழிபெயர்க்கும் வழக்கத்தை ஏற்று வருகிறார்கள். அதுவுங் கூடாது. தமிழிலேயே முதலில் கட்டுரைகளை எழுதப் பழகல்வேண்டும். கருத்துஞ் சொல்லும் செயலும் தமிழ்மயமாக இருத்தல் வேண்டும். பிற கருத்தும், பிற சொல்லும், பிற செயலும் தேசப்பற்றை வளர்க்கமாட்டா. ஆகவே, முதலில் தமிழ் மொழியை வளர்க்கத் தேசபக்தர்கள் முயலல்வேண்டும்.

காங்கரஸ் அமைப்பு இப்பொழுது புதுக்கப்பட்டிருக்கிறது. காங்கரஸ் அமைப்பு, நமது தேசத்தைப் பாஷைக்கேற்றவாறு பிரித்திருக்கிறது. இதன் நோக்கம் யாது? அவ்வந்நாடு, அவ்வந்நாட்டின் வழக்க வொழுக்கங்களை அவ்வந்நாட்டிற் கேற்றவாறு கொண்டொழுகல் வேண்டுமென்பதேயாகும். ஆதலால், தமிழ் நாட்டுக் காங்கரஸ் கூட்டத்தார், தமிழ் நாட்டவரது முன்னைய நிலையை ஆராய்ந்து, அதற்கேற்ற முறைகளைக் கோலுவாராக.

தமிழ் நாட்டுக் காங்கரஸ் கூட்டத்தார் நிகழ்ச்சி முறைகளைத் தமிழிலேயே நடாத்தல் வேண்டும்; மாறாக நடப்பாராயின், நாட்டார் அவரைத் தமிழ் வழியில் நடாத்த முயலல் வேண்டும். தமிழ் நாட்டுக் காங்கரஸ் கூட்டத்தார் காங்கரஸ் தீர்மானப்படி ஆங்காங்கே நாட்டுக் கல்லூரி அமைக்கக் கடமைப்பட் டிருக்கின்றனர். முதலாவது சென்னையில் இரண்டு தமிழ்ச் சாலைகள் அமைக்குமாறு அவரை வேண்டுகிறோம். ஒன்றில் தமிழ்மொழி போதிக்கப்படல்வேண்டும்; மற்றொன்றில் மேல்நாட்டுப் பொருள்நூல், பூத பௌதிக நூல்முதலியன தமிழ் நாட்டவர்க்குப் பயன்படும்பொருட்டு, அவைகளைத் தமிழில் மொழிபெயர்க்கப் போதிக்கப்படல் வேண்டும். (21-1-1921)

# நமது நாடு

நமது நாட்டின் மகாநாடு இம்முறை இவ்வார முடிவில் திருப்பூரில் கூடப்போகிறது. அம்மகாநாட்டுக்கு யாத்திரை செல்லுமாறு ஸ்ரீமான் சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார் பத்திரிகைகளுக்கு எழுதியிருக்கிறார். தமிழ்மக்கள் பலர் அம்மகாநாட்டுக்குச் செல்வர். அவ்வேளையில் அவர்களுக்கு 'நமது நாடு எது?' என்பதை நினைவூட்ட இன்று 'நமது நாடு' என்னும் மகுடம் சூட்டி எழுதுகிறோம்.

நாம் பிறந்த இந்நாட்டை 'நமது நாடு' என்று பெருமிதமாகக் கூறிக்கொள்கிறோம். ஆண்டவன் நமக்களித்த இந்நாட்டை 'நமதுநாடு' என்று கூறும் உரிமை நமக்கில்லையோ? நமது நாடு எது? 'வடவேங்கடந் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறு நல்லுலகம்' என்று பனம்பாரனார் அளந்து எல்லையிட்டுக் கூறிய நிலப்பரப்போ நமது நாடு? அந்நிலப் பரப்பில்வாழ்ந்த மக்களின் வழக்க ஒழுக்கங்கள், கல்வி, வீரம், அன்பு, அரசியல், கலைகள், வேறுபல நாகரிகத் துறைகள் முதலியன ஒன்றிய ஒன்றையே 'நமது நாடு' என்று கொள்கிறோம். புராண நூல்கள், நாட்டுப்படலங்களை வகுத்துக் கூறுமிடத்து, வெறும் நிலப்பரப்புகளைப்பற்றியோ கூறுகின்றன? நாட்டுப்படலங்களை நோக்குழி, நாட்டுமக்களும், அவர் நெறிகளும், ஆடல் பாடல்களும், தொழில் முறைகளும், வழக்க ஒழுக்கங்களும், அரசியல் முறைகளும், இயற்கை வனப்புகளும், இன்ன பிறவும் அவைகளில் திரண்டு நிற்பதைக் காணலாம். 'நாடு' என்பது நிலப்பரப்பு மாத்திர மன்றென்க.

நமது நாட்டை நம்முன்னோர்கள் தமிழ்நாடு என்றார்கள். அத்தமிழ்நாடு இப்பொழுது எங்கே என்று நாம் வினவுகிறோம். நிலப்பரப்பு இருக்கிறது; தமிழ்மக்கள் இருக்கிறார்கள். ஆனால் தமிழ்நாட்டைக் காணோம். முற்றிலுங் காணோம் என்று கூறத் துணிகிறோமில்லை. தமிழ்நாடு சிறிது புலனாகிக் கொண்டேயிருக்கிறது. தமிழ்நாடு தமிழ் நூல்களில் உறங்கிக்

கொண்டிருப்பதைக் காண்கிறோம். தமிழ்நாடு தமிழ்மக்க ளிடைப் பெரிதுந் தவழ்வதைக் காண்கிறோமில்லை.

தமிழ் நாட்டின் முன்னே எத்துணையோ நாடுகள் எழுந் தன; ஆடின; பாடின; வீழ்ந்தன. தமிழ்நாடோ இன்னும் வீழாமலிருக்கிறது! பண்டைத் தமிழ்மக்கள் தங்கள் நாட் டிற்குக் கோலிய காலின் உரம் என்னே! என்னே!! பல்லா யிரம் ஆண்டுகளாக வீழாது வந்த தமிழ்நாடு, இதுபோழ்து வீழ்ந்துவிடுமோ என்னும் அச்சம் தமிழ் நாட்டினிடத்து அன்புடையார் ஒவ்வொருவர் உள்ளத்திலும் தோன்றியிருக் கிறது. இப்பொழுது தமிழ்நாட்டுக்குத் தோன்றியுள்ள இடுக்கண் அவ்வச்சத்தை எழுப்பியிருக்கிறது.

ஒரு நாட்டின் வளம், அதன் மொழியின் கொழுமை நிலையைப் பொறுத்து நிற்கிறது. பண்டைத் தமிழ்நாட்டின் வளம் செழுமையாக இருந்ததென்றால், அதற்குக் காரணம், அந்நாட்டின் மொழி கொழுமை பெற்றிருந்தது என்று கோடல்வேண்டும். இங்கிலாந்து செழுமையாக இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. இதன் பொருளென்னை? இங்கி லாந்துமொழி கொழுமை பெற்றிருக்கிறது என்பதேயாகும். ஆங்கிலமொழி இப்பொழுது உலகமொழியாகப் போற்றப் படுகிறது. ஆங்கிலமாது கலைகளாம் மலைகளில் வாழ்கிறாள். ஆங்கிலமாது எல்லா மாதர்களையுங் கட்டித் தழுவத் தாராள மாக உளங்கொள்வதே, அவள் வளத்துக்கும் வளர்ச்சிக்கும் காரணமாகும். நேற்று முளைத்த ஆங்கில மொழியின் வாழ்வு இவ்வாறாகப், பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்த் தோன் றிப் பண்பட்ட தமிழ்மொழியின் வாழ்வு எவ்வாறு இருக் கிறது? கன்னித்தமிழ் கன்னித்தமிழ் (அழியாததமிழ்) என்று கண்மூடி இறுமாந்து திரியும் பண்டிதர் கூற்று எவ்வா றாயினுமாக. தமிழ் மொழியின் தற்கால நிலையை நோக்கியே 'தமிழ் நாட்டுக்கு இப்பொழுது இடுக்கண் நிகழ்ந்திருக்கிறது' என்று கூறத் துணிவுகொண்டோம்.

தமிழ்மொழியின் நிலை குன்றி வருதற்குரிய காரணங் களைப் பலர் பலவாறு கூறுப. நாம் மூன்று காரணங்களைச்

சிறப்பாகக் கூறுவோம். ஒன்று நாடு உரிமை இழந்திருப்பது; மற்றொன்று தமிழ்ப் புலவர்கள் புதுமையைக் கண்டு மருள்வது; இன்னொன்று ஆங்கிலம் பயிலும் தமிழ்மக்களின் கவலையீனம்.

நாட்டின் உரிமை குறித்துப் பலமுறையில் கிளர்ச்சி நிகழ்ந்து வருகிறது. அக்கிளர்ச்சியோடு மொழி வளர்ச்சிக்குரிய வழிகளையுங் கோலிக்கொண்டு போதல்வேண்டும். இல்லையேல், கிளர்ச்சியால் பெறும் உரிமையை மீண்டும் இழத்தல் நேரும்.

தமிழ்நாட்டில் தோன்றிய ஒவ்வொருவனும் தன் தாய்மொழியினிடத்தில் தணியாக் காதல் கொள்வானாயின், தன் சாதி மாறுபாடு, சமய வேறுபாடு முதலிய சிறு துறைகளில் கருத்தைச் செலுத்த ஒருப்படான். பண்டைக் காலத்தில் தமிழ் வளர்த்த சங்கப் புலவர்கள், பலதிற வகுப்பினர்களாய், பலதிறச் சமயத்தவர்களாயிருந்தும், அவர்கள் தங்களுக்குள் கலாம் விளைத்துக்கொள்ளாது சகோதரர்களாக வாழ்ந்து வந்தார்கள். அவ்வாழ்வை நல்கியது எது? மொழியினிடத்து அப்புலவர்கள் கொண்டிருந்த தணியாக் காதலேயாகும். இப்பொழுது தமிழ்மொழிப் பற்றுத் தமிழ் மக்களிடையில் பதிந்துகிடப்பின், பிராமணர் பிராமணரல்லாதார் பூசல் நிகழ்ந்திருக்குமோ? தமிழ் நாட்டிலுள்ள பிராமணர் பிராமணரல்லாதார் மகமதியர் கிறிஸ்துவர் சமணர் பௌத்தர் தம்மைத் தமிழர் என்று உணர்வாராயின், சட்டசபைப் பிரதிநிதித்துவத்துக்கு அவரவர் வாதஞ் செய்வரோ? தமிழ் நாட்டில் தோன்றியுள்ள பிளவும் பிரிவும் வேறுபாடும் மாறுபாடுமே தமிழ்மொழியின் தற்கால நிலையை விளங்கச்செய்யும். ஆதலால், நாட்டின் உரிமைக்கு உழைப்பதோடு நாட்டின் மொழி வளர்ச்சிக்கும் உழைத்தல் வேண்டும்.

தமிழ்ப் புலவர்கள் புதுமை கண்டு மருள்வதைப்பற்றி விரித்துக் கூறவேண்டுவதில்லை. அவர்கள், 'பழையன கழிதலும் புதியன புகுதலும்' என்ற பாட்டைப் பாடிக்கொண்டு, சொற்குற்றம், சொற்றொடர்க் குற்றம், ஆகுபெயர்க் குற்றம், அன்மொழித் தொகைக் குற்றம் முதலிய குற்றங்களைத்

தடவிக்கொண்டே யிருக்கிறார்கள் ; இக்குற்றங்களைத் தடவித் திரிவதோடு வேறு பல மொழிகளைக் கண்டதும் மருள்கிறார்கள் ; அவைகள்மீது பாய்கிறார்கள். அம்மொழிகளோடு கலந்து உறவாட நந்தமிழ்ப் புலவர்கள் விரும்புகிறார்களில்லை. பண்டைத் தமிழ்ப் புலவர்கள் தங்கள் மொழி வளர்ச்சி கருதியே, 'பழையன கழிதலும் புதியன புகுதலும்' ......என்று கூறினார்கள். திசைச்சொல் முதலிய இலக்கண வழக்குகளை முன்னைத் தமிழர்கள் கொண்டதன் நோக்கம் என்னை ? தற்காலத் தமிழ்ப்புலவர்கள் சற்றுச் சிந்தித்துப் பார்ப்பார்களாக. பழைய இலக்கியங்களிலும் இலக்கணங்களிலும் காணப்படாத விருத்தங்களால் தமிழ் நூல்கள் யாக்கப்பட இடந்தந்த தமிழ்நாடு, என்றும் ஒரே வரம்புவழி நின்று, தன் வளர்ச்சிக்குக் கேடு சூழ்ந்துகொள்ளுமென்று நாம் கருதவில்லை.

பண்டைத் தமிழர்கள் இயற்கைவழி வாழ்வை நடாத்தியவர்களாதலால், அவர்களால் குருட்டு வரம்புகள் கோலப்படவில்லை. இடைக்காலத்தில் சிலர், சொல்லடுக்கு இன்பத்தில் - போலிச் சந்தத்தில் - கருத்தைச் செலுத்தித் தமிழைக் குலைத்தனர். அவர்கள் பின் வந்தவர், பழந்தமிழர் நிலையை மறந்து, இடைக்காலத்தார் நிலையைத் தமிழ்நிலை என்று உணர்ந்து, தமிழ் வளத்தையே கெடுத்தனர். பழந்தமிழ் மலையும், அருவியும், யாழும், நிலவும், சோலையும் மன அமுதமாக இன்னும் அதன் அதன்கண் வாழ்வோருக்கு இன்ப உணவை அளித்து வருகின்றன.

தமிழ்ப் புலவர்களுள் பெரும்பான்மையோர், தங்கள் முன்னோர்கள் கூறிய இயற்கை வருணனைகள் அடங்கிய பாடல்களை நெட்டுருச்செய்தும், அவர்கள் கூறிய வருணனைகளையே மீண்டும் மீண்டும் தங்கள் சொற்களால் அடுக்கி அடுக்கி ஆனந்தமுற்றும் வாழ்கிறார்கள் ; தாங்கள் தங்கள் அகத்தும் புறத்தும் தோன்றும் இயற்கை இன்பத்தில் தோய்ந்து, அதைப் பாக்களால் பாடி மகிழ்கிறார்களில்லை. வேறு பல நாடுகளிலிருந்தும் சில புதுமைகள் வருகின்றன. அவைகளின் ஒளி, தமிழ்ப் புலவர்கள் கண்களை இருளச்

செய்கிறதோ என்னவோ தெரியவில்லை. சுருங்கக் கூறின், தமிழ்ப் புலவர்கள், புதுமையைக் கண்டு மருள்வதனால், தமிழ் நாட்டுக்கு இடுக்கண் நேர்ந்திருக்கிறது என்னலாம்.

தமிழ்ப் புலவர்கள் அறிவு, புதுமைகளில் படர்ந்து பதியாமைக்குக் காரணங்கள் பல சொல்லலாம். அவைகளுள் சிறந்த ஒன்று, அவர்களைப் பீடித்துள்ள வறுமை. இதை நாம் மறக்கவில்லை. இப்பொழுது தமிழ்ப் புலவர்கள் தமிழ் பயிலும் போதே, 'எப்பாடசாலைக்குப் பண்டிதராகப் போகலாம்' என்ற (வயிற்று) நினைவு அவர்கட்குத் தோன்றுகிறது. அவ் வடிமை உணர்வு, அவர்களறிவை விளக்கிப் புதுமையில் புகுத்துமோ? வறுமையுள்ள நாடு, பாட்டுமயமாகவிளங்குதல் அரிது. வறுமையாஞ் சிறுமையில் வீழ்ந்து வருந்தும் தமிழ்ப் புலவர்கள்மீது பழி சுமத்துவதும் வீணேயாகும்.

பண்டைத் தமிழ்ப்புலவர்கள் தங்கள் அறிவால் - பாக்களால் - இலக்கியங்களால் - கடவுளைப் படைத்தார்கள்; சூரிய சந்திரர்களைப் படைத்தார்கள்; அரசுகளைப் படைத்தார்கள்; விதவிதமான உலகங்களைப் படைத்தார்கள். அவர்கள் படைத்த உலகங்கள், அவர்கள் வழிவழி வந்தவர்களுக்கே புலனாகாமல் கிடப்பதை நோக்கும்போது நமது மனம் வருந்துகிறது.

ஆங்கிலம் பயின்றார் கவலையீனத்தின்மீது சிறிது கருத்துச் செலுத்துவோம். இக்கூட்டத்தார் நினைவெழும்போதே நமது உள்ளங் கனன்று கனன்று கொதிக்கிறது. நமது தமிழ் நாட்டைக் கொலைசெய்தவர் செய்கிறவர்-இவரேயாவர். வயிற்றின்பொருட்டு ஆங்கிலம் பயின்று, நாட்டைமறந்து வாழ்ந்து வரும் இவர் வாழ்வு வாழ்வாமோ? வயிற்றுக்கு உழைத்த பிறகாவது இக்கூட்டத்தார் ஏன் நாட்டுக்கு - மொழிக்கு - உழைத்தலாகாது? வயிற்றுக்கு வருந்தி வருந்தி உழலும் தமிழ்ப் புலவரைப் பழிக்கலாமோ? நன்றாகத் தின்று கொழுத்து எப்பமிட்டுத் திரிவோரே பழிப்புக்குரியராவர். தாய்மொழியில் பேசுவதையும் எழுதுவதையும் இழிவெனக் கருதும் இக் கூட்டத்தாராலன்றோ நமது நாடு இந்நிலைக்கு

வந்திருக்கிறது? இவர் பத்தாண்டு - பன்னீராண்டு - பதினைந் தாண்டு-பயிலுங்கல்வியை வயிற்றுக்கும் பட்டத்துக்கும் விற் பது எவ்வளவு இழிதகைமை? ஒவ்வொரு துறையில்பயின்று பட்டம் பெறுவோர், அவ்வத்துறையில் தாய்மொழியில் நூல்கள் எழுதித் தமிழ் நாட்டை ஏன் செழிக்கச் செய்பலா காது? 'இப்பெரியோர்கள்', 'தமிழில் என்ன இருக்கிறது; சரியான இலக்கியங்களில்லை; நாடகங்களில்லை' என்று குறை கூறுவார்கள். குறை கூறும் 'இக்கல்வியாளர்கள்' ஏன் குறை யொழியத் தாங்கள் உழைக்க முன்வருவதில்லை? இவ்வினு விற்கு இவர்கள் என்ன விடை இறுப்பார்கள்?

ஆங்கில பாஷையிலுள்ள நூல்கலெல்லாம் ஆங்கிலேய ரால் எழுதப்பட்ட மூல நூல்களல்ல. எத்துணையோ ஜெர்மானிய அறிஞர், பிரஞ்சு அறிஞர், ருஷிய அறிஞர் முதலியோர் கருத்துக்களை - நூல்களை - ஆங்கிலேயர் தந் தாய்மொழியில் பெயர்த்துத் தம்நாட்டை வளர்த்துவருகிறார். ஆங்கிலம் பயின்ற தமிழர், அவ்வாறு தமது நாட்டு வளர்ச் சிக்கு மொழிபெயர்ப்புத் தொண்டில் ஏன் இறங்கலாகாது? மொழிபெயர்ப்பென்றால் போலி நாவல்களின் மொழிபெயர்ப் பன்று. மேல்நாட்டுப் பூத பௌதிக தாவர ஜெந்து சாஸ் திரங்களைத் தமிழ் மக்களுக்குத் தமிழில் உதவ வேண்டு வது ஆங்கிலம் பயின்றார் கடமையன்றோ? ஆங்கிலம் பயின்ற சிலர், தமிழில் குறியீடு - பரிபாஷை - போதியன இல்லை என்று சொல்லித் தமிழை எள்ளுவது வழக்கம். தமி ழில் பல குறியீடுகளிருக்கின்றன. இன்னும் வேண்டப்படுங் குறியீடுகளைப் பல மொழிகளினின்றும் எடுத்து நேராகவோ மொழிபெயர்ப்பாகவோ தாராளமாக ஆளலாம். அவ்வாட்சி யால் தமிழ் வளர்ச்சியுறுமே யன்றித் தேய்வுறாது. இன்னும் ஆங்கிலம் பயின்ற தமிழரிற் சிலர், தமிழ்நூல்களைப் பயிலாம லும் ஆராயாமலும் அவைகளிலுள்ள உண்மைகளை உணராம லும் அவைகளைக் குறைகூறி மகிழ்கிறார்கள். இவர்கள் அறியாமை என்னே! ஆங்கிலம் பயின்றார் கவலையீனத்தால் தமிழ்நாட்டின் ஆக்கம் குலைந்து வருவதைப் பற்றிக் கற்றைக் கற்றையாக எழுதல்கூடும்.

இப்பொழுது பாரத மாதாவின் இயற்கைத் திருமேனி, காந்தியடிகள் வாயிலாகப் புலனுகிறது. அவள் திருமேனியின் அழகிய இனிய உறுப்பாகிய தமிழ்நாடு தமிழ்நாட்டவர்க்குப் புலனுகவில்லை. வங்காளம், மஹாராஷ்டிரம், கூர்ஜரம், ஆந்தரம் முதலியன விளக்கமுற்று வருகின்றன. ஆனல் நமது தமிழ் - நமது அமிழ்தம் - அதன் தீஞ்சுவை - நம்மவர்கட்கே புலனுகாமலிருப்பது நாம் செய்த தீவினையோ என்னவோ தெரியவில்லை.

மஹாராஷ்டிரத்தில் திலகர் பெருமான் தோன்றினர்; மஹாராஷ்டிரத்தை வளர்த்தார். தாகூர், தாஸ் உள்ளிட்ட பலர் வங்காளத்தில் தோன்றினர்; வங்காளத்தை வளர்க்கிறர். காந்தியடிகள் கூர்ஜரத்தில் தோன்றினர்; கூர்ஜரம் வளர்கிறது. ஆனல் தமிழ்நாடோ? தமிழ்நாடே! நீ என்ன பாவஞ் செய்தாய்? உன் வயிற்றில் பிறக்கும் பிள்ளைகளே உனக்குத் துரோகஞ் செய்கிறர்கள்; உன்னைத் தாயென்று கொள்ளவே மறுக்கிறர்கள். இஃதென்ன கொடுமை? உன் வயிற்றில் பிறந்து, உன் பாலுண்டு வளர்ந்து, உன்னை அன்னையாகக் கொள்ள மயங்குவதும் மறுப்பதும் என்ன வியப்பு?

காந்தியடிகள், பரதகண்டத்தைப் பாஷை வாரியாகப் பிரித்திருக்கிறர். அவர் நோக்கம் என்னை? அவ்வம்மொழி வளம்பெற வேண்டுமென்பதே. பரதகண்டத்தின் பல பகுதியினர் தத்தம் நோக்கத்தை நிறைவேற்றுகிறர். ஆனல் தமிழப்பிள்ளைகள் தாய்மொழியைக் கனவிலுங் கருதுகிறர்களில்லை. கனவிலாவது கருதினல், 'தமிழ்நாடு மாகாண காங்கரஸ் கமிட்டி' என்ற பெயர் நிறுவுவார்களோ? நாடு எதுவோ? மாகாணம் எதுவோ? தெரியவில்லை. தமிழ் மொழியில் வெளிவரும் பத்திரிகைகள் அதைக் கவனிக்கின்றனவோ? இதைப்பற்றி நம்மிடமிருந்து எழுந்த கூக்குரல் 'லோகோபகாரி'க்குக் கேட்டது. மற்றவைகட்கோ...?

திருப்பூரில் தமிழ்நாட்டுக் காங்கரஸ் கூடப்போகிறது. தேசபக்தர் பலர் விஜயஞ் செய்வர். தேசபக்தர் அனைவரும்

தமிழ்நாட்டவராக இலங்குவர் என்பதிற் சந்தேகமில்லை. இத் தமிழ் மக்கள் தேசநலத்துக்கு இன்றியமையாத பல தீர்மானங்கள் செய்வார்கள். இத்தீர்மானங்களால், உண்மைப் பயன் விளையவேண்டுமானால், தமிழ் இலக்கியப் பெருக்கத்துக்கும் ஒரு தீர்மானம் நிறைவேறப் பெறுதல்வேண்டும். அத் தீர்மானத்தால், அதன் அனுஷ்டானத்தால், தமிழ், நாடாக மீண்டும் மிளிரும். நாடு என்பது நிலப்பரப்பு மாத்திரம் அன்று என்பதை அன்பர்கட்கு அடிக்கடி நினைவூட்ட வேண்டுவதில்லை. திருப்பூர் நோக்கும் ஒவ்வொரு தமிழரும் தமிழ்நாடு எது என்பதை மனதிலுன்னி வாயால் பேசிச் செய்கையால் செய்ய முயல்வாராக.

திருப்பூரில் கூடும் மகாநாட்டில் தமிழ்நாட்டுப் பண்டைப் பெருமைகளை நினைவூட்டக்கூடிய சின்னங்களொன்றும் பொறிக்க அல்லது பதிக்கக் காரியஸ்தருக்கு நினைவு தோன்றுது. அவர்க்குத் தோன்றுவிடினும், செல்லும் நேயர்கட்காதல் தமிழ்நாட்டு நினைவு உள்ளத்தில் ஊர்ந்துகொண்டேயிருத்தல் வேண்டும். தமிழ் மக்களின் பாடல், வீரம், ஞானம், தொழில், வழக்க ஒழுக்கம் முதலியன மகாநாட்டில் மணஞ் செய்து நிற்றல் வேண்டும். 'தமிழ்நாடு' 'தமிழ் நாடு' என்று பந்தரையும் தலைவர்கள் பேச்சையும் பார்ப்பதனுல் - கேட்பதனுல் - தமிழ்நாடு ஆண்டுப் பொலியாது. தமிழ் மொழியில் - அதன் கலைகளில் - தமிழ்நாடு ஆக்கமுறல் வேண்டும்.

நாட்டுக் கல்லூரி ஒன்று ஏற்படுத்தத் தமிழ்நாட்டுக் காங்கரஸ் ஏன் முயற்சிசெய்பலாகாது? 'நாட்டுக்கல்வி' 'நாட்டுக்கல்வி' என்று பேசிப் பேசி, மேல்நாட்டுக் கல்விக்குத் துணைபோகலாமோ? நாட்டுக் கல்லூரியொன்று ஏற்பாடு செய்து, அதன்கண் தமிழ் வாயிலாக எல்லாப் பாடங்களையும் போதிக்க முயலல் வேண்டும். இதனுல் பண்டைத் தமிழும், வேறு பல நாட்டின் கூட்டுறவும் ஒன்றிய தமிழ்நாடு மிக வளமாக அரும்பும். அந்நாடு சுயராஜ்ஜியத் தமிழ் நாடாகும். ஆதலால், தமிழர்களே! உங்கள் நாட்டின் நிலையைக் கருதுங்கள்; மகாநாடுகளில் அதன் வளங் கருதிப்

பேசுங்கள்; அதன் பொருட்டுத் திருப்பூருக்குச்செல்லுங்கள்; கதர் அணியுங்கள் ; உரிமைக்கு மன்றுடுங்கள் ; உங்கள் தமிழ், வளம்பெற்று, 'நாம் தமிழர்' என்ற உணர்வு, உங்கள் உள்ளத்தில் குடிகொள்ளுமாயின், உங்களிடை இப்பொழுது தோன்றியுள்ள சாதிசமயப் பிரிவு பிளவு பிணக்கு எல்லாம் ஒழியும் ; சகோதரநேயம் ஓங்கும் ; 'நமது நாடு' முழு நிலா வென உதயமாகும். (3-11-1922)

## தாய் மொழி

ஈன்ற ஒருத்தியையும், பிறந்த நாட்டையும், பேசும் மொழியையும் ஒருவன், 'தாய்' 'தாய்' 'தாய்' என்று போற்றுகிறான். ஒருவனுக்குத் தன்னைப்பெற்ற தாயின்பால் எத்தகை அன்புண்டோ, அத்தகை அன்பு, அவனை அளித்த நாட்டினிடத்தும், அவனை வளர்க்கும் மொழியி னிடத்தும் அவனுக்கு இருத்தல்வேண்டும். நாட்டையும் மொழியையும் நேசியாதவன், பெற்ற தாயையும் நேசியாத பாவியாவன். பெற்ற தாயின் அன்புக்கும், பிறந்த நாட்டின் பற்றுக்கும் ஊற்றுயிருப்பது பேசும் மொழியே யாகும். பேசுந் தாய்மொழியின்மாட்டு அன்பில்லா ஒருவன் தாயை யும் நாட்டையும் பழித்தவனாவன்.

இப்பொழுது நமது தாய்மொழியாகிய தமிழ்மொழி எந் நிலையுற்றிருக்கிறது ? தமிழ்த்தாய் யாண்டு உறைகிருள் ? அர சாங்கத்தில் வீற்றிருக்கிருளா ? மன்றங்களில் வதிகிருளா ? சட்டசபைகளில் வாழ்கிருளா ? கல்லூரிகளெனப்படும் 'நிலையங்களி'லாதல் அவளைப் பார்க்கலாமா ? உரிமைக்கு உழைப்பதாகச் சொல்லப்படும் அரசியல் கழகங்களிலாதல் அவளைக் காணலாமா ? தமிழ்ப்பத்திரிகைகளிலாதல் அவ ளுக்கு இடம் உண்டா ? பல பத்திரிகைகள் தமிழ்த்தாயின் சிகையை-கழுத்தை - இடுப்பை - கொய்யும் இறுவாளாகவும், அறுக்குங் கொடுவாளாகவும், உடைக்குந் தண்டமாகவும்

அல்லவோ உலவுகின்றன ? அப் பத்திரிகைகளுக்கேற்ற நூல்களும் வெளிவருகின்றன. சுருங்கக் கூறின், தமிழ் மக்கள் தாய்மொழியைக் கொலைசெய்வதில் பேரும் புகழும் பெற்றவர்களென்று கூறலாம்.

சிலர், சிற்சில இடங்களில் ' தமிழ் ' ' தமிழ் ' என்று கண்ணீர் விடுகிறார். அவருள் சிலர் தமிழுக்கு ஆக்கந் தேடுவதுபோல், அதற்கு அழிவு தேடிவருகிறார். தமிழ்த் தாய் நாலு பக்கங்களிலும் தாக்கப்பட்டு வலியிழந்து வீழ்ந்து கிடக்கிறாள். 'ஐயுந் தொடர்ந்து விழியுஞ்செருகி' அவதியுறு நிலையை நந்தாய் அடைந்திருக்கிறாள். தமிழ்வேந்தர்கள் காலத்தில் கன்னி (என்றும் அழியாதவள்) என்னும் பெயர் தாங்கிய நம் அன்னை, இக்காலத்தில் இறந்துபடுவளோ என்னும் ஐயமும் நிகழ்கிறது.

நாட்டில் செல்வாக்குப் பெற்றிருப்பவர் பெரிதும் ஆங்கிலம் கற்றவர். அன்னார் பேச்சுக்கும் எழுத்துக்கும், நாடும் மதிப்புக் கொடுக்கிறது. அவருள் பெரும்பான்மை யோர், தம்மைத் தமிழர் என்பதை மறந்திருப்பவர். சிலருக்கு மட்டும் தமிழ்நினைவு உண்டு. இவர் எழுதும் தமிழே பின்னைத் தமிழ்மொழி இலக்கியங்களாக நிலவும். இவர் என்செய்வர் ? இவர்க்குப் போதிய தமிழ்ப்புலமை யில்லை ; ஆங்கிலப் புலமை யிருக்கிறது. இவர்களால் எழுதப்படும் நூல்கள் பல இதுகாலை வெளிவருகின்றன. அவைகளின் கருத்து, தமிழ்நாட்டிற்கு இன்றியமையாது வேண்டற் பாலதே. ஆனால் அவைகளிலுள்ள மொழியோ அவைகளைத் தொடவும் மனதைத் தூண்டுவதில்லை ; என் செய்வது ! ஆட்சியை 'ஆக்ஷி'யாகவும், காட்சியைக் 'காக்ஷி'யாகவும், செலவைச் 'சில'வாகவும், நாகரிகத்தை 'நாகரீக'மாகவும் காணும்போது தமிழுணர்ந்த எவருள்ளந்தான் வருந்தாது ? 'பாஷையாலென்ன ? எப்படி எழுதினாலென்ன ?' என்று சில அறிஞர் கூறுகிறார். இக்கூற்றுத் தமிழ் மொழியை மாத்திரம் பற்றி எழுவதா ஆங்கில மொழி யைப்பற்றியும் எழுவதா என்று அவ்வறிஞரைக் கேட் கிறோம். ஆங்கில நினைவு தோன்றும்போது எழும் மொழி

வனப்பு, தமிழ் நினைவு தோன்றும்போது ஏன் எழுவதில்லை? 'தமிழ்த் தாயை எவ்வாறுவது குலைக்கலாம்; ஆங்கிலத் தாயை ஓம்பினால் போதும்' என்னும் எண்ணம் இந்நாட்டார்க்கு உதித்திருக்கிறது போலும்! ஈன்ற தாய் பட்டினி! மற்றத் தாய்க்கு நல்லுணவு! என்னே காலத்தின் கோலம்!

தாய் மொழியினிடத்துப் பற்றின்றி நாட்டுக்கு உரிமை பெற முயல்வது கானற்சலத்தை நாடி ஓடினவன் கதையாக முடியும். உரிமைக்காக மிகப் பரிந்து உழைக்குங் காங்கரஸாவது தமிழ்வளங் கருதி உழைக்கிறதா? ஹிந்திபாஷையை வளர்ப்பதைப் பற்றி நாம் குறைகூறவில்லை. பாரதநாட்டுக்கே பொதுமொழியாக ஹிந்தி நிலவவேண்டுமென்று நாமுங் கூறுகிறோம். இதனால் தாய்மொழியாகிய தமிழைக் கொலை செய்யவேண்டுமென்று எவருங் கூறார். மயிலாப்பூரில் ஒரு ஹிந்தி கல்லூரி திறக்கப்பட்டது. அதன் திறப்பு விழா அழைப்பு நமக்கு வந்தது. அதன்கண் ஒரு பக்கம் ஆங்கிலமும் மற்றொரு பக்கம் ஹிந்தியும் பொலிவதைக் கண்டோம்; தமிழும் ஹிந்தியும் ஏன் அவ்வழைப்புத் தாளில் திகழலாகாது? என்று எண்ணினோம். தமிழ்நாட்டில் காங்கரஸ்காரர் இனியாவது தமிழ் மொழி வளர்ச்சிக்கென உழைக்க முன்வருவரோ என்று கூவி அடங்குகிறோம்.

தமிழ்ப்பண்டிதர்கள் ஒன்றுபட்டுத் தமிழை வளர்ப்பது இந்த யுகத்தில் இல்லை. காரணங்கள் கூறின் மிக விரியும். தற்கால நாகரிக உணர்வுடைய சில தமிழ்மக்கள் தமிழ்நாட்டில் வதிகிறார்கள். அவர்கள் ஒன்றுகூடித் தமிழ்மொழி வளர்ச்சிக்கு ஆங்காங்கே கழகங்கள் கண்டு உழைப்பார்களாக.

தாய்மொழி வளராத நாடு, ஒருநாளும் உரிமை பெறாது. தாய்மொழி நாட்டம் உரிமை நாட்டமாகும். உரிமைக்கு முதற்படி தாய்மொழியோம்பும் முயற்சி. தமிழ்நாட்டார் தாய்மொழிமீது கருத்தைச் செலுத்துவாராக. (12-10-1924)

# மாணுக்கரும் தாய்மொழியும்

(சில குறிப்புக்கள்)

மாணுக்கர்களுடைய கடமைகள் பல. அவைகளுள் சிறந்தது எது? தாய்மொழிக்குரிய கடனாகும். தமிழ்நாட்டு மாணுக்கர்களுடைய வாழ்நாளைப்பற்றி ஆராய்கின்றகாலத்து, அவர்கள் தங்கள் தாய்மொழிக்காக எவ்வளவு நேரம் செலவழிக்கிருர்கள் என்பதற்கும், உண்மையாக அதன்மாட்டு அவர்களுக்குக் காதல் உண்டா என்பதற்கும் செவ்வனிறை நீங்களே இறுத்தல்கூடும். நானும் ஏறக்குறைய 15 ஆண்டுகள் உங்களைப் போன்ற மாணுக்கர்களிடத்தில் நன்கு பழகிச் சில கல்லூரிகளில் ஆசிரியனுகவும் தமிழ் ஆசிரியனுகவும் இருந்ததுண்டு. அதிலிருந்து பெற்ற அடைவு என்னவெனில், நம்முடைய நாட்டில் இளைஞர்களுக்குப் பெரிதும் தாய்மொழியினிடம் பற்று இல்லை என்பதே. அவ்வுண்மையைக் கண்டே, சர்வகலாசாலையார், சில ஆண்டுகளுக்கு முன்னர், 'தமிழ் கட்டாயபாடமாக இருத்தல்கூடாது. அதைஇஷ்ட பாடமாகச் செய்தல் நலம்' என்று நினைந்து, அவ்வாறே செய்திருக்கிருர். எனவே, இளைஞர்களாகிய உங்களுக்குத் தமிழினிடத்தில் வேட்கை இல்லையெனில், வேறு எப்பொருளினிடத்து உங்களுக்கு வேட்கை உண்டாகும் என்று நீங்களே ஆராய்ந்து பார்த்தல் வேண்டும். ஒரு நாட்டினுடைய நிலையை அளந்து பார்க்கவேண்டுமானுல், அந் நாட்டினுடைய மொழிநிலை எவ்வாருக இருக்கிறது என்பதை முதலாவது அளந்து பார்த்தல் வேண்டும்.

நம்முடைய நாட்டை ஆண்டுவருவோர் யார்? ஆங்கிலேயர் என்று நீங்கள் சொல்வீர்கள். யான் வேறு வழியாகச் சொல்வேன். 'நம்மை ஆள்வது ஆங்கில மொழி' என்று யான் சொல்வேன்.

ஆங்கிலேயர்கள்-வாணிபம், அரசியல், தொழில், போர், இன்னேரன்ன பல துறைகளில் உழைத்துவரும் அளவில்

நில்லாது, அவை எல்லாவற்றிற்கும் மேலாகத் தாங்கள் பிறந்த தாய்நாடாகவுள்ள இங்கிலாந்து மாதினுடைய மொழியைப் பொன்னேபோல் போற்றி வளர்த்து வருகிறார்கள். இப்பொழுது உலகத்தில் பெரிதும் போற்றப்படுவது அந்த ஆங்கிலமொழி என்பதைச் சொல்லவும் வேண்டுமோ ?

இங்கிலாந்தும் நமது நாடு போன்ற ஒரு நாடே. அந்நாட்டார் எவ்வளவு ஆர்வங்கொண்டு, பல்லாயிரம் மைல் தூரத்திருந்து போந்து, அவர் மொழியிலே மிளிர்கிற மணிகளை நாம் அணியுமாறு செய்திருக்கிறார். ஆங்கிலேய மொழியில் ஒருவன் உலகத்திலிருக்கிற எண்ணிறந்த கருத்துக்களை உணரலாம்.

பிஷப் கால்டுவல், டாக்டர் போப் முதலியவர்கள் இந்நாட்டிலே வந்து செல்வம் திரட்டிச் சென்றார்கள் என்று மட்டும் நாம் சொல்வது கூடாது. அவர்கள், தாங்கள் பிறந்த நாட்டினுடைய ஆங்கிலேய மொழிக்கு ஆக்கம் தேடி வைத்தது பெரிதுங் கருதற்பாலது. நம்மவர்க்குள் ஆங்கிலம் படித்தவர் பலர் தொல்காப்பியம் அறிந்திலர். ஆனால் பிஷப் கால்டுவல், அந்நூலைப் பயின்று, ஆராய்ந்து, அதன் நுட்பங்கள் பலவற்றை ஆங்கிலத்தில் எழுதியிருக்கிறார். மாணிக்கவாசகருடைய திருவாசகத்தின் உள்ளுறையை ஆங்கிலம் பயின்ற நம்மவர் அறிய விரும்பும்போது, டாக்டர் போப்பினுடைய மொழிபெயர்ப்பைத் தேடிப் பார்க்கிறார். நம்மாழ்வார் திருவாய்மொழியின் கருத்தை அறியவேண்டுமானால், சிலர் ஆங்கில மொழிபெயர்ப்பைத் தடவுகிறார். இன்னும், திருவள்ளுவர் திருக்குறளை நேராகத் தமிழில், ஆங்கிலம் பயின்ற தமிழர்களிற் பலர் படிக்கிறாரில்லை. நம் நாட்டுப் பெரியோர்கள் அருளிய உண்மைகளைத் தாய்மொழி வாயிலாக உணரும் ஆற்றலையும் வன்மையையும் இழந்து, அவைகளை வேறுமொழி வாயிலாக அறிந்துகொள்ள முயலும் நிலையை நாம் அடைந்திருக்கிறோம். திருவாசகம் திருவாய்மொழி போன்ற அரும்பெரும் நூல்களின் கருத்துக்களை நாம் செவ்வனே உணரவேண்டுமானால், அவைகளைத் தாய்மொழியின் மூலம் உணர்வதே சிறப்பு.

ஆங்கில நாட்டினர் தம் தாய்மொழியில் உலகக் கருத்துக்களை இறக்கி, அம்மொழியைச் சேம நிதியாக்கி யிருக்கிறார். அவர்கள் வீரர்களே. தாய் மொழியைப் பரப்புவது வீரம் வீரமே யாகும். இப்பொழுது ரவீந்தரநாத் தாகூர் இங்கே வருவாரானால், இங்கே இருக்கிற ஆங்கிலப் புலவர்களும்—ஆங்கில மொழியின் அருமையை உணர்ந்து, பாட்டின் அழகை நன்றாக அறிந்துள்ள நம்மவர்களும் - அவரை வரவேற்பார்கள். என்ன காரணம்? அவர் உலகம் போற்றும் ஒரு பெரிய ஆங்கிலக் கவிஅரசர் என்பதே. அவருக்கு அப்பட்டத்தைக் கொடுத்தது எது? அவரால் அருளிச் செய்யப்பெற்ற கீதாஞ்சலி என்னும் நூல். அஃது இப்பொழுது ஆங்கிலத்திலே வெளிவந்திருக்கிறது. மேல் நாட்டார் அதைப் படிக்கிறார். பெல்ஜியம், ஜெர்மனி முதலிய இடங்களுக்குத் தாகூர் ஏகியபோது, 'இவர் தாமோ கீதாஞ்சலி இயற்றிய தாகூர்' என்று பல்லாயிரம் மக்கள் கேட்டார்கள்; போற்றினார்கள். தாகூர் கீதாஞ்சலியை முதல் முதல் ஆங்கில மொழியில் எழுதினாரா? அல்லது தாய்மொழியாகிய வங்க மொழியில் எழுதினாரா? முதல் முதல் வங்கத் தாய்மொழியிலேயே அவர் அதை எழுதினார். பின்னர் அவரே அதை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார்.

தேச பக்தியிற் சிறந்த பாலகங்காதர திலகர், ஆறு ஆண்டு சிறைக்கோட்டம் நண்ணிய காலத்தில், 'கீதா ரகசியம்' என்னும் அரிய நூலை ஆங்கிலத்திலா எழுதினார்? அவரும் முதலில் அதைத் தமது தாய்மொழியாகிய மஹாராஷ்டிர மொழியிலேயே எழுதினார். ஏன்? அவர் நாட்டின் மொழியை வளர்க்கவேண்டுமென்ற ஆர்வத்தினாலே அக்கடனாற்றினார். இவ்வளவு ஏன்? இவ்வுலகம் போற்றும் மகாத்மா காந்தி, 'எங் இந்தியா' பத்திரிகையில் எத்துணையோ கருத்துக்களை நேராக ஆங்கிலத்திலே எழுதி வந்தாலும், தம் வாழ்க்கை வரலாற்றை மட்டும், அவர் தாம் பிறந்த நாட்டின் மொழியாகிய கூர்ஜரத்திலன்றோ எழுதுகிறார்? பின்னைத் தேசாய் என்பவர் அதை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வருகிறார்.

'தமிழ் நாடு' என்றால் என்ன என்பதைப் பற்றி இரண்டோர் உரை பகர்கிறேன். தமிழ் என்பது நமது தாய்மொழி. நாடு என்பதற்கு ஆங்கிலத்தில் Land என்று மொழி பெயர்க்கிறார் சிலர். அது கூடாது 'தமிழ் நாடு' என்பதற்கு 'Tamil Nation' என்று சொல்வேன். 'Nation என்பதற்குத் தமிழென்ன' என்று சிலர் என்னைக் கேட்பதுண்டு. யான் 'நாடு' என்று சொல்வது வழக்கம். மனிதர்களின் பழக்க வழக்கம், கல்வி, அரசு, வாழ்வு, வீரம் இவைகள் எல்லாஞ் சேர்ந்த ஒன்றற்கு 'நாடு' என்று பெயர். இப்பொழுது இவைகளில் நமக்கு என்னென்ன இருக்கின்றன? நமக்கு இப்பொழுது நாடு உண்டா? நாம் நாடு அற்றவர்களாக இருக்கிறோம். காரணம் என்ன? தாய்மொழியினிடத்தில் இடையறாத காதல் செலுத்தாமை யாகும்.

'இப்பொழுது தமிழ் நாட்டிலே பலதிற மக்கள் இருக்கிறார்கள்; குடிபுகுந்த மக்களும் இருக்கிறார்கள். இந்நிலையில் இப்பொழுது எப்படித் தமிழ் மொழியை வளர்த்தல் முடியும்?' என்று சிலர் கேட்கலாம். சிற்சில இடங்களிலே இது குறித்து வாதமும் நிகழ்ந்து வருகிறது. தமிழ் நாட்டிலே தோன்றியிருக்கிற போர், சாதிப் போரே. மற்றப் போர்கள் இதில் அடங்கிவிடும். ஒரு நாட்டில் குடிபுகுந்து நிலைத்திருப்போர் அந்நாட்டவராதல் இயல்பு. இதுபற்றிய விரிவுரை ஈண்டு வேண்டுவதில்லை. எல்லோரும் தமிழர்களாக வாழ்ந்துவரின், உட்போர்கள் ஞாயிறு முற்பட்ட பனியைப்போல மறையும். 'Expansion of England' என்னும் நூலாசிரியர் கடவுளின் நெறி (சமயம்) நாட்டுக்கு அடிப்படையாக இருத்தல் வேண்டுமென்று சொல்கிறார். சமயப்போர் உலகிடைத் தோன்றின், ஐரோப்பா கண்டத்தின் (Christendom) ஒற்றுமை புலனாகுமென்று அவர் எடுத்துக்காட்டியிருக்கிறார்.

தமிழ்நாட்டிலோ ஒரே சமயத்தைக் கொண்டு, எல்லோரையும் அதைக் கடைப்பிடிக்குமாறு செய்தல் முடியாது. அது கஷ்டமே. என்றாலும், இந்நாட்டிடைப் பிறந்த மக்களை ஒற்றுமை என்ற வலையிலே பிணிக்கவேண்டுமானால், அதற்கு

உறுகருவியாயிருப்பது தமிழ்மொழியே. தமிழர்களில் கிறிஸ்தவர்களும் மகம்மதியர்களும் பலர் இருக்கிறார். இவர்களிற் சிலர் தம்மைத் தமிழராகக் கருதி வாழ்வு நடாத்துவதில்லை. இது தவறு. சில இங்கிலீஷ்காரர்கள் முஸ்லிம்களாகவும் ஹிந்துக்களாகவும் மாறி இருக்கிறார்கள். இருந்தாலும் அவர்கள் தங்களை இங்கிலீஷ்காரர்களென்றே சொல்லிக்கொள்கிறார்கள். நாம் எந்தச் சமயத்தைப் பற்றினாலும் நாம் அனைவரும் தமிழர்கள் என்பதை மறத்தலாகாது. நாம் பண்டை நிலையை அடையவேண்டுமானால்-அதற்குரிய ஒற்றுமை பெறவேண்டுமானால் - தாய்மொழியின் இன்றியமையாமையை உணர்ந்து வாழ்வோமாக. இவ் வேலூர் ஊர்ஹிஸ் கல்லூரித் தமிழ்க் கழகம் அவ்வொற்றுமை நாடி உழைப்பதாக; இக்கழகம் ஓங்கி வளருமாறு இறைவனை வழுத்துகிறேன். தமிழ் வாழ்க. (8-2-1928)

## விடுதலையும் தமிழ்நாடும்

இப்பொழுது உலகில் நாலுபக்கங்களிலும் எம்முழக்கம் வீறிட்டு நிற்கிறது? 'விடுதலை முழக்கம்' என்று சொல்ல வேண்டுவதில்லை. இந்நாளில் எங்கணும் விடுதலைப் பேச்சு; எங்கணும் விடுதலை எழுத்து; எங்கணும் விடுதலை முயற்சி; எங்கணும் விடுதலை முழக்கம். இக்காலத்தில் விடுதலை வேண்டாத நாடு உண்டோ? நகர் உண்டோ? ஊர் உண்டோ? வீடு உண்டோ? மூலை முடுக்குகளிலும் விடுதலை விடுதலை என்ற முழக்கம்!

விடுதலை மன்பதைக்கு இன்றியமையாதது. உரிமைக் கதிரொளி படாத வாழ்வு வாழ்வாகுங்கொல்? அவ்வாழ்வு, வெந்தீ உமிழுஞ் சிறைநீர் - சாக்கடை நீர் - போன்றதாகும். வாழ்வுக்கு விடுதலை வேண்டற்பாலதே.

விடுதலை முழக்கம் ஒரு வழியிலா ஒரு துறையிலா இந்நாளில் வீறிடுகிறது? அது, பற்பல வழியில் - பற்பல துறையில்-வீறிடுகிறது. சில இடங்களில் நாட்டைப்பற்றிய விடுதலை

முழக்கம் ; சில இடங்களில் சமுதாயத்தைக் குறித்த விடுதலை முழக்கம் ; சில இடங்களில் பொருளாதாரத்தை ஒட்டிய விடுதலை முழக்கம்—இவ்வாறு பல இடங்களில் பல வழியில் பல துறையில் விடுதலை முழக்கம் வீறிடா நிற்கிறது. இடத்துக்கேற்றவாறும் காலத்துக்கேற்றவாறும் ஒவ்வோரிடத்தில் ஒவ்வொருபோது ஒவ்வொருவித விடுதலை முழக்கம் மக்கட்குத் தேவையா யிருக்கும்போலும் !

உலகில் வீறிட்டுலவும் விடுதலை முழக்கம் நமது தமிழ் நாட்டிலும் உலவா நிற்கிறது. விடுதலை வேட்கையில், உலகிலுள்ள பல நாடுகளிலும் தமிழ்நாடு முதலில் நிற்றல் வேண்டும். அடிமையிருள் எவ்வளவு உண்டோ, அவ்வளவும் தமிழ் நாட்டில் உண்டு என்று கூறல் மிகையாகாது. ஆன்மாவிற்கு மும்மலங்கள் உண்டு ; பஞ்சகோசங்கள் உண்டு. தமிழ்நாட்டிற்கோ ஆயிரக்கணக்கில் மலங்கள் உண்டு ; கோசங்கள் உண்டு. தமிழ் நாட்டில் எங்கணும் ஒரே இருள் ; இருட்குழாம் ; இருட்பிழம்பு. இத்தகைய நாடு, விடுதலையைக் காதலியாதிருக்குமா ? விடுதலைக் காதல் தமிழ்நாட்டில் எழுதல் இயல்பு. ஆகவே தமிழ்நாட்டில் விடுதலை முழக்கம் எழும்பி யிருத்தல் வியப்பன்று. தமிழ்நாடு விரைவில் விடுதலை பெறுதல் வேண்டுமென்பது எனது தணியா வேட்கை.

விடுதலை வேட்கை எழுச்சிக்கு, அடிப்படையான காரணம் இருத்தல்வேண்டும். துருவித் துருவிக் காரணத்தை ஆராயவேண்டுவதில்லை. துன்பம் எவ்விடத்தில் ஆக்கம் பெற்றிருக்கிறதோ, அவ்விடத்தில் விடுதலை வேட்கை தானே எழும். ஆகவே, விடுதலை வேட்கை எழுச்சிக்கு அடிப்படையான காரணம் துன்ப நெருக்கம் என்பது வெள்ளிடைமலை.

துன்பம் எங்கே இருந்து பிறக்கிறது? அது மனிதனிடத்துள்ள அறியாமையினின்றும் பிறக்கிறது. இவ்வறியாமையினின்றெழும் எண்ணங்களும், பேச்சுகளும், எழுத்துகளும், செயல்களும் மனிதனைக் கட்டில் அதாவது பந்தத்தில் வீழ்த்துகின்றன. அக்கட்டினின்றும் விடுதலை அடைய முயலவேண்டுவது மனிதனது இன்றியமையாக் கடமை. அக்கடமையில் நுழையாத மனிதன் மனிதனல்லன்.

கட்டினின்றும் விடுதலை அடைதற்குப் பதிலாக மேலும் மேலும் கட்டைப் பெருக்கிக்கொள்ள முயல்வது விடுதலை முயற்சியாகுங்கொல்! விடுதலை முயற்சி நேரிய வழியில் நிகழ்தல் வேண்டும். விடுதலையென்னும் பெயர்கொண்ட இயக்கங்களெல்லாம் விடுதலை இயக்கங்களாகா. விடுதலை என்னும் பெயரால், கட்டை அதாவது பந்தத்தை மேலும் மேலும் பெருக்கிக்கொள்வதால் விளையும் பயன் என்னை? இங்கே 'விடுதலை இயக்கம்' என்பது எது - அதன் இயல் பென்னை - என்று இன்னோரன்ன வினாக்கள் எழாமற்போகா.

'விடுதலை இயக்கம்' என்னும் பெயரால், கொலை, கொள்ளை, இகல், எரி, மடமை முதலியன பெருகுமாயின், அது விடுதலை இயக்கமாகாது. அறம், அன்பு, அருள், பொறுமை, சகோதர நேயம் முதலியன வளர்வதற்கு இடந் தரும்-இடம் பெறும்-இயக்கம் எதுவோ, அதுவே உண்மை விடுதலை இயக்கமாகும். விடுதலை இயக்கமென்பது துன்ப நீக்கத்துக்கு வேண்டப்படுவதேயன்றி, துன்ப ஆக்கத்துக்கு வேண்டப்படுவதன்று. கொலை கொள்ளை இகல் முதலியவற் ருல், துன்பம் நீங்குமா இன்பம் ஓங்குமா என்பது சிந்திக்கற் பாலது. கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ? அதுபோல விடுதலை என்னும் பெயரால் எழும் இயக்கங்களெல்லாம் விடுதலை இயக்கங்களாகுமோ? இது குறித்து இங்கே விரிவுரை வேண்டுவதில்லை.

விடுதலை இயக்கம், அறத்தை - அன்பை - அருளை - சகோதர நேயத்தை - அடிப்படையாகக் கொண்டிருத்தல் வேண்டும். இதற்கு எடுத்துக்காட்டுகள் பல உண்டு. அவை களுள் தமிழ்நாட்டுச் சான்ரோர் மொழிகளுள் ஒன்றன்மீது எனது உள்ளஞ் செல்கிறது. தமிழ்நாடு, தற்காலமுற்றுள்ள கொள்ளை நோய்க்கு, அச்செம்மொழி, உரிய மருந்தாகும் என்று நம்புகிறேன்.

'யாதும் ஊரே யாவருங் கேளிர்'-இச் செம்மொழியை - நேயர்களே! உற்று நோக்குங்கள். இப் பொன்மொழி உங்கட்குப் புதியதன்று. இதை நீங்கள் பன்முறை பார்த்

திருக்கலாம்; கேட்டிருக்கலாம்; அதன் பொருளில் திளைத்து இன்புற்றிருக்கலாம். ஆயினும், இன்னும் பன்முறை அதனை நோக்கி நோக்கி, அதன்கண் படிந்து படிந்து திளைக்குமாறு உங்களை வேண்டுகிறேன். ஏன்? பழந்தமிழர் உள்ளம் அது; உரை அது; வாழ்வு அது; அதுவே பழந் தமிழ்நாடு. ஆதலால் அன்பர்களே! அத் திருமொழியை - அப் பெரு மொழியை - நோக்குமாறு உங்களை வேண்டுகிறேன்.

'யாதும் ஊரே யாவருங் கேளிர்' என்பதன் பொருள் வெளிப்படை. எதுவும் ஊர், எவரும் உறவினர் என்பது அதன் திரண்ட பொருள். எல்லாம் ஊரே எல்லாரும் உற வினரே என்பது அதன் கருத்து. இக்கருத்தே பழந் தமிழர் கொள்கை. இக்கொள்கைக்கு என்ன பெயர் வழங்கினும் வழங்குக. இச்சீரிய கொள்கை பழந் தமிழ்மக்களின் வாழ் வில் மிளிர்ந்துகொண் டிருந்தது. இக்கொள்கை அவர்கள் வாழ்வில் ஊடுருவிப் பாய்ந்து, இரத்தத்துள் இரத்தமாய், நரம்புள் நரம்பாய், என்புள் என்பாய்க் கலந்திருந்தது. அதனால் அவர்கள் எல்லா ஊரார்களையும் எல்லா மக்களையும் தங்களைப்போல் நேசித்து வரலானார்கள்.

பழந் தமிழ் மன்னர்கள் தங்கள் நாட்டில் எல்லார்க்கும் இடந் தந்தமை ஈண்டுக் கருதற்பாலது. வேறு நாட்டினின் றும் எவர் புகினும் அவரை அன்புடன் வரவேற்பதைப் பேரின்பமாகப் பழந் தமிழ் மன்னர்கள் கொண்டிருந்ததைச் சரித்திரத்தில் இன்னுங் காணலாம். தமிழ்நாட்டில் ஆரியர்கள் புகுந்தார்கள்; ரோமர்கள் வந்தார்கள்; கிரேக்கர்கள் நுழைந்தார்கள்; இன்னும் மற்ற மற்றவர்களும் அணைந்தார் கள். அவர்களை வரவேற்ற பெருமை பழந்தமிழ் மன்னர்கட் குண்டு. அவர்கள் எவரையும் மாற்றாராகக் கருதினார்களில்லை. 'யாதும் ஊரே யாவருங் கேளிர்' என்பது அவர்களின் வாழ்விற் கலந்த கொள்கையா யிருந்தது. அதனால் அவர்கள் மாட்டுச் சகோதர நேயம் கனிந்திருந்தது.

இவ் வரும்பெருங்கொள்கை, நாளடைவில், தான்பிறந்த தமிழ் நாட்டிலேயே வீழ்ந்துபட்டது. அஃது எழுத்தளவில்-

புலவோர் உதட்டளவில்-நிற்கலாயிற்று. அது புறநானூற்றில் ஓரிடத்தில் தலையுண்டு கிடக்கிறது. சிறையில் அது நன்றாக உறங்கிக்கொண் டிருக்கிறது. ஒவ்வொருபோது அது விழித்துப் பார்க்கிறது; வெளியே வரவும் முயல்கிறது. இடைக்காலத்தில் நுழைந்த வேற்றுமைப் பேய்கள், அதை வெளியேறாதவாறு தகைந்து காத்து வருகின்றன. சாதி, மதம், நிறம், மொழி, நாடு முதலியவற்றினின்றும் பிறந்த பேய்களும், பூதங்களும், காளிகளும், கூளிகளும் தமிழ் நாட்டை ஆட்சி புரியலாயின. இவ்வாட்சியில் அன்புக் கொள்கைக்கு இடம் ஏது? அக்கொள்கை தற்போது பெற்றுள்ள இடம் சிறையென்று சொல்லவும் வேண்டுமோ? தமிழன் அடிமையாகிவிட்டான். அருமைத் தமிழனே! உன் பழைய நிலை என்ன? இப்பொழுது நீ எங்கே இருக்கிறாய்? சாதி முதலிய சேற்றில் நெளியுந் தமிழனே! உனது தற்கால நிலையை உன்னுவாயாக.

சாதி முதலிய வேற்றுமைகளால் கட்டுகள் ஏற்பட்ட நாள்தொட்டுத் தமிழ் நாடு அடிமை இருளில் வீழலாயிற்று. இடைக்காலத்தில் நுழைந்த இருள், நாளுக்குநாள் பெருகிப் பெருகி இப்பொழுது காரிருளாகி விட்டது. தமிழ் நாட்டில் இருள் கொண்டல் கொண்டலாக எழுந்து பரவி நிற்கிறது. தற்காலத் தமிழ்நாட்டின் இருளை எம்மொழியால் வருணிப்பது?

இடைக்காலம், தமிழ்த் தாய்க்குச் சிறைவாழ்வு வழங்கிற்று. இந்நாளோ, அவளுக்குச் சிறையுடன் நோய்களையும் வழங்கி யிருக்கிறது. உணவின்றிச் சிறப்பாகக் காவிய உணவின்றித் தமிழ்த்தாய் மெலிகிறாள்; நலிகிறாள். மெலிவாலும் நலிவாலும் அவளது நரம்பு தளர்ந்து தளர்ந்து, செந்நீர் ஓட்டங் குலைந்துகொண்டே போகிறது. செந்நீர் வெந்நீராகிக் கொதிக்கிறது; கொதித்துக் கொதித்து ஆ! ஆ! எத்துணைப் புண்களை, எத்துணைச் சிரங்குகளை, எத்துணைக் கட்டிகளை, எத்துணை உடைகளை, எத்துணைப் பிளவுகளைத் தாயினிடம் உண்டுபண்ணி யிருக்கிறது. தமிழ்த் தாயின் அழகிய உடல் - செழிய மேனி - புண்ணீர் ஒழுகும்

புன்தேகமாகி விட்டது. அவள் உள்ளமோ? * * * * * தமிழனே! நீ தமிழ்த்தாயின் சேயா? நீ எங்கேயிருந்து விடுதலை விடுதலை என்று முழங்குகிறாய்? உன் தாய்முகம் நோக்கு. அவள் எப்படி இருக்கிறாள்? எவ்வழியில் நின்று, எத்துறையில் இறங்கி, அவளை நோயினின்றும் சிறையினின்றும் விடுதலை செய்யப்போகிறாய்?

தமிழ் மகனே! விடுதலை விடுதலை என்று வெறுங் கூச்சலிடுவதால் பயன் என்ன! விடுதலை முயற்சி, விடுதலை தருவதாயிருத்தல் வேண்டும். விடுதலை விடுதலை என்று சிறைக்கூடத்தில் நோய்வாய்ப்பட்டுள்ள தமிழ்த்தாயைச் சுற்றிலும் தீயிட்டு எரிப்பது அவள் நோய்போக்கும் மருந்தாகுமா என்பதைக் கவனிக்க. தமிழ் அன்னை இடைக்காலத்தில் சிறைப்பட்டாள்; பின்னை நோய்ப்பட்டாள்; இப்பொழுது விடுதலை என்னும் பெயரால் எரிக்கப்படுகிறாள். 'அந்தோ! நாங்கள் தாய்க்கு எரியா மூட்டுகிறோம்; விடுதலைக்கன்றோ முயல்கிறோம்' என்று சில சகோதரர்கள் கருதலாம். சகோதரர்களே! உங்கள் பேச்சில் எழுத்தில் 'விடுதலை' 'விடுதலை' என்னும் ஒலியும் வரியும் இல்லாமல் இல்லை. ஆனால் உங்கள் பேச்சால் எழுத்தால் விளைவதென்னை?

தமிழ்நாட்டில் 'விடுதலை' என்னும் பெயரால் பலதிற இயக்கங்கள் தோன்றியிருக்கின்றன; இன்னும் பல தோன்றலாம். அவ்வவ்வியக்கங்கட்கெனப் பத்திரிகைகளும் உடன் உடன் தோன்றுகின்றன. இயக்கங்களுந் தேவை; பத்திரிகைகளுந் தேவை. இயக்கங்கள் நல்வழியில் இயங்கல் வேண்டும்; பத்திரிகைகளும் நல்வழியில் நடைபெறுதல் வேண்டும். ஒவ்வோரியக்கமும் ஒவ்வொரு பத்திரிகையும் ஒவ்வொரு வழியில் நின்று, ஒவ்வொரு துறையில் இறங்கித் தொண்டு செய்யலாம். அவையெல்லாம் விளைவிக்கும் பயன் ஒன்றாயிருத்தல் வேண்டும். அவ்வொன்று, தாயின் விடுதலை நாடுவதா யிருத்தல் வேண்டும்.

இயக்கங்களும் பத்திரிகைகளும் நாளுக்குநாள் பிளவுகளையும், பிரிவுகளையும், பிணக்குகளையும், பூசல்களையும், பிற

இழிவுகளையும் பெருக்கிக்கொண்டு போகுமாயின், அவை களால் நாட்டுக்கு நலன் உண்டா என்பதை அன்பர்கள் உன்னுவார்களாக. திட்டுதல், காழ்ப்பால் ஆட்களைத் தாக்கு தல், காரணமின்றி நல்லியக்கங்களைக் குறைகூறுதல் முதலி யன தமிழ்மக்களிடை நிலவுதலாகாது. இதற்குத் தமிழ் நாட்டுப் பத்திரிகை உலகம் பெரும் பொறுப்பேற்கவேண்டும் என்பதைச் சொல்லத் தேவையில்லை.

தமிழ்நாட்டிலுள்ள குறைபாடுகளைப் போக்கப் பலதிற இயக்கங்கள் வேண்டற்பாலன ; அவைகட்கெனப் பத்திரிகை களும் வேண்டற்பாலன. எவ்வெக் குறைபாட்டை நீக்க எவ்வெவ்வியக்கம் தோன்றியிருக்கிறதோ, அவ்வவ் வியக்கம் தன்தன் கடமையை நேரிய முறையில் நிகழ்த்திக்கொண்டு போகலாம். எல்லாம் ஒன்றோடொன்று குழம்ப, ஒன்றை ஒன்று தாக்கிக்கொண்டிருந்தால், மக்கள் எண்ணம் தாக்கலில் நிற்குமேயன்றி, விடுதலையில் செல்லாது. உள்தாக்கலும் உள் குழப்பமும் விடுதலை முயற்சியாகுமா? இகல், பகை, எரிஊட் டக்கூடிய முறையில் இயங்கங்களை ஓம்ப முயல்வதால் பல திறக் கேடுகள் விளைந்துவரல் கண்கூடு. திட்டாமலும் குறை கூறாமலும் கருத்து வேற்றுமைகளை வெளியிடுதல் கூடும்.

தமிழ்நாட்டில் பொதுவாக முன்னே விடுதலை வேட்கை நிலவியிருந்தது. நாளடைவில் அவ்வேட்கை குன்றலாயிற்று. ‘நாடு’ என்னும் எண்ணம் மாய்ந்து, அவ்விடத்தில் ‘சாதி’ என்னும் எண்ணம் படிந்தால், உண்மை விடுதலை வேட்கை எங்ஙனம் எழும்?

தமிழ் நாட்டில் தன்னை யறியாமலே சாதிவேட்கை ததும்பி வழிகிறது. சாதியொழிதல் வேண்டுமென்ற பேச்சு கள் வான்முகட்டையும் பிளந்து ஓடுகின்றன. அப்பேச்சு களின் பயனோ சாதிக்கு ஆக்கந் தேடுவதாக முடிகிறது! இக் குறைபாடு எல்லாச் சாதியாரிடத்தும் இருக்கிறது. சாதிப் பித்துக் கொண்டுள்ள ஒரு நாடு உய்தல் அருமையன்றோ? சாதிவேண்டாமென்னும் பேச்சே இல்லாத காலத்தைப்பார்க் கினும், சாதி போதல்வேண்டுமென்னும் பேச்சு மிகுந்துள்ள

இக்காலத்தில்-மேல்நாட்டு நாகரிகம் சண்டதாண்டவம் புரியும் இந்நாளில் - சாதிப் பற்றுப் பெருகியே வருகிறது. சாதிப் பற்றும் வேட்கையும் பெருகிவருதல் நாட்டின் வளர்ச்சிக்கு அறிகுறியாகாது. சுமார் பதினைந்து ஆண்டுகளாகத் தமிழ் நாட்டில் சாதி இயக்கங்கள் பெருகிவருதல் கண்கூடு. இப் பெருக்கம் சாதிப்பற்றை வளர்க்குமா தேய்க்குமா என்பதை நேயர்கள் சிந்திப்பார்களாக.

சாதி இயக்கங்கள் காட்டுத் தீப்போல் பரந்து பெருகு தற்குக் காரணமாக நிற்பவர்கள் பெரிதும் ஆங்கிலம் படித்த வர்களே யாவர். இவர்கள் தங்கள் நலத்தின் பொருட்டுச் சாதி இயக்கங்களைத் தோற்றுவிக்கிறார்கள். சாதிகளுக்குள் பிளவும் பிணக்கும் பூசலும் கொதித்தெழுந்து கொழுந்து விட்டெரிகின்றன. இவ்வெரியைப் பற்றிய கவலை, இயக்கங் களைத் தோற்றுவித்தவர்கட்குச் சிறிதுங் கிடையாது. அவர் கள் சுகமாக மாடியிலுறங்கிக் 'கிளப்பு'களில் விளையாடிக் கொண்டிருப்பார்கள்; சமயம் நேர்ந்தால் எரியுந்தீயில் நெய் சொரிய முயல்வார்கள். வீணே அடித்துச் சாகிறவர்கள் ஏழைமக்களே யாவர். ஏழைமக்கள் கண் விழிக்குநாள் எந் நாளோ ?

சாதி இயக்கங்கள் நாட்டையும் மறக்கச் செய்யும். அவை பொல்லாதன ! பொல்லாதன ! நாட்டைக் கூறுபடுத் தும் இயக்கங்கள் சிற்சிலருக்கு இன்பந் தருவதுபோல் தோன்றினும், அவர்களையும் அவருள்ளிட்ட மற்றவர்களையும் அவ்வியக்கங்கள் பின்னே வீழ்த்திவிடுமென்பதைச் சகோ தரர்கள் என்றாதல் ஒருபோது உணராமற் போகமாட்டார் கள். நாடு என்பது சுவர் போன்றது. சுவரிலுள்ள ஒவ்வொரு கல்லும் பிணங்கிக் கோணத் தொடங்கினால் சுவரின் கதி என்னாகும் ?

தமிழ்நாட்டின் நலங் கருதிப் பலதிற இயக்கங்களைச் சகோதரர்கள் தோற்றுவிக்கலாம். அவைகளால் நாட்டு நலனுக்குக் கேடு நேராதவாறு சகோதரர்கள் பாதுகாத்துக் கொள்ளல்வேண்டும். சாதி இயக்கங்களால் நலனுண்டா என்பது அநுபவத்தில் உணரத்தக்க ஒன்று. சாதி இயக்கங்

களால் நலன் விளையவில்லை. அநுபவம் செவ்வனே தெரிவித்து விட்டது. இன்னுஞ் சாதி இயக்கங்களால் நாட்டை எரிவியாதிருப்பது நலம். நாட்டின் விடுதலைக்கெனப் பல இயக்கங்கள் தோன்றலாம்; சமூக விடுதலைக்கெனப் பலதிற இயக்கங்கள் தோன்றலாம். இவைகளின் வாயிலாகவோ தனித்தோ நாட்டின் உயிராகவுள்ள மொழியை ஓம்பி வரலாம். மொழி நலனுக்குப் பாதகமாகவுள்ள இயக்கம் எதுவாயினும் அது நாட்டுக்கு யமன் போன்றதாகும். இதுகுறித்து இங்கே விரிக்கிற் பெருகும்.

தமிழ்நாட்டில் தோன்றியுள்ள இயக்கங்களில் அரசியல் இயக்கங்கள் அரசியல் தொண்டு செய்து வரலாம்; சமூகச் சீர்திருத்த இயக்கங்கள் சமூகச் சீர்திருத்தத் தொண்டு செய்து வரலாம். இவைகளுக்குச் சாதகமாக மற்ற மற்ற இயக்கங்களும் இயங்கித் தொண்டாற்றி வரலாம். பிளவு, பிரிவு, பிணக்கு முதலியன இடைநுழையாதிருத்தல் வேண்டும். இவ்வியக்கங்களெல்லாம் ஓர் அடிப்படையில் நின்று கடனாற்றல் வேண்டும். அப்பொழுதே அவை தமிழ்நாட்டின் விடுதலையை உண்மையில் நாடுவதாகும். இல்லையேல் அவை யாவும் போலியாக முடியும்; போலியாக முடிவதோடு தமிழ்த்தாயை வருத்திக்கொண்டுமிருக்கும். அவ்வடிப்படை என்னை?

தமிழ்நாடு என்னும் பெயர் யாண்டிருந்து பிறந்தது? தமிழினிடத்திருந்தே அப்பெயர் பிறந்தது. அத்தமிழை மறக்க அல்லது அழிக்க இயக்கங்களெழுந்தால், அவ்வியக்கங்கள் எத்தகைய விழுப்பமுடையனவாயினும், அவைகளால் நாட்டுக்கு நலன் விளையாதென்பது ஒருதலை. தமிழ்நாட்டில் பலதிற இயக்கங்களைத் தோற்றுவித்து நடாத்தும் தலைவர்கள் மனங்கொண்டால் தமிழ்த்தாயை இன்புறச் செய்யலாம். வேண்டுவது மனம்; மனம்; மனம் - பொன்னன்று; பொருளன்று; பிறவல்ல.

பலதிற இயக்கங்களின் தோற்றத்துக்கும் - பலதிறக் கருத்து வெளியீட்டிற்கும் - அடிப்படையான நோக்கம்

என்ன? நாட்டு நலன் அதாவது நாட்டு விடுதலை என்று சொல்ல வேண்டுவதில்லை. உள்நோக்கத்தின் மறவால் இடை இடையே பலதிற இடுக்கண்கள் நேர்ந்துவிடுவது வழக்கம். மனிதன் முன்னேற்றத்தை நாடவேண்டுமேயன்றிக் கடந்ததைப் பற்றிக் கழிவிரக்கமோ காழ்ப்போ கொள்ளலாகாது. அங்ஙனங் கொள்ளும் மனிதன் ஒருபோதும் முன்னேற்ற மடையான். ஆதலால், அவ்வவ்வியக்கத் தலைவர், தத்தமது அடிப்படையாக உள்ள நோக்க வழி நின்று, தமிழ்த்தாய்க்குரிய தொண்டை ஆற்றப்புகுவாராக; தமிழ்நாட்டின் உயிராக உள்ள தமிழ்மொழியை ஓம்ப முயல்வாராக.

தமிழ்மொழியை ஓம்பும் இயக்கம் எதுவாயினும், அது தமிழ்த்தாயின் விடுதலையை நாடுவதாகும். தமிழ்நாட்டின் முழு விடுதலை தமிழ்மொழியின் ஆக்கத்திலேயே இருக்கிறது. மற்ற மற்ற முயற்சிகள் வேண்டாமென்று யான் கூறுகிறேனில்லை. தமிழ்த்தாய்க்குப் பலதிற அடிமைப்பாடுகள் உண்டு. ஒவ்வொன்றன் விடுதலைக்கு ஒவ்வொருவித இயக்கம் வேண்டற்பாலதே. முழு விடுதலை தமிழ் மொழியின் ஆக்கத்திலுண்டு என்பதை மட்டுந் தமிழர்கள் மறத்தலாகாது. தமிழ் மொழி ஆக்கம் பெறாமல் பெறும் விடுதலை முழு விடுதலையாகாது. ஆகவே, விடுதலை வேட்கையின் அடியில் மொழி வேட்கை யிருந்தே தீரல்வேண்டும். அவ்வேட்கை பலதிறப் பிளவுகளை - பிரிவுகளை - பிணக்குகளை - ஒழிக்கும் ஆற்றல் வாய்ந்தது என்பது உறுதி.

தமிழ் மக்களே! உங்களைத் 'தமிழ் மக்கள்' என்று அழைக்கச் செய்திருப்பது எது? அதை நினையுங்கள். அதை மறந்து ஆற்றப்படுந் தொண்டுகள், கடைக்காலில்லாமல் எழுப்பப்படும் கட்டிடம் போன்றனவாகும். நீங்கள் எத்தொண்டு செய்யினும் அத்தொண்டின் அடிப்படையில் தமிழ்வேட்கை யெழுச்சி இருத்தல் வேண்டும். அவ்வேட்கையால், உங்களைப் பலவாறு பிரித்துப் பிளக்க, உங்கள்பால் இடைநாளில் தோன்றிய சாதி மதப் பூசல்கள், உங்களை விடுத்து இரிந்து ஓடும். அவ்வாற்றல் அமிழ்தினும் இனிய தமிழ்வேட்கைக்கு உண்டு என்பதை மறவாதேயுங்கள்.

தமிழ் மொழியின் ஆக்கத்துக்காகவே தமிழ்க் காவியங்கள் எழுந்தன. அவை நாளடைவில் கதை நூல்களாகக் கொள்ளப்பட்டன. தமிழின் ஆக்கம் அருக அருகச் சகோதரர்களின் கண்ணுக்குத் தமிழ்க் காவியங்களிலுள்ள தமிழணங்கின் இன்பக் கூத்துப் புலனுதல் அரிதாயிற்று. அவர்கட்குப் பெரிதும் கதைகளே புலனுகின்றன. ஆதலால் சகோதரர்களே! தமிழ்க் காவியத்தில் தமிழணங்கைக் காண எழுங்கள்; தலைவர்களே! அவளைக் காட்ட எழுங்கள். அக்காட்சிக்கென எல்லாரும் ஒன்றி மகாநாடு கூட்டுங்கள்; உங்கள் தாயின் சிறை போம்; நோய் போம்; குறை போம். அவள் விடுதலை யடைவாள். 'யாதும் ஊரே யாவருங் கேளிர்' என்னுங் கொள்கை மீண்டும் தமிழ் நாட்டில் அரசு புரியும். உங்கள் வேற்றுமைகள் - பிணக்குகள் - பூசல்கள் - எல்லாம் பறந்து ஓடும்; ஓடும். (18, 25-11-1931)

## தமிழரியக்கம்

தமிழ்நாட்டின் தற்கால நிலையைப்பற்றி விரித்துக் கூற வேண்டுவதில்லை. தமிழ்நாடு என்ற ென்று இப்பொழுதிருப்பதாகவும் சொல்லுதல் முடியாது. தமிழ்நாடு இல்லாமல் யாண்டுச் சென்றது என்று சிலர் ஐயுறலாம். தமிழ்நாட்டு உடல் இருக்கிறதேயன்றி, உயிரில்லை என்று சொல்வது மிகையாகாது. தமிழ்நாடு என்பது, தமிழ் மக்களின் வழக்க ஒழுக்கம் கல்வி அரசு வீரம் தொழில்முறைகள் முதலியன சேர்ந்த ஒன்ருகும். இத்தமிழ்நாடு இதுபோழ்து யாண்டுளது? வெறும் நிலத்தைத் தமிழ்நாடு என்று சொல்லி மகிழ்வதால் என்ன பயன்?

தமிழ்நாட்டார் அனைவரும் இதுபோழ்து தம்மைத் 'தமிழர்' என்று கருதுகிருரா என்பது உன்னற்பாலது. தமிழருக்குள் தமிழரென்னும் ஒன்றிய எண்ணமிருப்பின்,

அவர்களிடை வகுப்புப் பிணக்கு ஏன் எழுதல்வேண்டும்? தமிழ் நாட்டில் வகுப்புப் பிணக்கு இதுபோழ்து இல்லை என்று மறுத்தல் இயலாது. அப்பிணக்குண்மை எவரும் அறிந்ததொன்று. தமிழ் நாட்டில் எழுந்துள்ள வகுப்புப் பிணக்குத் தமிழ் மக்களின் வழக்க ஒழுக்கம் கல்வி வீரம் முதலியவற்றைக் கல்லிக் கல்லித் தமிழ்நாட்டையே அழித்து விடும். ஆதலால் வகுப்புப் பிணக்கை ஒழிக்க ஒவ்வொரு தமிழரும் முயலல்வேண்டும்.

தமிழ்நாட்டில் பல சாதியார் பல சமயத்தார் இருத்தல் உண்மை. அவரனைவரும் தமிழரா அல்லரா என்பதை ஆராய்ந்தால் அவர் தமிழராகவே யிருப்பர். ஒருசிலர் மற்ற நாடுகளிலிருந்து குடி புகுந்தவராக இருக்கலாம். அவ்வொரு சிலரும் தமிழ்நாட்டைத் தாய்நாடாகக் கொண்டமையான், அவருந் தமிழராகிவிட்டனர். தமிழ்நாட்டைத் தாய்நாடாகக் கொண்டு, தமிழைத் தாய்மொழியாகக் கொண்டோர் அனைவரும் தமிழரே யாவர்.

தமிழ்நாட்டில் ஆரியர் தமிழர் என்னும் பிரிவு இருப்பதாகச் சிலர் கருதுகிறார். அது குறித்தெழும் வாதங்களுக்கும் அளவில்லை. தமிழ்நாட்டிலுள்ள பிராமணர் ஆரியரென்றும் பிராமணரல்லாதார் தமிழரென்றுஞ் சிலர் சொற்போரும், சிலர் வேறு போரும் நிகழ்த்துகிறார். தமிழ்நாட்டிலுள்ள பிராமணர்கள் தமிழர்கள் என்பது நமது கொள்கை. இது குறித்துப் பன்முறை நாம் எழுதியிருக்கிறோம். இது 'நவசக்தி' நேயர்கட்குப் பழம் பாடமாகவு மிருக்கலாம். நாட்டுநிலை காலநிலை முதலியவற்றை நோக்கி, இதைப்பற்றி அடிக்கடி வலியுறுத்தவேண்டிய கடனை ஏற்று நிற்கிறோம்.

வடபுலத்திலிருந்து சில ஆரியர் தமிழ்நாடு போந்தது சரித்திர வாயிலாக அறியக்கிடப்பது. அவ்வாரியர் தமது வழக்க ஒழுக்கம் சமயம் முதலியவற்றைத் தமிழர்க்கு அறிவுறுத்தினர். சில தமிழர் அவ்வழக்க ஒழுக்கங்களை மேற்கொண்டனர். அவரே பின்னுளில் பிராமணரென் றழைக்கப் பெற்றனர். அவருடன் வடபுலத்திருந்து போந்த ஆரியரும் ஒன்றித் தமிழராயினர். இவ்வாறே தமிழ்நாட்டில் இஸ்லா

மியக்கொள்கை, கிறிஸ்துவக்கொள்கை முதலியனவும் பரவலாயின. பலதிறக் கொள்கைகளை ஏற்று, அவ்வக்கொள்கைக்குரிய பெயரையும் ஏற்றவர் தமிழ்நாட்டிற் பிறந்த தமிழரே யாவர். இவர்கள் தங்களைத் தமிழர்கள் என்பதை மறத்தலாகாது. தமிழ்நாட்டில் பல சாதியாரிருக்கலாம்; பல சமயத்தாரிருக்கலாம். அச்சாதி சமய வேற்றுமைகளைக் கருதித் தங்களைத் தமிழர்களல்ல என்று கொண்டு போரிடுவது அறியாமை. வேற்றுமைகளிருப்பினும், அவைகளைக் களைய முயல வேண்டுமேயன்றி, வளர்க்கமுயல்வது அறிவுடைமையாகாது.

தமிழ்நாட்டில் தமிழர்களுக்குள் பிணக்கு எழாமலேயிருந்தது. சிறு சிறு பிணக்குகளும் மறைந்துகொண்டே வந்தன. அரசியல் கிளர்ச்சியும், தேர்தல் முறையும் விரிந்து பரந்தெழுந்த நாள் தொட்டுத் தமிழ்நாட்டில் வகுப்புப் பிணக்குக் கொழுத்துவிட்டது. நாளுக்கு நாள் அப்பிணக்கு வளர்ந்துவருகிறதேயன்றித் தேய்ந்து வரவில்லை. இவ்வளர்ச்சியால் என்ன விளையும்? தமிழ்நாடு வருந்தும்; அழிந்தும் போகும். வகுப்புப் பிணக்கைத் தணிக்கவேண்டுமென்று ஒவ்வோர் அரசியல் தலைவரும் வாயால் சொல்கிறார்; ஆனால் செயலால் பிணக்கை வளர்க்கிறார். இப்பிழை, எல்லா அரசியல் கட்சிக்காரரிடத்திலும் இருத்தல் உண்மை. விட்டுக்கொடுக்கும் அறம் அறவே அற்றுப்போயிற்று. வயது முதிர்ந்து ஆசைப்பேயால் பீடிக்கப்பட்டுள்ள முதியோர்கள் அளவில் வகுப்புப் பிணக்கு நில்லாது, இளைஞர்களிடத்தும் அந்நஞ்சு பரவத்தொடங்கி யிருக்கிறது. இப்பொழுது வகுப்புப் பிணக்கு இளைஞரிடத்துப் பரவாதவாறு காப்பது நாட்டைக் காப்பதாகும். இதற்கு என்செயல் வேண்டும்?

தமிழ்நாட்டிலுள்ள பல சாதி சமய இளைஞர்களைக் கொண்ட சங்கங்கள் பல, தமிழ்நாட்டில் ஆங்காங்கே தோன்றுதல் வேண்டும். அச்சங்க வாயிலாகத் தமிழர்கள் வரலாறு அறிவுறுத்தப்பெறல் வேண்டும். அவ்வறிவுறுத்தலால் இளைஞர்கள் தங்களைத் தமிழர்களென்று உணர்வார்கள். அவ்வுணர்வு நாட்டைக் காக்குமென்பது ஒருதலை.

இப்பொழுது தமிழ் மக்களுக்குள் ஒற்றுமை நிறுத்த வல்லது ஒன்றே. அது தமிழ்மொழி. பல வகுப்பாளரும் - வகுப்புப் பிணக்கில் தலைப்பட்டுளோரும் - சாதி சமய நிலைகளில் வேறுபட்டிருப்பினும், அவரனைவரும் தமிழ்மொழி பேசுவதில் ஒன்றுபட்டிருக்கிறார். எல்லார்க்கும் பொதுவாக உள்ள தமிழ்மொழி வாயிலாகத் தமிழ்நாட்டில் ஒற்றுமை காணலாம்; உண்மைத் தமிழ்நாட்டையும் உயிர்ப்பிக்கலாம்.

வகுப்புப் பிணக்கும் போரும் மலியும் இந்நாளில் தமிழ் நாட்டில் ஒற்றுமை காணத் தமிழரியக்கம் எவ்வளவு இன்றியமையாத தென்பதை இயம்பவேண்டுவதில்லை. உண்மையாக வகுப்புப் பிணக்கை ஒழிக்க விரும்புவோரனைவரும் இவ்வியக்கத்திற் சேரலாம். நல்லதோரியக்கத்துக்கு நாட்டில் உதவி கிடைத்தலரிதென்பதை நாம் உணர்வோம். எல்லா உதவிகட்கும் மேலாகக் கடவுள் உதவியிருக்கிறது. அக்கடவுள் உதவி நாடித் தமிழரியக்கத்தைக் காண அறிஞர் முயல்வாராக. அவ்வியக்கத்தில் இளைஞர்கள் சேர்ந்து நாட்டுக்கு நலஞ் செய்வார்களாக. (20–8–1926)

## ஆந்தர தேசம்

ஆந்தர தேசம்; அறிவுத்தேசம்; அன்புத்தேசம்; ஆனந்தத்தேசம். ஆந்தர தேசத்தில் இப்பொழுது அறிவு மலர்ந்து, அன்பு காய்த்து, ஆனந்த ரசம் பொழிகிறது. அறிவும் அன்பும் ஆனந்தமும் பொங்கித்ததும்பிக் கோதாவரியாகவும், கிருஷ்ணாவாகவும், துங்கபத்ராவாகவும் ஓடுகின்றன. அறிவும் அன்பும் ஆனந்தமும் இப்பொழுது ஆந்தரத்தில் உண்மையால், அஃது உலகம் போற்றும் ஒரு தேசமாக இலங்குகிறது. பொதுவாக உலகமும், சிறப்பாகப் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியமும் ஆந்தர தேசத்தை நோக்குகின்றன. ஆந்தர தேசத்தின் மாண்பு என்னே! என்னே!!

ஆந்தரமாதின் அழகிய முகம், நமது அகக்கண்ணுக்குப் புலனாகும்போது, வந்தேமாதர முழக்கமும், சுயராஜ்ஜியக் கொடியொலியும், சுதந்திர தேவியின் தாண்டவமும், சுதேசிய நறுமணமும் நம் புலன்களைக் கவர்கின்றன. பரதேசிய நாற்றமே வீசவில்லை. மனமும் பேச்சும் செயலும் சுதேசிய மயமா இருக்கின்றன. சுதேசியம் பரந்துள்ள இடத்தில் சுதந்திரதேவி தாண்டவம் புரிதலும் சுயராஜ்ஜியக் கொடி பறத்தலும் இயல்பே.

ஆந்தர மாது சுதேசியத் தவங் கிடந்தமையால், அவளுக்குத் தியாக உணர்வு பிறந்தது. தியாகத்தால் சுதந்திர தேவி தரிசனங் கிடைத்திருக்கிறது. சுதந்திரதேவி தாண்டவமிடும் இடங்களில் அறிவும் அன்பும் ஆனந்தமும் பொங்கித் ததும்பும். அறிவுக்கும் அன்புக்கும் ஆனந்தத்துக்கும் ஊற்றாயிருப்பது சுதந்திரமே யாகும். சுதந்திரம் இல்லாத இடத்தில் அம்மூன்றும் ஓங்கி வளரா. சுதந்திர ஊற்றைத் திறக்குங் கருவி தியாகமாகும். ஆந்தரம் தியாகத்தால் முனைப்பை ஒழித்துச் சுதந்திரவுணர்வுபெற்ற தேசமாயிருத்தலால், அதை அறிவுத்தேசமென்றும், அன்புத்தேசமென்றும், ஆனந்தத் தேசமென்றும் நாம் கூறி மகிழ்கிறோம்.

தமிழ்நாட்டுக்கு அணித்தாயுள்ள தெலுங்குநாடு இப்பொழுது உலகம் போற்றும் ஒருநாடா இலங்குதற்குக் காரணம் யாது? இந்தியாவில் கிளர்ச்சிமிகுந்த தேசம் வங்காளம் என்று சொல்லப்பட்டு வந்தது. இப்பொழுது தெலுங்கு வங்காளத்துக்கு வழிகாட்டுகிறது. வங்காளத்தையும் பின்னிடச் செய்யும் ஆற்றல் ஆந்தரத்துக்கு எவ்வாறு உண்டாயிற்று? ஆந்தர தேசத்தின் கிளர்ச்சி வேகம், வங்காளம், பாஞ்சாலம், மஹாராஷ்டிரம் முதலிய நாடுகளையுங் கடந்து, விரைந்து விரைந்து ஓடுதற்குக் காரணம் என்ன என்று ஆராயவேண்டுவது அணித்தாயுள்ள தமிழ்மக்களின் கடமை. தமிழ்நாட்டில் பிறந்த ஒவ்வொருவரும் 'நமக்கணித்தாயுள்ள தெலுங்கர்க்கு இவ்வளவு வீரம், மனவுறுதி, அஞ்சாமை உண்டானதற்குக் காரணம் யாது?' என்று ஆராய்ந்து உண்மை காணல்வேண்டும். காரணத்தை ஆராய்வோம்.

காரணம் என்னவோ என்னும் மலைவு தமிழ்மக்களுக்கு வேண்டாம். காரணம் மிகச் சிறியது. அது சிறியதாயினுஞ் செயலால் பெரியது. சிறியதென்று அதைத் தள்ளுவது பெருமை யாகாது. ஆந்தர தேசமும் பிறதேசங்களைப்போல் உறங்கிக்கொண்டே யிருந்தது. வங்காளம் எழுந்து நின்று வீராட்டகாசஞ் செய்தபோது, தமிழ்நாடு காட்டிய எழுச்சி கூட தெலுங்குநாடு காட்டவில்லை. அவ்வளவு உறக்கத்தி லிருந்த ஆந்தரம், திடீரென உலகம் புகழும் ஒரு தேசமாக மாறி, வீறுகொண்டு நிற்பது போற்றத் தக்கதே.

ஆந்தரர்கள் முதலாவது செய்த முயற்சி, காங்கரஸ்வாயி லாகக் கிளர்ச்சி செய்துசெய்து, தமிழ்நாட்டினின்றும் பிரிந்து தங்கட்கென ஓரெல்லை வகுத்துக்கொண்டமையே. அவர், தெலுங்கு நாடெனத் தனிமைப்படுத்திக்கொண்டதன் நோக்கம், தம்மொழியை ஓம்பி வளர்க்கும் பொருட்டென்று சொல்லப்பட்டது. ஆந்தர மக்கள் தங்கள் நாட்டைத் தனிமைப்படுத்திக்கொண்ட பின்னர்த் தங்கள் தெலுங்கு மொழியை வளர்க்கப் பெருமுயற்சி செய்தார்கள்; மொழி வளர்ச்சிக்கெனப் பல கழகங்கள் கண்டார்கள். பல அறிவு நூல்கள் தெலுங்கில் எழுதப்பட்டன. ஆந்தரர்கள் தங்கள் மொழியை உயிரினும் ஓம்பி வந்தார்கள். அவர்கள் சுதேசியத்துக்கு அடிப்படை சுதேச பாஷை என்பதை நன்கு உணர்ந்து நடந்தமை, அவர்கட்கு இப்பொழுது மாண்பு தேடிக்கொடுத்திருக்கிறது. தெலுங்கர்கட்கு இப்பொழுது சிறப்பை அளித்தது, அவர்பாலுள்ள தாய்மொழிப் பற்றேயாகும். ஆந்தர மக்கள், தங்கள் வீடுகளில் - கழகங்களில் - தாய்மொழியையே பேசவேண்டுமென விரதங் கொண்டார்கள். அவ்விரதம், இப்பொழுது ஆந்தரத்தை வீரம், உண்மை, உறுதி, ஒற்றுமை, அஞ்சாமை செறிந்த தேசமாக மாற்றி யிருக்கிறது. ஆந்தர தேசம் முன்னேற்றமடைந்ததற்குக் காரணம், ஆந்தர மக்கள் தங்கள் தாய்மொழியைப் பொன்னேபோல் போற்றி வளர்த்தமை என்று கூறலாம்.

இந்தியாவிலுள்ள எல்லா நாடுகளிலும், நாகரிகத்திலும் பிற அறிவு வளங்களிலும் மேம்பட்டு விளங்கிய தமிழ்நாடு,

இப்பொழுது எல்லாத் துறைகளிலும் தேய்வுற்று வருவதற்குக் காரணம், தமிழ் மக்கள் தாய்மொழியினிடத்துப் பற்றுக் கொள்ளாமை என்று எவருங் கூறுவர். தமிழ்மக்கள் தாய்மொழியைப் போற்றுவதில்லை என்பதை அறிஞர் பலரும் ஒத்துக்கொள்வர். சுயராஜ்ஜியம் தோற்றமுறும் இந்நாளிலும் தமிழ் மக்கள் நாட்டுமொழியில் பற்றுக் கொள்கிறார்களில்லை. காங்கரஸ் கூட்டங்களிலும் நம்மவர்கள் தாய்மொழி பேச நாணுகிறார்கள். இஃதென்ன அறியாமையோ தெரியவில்லை. ஆந்தர தேசத்தில் கூடும் காங்கரஸ் கூட்டத்தில் ஆங்கிலந் தலைகாட்டுமோ ? ஆங்கிலங் கற்ற ஆந்தரரும் அநாவசியமாக ஆங்கிலம் பேசமாட்டார். அவரும் தம் தாய்மொழியாகிய தெலுங்கையே பேசி மகிழ்கிறார். இதனால் ஆங்கிலம் படித்தல் கூடாது பேசுதல் கூடாது என்று நாம் கூறுவதாக நேயர்கள் கருதலாகாது,

மனிதன் ஆங்கில மொழியோடு ஆயிரம் மொழி பயிலலாம். ஒவ்வொரு மொழியிலும் ஒவ்வொருவித வனப்பும் இன்பமுமிருக்கின்றன. இத்தலி ஜெர்மனி முதலிய இடங்களிலுள்ள சிலர் சமஸ்கிருதம் பயில்கிறார். அவர்கள் சமஸ்கிருதம் வயிற்றுப் பிழைப்புக்காகவோ பயில்கிறார்கள் ? இல்லை ! இல்லை !! அறிவு வளர்ச்சிக்காகவே அன்னார் அம்மொழி பயில்கிறார். ஆங்கிலப் பயிற்சி மேம்பாட்டால், தாய்மொழியைப் போற்றாது விடுவதனால், சுதேசியத்தில் பற்றுச் செல்லாதொழிகிறதென்பதையே நாம் ஈண்டு வலியுறுத்துகிறோம். ஒத்துழையா இயக்கந் தோன்றியுள்ள இந்நாளிலும், தமிழ் நாட்டார் காங்கரஸ் கூட்டங்களில் வெட்கமில்லாமல் ஆங்கிலம் பேசி மகிழ்கிறார். இவ்வறியாமைக்கென் செய்வது ?

ஆந்தர தேசத்தார் தேச பாஷையை வளம்படுத்தி, அப்பாஷையினிடத்துத் தேசத்து மக்களின் பற்றுப் பதியுமாறு செய்து, தேச சேவையில் தலைப்பட்டனர். இப்பொழுது அவர் நாட்டில் வெற்றி முரசம் முழங்குகிறது ; எங்கணும் ராட்டின ஒலி ; எங்கணும் தறி ஓசை ; எங்கணும் கதருடை ; எங்கணும் சுதேசியம். ஆந்தர தேசம் சுதேசிய

மயமாயிருக்கிறது. ஆண்மக்கள் பெண்மக்கள் குட்டி குழந்தை அனைவரும் தேசத்தொண்டு செய்ய முனைந்து நிற்கினார். தாசிகள் தங்கள் தொழிலை விடுத்துத் தேசத்தொண்டு செய்கிறார்களாம். பெண்மக்கள் வீடுவீடாக நுழைந்து கதர் உடை தரிக்குமாறு சகோதரர்களை வேண்டுகிறார்களாம். பெண்தெய்வங்களின் வேண்டுகோளை மறுக்க எந்தப் பாவிக்குத்தான் மனம் எழும்?

இப்பொழுது ஆந்தர தேசம் காங்கரஸ் கட்டளைவழி நின்று ஒழுகி வருகிறது. ஆந்தர சக்தி இனி அடங்காது போலும். ஆந்தரம் ஆத்மசக்தியில் உறுதிகொண்டு நிற்கிறது. உலகம் ஆந்தர தேசத்தை நோக்குகிறது. ஆந்தர தேசம் தியாகத்துக்குச் சித்தமாயிருக்கிறது. கடவுள் ஆந்தர தேசத்தைக் காப்பாராக. ஆந்தரம் வாழ்க.

தமிழ் நாடே! உனது சகோதர நாட்டைப் பார். அங்கே என்னென்ன நிகழ்கின்றன? அத்தேசத்தின் ஒற்றுமையை நோக்கு; உறுதியைக் காண். உனக்கு அந்த ஒற்றுமையும் உறுதியும் என்று வரும்? உன் மக்கள் உன் மொழியில் பற்றுக் கொள்வதில்லை; அவர்கள் பொறாமைக்கு இரையாகிறார்கள். பொறுமையும் மொழிப்பற்றும் உண்டாகும்வரை நீ ஆந்தர தேசம்போல் ஆகமாட்டாய். காங்கரஸ் கூட்டங்களிலும் உன் மக்கள் உன் மொழியைப் பேச நாணுகிறார்கள். உன் பழம் பெருமைகளே உன்னைச் சிறப்பித்து வருகின்றன. உன்னைக் கடவுள் ஆசீர்வதிப்பாராக.

(27-1-1922)

# நாட்டுச் சிறப்பு

'நாட்டுச் சிறப்பு' என்னுந் தலைப்பைக் கண்டதும் சிலர் 'புராணம்' என்பர்; சிலர் 'பழம்பாடம்' என்பர்; சிலர் 'ஏதோ வருணனை' என்பர். நம் முன்னோர்கள் எக் காவியம் பாடினும் நாட்டுச் சிறப்பு நகரச் சிறப்பு நவின்ற பின்னரே, மற்ற வரலாற்றின்மீது கருத்தைச் செலுத்துவது வழக்கம். (இந்நாளில் நாட்டின் இயல்பு இன்னது என்றும், இயற்கை இன்பம் இத்தகைத்து என்றும் உணராத வழியில் மக்கள் வாழ்வு இயங்குகிறது.)

பண்டைப் புராணத்துள்ள நாட்டையும், இக்காலத்துள்ள நாட்டையும் உற்று நோக்கினால் உண்மை புலனாகும். இக்காலத்து நாட்டு நிலையை விரித்துரைக்க வேண்டுவதில்லை. கண்கூடாகக் காட்சியளிக்கும் ஒன்றைப் பற்றி விரிவுரை எற்றுக்கு? ஒரு நாட்டின் நிலையை எதைக்கொண்டு உணரலாம்? அந்நாட்டில் மக்கள் வயிறார உண்டு மகிழ்ச்சியோடு வாழ்கிறார்களா இல்லையா என்பது கொண்டு அந்நாட்டின் நிலையை உணர்தல் கூடும். ஒவ்வோரில்லிலும் வாழ்வுக்குரிய பொருள் போதியதில்லையேல், அங்கு மகிழ்ச்சி யாண்டிருந்து அரும்பும்? 'பொருளிலார்க்கு இவ்வுலக மில்' என்றும், 'முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னால் முடியு மன்றே' என்றும் நமது நாட்டு அறிஞர்கள் கூறிப்போந்தார்கள்.

ஒரு நாட்டின் அகம் இல்லறமாகும். அதன் நிலையை அளந்து கண்டால், நாட்டின் நிலை நனிவிளங்கும். 'இல்லறம், அன்பு கால்கொடு நடத்தல் வேண்டும்' என்று பெரியோர்கள் அருளிய மெய்ம்மொழிகள் ஈண்டுக் கருதற்பாலன. தற்காலம் நாட்டில் அன்பு நிலை எவ்வாறுளது?

சுருங்கக் கூறின், மக்கள் வாழ்விற்கு இன்றியமையாத அன்புநிலை குலைந்துவிட்டது என்று கூறலாம். அன்புக்கு உறையுள் இல்லறமன்றோ? அவ்வில்லறத்தை நடாத்தப் புகும் தலைவன் தலைவியர்க்குள் அன்பு நிலவுகிறதா?

நீதிமன்ற வழக்குகளில் தலைவன் தலைவியர் வழக்கு எத்துணை என்பதைத் ஆராய்ந்தால் அது தற்போதைய நிலையை விளங்கச் செய்யும். அன்பில்லா இல்லறம் இல்லறமாகுங் கொல்! காமவேட்கையால் ஒருவன் ஒருத்தியைக் கொண்டு பிள்ளைகளைப் பெறும் முறையில் அன்பேது? அருளேது? அன்பினின்றும் பிறவாத பிள்ளைகள் உலகில் எவ்வாறு வளரும்? எவ்வாறு வாழும்? இதைப்பற்றி விரிவுரையும் வேண்டுமோ?

இல்லற நேயத்துக்கு மகிழ்ச்சி இன்றியமையாதது. மகிழ்ச்சிக்குப் பொருள் வேண்டற்பாலதென்பது மேலே சொல்லப்பட்டது. பொருள் வருவாய் சுருங்குமிடத்தில் எல் லாஞ் சுருங்கும். பொருள் வருவாய்க்குத் தொழில்முறைகள் மலிந்து கிடத்தல்வேண்டும். நமது நாட்டின் தொழில்நிலை நேயர்கட்குத் தெரியும். நமது நாட்டு மக்களின் வாழ்விற்கு இன்றியமையாத பல பொருள்கள், மேல்நாட்டுத் தொழிற் சாலைகளிற் செய்யப்படுகின்றன. தொழின் முறைகளை ஒழுங்குபடுத்தற்கும், பிற நாட்டுப் பொருளைத் தகைதற்கும் நாட்டில் ஜனப்பொறுப்பாட்சியில்லை. என்செய்வது! நாட் டில் வறுமை மலியாது வேறென் மலியும்? வறுமையுள்ள இடத்தில் மகிழ்ச்சி ஏது? மகிழ்ச்சியில்லா இடத்தில் அன்பு ஏது? அன்பில்லா அறம் எங்ஙனம் இல்லறமாகும்? உற்ற வயதில் கிளர்ந்தெழும் காமவேட்கைக்கென ஒருவன் ஒருத்தி யைக் கொள்ளும்முறை அன்பு முறையாகாது. இதைப்பற்றி விரித்துக் கூறினல் கட்டுரை நீளும்.

அன்புக்குரிய இல்லற நிலை கோணிநிற்பின், எல்லாம் கோணியே நிற்கும். இதுவே நமது நாட்டின் தற்காலச் சிறப்பு! இச்'சிறப்பில்' வாழ்வோர் நிலையைப் பலபட அளந்து கூறவேண்டுவதில்லை. நாட்டைச் சிறிது உற்று நோக்கு வோம். என்ன காண்கிறோம்? எங்கணுந் தேர்தல் முழக்கம்; எங்கணுந் தேர்தல் கூட்டம்; எங்கணுந் தேர்தல் வழக்கு. ஏழைமக்களை வேட்டையாடவும், தேசத்தை ஏமாற்றவும், தற்கால நாகரிகத்தில் வீழ்ந்து கிடப்போர் - நமது பழைய நாட்டைக் குறை கூறும் 'புனிதர்' - எத்துணைக் கட்சிப்

பிளவுகளை - எத்தனைச் சாதிப்போர்களை - எவ்வளவு சமயச் சண்டைகளை - வகுக்கிறார்; கிளப்புகிறார்; எழுப்புகிறார். அன்பும் அருளும் ஆறுபோல் ஓடிய நாட்டில், இதுபோழ்து என்ன என்ன ஓடுகின்றன? திட்டும் வசையும் இரத்தமும் ஓடுகின்றன. கலகம் வளர்க்கப் பாழும் பத்திரிகைகளிருக்கின்றன.

மக்கள் கருத்தை ஈர்க்க வல்ல தொழின்முறைகள் போதிய அளவு நாட்டிலின்மையால், ஏழைமக்கள் வெளி நாடுகளுக்கு வயிறு பிழைக்க ஓடுகிறார்கள். மிகுதியுள்ள மக்கள், அதிகாரவர்க்கத்துக்குத் துணை நிற்போர் வழிநின்று அவர் ஏவல் செய்வோராகிறார். தற்போது நாட்டில்நிகழ்ந்து வரும் தேர்தல் பிணக்கு, சாதிப்போர், சமயச்சண்டை முதலியவற்றிற்குத் துணை நிற்பவர் ஏழைமக்களே யாவர். காரணம் வறுமை; வயிற்றின் கொடுமை. வயிற்றின் கொடுமை என்னதான் செய்யாது? திட்டச் செய்யும்; அடிக்கச் செய்யும்; கொலையுஞ் செய்யத்தூண்டும். அந்தோ! நம் மக்கள் நிலையை, நேயர்களே! சிந்தியுங்கள்.

நாம் எந்நிலை எய்தியிருக்கிறோம்! அரசராயிருந்தோம்; ஆண்டியானோம். அந்தணரா யிருந்தோம்; வெந்தணரானோம். வேளாளரா யிருந்தோம்; வேலைக்காரரானோம். என்னே! நமது நிலை. நமது தவமெங்கே? நமது யோகமெங்கே? நமது போகமெங்கே? நமது உழவெங்கே? இவையெலாமிழந்து நாமும் மனிதர்களாக வாழ்கிறோம்! இதுவா நமது வாழ்க்கை? இதுவா நமது நாடு? இதுவா நமது சிறப்பு? நமது பழைய நாட்டையும், அதன் சிறப்பையும் குறைகூறுந் தற்காலக் கல்வியாளரே! நினைமின்! நினைமின்! பழைய நாட்டுச் சிறப்புக்களைக் கூர்ந்து நினைமின்! அவைகள் இதுபோழ்து நாட்டில் இல்லை; ஏட்டிலிருக்கின்றன. அவ்வேட்டுரைகள் நமக்கு இன்ப அன்பு அமிழ்தாய் மகிழ்ச்சியூட்டுகின்றன.

நந்தமிழ் நாட்டின் சிறப்புப் பலப்பல புராணங்களில் ஓதப்பட் டிருக்கிறது. அப்புராணங்களுள், கருத்துக்களை எளிய நடையில் விளக்கும் புராணம் பெரியபுராணம். அப்

பெரிய புராணத்தை ஈண்டு எடுத்துக்கொள்கிறோம். அப் புராணம் பாடியவர் தமிழ்நாட்டில் வாழ்ந்தவர்; அமைச்சுத் தொழில் புரிந்தவர்; தமிழ்நாட்டின் இயற்கை வளங்களை நேரே கண்டு, அக்காட்சியைப் பாட்டாகப் பாடினவர். பெரிய புராணத்துள் போந்துள்ள நாட்டுச் சிறப்பு சோழநாட்டைப் பற்றியது. மற்றைய நாடுகளின் சிறப்புக்களும் அப்புராணத் தின்கண் பல இடங்களில் ஓதப்பட்டிருக்கின்றன. சிற்சில பகுதிகளை ஈண்டு எடுத்துக்காட்டிச் செல்கிறோம்.

அத்திருநாட்டுச் சிறப்பின் முதற்பாட்டு வருமாறு :—

"பாட்டியல் தமிழுரை பயின்ற எல்லையுள்
கோட்டுயர் பனிவரைக் குன்றின் உச்சியில்
சூட்டிய வளர்புலிச் சோழர் காவிரி
நாட்டியல் பதனையான் நவில லுற்றனன்."

பாட்டு என்று ஆசிரியர் தொடங்குகிறார். தமிழிற்கும் பாட்டிற்குமுள்ள தொடர்பு கவனிக்கத்தக்கது. மகிழ்ச்சி தரக்கூடியது பாட்டன்றோ? அப்பாட்டைத் தமிழில் இசைத் தால் என்ன இன்பம்! 'பாட்டியல்தமிழ்' என்னும்போதே உள்ளத்தில் இன்பம் ஊர்கிறது. இரண்டாவது, மன்னர் வீரம் குறிக்கப் பெற்றிருக்கிறது. மன்னன் வீரமன்றோ நாட்டின் உயிர்? சோழநாட்டைக் 'காவிரிநாடு' என்று சேக் கிழார் செப்புகிறார். சோழநாட்டிற்குப் 'புனல்நாடு' 'நீர்நாடு' என்றும் பெயருண்டு. தமிழின் பாட்டியல்புக்கும் சோழன் வீரத்துக்கும் துணைசெய்வது காவிரியாதலால் 'காவிரிநாடு' என்றார். காவிரி பல நாடுகளில் பாய்ந்து ஓடினும் அது பெரிதும் வளஞ்செயுமிடம் சோழநாடேயாகும். அக்காவிரி யின் வளம், நாட்டையும் நாட்டுறை மக்களையும் பிறவற்றை யும் பாட்டியல் தமிழாக்கும் பான்மையது என்பது குறிப்பு. பாடல்களின் பொருளையாதல், நயத்தையாதல், அழகை யாதல் ஈண்டு விரித்துக் கூறிப் பெரியபுராணப் பிரசங்கம் நிகழ்த்தப் புகுந்தோமில்லை. எடுத்த கட்டுரைக் கேற்பச் சில குறிப்புக்களை மாத்திரம் பொறித்துச் செல்கிறோம்.

ஆசிரியர் காவிரி ஓட்டத்தைச் சில பாடலாக்கி, ஓரிடத்தில் அவ்வாற்ருெழுக்கை,

" வண்ணநீர் வரைதா வந்த மேன்மையால்
எண்ணில்பேர் அறங்களும் வளர்க்கும் ஈகையால்
அண்ணல்பா கத்தையா ளுடைய நாயகி
உண்ணெகிழ் கருணையின் ஒழுக்கம் போன்றது "

என்று கூறியுள்ளார். காவிரிப் பெண்ணை, உமையெனும் பெண்ணரசியாரோடொத்துக் கூறியதும், 'உண்ணெகிழ் கருணையின்' என்றதும் கூர்ந்துநோக்கத்தக்கன. சேக்கிழார் தாமெடுத்த அன்புப் புராணத்துக்கேற்ப உவமைகள் எடுத்தாண்டிருத்தலுங் கருதற்பாற்று. படிப்போர் உள்ளத்தைத் தீய வழியில் கடவும் உவமைகள் சேக்கிழார் கருத்தில் உலவுதலில்லை. காவிரி, கால்கொண்டு நீர் நிலைகளை நிரப்புவதையும், வயல்களில் புகுவதையும், உழவர்கள் தொழில் புரிவதையும், பெண்மக்கள் மகிழ்ச்சியோடு ஆடியும் பாடியும் விழா நிகழ்த்துவதையும் ஆசிரியர் பாட்டில் நமக்குக் காட்டிச் செல்வதைப் புராணத்திற் காண்க.

இத்துணை வளத்தைக் காவிரியாற் பெறும் சோழநாட்டின் வயல்களின் கொழுமையையும் செழுமையையும் விளங்க உரைக்கவும் வேண்டுங்கொல்! காவிரிவளங் குன்றியுள்ள இந்நாளிலும், சோழநாடு ஒருவித வளத்தைக் கொழித்துக் கொண்டிருத்தல் கண்கூடு. அந்நாளில் அன்பிற் சிறந்து, அன்பர் புராணங் கூறப்போந்த சேக்கிழார், வயல்களையும் அவைகளிலுள்ள பயிர்களையும் அன்புப் பாக்களால் நமக்கு வழங்கியுள்ளார். அவைகளுள் இரண்டு வருமாறு :—

" சாலிநீள் வயலின் ஓங்கித் தன்னிகர் இன்றி மிக்கு
வாலிதாம் வெண்மை உண்மைக் கருவினும் வளத்த வாகிச்
சூல்முதிர் பசலை கொண்டு சுருள்விரித் தரனுக் கன்பர்
ஆலின சிந்தை போல அலர்ந்தன கதிர்க ளெல்லாம் "

" பத்தியின் பால ராகிப் பரமனுக் காளாம் அன்பர்
தத்தமில் கூடி ஞர்கள் தலையினல் வணங்கு மாபோல்
மொய்த்தநீள் பத்தி யின்பால் முதிர்தலை வணங்கி மற்றை
வித்தகர் தன்மை போல விளைந்தன சாலி எல்லாம் "

'சுருள் விரித்து அரனுக்கு அன்பர் ஆலின சிந்தை போல அலர்ந்தன கதிர்கள் எல்லாம்' எனவும், 'பத்தியின் பாலராகிப் பரமனுக்காளாம் அன்பர் தத்தமில் கூடினூர்கள் தலையினுல் வணங்குமாபோல்' எனவும் வரும் அன்புரைகளை நோக்குக. அன்று நாட்டில் நிலவிய கல்வி அறிவு ஒழுக்கம் முதலியவற்றிற்கேற்ற உவமான உவமைகள் சேக்கிழார் உள்ளத்தில் உதித்தன. இன்று எவ்வுவமைகள் நினைவிற்கு வரும்? காட்சியிற்படுவது எது? அன்று கதிர்கள் அரனுக்கு அன்பர் ஆலின சிந்தைபோல அலர்ந்தன. இன்று தன்னலத்தால் மதர்த்தெழும் பொருமைபோல் கதிர்கள் காய்ந்தெரிகின்றன என்னலாம். அன்று சாலிகள் சாய்ந்து தரையில் படிந்திருந்த காட்சி, 'பத்தியின் பாலராகிப் பரமனுக்காளாம் அன்பர் – தத்தமில் கூடினூர்கள் தலையினுல் வணங்குமாபோல்' சேக்கிழார்க்குத் தோன்றியது. இன்று அக்காட்சி, தேர்தல் ஊர்வலத் தொண்டர்கள், ஒருவரோடொருவர் போரிட்டு மடிந்து கிடக்கும் நிலையை நினைவூட்டும்.

இவ்வாறு விளைந்த வயல் வளங்கொண்டு நம் முன்னோர்கள் அறக்கடனாற்றி வந்தார்கள். அக்கடனைப்பற்றிய பா ஒன்று வருமாறு:—

'அரசுகொள் கடன்கள் ஆற்றி மிகுதிகொண் டறங்கள் பேணிப்
பரவருங் கடவுள் போற்றிக் குரவரும் விருந்தும் பண்பின்
விரவிய கிளையுந் தாங்கி விளங்கிய குடிகள் ஓங்கி
விரைபுரை மாடம் நீடி மலர்ந்துள பதிகள் எங்கும்'

இப்பாட்டில் கடன்கள் முறைமுறையாக அமைந்துள்ள ஒழுங்கைக் காண்க. அறத்துறைகள் ஒழுங்குபெற நடைபெற்று வந்தமையால், வரைபுரை மாடம் நீடிப் பதிகளும் மலர்ந்திருந்தன.

இந்நிலையில் வாழ்ந்த நம் முன்னோர்கள் மனம்போல நாடும் மணம் வீசிக்கொண்டிருந்தது. தற்கால நாடுகளினும் நகரங்களினும் என்ன இருக்கின்றன? சொல்லவும் வேண்டுமோ? இயந்திர ஒலியும் ஓட்டமும், சாக்கடை ஓடையும், அடக்குமுறையும், வறுமையும், தேர்தல் பிரசாரமும், சாதி

சமயப் போர்ச் சிறுமையும், பிறவும் எங்கணுங் காட்சியளிக்கின்றன. இப்பீடைகள் பாட்டாமோ? செயற்கை நரகம்! நரகம்! சேக்கிழார் கண்ட நாட்டை இன்னுஞ் சிறிது காண்போம் :

'நாளிகே ரம்செ ருந்தி நறுமலர் நரந்தம் எங்கும்
கோளிசா லந்த மாலம் குளிர்மலர்க் குரவம் எங்கும்
தாளிரும் போந்து சந்து தண்மலர் நாகம் எங்கும்
நீளிலை வஞ்சி காஞ்சி நிறைமலர்க் கோங்கம் எங்கும்'

'சூதபா டலங்கள் எங்கும் சூழ்வழை ஞாழல் எங்கும்
சாதிமா லதிகள் எங்கும் தண்டளிர் நறவம் எங்கும்
மாதவி சரளம் எங்கும் வகுளசண் பகங்கள் எங்கும்
போதவிழ் கைதை எங்கும் பூகபுன் னாகம் எங்கும்'

அருமைச் சகோதரிகளே! சகோதரர்களே! நமது பழைய நாட்டைப் பாருங்கள்; மனம் இன்பக் கடலாடுகிறது. இன்பமும் மகிழ்ச்சியுமில்லா இந்நாளில் புராணங்களிலுள்ள நாடு நகரங்களிலாதல் சிறிது நேரம் மனமிசைய வாழ்வோமாக.

'மங்கல வினைகள் எங்கும் மணஞ்செய்கம் பலைகள் எங்கும்
பங்கய வதனம் எங்கும் பண்களின் மழலை எங்கும்
பொங்கொளிக் கலன்கள் எங்கும் புதுமலர்ப் பந்தர் எங்கும்
செங்கயல் பழனம் எங்கும் திருமகள் உறையுள் எங்கும்'

'மேகமுங் களிறும் எங்கும் வேதமுங் கிடையும் எங்கும்
யாகமுஞ் சடங்கும் எங்கும் இன்பமும் மகிழ்வும் எங்கும்
யோகமுந் தவமும் எங்கும் ஊசலும் மறுகும் எங்கும்
போகமும் பொலிவும் எங்கும் புண்ணிய முனிவர் எங்கும்'

'வீதிகள் விழவின் ஆர்ப்பும் விரும்பினர் விருந்தின் ஆர்ப்பும்
சாதிகள் நெறியில் தப்பா தனயரும் மனையில் தப்பா
நீதிய புள்ளும் மாவும் நிலத்திருப் புள்ளும் ஆவும்
ஓதிய எழுத்தாம் அஞ்சும் உறுபிணி வரத்தாம் அஞ்சும்'

'நற்றமிழ் வரைப்பின் ஓங்கு நாம்புகழ் திருநா டென்றும்
பொற்றடந் தோளால் வையம் பொதுக்கடிந் தினிது காக்கும்
கொற்றவன் அநபா யன்பொன் குடைநிழல் குளிர்வ தென்றால்
மற்றதன் பெருமை நம்மால் வரம்புற விளம்பல் ஆமோ'

இத் திருப்பாடல்களை நோக்குழிப் பழைய காலத்தில் பொருள் விளைவின் செழுமையும், அதனால் இல்லறம் நடந்த சிறப்பும், மற்ற அறத்துறைகள் இயங்கிய இனிமையும், இவைகளால் நாடு திருநாடாக விளங்கிய பெருமையும், இவைகளெல்லாம் கொற்றவன் குடைநிழற்கீழ்க் குளிருங்குறிப்பும் விளங்குதல் காண்க. எமக்கு இப்பொழுதுள்ள நாடு துன்பமும், புராணங்களிலுள்ள நாடு இன்பமும் அளிக்கின்றன. பழைய நாட்டை ஏட்டில் பார்த்தின்புறும் அளவோடு நில்லாது, அந்நாட்டை மீண்டுங் காண ஊக்கங்கொண்டெழுதல் வேண்டும். அவ்வூக்கம் பெறும்பொருட்டே பழைய நூல்களை வாசித்தல் வேண்டும். (10–9–1926)

## நகரம்

இரண்டொரு வாரங்கட்கு முன்னர், 'நாட்டுச் சிறப்பு' என்னுந் தலைப்பீந்து நாமெழுதிய கட்டுரையின் உள்ளுறை நேயர்கள் நினைவிலிருக்கும். நாட்டுக்குப் பின் வரவேண்டுவது நகரமன்றோ? இன்று நகரினை நோக்குவோம். எந் நகரினை நோக்குவது? தற்கால நகரம் காட்சியில் திகழ்வது. முற்கால நகரம் நூல்களில் பொலிவது. இரண்டிற்கும் வேற்றுமையுண்டோ? உண்டு. முன்னையது வெம்மை நரகம். பின்னையது தண்மை நிலயம். இக்கால மனித வாழ்விற்கேற்ற வண்ணம் இக்கால நகரம் அமைந்து கிடக்கிறது. அக்கால மனித வாழ்விற்கேற்ற வண்ணம் அக்கால நகரம் அமைந்தது. மனித வாழ்வின் பரிணாமமே நகரமென்பது. ஒருவனது உடைகொண்டு அவனது இயல்பை அளந்துணரலாகும். அவ்வாறே ஒரு நகர அமைப்பைக் கொண்டு அங்குள்ள மனித வாழ்வையும் அளந்துகொள்ளலாம். முன்னை நாளில் மனிதன் இயற்கைவழி வாழ்வு செலுத்தினன். அதற்கேற்ற வண்ணம் நகரம் அமைந்தது. இப்பொழுது

மனிதன் உள்ளத்தில் எரி அன்றி வேறென்ன இருக்கிறது? அவ்வெரியின் பரிணாமம் தற்கால நகரம்.

தற்கால நகரத்தைப்பற்றி விரித்துரைக்க வேண்டுவதில்லை. வீடுகளின் அமைப்பும், தெருக்களின் நெருக்கமும், பலதிற வண்டிகளின் ஓட்டமும், மல அறைகளும், சாக்கடையும், ஆயிரம் ஆயிரம் மக்கள் ஒரு பெருங் கட்டிடத்தில் தொழில் புரிவதும், பிறவும் வெம்மையுமிழாது வேறு என்ன உமிழும்? அவ்வெம்மைபோக்கத் தற்கால நகரத்தான், செயற்கை விசிறி கொண்டான்போலும்! தற்கால நகரம், மனிதனை இயற்கை வாழ்வினின்றும் பிரித்திருத்தலால், அவன் செயற்கை வெம்மையில் எரிந்துகொண்டிருக்கிறான். எவன் உள்ளத்தில் இதுபோழ்து எரியில்லை? மாணாக்கன்முதல், மந்திரி ஈறாக உள்ள எவருள்ளத்திலும் எரி ஒவ்வொரு விதமாகக் கனன்று நிற்கிறது. மாணாக்கனுக்குப் பரீட்சை எரி! மந்திரிக்குத் தேர்தல் எரி! வேலையில்லாத் திண்டாட்ட எரி யாண்டில்லை? அரசுகளோ! சொல்லவேண்டுவதில்லை! ஒவ்வோர் அரசும் அழுக்காற்றால் எரிந்து கரிந்துகொண்டிருக்கிறது. ஒருவரை ஒருவர் வீழ்த்துவதே பெருந் தொண்டாகக் கருதப்படுகிறது. நீதிமன்றங்களிலுள்ள வழக்குகள் தற்கால மனித வாழ்வின் நிலையைப் புலப்படுத்தும். வக்கீல் தொழிலொன்று தற்கால நாகரிகத்தை விளங்கச்செய்யும். தற்கால நகரத்தில் வாழ்வோன் காண்பதென்னை? கேட்பதென்னை? உண்பதென்னை? இயற்கை அவன் காட்சியில் படுவதுண்டோ? வானம்பாடியின் இனிய கீதம் அவன் செவியில் நுழைவதுண்டோ? இயற்கை உணவு அவனுக்கேது? எல்லாம் இயந்திரம்! இயந்திரம்! இத்தகை நகரம் நகரமா? நரகமா? இந்நகரில் அறவோர்க்கும் அந்தணர்க்கும் என்ன வேலை? தற்கால நகரம் காட்சியளவில் நிற்றலால் அதைப்பற்றி விரித்துக் கூறவேண்டுவதில்லை.

தற்கால நகரங்களில் நமது சென்னையும் ஒன்று. இற்றைக்குச் சுமார் ஐம்பதாண்டுகளுக்கு முன்னர்ச் சென்னையில்

தற்கால நாகரிகம் பெரிதும் பரவியிராது என்பது திண்ணம். அக்கால நிலைகண்டே ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகள்,

தேட்டிலே மிகுந்த சென்னையி லிருந்தால்
சிறுகுறு மென்றுளம் பயந்தே
நாட்டிலே சிறிய வூர்ப்புறங் களிலே
நண்ணினேன் ஊர்ப்புற மடுத்த
காட்டிலே பருக்கைக் கல்லிலே புன்செய்க்
களத்திலே திரிந்துற்ற இளைப்பை
எட்டிலே எழுத முடியுமோ இவைகள்
எந்தைநீ அறிந்தது தானே

என்று நகரத்தை வெறுத்துக் கூறினர். அந்நாளிலாதல் கிராமங்களில் பழைய மணம் சிறிது கமழ்ந்துகொண்டிருந்தது. இதுபோழ்து நாடு முழுவதும் தற்கால நாகரிகப் பேய் தாண்டவம் புரிகிறது. இப்பொழுது மனதுக்கினிய பழமையை யாண்டுக் காண்பது?

பழைய நகரம் பசுமையினின்றும் மலர்ந்தது. அதனை இயற்கையின் பரிணமம் என்று கூறலாம். பழைய நகரங்களைப் படம் பிடித்த பாவாணர் உரைகள் நமக்கின்பூட்டுகின்றன. அவைகளை மனதிற் கண்டு, அம்மானத நகரிலாவது சிற்சில நேரம் வாழ்வோமாக. அந்நகரக் காட்சி, தற்கால நரகக் காட்சியை மறைத்து மறக்கவுஞ் செய்யும். நேயர்களே! நகர இன்பம் வேண்டுமேல் காவியங்களில் அதைக் கண்டு நுகர்க. அவ்வின்பம் அரச இன்பத்தினும் மேலானது. அந்நாளில் நம் முன்னோர்கள் வாழ்ந்த நகரங்கள் காவியங்களில் படமாகப் பொலிகின்றன. அப் படத்தைப் பார்ப்போம்.

முன்னர் நாட்டுச் சிறப்பைப் பெரியபுராணத்தினின்றும் எடுத்துக் காட்டினோம். அப்புராணத்தினின்றுமே நகரத்தையுங் காண்போம். பெரிய புராணத்திற் போந்துள்ள நகரங்கள் பற்பல. அவைகளெல்லாவற்றையுந் திரட்டி வெளியிடல் அநாவசியம். குறிப்பாக இரண்டொன்றைக் காட்டலே சாலும். எவருந் தெள்ளத்தெளிய உணருமாறு இனிய எளிய தமிழால் அமைந்த புராணம் பெரியபுராணமாதலால்

அதன்மீது கருத்துச் செல்கிறது. பிற நூல்களிலுள்ள நாடு நகரங்களையும் அவ்வப்போது நமது 'நவசக்தி' காட்டுவள்.

பழைய நகரம் பசுமையால் சூழப்பட்டது. அப்பசுமையின் தண்மை பல வழியிலும் நகரை ஓம்பிவந்தது. முன்னை நாளைய புடை நகரைச் சிறிது காண்போம்:

நாக சூதவகு ளம்சர ளம்சூழ்
நாளிகே ரம்இல வங்கம் நாரந்தம்
பூக ஞாழல்குளிர் வாழைம தூகம்
பொதுளும் வஞ்சிபல எங்கு நெருங்கி
மேக சாலம்மலி சோலைகள் ஆகி
மீது கோகிலம் மிடைந்து மிழற்றப்-
போக பூமியினும் மிக்கு விளங்கும்
பூம்பு றம்பணை கடந்து புகுந்தார்.

வன்னி கொன்றைவழை சண்பகம் ஆரம்
மலர்ப்ப லாசொடு செருந்திமந் தாரம்
கன்னி காரம்குர வம்கமழ் புன்னை
கற்பு பாடலம் கூவிள மோங்கித்
துன்னு சாதிமரு மாலதி மௌவல்
துதைந்த நந்திகா வீரமி டைந்த
பன்ம லர்ப்புனித நந்தவ னங்கள்
பணிந்து சென்றனன் மணங்கமழ் தாரான்.

இம் மரச்சோலைகள் நினைவிலுறும்போதே உள்ளங் குளிர்கிறது. மரங்களல்லவோ மனிதனை வளர்ப்பன? இச் சோலைகளைச் சேக்கிழார் நமக்குக்காட்டும்போது, 'கோகிலம் மிடைந்து மிழற்றலையும்' (குயில் கூவுதலை) நமது செவிக் கூட்ட மறந்தாரில்லை.

தற்கால நகரத் தெருவில் நடந்தால் செவியிலுறும் ஓசைகள் எத்தகையன? அந்தோ! கொடுமை! கொடுமை! விரைவில் காதுகளைச் செவிடுபடுத்தும் கொடிய ஓசைகளன்றி வேறு இனிய ஓசைகள் உண்டுகொல்! அவ்வோசைகள் நாடோறும் அனுபவத்திலிருத்தலால், அவைகளைத் தொகுத்துக் கூற வேண்டுவதில்லை. பண்டைக்கால நகரத்திலெழுந்த ஓசைகள் எத்தகையன? நேயர்களே! கவனியுங்கள்.

வேத ஓசையும் வீணையின் ஓசையும்
சோதி வானவர் தோத்திர ஓசையும்
மாதர் ஆடல் மணிமுழ வோசையும்
கீத ஓசையு மாய்க்கிளர் வுற்றதே.

இத்தகை ஓசைகள் ஒருங்கே தெருக்களில் எழுங்காலம் மீண்டும் வருமோ? இவ்வோசைகள் புலியையும் பசுவாக்கு மல்லவோ? அக்கால நகரத் தெருக்களில் அமைந்த கட்டிடங் களை நோக்குவோம் :

மாட மாளிகை சூளிகை மண்டபம்
கூட சாலைகள் கோபுரம் தெற்றிகள்
நீடு சாளர நீடரங் கெங்கணும்
ஆடல் மாதர் அணிசிலம் பார்ப்பன.

'சாளர நீடரங்கம்' என்பது கவனிக்கத் தக்கது. காற்று நுழையப் பலகணிகள் அமைந்திருந்தமை கருதற் பாலது. 'கால் அதர்' என்பர் இளங்கோ அடிகளார். (கால் - காற்று ; அதர் - வழி).

அந்நாளில் தமிழ் வேதத் திருப்பதிகங்கள் எங்கணும் ஓதப்படுமாம். அவைகளின் பெருக்கை ஆசிரியர்,

உள்ளம் ஆருரு காதவர் ஊர்விடை
வள்ள லார்திரு வாரூர் மருங்கெலாம்
தெள்ளும் ஓசைத் திருப்பதி கங்கள்பைங்
கிள்ளை பா(ர்)டுவ கேட்பன பூவைகள்

என்று குறிப்பிடுகிறார். திருப்பதிகங்களைக் கிள்ளை பாடப் பூவைகள் கேட்குமாம். எத்துணை மக்கள் அத் திருப்பதிகங் களை ஓதியிருப்பார்கள்? இந்நாளில் கிள்ளைகளும் பூவைகளும் நகரங்களில் காணப்படுகின்றனவோ? கிள்ளைகளும் பூவை களும் தங்குதற்குச் சோலைகளுண்டோ? அவைகளைச் சுடத் துப்பாக்கிகளுண்டு! கிளி பூவைகளைக் கண்டு மகிழும் பாவலர்களும் இல்லை.

அந்நாளில் நகரிடை வாழ்ந்த மக்கள் நிலையைச் சிறிது நோக்குவோம் :

தாழ்ந்த வேணியர் சைவர் தபோதனர்
வாழ்ந்த சிந்தை முனிவர் மறையவர்
வீழ்ந்த இன்பத் துறையில் விரவுவார்
சூழ்ந்த பல்வே றிடத்ததத் தொல்நகர்.

இந்நாளில் வேடக்காரர் பலரைக் காணலாம்.

திருநகரத்திலுள்ள அரசன் எத்தகையாளனா யிருந்தான்?

மண்ணில் வாழ்தரு மன்னுயிர் கட்கெலாம்
கண்ணும் ஆவியும் ஆம்பெரும் காவலான்
விண்ணு ளார்மகிழ் வெய்திட வேள்விகள்
எண்ணி லாதன மாண இயற்றினான்.

'மண்ணில் வாழ்தரு மன்னுயிர் கட்கெலாம் - கண்ணும் ஆவியு மாம்பெருங் காவலன்' என்று மன்னன் இயல்பு கூறப்பட்டிருக்கிறது. இதுகாலை வேண்டப்படும் ஜனநாயகத்தினும் இக்கோனாட்சி போற்றத் தக்கது. தற்கால ஜனநாயகம் என்பதற்குச் 'சோதாக்கள்' கூட்டம் என்று சில அறிஞர் கூறுப. இக்கூற்றிலும் உண்மை யுண்டு. ஜனநாயகம் என்னும் பெயரால் நடைபெறுந் தேர்தல்களில், அறிவுசான்ற நல்லாரை அடித்துத் துரத்தி, இரக்கமிலாக் கயவர்கள் ஆட்சிப் பீடங்களில் அமர்ந்து, நாட்டைக் கெடுப்பதினும், 'மண்ணில் வாழ்தரு மன்னுயிர் கட்கெலாம் - கண்ணும் ஆவியு மாம் பெருங் காவலன்' ஆட்சியால் நலன் விளையுமன்றோ?

(1-10-1926)

# எனது இலங்கைச் செலவு

'இலங்கைச் செலவு' என்னுந் தலைப்பை நோக்கியதும் சிலர், 'இலங்கைக்குச் சென்று திரும்பியதற்கு நேர்ந்த செலவு போலும்' என்று நினைக்கலாம். ஈண்டுச் 'செலவு' என்னுஞ் சொல்லைப் பொருட் செலவென்னும் பொருளில் பெய்தேனில்லை. தரை - நீர்ச் - செலவு என்னும் பொருளில் அச்சொல்லைப் பெய்தேன். இந்நாளில் 'செலவு' என்னுஞ் சொற்குப் பதிலாகப் பெரிதும் 'யாத்திரை' என்னுஞ் சொல் ஆட்சி பெற்றிருக்கிறது. பண்டைத் தமிழ் நூல்களில் 'செலவு' என்னுஞ் சொல்லே ஆட்சி பெற்றிருத்தல் காண லாம். 'செங்கோன் தரைச்செலவு' என்னும் பெயர் தாங்கிய ஒரு தமிழ் நூலுண்மையுங் கவனிக்கற்பாலது.

'எனது இலங்கைச் செல'வென்னும் இக்கட்டுரைக் கண், எனது புறப்பாடு, சேர்க்கை, இருக்கை, வரவேற்பு முதலியவற்றை முறை முறையாகத் தொகுத்துக் கூறப் புகு கிறேனில்லை. இலங்கைச் செலவில் யான் கண்ட தோற்றங் களுள் சிலவற்றை ஈண்டுக் கிளந்து கூறவேண்டுமென்பது எனது உள்ளக்கிடக்கை. அவைகளினின்றும் புலனாகும் சில நுண்மைகளும் உண்மைகளும் நேயர்கட்குப் பயன்படும் என்னும் நோக்கோடு, சுருங்கச் சொல்லல் என்னும் வரம்பு வழி நின்று, இக்கட்டுரை வரைவான் புகுகிறேன்.

முதலாவது குறிக்கத்தக்கன இரண்டு. ஒன்று, மண்டபம் என்னுமிடத்தில் இலங்கை நோக்கிச் செல்வோர்க்கு இலங்கை அரசினர் கோலியுள்ள கட்டுப்பாடு; மற்றொன்று, கப்பலில் சுங்கக் காவலர் கட்டுப்பாடு. இவைகளை நோக்குழி, முன்னை நாளில் இலங்கை போதருவோரைத் தகைய நிறுவப் பெற்ற காப்புகளைக் கூறும் இராமாயணப் பகுதி நினைவிற்கு வந்தது. இலங்கைத் தெய்வத்தைக் காண்டற்கு முன்னர், நந்தி வழிபாடும் களிற்றுக் கடவுள் வழிபாடும் செய்ய வேண்டும் போலும் என்றும் எண்ணினேன். மண்டபத்தில் எனக்கும் என்னுடன் போந்த நண்பர்க்கும் எத்தகை

மறியலும் நிகழாதொழிந்தது. அரசினர் சீட்டும் பிறவும் எங்களை அழைத்தோர் வாயிலாக நாங்கள் பெற்றிருந்தமை யான், எங்கட்கு எத்தகைய மறியலும் நேரவில்லை. அச்சீட்டுப் பெருதார் பட்ட பாடு சொல்லுந் தகையதன்று. முதல் வகுப்பு இரண்டாம் வகுப்பில் வீற்றிருப்போர்களை டாக்டர் கள் நேரே போந்து சோதிக்கிருர்கள். அரசினர் சீட்டுப் பெருத முதலிரண்டு வகுப்பினரும் 'காவலில்' ஒரு நாளிருந்து செல்லுதல் வேண்டுமாம். அரசினர் உரிமை பெற்ற சிலர் தம்முடன் போந்த வேலையாட்களை விடுத்தேகலும் நேர் கிறது. மூன்ரும் வகுப்பில் வருவோர்நிலை சாலவும் இரங்கத் தக்கது. அன்னர் அவண் ஆறுநாள் தங்கல்வேண்டுமாம். சிற்சில மாறுதல்கள் டாக்டர்கள் விருப்பத்தைப் பொறுத் திருக்கின்றன. என் பார்வையில் பட்ட டாக்டர்கள் அன்புடையவர்களாகவே காணப்பட்டார்கள். அவர்கள் என் செய்வார்கள்! கட்டுப்பாட்டிற் கிணங்கியன்ரு அன்னர் நடத்தல்வேண்டும்?

எப்பொழுதோ பிளேக் நோய் இந்தியாவினின்றும் இலங்கைக்குக் குடியேறிற்ரும். அதைத் தகையவேண்டி இலங்கை அரசினர் மண்டபத்தில் சில ஏற்பாடுகள் செய்துள் ளார். பிரயாணிகள் குறிப்பிட்ட நாள்வரை வதிதற்குப் பரந்த நிலையங்களும், பிறவும் ஒழுங்காக அமைக்கப் பெற் றிருக்கின்றன. சேய்த்தே ஒதுங்கி அந்நிலையங்களை நோக் குழிச் சிறை நினைவு தோன்ருமற் போகாது. சிறைக்கூடத் துக்குச் செல்வது போலவே மக்கள் அவ்வெல்லைக்குள் செல் வார்களென்று யான் கருதுகிறேன். மூன்ருவது வகுப்புப் பிரயாணத்தைப் பற்றிச் சொல்லவேண்டுவதில்லை! அந் நரகத்திடைப் பல்லாற்ருனும் வருந்தி வரும் மக்களின் காட்சி நோயுற்ரேர் காட்சியை வழங்கும். அவர்களை ஆறு நாள் ஓரிடத்தில் அடைத்து, அவரவர் இயல்புக்கு மாறுபட்ட உணவூட்டி வருதலால், அவர்கள் உடல் நலன் குன்றுதல் திண்ணம். பிளேக் மலிவுற்ற ஒருபோழ்து செய்யப்பெற்ற ஏற்பாட்டுவழியை, எப்பொழுதுந் தொடர்ந்துநிற்றல் மறுக் கத்தக்கது. அக்கட்டுப்பாடு, சிலரை அச்சுறுத்தி இலங்கை

மங்கைமீது வெறுப்புற்றுத் திரும்பவுஞ் செய்யும். பெரும் பொருள் செலவழித்துச் செய்த ஏற்பாடுகளை நிறுத்தலும் குலைத்தலும் கூடா என்பது இலங்கை அரசினர் எண்ணமோ என்னவோ தெரியவில்லை. இலங்கையை நோய்வாயினின்றும் காக்கச் செய்யப்படும் முயற்சி போற்றற்குரியதே. ஆனால் காரணமின்றி எப்பொழுதும் பிரயாணிகளை அல்லற்படுத்தல் அறமன்று.

இத்தடையைக் கடந்ததும் என்னுடன் போந்த அன்பர் குமாரசாமியாருக்குப் புன்முறுவல் அரும்பிற்று; முகமும் மலர்ந்தது. பின்னர்த் தனுஷ்கோடித் துறையில் இழிந்து, ஆண்டிருந்த கலத்தில் இவர்ந்தோம். ‘மயக்கம்’ ‘வாந்தி’ என்னும் நினைவு அன்பர் குமாரசாமியார் உள்ளத்தில் தோய்ந்து, பருமையடைந்து, அவரைப் படுக்கையில் கிடத்திவிட்டது. எண்ணம் என்னதான் செய்யாது? அன்று கப்பலுக்குற்ற ஊறல், அது தவழ்ந்தது என்றே சொல்வேன். “‘பஞ்சாப் மெயில்போல’ப் பறக்குங் குமாரசாமியாரே! கப்பலின் தவழ்தல் பிடியாது கண்மூடிக்கொண்டீர்போலும்” என்று யான் அவரைக் கேட்டுக் கேட்டு நகையாடலானேன். எனக்கு எத்திற மயக்கமும் உறவில்லை. அந்திவான் அழகும் நீலக்கடல் வனப்பும் பெருவிருந்து அளித்து வந்தன. கப்பலில் நம்மவர்கள் முதல்வகுப்பு இரண்டாம் வகுப்புக்களில் வீற்றிருந்தாலும், அவர்களுள் பெரும்பான்மையோர் ஒழுங்கின்றி நடக்கிறார். அவர், இரைந்தும் விரைந்தும் முனிந்தும் பேசுவதும், வெற்றிலைப்பாக்கை மென்றுமென்று துப்புவதும், வழிதுறையின்றித் துயில்வதும், முறையின்றி யுண்பதும் வெறுக்கத்தக்கன. ஐரோப்பியர்கள் அவ்வலங்கோலங்களைக் கண்டுங் காணுமலிருந்ததை இடையிடையே யான் கவனித்துக்கொண்டே சென்றேன். இரண்டுமணி நேரத்துள் தலைமன்னார் துறை நண்ணவேண்டிய கலம், அன்று அத்துறை நண்ண ஏறக்குறைய நான்கு மணி நேரமாயிற்று. துறை நண்ணியதும் கலத்தினின்றும் உடனே இறங்கல் இயலவில்லை. சுங்கக் காவலர் கூட்டங் கூட்டமாக ஈண்டினர். அன்னார் வழிநெடுக வாளாகிடந்து, இறங்கும்

வேளையில் பிரயாணிகளை மறிப்பது, கால தூதர் காட்சி வழங்குவதுபோ லிருந்தது. அங்கிலையில் பொறுமையாளரும் பொறுமை யிழப்பர். இலங்கை அரசினர்க்கும் இந்திய அரசினர்க்கும் ஏற்பட்டுள்ள நீசெல்லையை யொட்டிச் சோதனை செய்யப்படுகிறது போலும். எவ்வேற்பாடு எவ்வாறிருப்பினும், சோர்ந்து வரும் பிரயாணிகளைக் காக்கச் செய்வது அறிவுடைமையாகாது. நடுக்கடலில் கப்பல் உழுது செல்லும்போது, சோதனை முடித்தல், காலக்கடவுளை உற்ற வழியில் வழிபடுவதாகும்.

கப்பலினின்றும் இறங்கி, இலங்கைப் புகைவண்டியில் இரண்டாம் வகுப்பில் ஏற முயன்றோம்; முயன்றோம்; இரண்டாம் வகுப்பில் இடமே இல்லை. இரண்டாம் வகுப்புச் சீட்டை முதல் வகுப்புச் சீட்டாக மாற்ற எண்ணி, முதல் வகுப்பிடங்களைப் பார்த்தோம்; அவைகளிலும், மக்களீட்டம் செறிந்திருத்தல் கண்டோம்; கண்டு விழித்தோம். ஓரன்பர் முயற்சியால் மூன்றாவது வகுப்பு, முதல் வகுப்புப்போல எம்பொருட்டு ஒதுக்கப்பெற்றது. இலங்கைப் புகைவண்டி அரசினரால் நடத்தப்படுவது. சென்னை வண்டியின் மூன்றாம் வகுப்பு, இலங்கைவண்டியின் இரண்டாம் வகுப்பைக் கடுத்து நிற்கிறது. இலங்கை அரசினர் இரண்டாம் வகுப்பில் சில ஒழுங்குகள் செய்வது நலம். நாங்கள் ஏறியது மூன்றாவதாக இருந்தாலும், மக்கள் நெருக்கமின்மையால், திருவின் தமக்கை எங்கட்கு மிக விரைவில் அருள் சுரந்தாள். நாங்கள் அவள் வயப்பட்டு விட்டோம்.

ஓரிடத்தில் பொழுதுபுலரும் வேளையில் 'குருநாக்கல் குருநாக்கல்' என்னும் ஒலி கேட்டது. விழித்தெழுந்தோம். சிலர் எமது வண்டியிலேறினர். அவரது கோரை மீசையும், நெருப்பு விழியும், முரட்டுப் பார்வையும் அச்சமூட்டுவனவாகத் தோன்றின. அவர்கள் பேசும் மொழி ஒன்றும் விளங்கவில்லை. இடையிடையே சிலச்சில தமிழ்மொழிகள் தோன்றி மறைதல் கண்டோம். அவர்களோடு இரண்டோர் உரைபேசிப் பார்க்கலாமெனப் பேசினேன். எனது கருத்தை அவர்கள் உணர்ந்து, 'இன்று வண்டி அதிக நேரம்' என்னுங்

கருத்தை வெளியிட்டார்கள். அடுத்த நிலையத்தில் அவர்கள் இறங்கிவிட்டார்கள்.

பொழுதும் செவ்வனே புலர்ந்தது. எங்கள் பேறே பேறு! கப்பல் எங்கள் நலன் கருதியே ஊறுற்றதுபோலும் என்று நினைந்து நினைந்து களிபெருவகை எய்தினோம். புகை வண்டி மெல்லப் போகாதா, ஊர்ந்து செல்லாதா, தவழாதா என்றுங் கருதினோம். யான் ஒரு பாங்கர் அமர்ந்து தலை சாய்த்துக் கண்களை நாலாப் பக்கமுஞ் சுழற்றிச் சுழற்றி, இயற்கைத் தேவியை உற்றுநோக்கிச் சென்றேன்; இலங்கையின் இயற்கை வனப்பென்னே என்னே என்று மகிழ்ந்தேன். இலங்கை நந்தென்னாட்டோடு தொடர்பு கொண்டிருந்த ஞான்று, பழந்தமிழ்ப்புலவர்கள் உறைந்த இடம் இதுவாயிருக்குமோ என்று எழுந்த நினைவு என்னை விட்டகலவில்லை.

வானத்தின் கருமையும், நாற்புறமும் பசுமையுமன்றி வேறென்ன ஆண்டுள்ளன? வழி நெடுகப் பசுமை உமிழும் மலைகளின் செறிவும், சூழலும், நிரையும், அணியும் உள்ளத்தைக் கவர்கின்றன. முகிற் குழாங்கள் கொண்டல் கொண்டலாக அசைந்தும் ஆடியும் ஓடியும் மலைமுகடுகளிற் சூழ்ந்து தவழ்ந்து பாகைபோல் பொலியுங் காட்சியும் - அம்மலைகளின் உடல் புலனாகாவாறு பசும்பட்டுப் போர்த்தாலெனப் பொழில்கள் துதைந்துள்ள அழகும் - புலன்களை ஒன்றச் செய்கின்றன. மலையுச்சியினின்றும் தரைவரை நிரை நிரையாகச் சரிந்தும் செறிந்தும் நிற்கும் தெங்கின் பெருக்கும், அவ்வாறே தெங்கைவிட்டுப் பிரியாது அணித்தே புடைசூழ்ந்து நிற்கும் கமுகின் உயர்வும், அவைகளுடன் நீக்கமின்றி வாழ்க்கைத் துணையெனச் சுற்றிச் சுற்றிப் பின்னிக் கிடக்கும் கான்பரந்த செடி கொடிகளின் ஈட்டமும், வானுலகேறப் பச்சைப் படாம் விரித்த படிகளெனத் திகழ்கின்றனவோ என்றும் ஐயுறலாம். புகைவண்டி, அப்பசுமை நிலத்தில், பறந்தோடுவதை நோக்குழி, அது, பச்சை மரகத மலையைக் கிழித்தோடும் அம்பெனத் தோன்றிற்று. பசுமைக் காட்சியில்லாத இடனும் உண்டோ? கண்ணுக்கும் மனதுக்கும்

இனிமையூட்டும் பசுமையின் பெற்றியை என்னென்றுரைப் பேன் !

புகைவண்டி விரைவில், இடையிடையோடுஞ் சிற்றருவி களின் தோற்றம், பசிய வானில் மின்னொளிதோன்றி மறை வதுபோலப் புலப்படுகிறது. பச்சைப் பசுங்கடலில் சிறுசிறு தீவுகள் நிலவுவதை மானக் கூரைவேய்ந்த சிறுசிறு குடில் களின் ஈட்டமும் - அவைகள் நடுவண் ஆடவர் மகளிர் குழந் தைகள், காலை மயில் கன்றுகளென நிற்குங் கூட்டமும் - இயற்கையோடியைந்த இன்பமாகப் பொலிகின்றன. ஆங் காங்கே சிற்சில இடங்களில் தற்கால நாகரிகக் கட்டிடங் களும் புலனாகின்றன. அவைகளைக் காணுந்தோறும் காணுந் தோறும் பொல்லா அரக்கர் குழுவைப் பார்ப்பது போன்ற நிகழ்ச்சி யுள்ளத்துறுமற் போகாது. கூரைவேய்ந்த வீடுகள் இயற்கையோடியைந்து இன்பூட்டுவதுபோலப், பெரும் பெரும் மாடிகள் இயற்கையோடியைந்து நிற்பினும் இன் பூட்டுவதில்லை.

தென்னிலங்கையின் இயற்கையமிழ்தை ஒருவாறு பரு கிக்கொண்டே சென்றேன். மெல்ல மெல்ல எனது அருமை இயற்கை அன்னையின் வடிவம் மறைந்து மறைந்து, செயற்கை அரக்க வடிவங்கள் புலனாயின. 'கொழும்புநகரம் இதுதான்' என்று உடனிருந்தோர் சொற்றனர். தற்கால நகரங்களை நரகங்கள் என்றே எனது உள்ளங்கொள்வது வழக்கம். நரகக் கொடுமையை ஏன் ஈண்டுக் கூறிக்கெடுதல்வேண்டும்? தற்கால நகர அமைப்புகள் பெரிதும் யாண்டும் ஒரு தன்மை யனவா யிருத்தல் இயல்பு. தண்புன லாடிக்கொண்டிருந்த ஒருவனை ஈர்த்து, வெயிலுமிழும் எரியிடை நிறுத்தினால், அவன் எந்நிலை யுறுவனோ, அந்நிலையை யானும் அன்று அவண் உற்றேன்.

இந்நிலையில், வண்டி, குறித்த காலத்துக்கு இரண்டரை மணி நேரங் கடந்து, நிலையம் சேர்ந்தது. சேர்ந்ததும், கொழும்பிலுள்ள 'இந்திய வாலிப சங்க' அடியவர்கள், ஆண் டுப் போந்து, 'தென்னாடுடைய சிவனே போற்றி' என்று ஒரு வர் முழங்க, மற்றவர் 'எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி'

என்று எதிரொலிபோல் முழக்க, எங்களை வரவேற்றார்கள். செயற்கை வெம்மையில் வீழ்ந்து வருந்திக்கொண்டிருந்த எனதுள்ளம் தமிழ்மறைமீது ஓடிற்று. 'தென்னாட்டவர்க்குச் சிவனாக விளங்குவோனே, எந்நாட்டவர்க்கும் இறைவனாக விளங்குகிறான்' என்று எண்ணி எண்ணி, அம்மறை அருளிய மாணிக்கவாசகனாரை உள்ளத்தால் போற்றிப் போந்தேன். எனது எளிய வாழ்விற்கும் எனது மனதுக்கும் இனியதாய், வெளியில் போந்ததுங் கடல் காட்சி நல்கவல்லதாயுள்ள ஓர் இன்ப நிலையத்தில் வதியுமாறு அன்பர்கள் என்னையும் நண்பரையும் விடுத்தார்கள்.

கொழும்பிற் கணித்தாயுள்ள வெள்ளவத்தையில் நாங்கள் தங்கியிருந்தோம். நாங்கள் சென்ற காலம் ஆடிவேல் விழாக் காலம். கதிர்வேற்பெருமான் வெள்ளித் தேர்மீது இவர்ந்து,கொழும்பினின்றும் வெள்ளவத்தைக்கு எழுந்தருளி அடியவர்க்கருள் செய்கிறார். அவ்விழாவில் கவனிக்கத்தக்கன பல உள. சிலவற்றை ஈண்டுக் குறிப்பிடுகிறேன். ஆங்கே தேர் புறப்படும் வேளையில் ஆடு பலியிடப்படுவதாகக் கேள்வியுற்றேன். இஃது அருள் வடிவினனான முருகக்கடவுளிடத்து அன்புடையார் நிகழ்த்துஞ் செயலன்று. கொலையிலா உளத்தில் கோயில் கொள்ளும் பெருமானின் தேர்ப்புறப்பாட்டின் போழ்து, உயிர்ப்பலியிடல் முற்றும் பொருந்தாத செயலாகும். வரும் ஆண்டில் அக்கொலைக் கொடுமை நிகழாதவாறு ஆண்டு வதியும் அன்பர்கள் காத்தல் வேண்டும்.

அவ்விழாவில் முருகப்பெருமானைப் போற்றாத குலத்தாரில்லை. எல்லாச் சமயத்தாரும் சாதியாரும் காணிக்கை செலுத்தி நெற்றியில் திருநீறணிந்து செல்கிறார். 'முருகக் கடவுள் தமிழ்க் கடவுள்' என்பது அவ்விழாவில் நன்கு தெரிகிறது. பல சமயக் கொள்கையுடைய தமிழ் மக்கள் அனைவரும் முருகக் கடவுளை வழிபடுதல் கவனிக்கத் தக்கது. நமது தென்னாட்டில் வேறு மதம் புகுந்த தமிழ் மக்கள் முருகக் கடவுளை வழிபடுகிறார்களில்லை. இலங்கைத் தமிழ் மக்கள் முருகன் வழிபாட்டில் ஒன்றி நிற்கிறார்கள்.

கொழும்பு இந்திய வாலிய சங்கத்தின் ஆண்டு விழாவில் தலைமை வகிக்கவே யான் அழைக்கப்பட்டேன். அவ்விழா அழகியதொரு கொட்டகையில் நடைபெற்றது. எனக்குச் சங்கச் சார்பாக வழங்கப்பெற்ற நன்மொழியில் சங்கத்தார் என்மாட்டுள்ள முழு அன்பையுங் காட்டியிருக்கிறார். அவர்க்கு நன்றி கூறுமுகத்தான், அந்நன்மொழியைத் தழுவியே எனது முன்னுரைக் கடனாற்றினேன். அம்முன்னுரைக்கண், இந்தியாவில் பல குறைகள் இருக்கின்றன என்றும், அவைகளில் சிறந்து விளங்குவன ஐந்து என்றும், அவை (க) பெண்ணை அடிமைப்படுத்தி யிருத்தல், (உ) மக்களுள் பிறப்பால் உயர்வு தாழ்வு கொண்டமை, (ங) பிறப்பில் தீண்டாமை வகுத்தது, (ச) கருத்து வேற்றுமைக்கு மதிப்புக் கொடாமை, (ரு) பொறாமை என்பன என்றும் பேசி, அவைகளைப் பீடிகையாகக் கொண்டு, சுமார் ஒன்றரை மணி நேரம் சொற்பொழிவு நிகழ்த்தினேன். இந்திய இளைஞர் உலகில் அவ் வைம்பெருங் குறைகளிருத்தலாகா தென்றும், அக்குறைபாடுக ளுள்ளமட்டும் இந்தியா உரிமைபெற லரிதென்றும், அவைகளை அன்பு வழிநின்று களைய இளைஞர்கள் முயலல் வேண்டுமென்றும் இளைஞர்களுக்கு விண்ணப்பஞ் செய்துகொண்டேன்.

பின்னை இரண்டு நாள் பல அறிஞரால் சொற்பொழிவுகள் நிகழ்த்தப் பெற்றன. சில சொற்பொழிவுகள் காலத்துக் குரியனவா யிருந்தன. ஆண்டுவிழாக் காலங்களில் கூடும் அவைகளில் புராணக் கதை பிரசாரங்களின் இன்றியமையாமை எனக்கு விளங்கவில்லை. புராணங்களைப்பற்றி எனக்குக் கெட்ட எண்ணமில்லை. புராணங்களில் அறியக்கிடக்கும் நுட்பங்கள் பல உண்டு. அந்நுட்டங்களை எடுத்துப் பேசுவதனால் பயன் விளைதல் ஒருதலை. வெறுங் கதைகளைச் சொல்வதால் வாழ்விற்கு எவ்விதப்பயனும் விளையாது. புராணக் கதை விரும்பப்படின் அதற்குக் கால எல்லை எற்றுக்கு? அவைத் தலைவர் எற்றுக்கு? அதற்கென ஒரு வைதிக இடங்கோலிப் புராணிகரை விட்டுவிட்டால் அவர் நவரசத்தோடு கதை சொல்வர். காலவரை குறிப்பிட்டுப் புராணிகரைப் பேச

விடுத்தால் அவருக்கும் வருத்தம் ; தலைவர்க்கும் இடுக்கண். தமிழ் நாட்டில் சில கழக விழாக்களில் வாலி வதையும் சூர சம்மாரமுங் கேட்டுத் தலைமயக்கத்தால் வருந்தியது முண்டு. இந்திய வாலிபச் சங்கத்தில் அவ்வளவு புராணம் புகவில்லை யாயினும், சிறிதும் புகாமலில்லை என்று குறிப்பிடாமற் செல்லல் முடியவில்லை. சொற்பொழிவுகளைத் தழுவி இரண்டா நாள் சுமார் மூன்று மணி நேரம் முடிவுரை கூறினேன்.

அம்முடிவுரையைக் கேட்ட சில அறிஞர், யான் தங்கியிருந்த இடம்போந்து, பலதிற ஐயப்பாடுகளை எழுப்பினர். மூன்று மணி நேரம் பேசிய களைப்பும் இளைப்பும் அவ்வறிஞரோடு பேசப் புகுந்ததும், ஞாயிறு முற்பட்ட பனிப் படலம்போலப் பறந்தோடின. அறிஞரோடு உரையாடுவதில் எனக்குள்ள வேட்கைக்கோ ரளவில்லை. வடமொழி மறைகளைப் பற்றியும் தென்மொழி மறைகளைப் பற்றியும் பேசினோம் ; சமணர்கள் கழுவேறியதுண்மையா அல்லவா என்பதைப் பற்றியும் பேசினோம். பெண்மக்களைப் பற்றியும் இல்லறத்தைப் பற்றியும் யான் கொண்டுள்ள கருத்தைக் குறித்து உரையாடல் எழுந்த வேளையில், 'மணியாய் விட்டது; மணியாய் விட்டது' என்னும் அரவம், நாலுபக்கங்களிலும் கிளம்பிற்று. அதைக் குறிப்பால் உணர்ந்த அறிஞர்கள், விடைபெற்றுச் சென்றார்கள். ஆண்டுவிழாக்களில், விழா நடக்கும் நேரம் போக, மற்ற நேரத்தில் ஒருபோது, குறிப்பிட்ட அறிஞரோடு உரையாடல் என்பதும் நிகழ்ச்சி முறைகளில் சேர்த்தல் நல்லது. இத்தகை ஏற்பாடு செய்யுமாறு விழா நடாத்துவோரைக் கேட்டுக்கொள்கிறேன்.

கொழும்புப் பல்கலைக்கழகக் கல்லூரியில் இதுபோழ்து என் தோழர் சங்கை கிங்ஸ்பரி அவர்கள் தமிழாசிரியரா யிருக்கிறார். அவர் விரும்பியவாறு அக்கல்லூரியில் 'தமிழ்க் கல்வி' 'தொண்டு' என்னுஞ் சொற்பொழிவுகள், முறையே அடியேனாலும் என்னுடன் போந்த நண்பர் குமாரசாமியாராலும் நிகழ்த்தப்பெற்றன. அக்கல்லூரி மாணாக்கர் நிறம் தவிர ஏனையவெல்லாம் மேல்நாட்டு மயமாயிருந்தன. குழந்தைகள் என் செய்வார்கள் ! தாய் தந்தையர்கள் பிழைபாடு !

கொழும்புக்கணுள்ள தமிழர்களிடைப் புகுந்துள்ள மேல் நாட்டு நாகரிகம், இந்தியாவில் எந்தப் பகுதியிலுமில்லை என்று சொல்வது மிகையாகாது. ஆங்கிலம் பயின்ற பெண்மக்கள் நமது நாட்டு ஆங்கிலோ இந்தியர்களைப்போல இருக்கிறார்கள். குழந்தைகளிடம் அவர்கள் ஆங்கிலத்தில் உரையாடவே உளங் கொள்கிறார்கள். இவ்வழியில் வளர்க்கப்படும் பிள்ளைகள் நிலையைப்பற்றி விரித்துக் கூறவேண்டுவதில்லை. இவர்கள் புறக்கோலத்தைப் பற்றிய கவலை எனக்கில்லை. இவ ரகத்தே தமிழ்த்தேன் பிலிற்ற வேண்டுமென்பது எனது விருப்பம். இன்னுஞ் சின்னாளில் கொழும்பிலுள்ள சில தமிழர்கள் ஆங்கிலத்தையே தாய்மொழியாகக் கொள்வார்கள் போலும்! மற்றொருபால் தமிழ்க் கிளர்ச்சியும் தமிழர் இயக்க மும் முருகி எழுந்துவரலால், பெருங் கவலைக்கு இடமிரா தென்று நம்புகின்றேன். ஆண்டுள்ள தமிழர்கள் தமிழை வளர்க்கப் பெருமுயற்சி செய்வார்களாக.

கொழும்பில் விவேகானந்தர் பெயரால் ஒருசபை நிறுவப் பெற்றுளது. அச்சபை வாயிலாகத் தமிழும் சமய உணர்வும் ஆண்டுப் பரவிவருதல் கண்டு சிறிது மகிழ்வெய்தினேன். அச் சபை நேயர்களிற் பெரும்பான்மையோர் மேல்நாட்டுக் கோலத்தவராகக் காணப்பெறினும், அன்னார் உள்ளம் தமிழின்மீதும் சமயத்தின்மீதும் பதிந்துகிடக்கிறது. புறக் கோலம் எத்தன்மையதாயினுமாக. 'எந்நிலையில் நின்றாலும் எவ்வேடங் கொண்டாலும் - மன்னியசீர்ச் சங்கரன்றாள் மறவாமை பொருளன்றே' என்று நமது தெய்வச் சேக் கிழாரே கூறிப்போந்தார். புறக்கோலங்கள் காலத்துக்கேற்ற வண்ணம் மாறுபட்டுக்கொண்டே போகும். என்னுடன் போந்த அன்பர் குமாரசுவாமியாருக்கு ஐரோப்பிய உடைக் கோலம் முதலில் மருட்சியூட்டிற்று. பின்னை நாளடைவில் என்கருத்துடன் அவருங் கலந்துகொண்டார். விவேகானந்தர் சபையிலும் எம்மால் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பெற்றன.

வெள்ளவத்தையில் யான் நண்பருடன் தங்கியிருந்த போழ்து, பலமுறை சொற்பொழிவிற்கும் பிறவற்றிற்கும் அங்கும் இங்கும் போதல் நேர்ந்தது. அவ்வப்பொழுது

கண்ணுற்ற பொருள்கள் பற்பல. அவைகள் பெரிதும் எல்லா நகரங்களிலும் காணப்பெறுவன. கொழும்பில் பெரிதும் தமிழ்மக்களும் சிங்களவர்களும் வாழ்கிருர்கள். இலங்கை வாசிகளில் பெரும்பான்மையோர் சிங்களவர்களே. அவருள் ஆங்கிலம் பயின்ற ஆண்மக்களும் பெண்மக்களும் ஐரோப்பிய நடை உடை பாவனைகளைக் கொண்டிருத்தலால், அவர்களைப்பற்றி ஒன்றுங் கூறவேண்டுவதில்லை. ஐரோப்பிய நாகரிகத்தில் தோயாத சிங்களவ ஆண்மகன் மிக வலியனாய், கூரிய நோக்குடையனாய்க் காணப்படுகிருன். அவன் முகத்தில் சாந்தம் காணும். அவன் எளிய உடையே அணிகிருன். பலர் மயிரைக் கோலிக்கட்டி, வளைந்த தந்தச் சீப்பைச் செருகியிருக்கிருர். பெண்மகள் மிகத் திண்ணமாயிருக்கிருள். அறிவு விளக்கம் புலப்படவில்லை. அவள், தன் அரையில் நான்குமுழத் துண்டையும், மார்பு மறைய ஒரு கஞ்சுகத்தையும் அணிந்திருக்கிருள். மற்ற மேலாடை ஒன்றுமில்லை. பின்னின்று பார்த்தால் ஆண்மகனுக்கும் பெண்மகளுக்கும் வேற்றுமை தோன்ருது. சிங்களவர்கள், வங்காளத்தார் வழி வழி வந்தவர்கள் என்று சொல்லப் படுகிருர்கள். அவர்களிடையில் கொலை அதிகம் என்று கேள்வியுற்றேன். அவர்கள் சமயம் பௌத்தமாம். சமயத்துக்கும் அவர்கள் வாழ்விற்கும் பெரிதுந் தொடர்பில்லை. குருமார்களிடத்தில் அவர்கட்கு அன்புண்டாம்.

கொழும்பினின்றும் கண்டிக்குப் புறப்பட்டோம். எம்மை வழிகூட்டி அனுப்பப் போந்த அன்பர்களோடு நாங்கள் பேசிக்கொண் டிருந்தமையான், எங்கட்குச் செயற்கை வெம்மை புலனுகாமலிருந்தது. வண்டி புறப்பட்டதும் அவ்வெம்மைக் கொடுமை வருத்தத் தொடங்கிற்று. சிறிது நேரத்துக்குள் இயற்கையன்னை காட்சி வழங்கினள். அவ்வழியின் இயற்கை வளத்தை என்னென்று சொல்வேன் ! ஸ்ரீநகர், தார்ஜிலிங், ஆல்ப்ஸ் முதலிய இடங்களிலுள்ள இயற்கை வளங்களைப் பற்றிக் கேள்வியுற்றிருக்கிறேன் ; நூல்கள் வாயிலாகப் படித்துமிருக்கிறேன். நேரே கண்டதில்லை. கண்டிக்குச் செல்லும் வழிநெடுக இயற்கை

அன்னையின் திருவோலக்கமன்றி வேறென்ன இருக்கிறது? எங்கணும் மலைகள் - மலைத்தொடர்கள் - மலைச்சூழல்கள்; எங்கணுஞ் சோலைகள் - சாலைகள் - செடிகள் - கொடிகள் - பைங்கூழ்கள்; எங்கணும் அருவிகள் - ஆறுகள் - நீர்நிலைகள்—இவை யாவும் ஒன்றோடொன்று கலந்து அளிக்கும் காட்சி யன்றோ கடவுள் காட்சி? நூற்றுக்கணக்கான குற்றாலங்கள் - நூற்றுக்கணக்கான பாபநாசங்கள் - ஆண்டுள்ளன. மலைகள் எத்துணை எத்துணை விதமாகக் காட்சி வழங்குகின்றன! சில இடங்களில் மலைகள் படிப்படியாக இழிந்து இடைவெளியிட்டு இவர்ந்து நிற்குந் தோற்றம் இயற்கை ஊசல்போல விளங்கிற்று. சில இடங்களில் மலைகள் சிங்கம் எழுந்து நின்று பாயவருந் தோற்றத்தை வழங்கிக்கொண்டு நிற்கின்றன; சில இடங்களில் அவைகள் செய்கரைபோல் நேர்மையாக நிற்கின்றன. பசுமை நிலவாத மலைப்பாங்கரே காணோம். தெங்கும் கமுகும் ரப்பர் மரங்களும் ஒரு பெரும் பசுங்கடல் பொங்கி வருதல்போல் காணப்படுகின்றன. சில இடங்களில் நானுபக்கங்களிலும் மலைசூழ்ந்து நிற்ப, அவைகளினின்றும் பொழியும் அருவி அவைகளினடியில் நீரரண் என ஓடித்திகழ, நடுவண் பச்சைப் பசேலென வான்பயிர் தலையசைத்து நிற்கும் அழகைக் கண்டு கண்டு உவந்தேன். பசிய மலைச்சோலைகளைப் பார்க்குந் தோறும் பார்க்குந்தோறும் இயற்கை இன்ப வாழ்வு உள்ளத்தில் தோற்றமுறு நிற்கும். இப்பொழுது ஐரோப்பியத் தோட்டக்காரர்களும் மற்றவர்களும் இப்பசுங் காடுகளைப் பண்படுத்திப் பொருளீட்டுந் துறை கண்டிருக்கிறார்கள். நம் முன்னோர்கள் அவ்வியற்கை நிலையங்களிடை வாழ்ந்து, இயற்கையின் வாயிலாக இறைவனைக் காணும் எளிய வாழ்வு நடாத்தினார்கள். பசுமை பொங்கும் மலைகளைப் பார்த்துக் கொண்டே கண்டி சேர்ந்தோம். நிலையத்தருகே கண்டித் தமிழ் மக்கள் அன்போடு எம்மை வரவேற்றார்கள். நாங்கள் 'தமிழக' நிலையத்தில் தங்கியிருந்தோம். ஆங்குச் 'சைவம்' 'தமிழ் வரலாறு' என்னும் இரண்டு சொற்பொழிவுகள் நடைபெற்றன. ஆங்குள்ள தமிழர்கள் தமிழ் மனத்தோடு

எங்களோடு உறவாடினார்கள் என்று சுருங்கச் சொல்லி மேலே செல்கிறேன்.

கண்டி, கண்டின்புறவேண்டிய இடங்களில் ஒன்று. கண்டியை இயற்கைக் குடில் என்று கூறுவது மிகையாகாது. கண்டியிலுள்ள விவசாயக் கல்லூரி, தோட்டம் முதலியவற்றைக் கண்டோம். அத்தோட்ட அழகை வருணிக்கப் புகுந்தால் இக்கட்டுரை வருணனையுரையாகவே முடியும். இயற்கையரசியின் உரையுளெல்லாங் கண்டு, பின்னர்ப் பௌத்தமடம் - கலாசாலை - கோயில் முதலிய அறநிலையங்களுக்குச் சென்றோம். மடத்தில் பெரிய புத்த குருவைப் பார்த்து உரையாடப் போனேன். அவர்க்குத் தமிழுந் தெரியவில்லை; ஆங்கிலமுந் தெரியவில்லை. அவர் ஆணைப்படி புத்த வித்தியாலயம் போந்து, ஆண்டுள்ள ஓர் ஐரோப்பியர்பால் உரையாடினேன். அவர் பௌத்த நூல்களில் பேராராய்ச்சி யுடையவர் என்பது, அவரது அன்பார்ந்த பேச்சால் தெரியவந்தது. சம்பாஷணைபால் யாங்கள் ஒருமை முடிவே பெற்றோம்.

புத்தபிக்ஷுக்கள் - பொங்கிகள் - சந்நியாசிகள் - கூட்டங் கூட்டமாகத் திரிகிறார்கள். கலாசாலையில் சிறு குழந்தைகள் சீவர ஆடைபுனைந்து, சந்நியாசக்கோலந் தாங்கியிருப்பது கண்டேன். சந்நியாச வாழ்வு இயற்கைக்கு முரண்பட்டது என்பது எனது அடிப்படையான கொள்கை. அக்கொள்கையுடைய அடியேன் கண்ணுக்கு அச் சந்நியாசக் கூட்டம் எவ்வாறு தோன்றி யிருக்குமென்பதைச் சொல்ல வேண்டுவதில்லை. நமது நாட்டுப் பண்டாரங்கட்கும் அச் சந்நியாசிகட்கும் வேற்றுமையில்லை. அருள்நெறி ஓம்பவேண்டிய அவ்வறவோர்கள் விலாப்புடைக்கப் புலால் உண்கிறார்கள். பிறர் கொன்றதைத் தின்னலாம் என்று அவர் வாதமிடுகிறார். சந்நியாசமும் புலாலுணவும் பௌத்தமதத்தின் பெருமைக்கு இடையூறாக நிற்கின்றன. இயற்கையின் வாழ்வை வெறுப்பது துறவொழுக்க மாகாது.

கண்டியின் பலதிறக் காட்சி கண்டு, அன்பர்கள்பால் விடைபெற்று யாழ்ப்பாணம் நோக்கினோம். இடையில் 'போல்காவலை' என்னுமிடத்தில் சுமார் மூன்று மணி நேரம்

தங்குதல் நேர்ந்தது. அவ்வூரின் எப்பகுதியில் சென்றாலும் தென்னைமரச் சோலைகளின் பெருக்கம் கண்பார்வையையுங் கடந்தொளிர்கிறது. தென்னைமரப் பெருக்குடையது என்னும் பொருளை அவ்வூர்ப்பெயரே தாங்கி நிற்கிறதென்று ஆங்குள்ளோர் கூறினர். அங்கிருந்து யாழ்ப்பாணம் சென்றோம்.

யாழ்ப்பாணத்தின் இயற்கை வளம் நமது தென்னாட்டு இயற்கை வளத்துக்கு அரண்செய்வது. இலங்கையின் மற்றப் பகுதியின் இயற்கைவளம் யாழ்ப்பாணத்திலில்லை. புகையிலைப் பெருக்குக் குறிக்கத்தக்கது. கொழும்பு வழியிலும் கண்டிவழியிலும் தெங்கின் பசுமை கண்ணுக்கு விருந்தளித்தது. யாழ்ப்பாணத்திலோ அத் தென்னங்கீற்றுகளின் வேலிகள் கண்ணைக் கவர்ந்துநின்றன. யாழ்ப்பாணத்தில் சொற்பொழிவுகள் பல நிகழ்ந்தன. ஒரேநாள் நான்கிடங்களில் சொற்பொழிவு நிகழ்த்தலும் நேர்ந்தது. பல கல்லூரிகளிலும் சொற்பொழிவுகள் நடைபெற்றன. கல்லூரிகளில் எனதுள்ளத்தைக் கவர்ந்தது ஸர். பொன்னம்பலம் இராமநாதன் பெண்மக்கள் கல்லூரி. அக்கல்லூரியைப் பெருஞ் சிதம்பரமாக மனத்தால் தொழுதேன். தமிழும் சைவமும் ஆண்டிருந்து புத்துயிர் பெறும் என்னும் உறுதியும் எனக்குத் தோன்றிற்று.

ஸ்ரீலஸ்ரீ நாவலர்பெருமான் உண்மையுழைப்பு, யாழ்ப்பாணத்தில் எவ்வாறு பரிணமித்திருக்கிறது என்பது நேரிற் காண்போர்க்கே இனிது விளங்கும். யாழ்ப்பாணக் குடிமக்கள் தமிழர்; வேளாளர்; சைவர். அவர் நமது தமிழ்நாட்டினின்றும் அவண் குடிபுகுந்தவர். அவருடன் போந்த வேறு சிலருமிருக்கிறார். தாய்நாட்டின் நினைவுதோன்ற ஆண்டுள்ள தமிழ் மக்கள் சில இடங்களுக்குத் திருநெல்வேலி, பட்டுக்கோட்டை முதலிய பெயர்களைச் சூட்டியிருக்கிறார்கள். யாழ்ப்பாணத் தமிழ் மக்கள் எங்கள்பால் காட்டிய அன்பு என்றும் மறக்கற்பாலதன்று. தென்னாட்டுத் தமிழ் மக்களுக்கும் தங்கட்கும் இடையறா அன்புத் தொடர்பிருத்தல் வேண்டுமென்று கூறாத அன்பர்களில்லை.

யாழ்ப்பாணத்தில் கிறிஸ்துவர்கட்கும் சைவர்கட்கும் ஒரு வழியில் ஒற்றுமையும் மற்றொரு வழியில் ஒற்றுமை

யின்மையும் வளர்ந்து வருகின்றன. சமயப்போருஞ் சில இடங்களில் கனன்றுகொண் டிருக்கிறது. சைவசமயத்தின் சமரசத்தையும் அன்பு நிலையையும் அருள் நெஞ்சங்கொண்டு அறிவுறுத்தினால், ஆண்டுள்ள கிறிஸ்துவர்கள் பாதிரிமதத்தை விடுத்து, உண்மைக் கிறிஸ்துவை வழிபடத் தொடங்குவார்கள். கிறிஸ்துவின் போதனை, சைவ சமயம் அறிவுறுத்தும் அன்புப் போதனையே யாகும். மெய்கண்டாரைப் பற்றியும் அப்பரைப் பற்றியும் யான் குறிப்பிட்ட சில பொருள்கள் கிறிஸ்துவர்கட்குக் களிபேருவகையூட்டின. உடுவிலிலுள்ள கிறிஸ்துவக் கல்லூரியில் ' காந்தியடிகள் சமயநிலை ' என்பது பற்றிச் சிறிதுநேரம் பேசுதல் நேர்ந்தது. அப்பேச்சு, கிறிஸ்துவர்களால் அன்புளத்தோடு செவிமடுக்கப்பட்டது. சமரசமும் அன்பும் பெருகப் பெருக உலகில் சமயப்போர் அழியும் என்பது எனது உள்ளக்கிடக்கை.

யாழ்ப்பாண நகர் விடுத்துப் புறப்படும்போது, பருத்தித்துறை முதலிய இடங்களிலிருந்து போந்த அன்பர்கள் விருப்பத்துக்கு இணங்க நேராமை போனது குறித்து எனதுள்ளத்தெழுந்த வருத்தத்துக்கு ஓர் அளவில்லை. யாழ்ப்பாணத் தமிழ் மக்கட்கு எங்கள் வணக்கத்தைச் செலுத்தி இந்தியா நோக்கினோம்.

இன்னும் இலங்கையில் பார்க்கத் தக்க இடங்கள் பல உண்டு. அவைகளுள் சிறந்தன அநுராதபுரம், திருக்கோணமலை, திருக்கேதீச்சரம், கதிர்காமம் முதலியன. மீண்டும் இலங்கை செல்லத் திருவருள் கூட்டுமேல் அவ்விடங்களைக் காணும் பேறு பெறுவேன்.

இலங்கையில் குறிப்பிட்ட சில இடங்களில் செல்லவும், ஒல்லும்வகை இயன்ற தொண்டாற்றவும் காரணராக இருந்த இந்திய வாலிபச் சங்கத்தார்க்கும், என்மாட்டுக் கெழுதகை நட்பும் உழுவலன்பும் கொண்டுள்ளவரும், தமிழ் அகமும் முகமு முடையவருமாகிய திருமிகு மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கட்கும் எனது அன்பார்ந்த நன்றி யறிதலைச் செலுத்தி அவர் நலன்கருதித் திருவருளை வழுத்துகிறேன்.

(20, 27–8–1926)

# பாரத மக்கள்

இன்று சிலம்பில் எப்பொருள் ஒலிக்கச் செய்யலாம் என்ற எண்ணம் எழுந்தது. ஒன்றன் பின் ஒன்ருகப் பல எண்ணங்கள் தோன்றின. 'பாரத மக்கள்' என்னும் நினைவு தோன்றியதும், மனவோட்டம் தடைப்பட்டு நின்றது. பாரத மக்கள் நினைவே நெஞ்சிற் பதிந்துவிட்டது. பாரத மக்களின் பழைய மாண்புகள் மலைபோல் அகத்திற் புலனாயின. அம்மாண்புடைய பாரதமக்கள் வழிவழிவந்த நம்மவர்கள் தற்போது என்ன நிலையிலிருக்கிருர்கள் என்ற சிந்தனை தோன்றிற்று; தொடர்ந்து ஆருத்துயரும் உண்டாயிற்று.

பாரத மக்கள் யாண்டுள்ளார்? பாரத மக்கள் உளரோ உளரோ என்று அசரீரி கேட்டதுபோல் ஒரு கேள்வி பிறந்தது. இப்பொழுது இமயம் முதல் கன்னியாகுமரி வரை வதிவோர் பாரத மக்களல்லரோ என்ற ஐயமும் நிகழ்ந்தது.

பாரதமக்கள் கண்ட கலைகளெங்கே? கைத்தொழில்களெங்கே? அவர்கள் அறவொழுக்கம் யாண்டுற்றது? அவர்கள் அன்புநெறி யாண்டுச் சென்றது? அன்ஞர் வீரத்தைக் காணேம்! அவர் அரசைக் காணேம்! அவைகளையுடைய பாரத மக்கள் எங்கேயிருக்கிருர்கள்? பாரத நாட்டுக்கெனக் கலைகளில்லையோ? கைத்தொழில்க ளில்லையோ? வீரமில்லையோ? அரசில்லையோ? அவைகளை இழந்த மக்களையா பாரத மக்களென்று கூறுவது? வெட்கம்! வெட்கம்!

தற்போதைய பாரதநாட்டிற் பிறந்தவர்கள் என் செய்கிருர்கள்? அவர்கட்குப் பாரதநாட்டுக் கலைமீது கருத்தில்லை; கைத்தொழில்மீது கருத்தில்லை. அவர்கள் அறவொழுக்கத்தை விடுத்துவருகிருர்கள். அவர்கள்பால் அன்புநெறியுங் குன்றி வருகிறது. அவர்கட்கு வீரத்தின்மீது வேட்கையுண்டோ? அரசின்மீது அவாவுண்டோ? ஒன்றையுங் காணேம். எதையோ படித்து, எதையோ உடுத்தி, எதையோ தின்று,

அவர்கள் காலங்கழிக்கிறார்கள். அவர்கள் நிலை மாறிவிட்டது. அவர்களுக்கு அடிமையிலேயே ஊக்கம். பெற்றோர்கள் பிள்ளைகளை அடிமைகளாக்கவே முயல்கிறார்கள். அடிமைக்கென வித்தை பயிலுங் கூட்டத்தாரிடையில் கலைகள் பிறக்குமோ? உண்மை ஞானம் தோன்றுமோ?

பாரத நாட்டு மக்கள் என்பது, ஆண்மக்கள் பெண்மக்கள் என்னும் இருபாலாரையும் குறிப்பதாகும். பாரதநாட்டு ஆண்மக்களைப்பற்றியே ஈண்டுப் பேசப் புகுகிறோம். பாரத நாட்டு வழக்க ஒழுக்கங்களைக் கெடுத்துவருபவர் பெண்மக்களல்லர். அப்பாவத்தை நிகழ்த்தி வருபவர் ஆண்மக்களேயாவர். ஆதலால் அவரைப்பற்றிப் பேசுங் கடனை நாம் இன்று ஏற்கிறோம். பாரதநாட்டு அற ஒழுக்கம் ஞானம் வீரம் முதலியன இன்னும் பெண்மக்களிடை நிலவிவருகின்றன. அந்நிலையையும் ஆண் கூட்டம் ஒழித்து வருகிறது. பாரத நாட்டில் ஆண்மக்கள் எவ்வழிச்செல்கிறார்களோ, அவ்வழிச் செல்லும் இயல்புடையார் பெண்மக்களாதலால், அவர்களைப்பற்றி ஈண்டு விரித்துக் கூறவேண்டுவதில்லை. பாரத நாட்டு அறம் பெண்மக்களால் வளர்க்கப்படுமென்ற நம்பிக்கை எமக்குண்டு. அவர்கள்மீது எவ்விதப் பழியையுஞ் சுமத்த எமது மனம் ஒருப்படவில்லை.

பறவைகள் சூரியனைக் கண்டதும் கூட்டை விடுத்துப் பறந்தோடி, சூரியன்மறையும்போது மீண்டும் தங்கள் தங்கள் கூடுகளில் சேர்கின்றன. இடையில் அவைகள் என்ன செய்கின்றன? உணவுக்காகவன்றோ உழைக்கின்றன? அவ்வுழைப்பும் நேர்மைவழி நிகழ்கிறதோ? வலியன எளியனவற்றைத் துன்புறுத்துகின்றன. இப்பொழுது பாரத நாட்டு மக்கள் வாழ்வும் இவ்வித வாழ்வாக மாறலாயிற்று. அடிமைத் தொழில் செய்வது; உண்பது; உறங்குவது; ஆ! ஆ! இவைகளின் பொருட்டோ மக்கள் படைக்கப்பட்டார்கள்? இந்நிலையிலுள்ள மனிதர்கள் எப்பொழுது வான சாஸ்திரம் எழுதுவார்கள்? எப்படிச் சிற்பத் தொழில் பயில்வார்கள்? இவர்கள் முன்னோர்கள் கண்ட ஞானக்கலைகள் மண்ணுக்கன்றோ இரையாகும்?

அமெரிக்கா முதலிய நாட்டு மனிதர்கள் என் செய்கிறார்கள்? நாடோறும் புதுமைகளைக் கண்டவண்ணமாயிருக்கிறார்கள். ஒவ்வொரு கல்வித் துறையாளரும் அவ்வக் கல்வித் துறையை வளர்ப்பதில் பேரூக்கஞ் செலுத்தி வருகிறார். அவர்கள் உணர்வு, ஆராய்ச்சியிலேயே படிந்து கிடக்கிறது. அவர்கள் உழைப்புக்கு இயற்கைத்தேவி தன்பாலுள்ள சக்திகளை உதவி வருகிறாள். அவ்வியற்கைத்தேவி இந்தியாவில் பிறந்த நமக்கு உதவி செய்யாளோ? அவள் உதவி செய்யச் சித்தமாயிருக்கிறாள். உதவிபெற உழைக்க எவரும் முன்வருவதில்லை. (முப்பதுகோடி மக்களுள் ஒரு காந்தி, ஒரு தாகூர், ஒரு போஸ் ஆகிய ஒவ்வொருவரைக் குறிப்பிடுவது போற்றத்தக்கதன்று.)

நமது நாட்டு மாணாக்கர் நிலை எவ்வாறிருக்கிறது? மாணாக்கர்கள் கூட்டங் கூட்டமாகப் பிறர் எழுதி வைத்த நூல்களை நெட்டுருச் செய்கிறார்கள்; பரீட்சையில் தேறுகிறார்கள்; பட்டம் பெறுகிறார்கள்; பின்னை அடிமைவேலைக்கு அங்குமிங்கும் அலைகிறார்கள். மாணாக்கர்களுக்குத் தேசபக்தி யிருக்கிறதா? தேசபக்தி யிருந்தால் பரதேச ஆடையில் விருப்பங் கொள்வார்களோ? பரதேச வழக்கவொழுக்கங்களை மேற்கொள்வார்களோ? பரதேச ஆடல் பாடல்களில் கருத்தைச் செலுத்துவார்களோ? மாணாக்கர்கள் மூக்குக்கண்ணாடிகளும், அவர்களாடும் பந்துகளும், அவைகளை யடிக்குங் கட்டைகளும் எவ்வளவு பொருளைத் திரட்டி மேல்நாட்டுக்கு அனுப்புகின்றன? பிறவற்றைக் கூறினால் குடல் நடுங்கும். இந்திய மாணாக்கர்களுக்குத் தேச நினைவு - சுதந்திர நினைவு - நாட்டுக் கல்வி நினைவு - தோன்றுதல் அரிதாகிவிட்டது. காந்தியடிகள் சிறைப்பட்ட நாளில் சென்னையிலுள்ள ஆடல் வெளிகளில் மாணாக்கர்கள் கரங்கள் பந்தடித்துக்கொண்டிருந்தன. அவர்களுக்குத் தேசவிசாரமேயில்லை. அவ்விசாரம் நாளுக்கு நாள் குறைந்துகொண்டே வருகிறது. இத்தகை மாணாக்கர்களைக் கொண்ட பாரதநாட்டில் என்ன சக்தி கிளம்பப்போகிறது? இம்மாணாக்கர்களல்லவா பின்னைப் போலீஸையும் நீதிஸ்தலங்களையும் நிரப்பப்

போகிறவர்கள் ? இவர்களல்லவா தாங்கள் பிறந்த தாய்நாட்டுக் குழைக்குந் தேசபக்தர்களைப் பிடிப்பவர்கள் ? விலங்கிடுபவர்கள் ? விசாரிப்பவர்கள் ? தண்டிப்பவர்கள்? இம்மாணாக்கர்கள் வாயிலாகப் பாரதநாட்டுக் கலைஞானம் வீரம் அறம் முதலியன வளர்தற்கிடமுண்டோ ? இவை வளரா இடத்தில் பாரதமாதா இருப்பளோ ?

மாணாக்கர் நிலை இவ்வாறாக ; மற்றவர் நிலையோ ! அந்தோ ! வருணித்தல் முடியாது. கணக்கெழுதச் செல்லுங் கூட்டத்தாரைப் பற்றி ஒன்றுங் கூறவேண்டுவதில்லை. இவர்களை உயிருள்ள இயந்திரங்களென்று கூறலாம். எல்லாவற்றிற்கும் இயந்திரங்கள் கண்ட மேல்நாட்டார் கணிதவேலைக்கு இன்னும் ஏன் இயந்திரங் காணாதிருக்கிறார் ? கணிதர்கள் இளமையில் பயின்றதையும் மறந்து, பொருளை ஆராயும் நுண்ணறிவும் மழுங்கப்பெறுகிறார்கள். இவர்கள் வாழ்வு மிகப் பரிதாபம் ! இவர்களால் பாரதநாட்டுக் கல்வித் துறைகள் வளம்பெறுமோ ?

வக்கீல்களோ எழுதவுங் கை நடுங்குகிறது. இக்கூட்டம் பாரதநாட்டுக்கு அவசியமோ ? ஆண்டவனே ! கண்ணீர் பெருகுகிறது. இவ்வக்கீல் கூட்டத்தை எங்குங் காணலாம் ; நீதிமன்றத்திற் காணலாம் ; 'பாஷாபிவிர்த்தி' சங்கத்திற் காணலாம்; 'சமயாபிவிர்த்தி' சங்கத்திற் காணலாம்; 'தேசாபிமான'க் கூட்டத்திற் காணலாம். எல்லா மகாநாடுகளிலும் இத்திருக்கூட்டத்தைக் காணலாம். இத்திருக்கூட்டத்தார் திருவிளையாடலை என்னென்று எழுதுவது ! இன்று இவர் காங்கரஸில் அதிகாரவர்க்கத்தை மிக உரமாகக் கண்டித்துப் பேசுவார் ; நாளை சட்டசபையில் அதிகாரவர்க்கத்தை ஆதரிப்பார். தாங்கள் உயர்பதவிக்கு வருமட்டும், அவர்கள் மாட்டுத் தேசபக்தி, எழுச்சி, சுயராஜ்யமுழக்கம், காங்கரஸ் கவலை - எல்லாம் உண்டாகும். பின்னை இவைகளெல்லாம் அவர்கட்கு உருவெளித் தோற்றமாகிவிடும். இவர்கள் கபடநாடகங்களை நாராயணனே அறியவல்லான். என்ன ஏமாற்றம் ! என்ன ஏமாற்றம் ! இன்னும் காங்கரஸிலும் மகாநாடுகளிலும் வக்கீல் ராஜ்யமே வலுத்து நிற்கிறது. வக்கீல்கள்,

ஏழை மக்கள் பணத்தைப் பறித்துத், தானஞ் செய்வது போலும் தருமஞ் செய்வதுபோலும் நடித்துத், தங்கள் நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்கிறார்கள். இக்கூட்டத்துக்கு இந்தியா இரையாகிறது! வக்கீல் கூட்டத்தால் எந்தக் கலை - எந்த ஞானம் - எந்த வீரம் - நாட்டில் எழும்? பொய்யும் பொருள் பறித்தலுமே மிகும். இக்கூட்டத்தின் வழியே காங்கரஸூம் தேச மகா சபைகளும் நடைபெறுமட்டும் தேசம் எத்துறையில் வளர்ச்சி யடையும்?

பணம் படைத்த செல்வர்கள் நிலையைச் சிறிது கவனிப்போம். எவ்வழியிலோ அவர்கள் முன்னோர்கள் பொருளீட்டி வைத்தார்கள். அப்பொருண்மீது புரண்டு புரண்டு காலங் கழிப்போர் சிலர்; அப்பொருளைப் பலவிதக் களியாடல்களுக் கழுவோர் சிலர். சிலர் அப்பொருளைப் பதவிகளுக்குச் செலுத்துவர்; சிலர் அதைப் பொதுஸ்தாபனங்களில் அங்கம்பெறுவதில் ஒழிப்பர். இச்செல்வர்கள் மனங்கொண்டால் எத்தனை நாட்டுப் பள்ளிக்கூடங்கள் காணலாம்; எத்தனைத் தொழிற்சாலைகள் காணலாம். தேச வளர்ச்சிக்குரிய துறைகள்மீது செல்வர்கள் கருத்துச் செலுத்துவதில்லை. இவர்களால் தேசத்தின் கலைஞானம் செழுமையுறுமோ?

ஏழைத் தொழிலாளிகளே தேசத்தில் பெரும்பான்மையோராக இருக்கிறார்கள். அவர்கள் என்செய்வார்கள்? வயிற்றுக்கே வனவாசஞ் செய்கிறார்கள். கூலிக்காரர்கள் பெறும் ஊதியம் அவர்கள் குடும்பச் செலவுக்குப் போதாது! சம்பளம் சிறிது அதிகம்பெறுந் தொழிலாளியின் பொருளைக் கள்ளுக்கடை முதலாளி ஒருபக்கம் பிடுங்கிவிடுகிறான்; வீட்டு முதலாளி மற்றொரு பக்கம் பிடுங்கிவிடுகிறான்; வட்டி முதலாளி இன்னொரு பக்கம் பிடுங்குகிறான். பாரத நாட்டுத் தொழிலாளர் படுங் கஷ்டத்துக்கு அளவில்லை. அக்கஷ்டத்தினிடையே அவர்கட்குத் தேசபக்தி அரும்புதல் அரிது. அவர்களிடத்தில் தேசபக்தி அரும்புமாயின், அதுவே உண்மைத் தேசபக்தியாகும். தொழிலாளர்க்கு வஞ்சனை தெரியாது. அவர், பால் போன்ற மனமுடையவர்; எவர் எதைச் சொன்னாலும் அதை நம்பிவிடுவர்.

அவர்கள் நல்லவழியில் நடத்தப்பட்டால் பாரததேசம் பழைய வழியில் திரும்ப ஏது உண்டாகும். வக்கீல் கூட்டமும் செல்வக் கூட்டமும் தொழிலாளர் கூட்டத்தை இப்பொழுது ஏமாற்றி வருகின்றன. (இதைப் பற்றிப் பின்னை விரித்தெழுதுவோம்.) தேர்தல் காலத்தில் அபேட்சகராக நிற்பவர் பலர், தொழிலாளரிடத்து அநுதாப முடையவர் போல் நடிப்பர். பின்னர்ச் சட்டசபை சென்றதும் தொழிலாளர் நினைவு தோன்றப்பெறுவதே யில்லை. இனி வருங் காலத்தில் தொழிலாளரை எவராலும் ஏமாற்றல் முடியாது. அவர்களால் பாரதநாடு மீண்டும் பரிணமிக்கும்.

பாரதநாட்டில் வதிவோர் பலர் சமயச் சண்டையால் - சாதிச் சண்டையால் - பாஷைச் சண்டையால் - நாட்டின் வளர்ச்சிக்குக் கேடு சூழ்கிறார். ஹிந்து-முஸ்லிம்கள் அடிக்கடி பெரிதும் வட இந்தியாவில் சிறுசிறு விடயங்களை முன்னிட்டுக் கலாம் விளைத்துப் போர் விளைத்துக்கொள்கிறார்கள். உயர்ந்த சாதியார் தாழ்ந்த சாதியாரைப் பலவழியிலும் இடர்ப்படுத்துகிறார். தமிழ் நாட்டில் வடமொழி தென்மொழிச் சண்டையும் உண்டு. இவர்களனைவரும் யாவர்? ஒரு நாட்டிற் பிறந்தவரே. ஒரு நாட்டிற் பிறந்த இவர்களை மேற்போந்த சண்டைகள் பிரிக்கின்றன. இவர்கள், தங்களைப் பாரதப் புதல்வர்கள் என்று நினைக்கிறார்களில்லை. இந்நினைவின்மையால் பாரதநாட்டு வீரத்துக்கும் ஞானத்துக்கும் ஊறு நிகழ்கிறது. இச்சண்டைகள் ஒழியு நாள் எந்நாளோ?

பாரதநாட்டு மக்கள் தங்களுக்குரிய கலைஞானம் வீரம் முதலியவற்றை வளர்க்குந் துறையில் நண்ணாது, அவைகளைத் தேய்த்து வருதல் கண்ட பாரத மகனார் ஒருவர் பாரத நாட்டுக்கு நலஞ்செய்யப் புறப்பட்டார். அவர் பாரத நாட்டிற் பிறந்த அனைவரும் சகோதரர் என்ற உணர்வை எழுப்ப முயன்றார். எப்படி? கதராடையால் - ஹிந்தி பாஷையால் - அஹிம்சா தர்மத்தால் - ஒற்றுமை உண்டாக்க உறுதி கொண்டார். இம்மூன்றும் ஒருவித ஒற்றுமை உணர்வை நல்கும். மகாத்மாகாந்தி, இவ்வுணர்வை வளர்க்க வல்ல முறைகளைக் கொள்ளுமாறும், தேய்க்கவல்ல முறை

களைத் தள்ளுமாறும் அறிவுறுத்தினர்.' இவர் முயற்சியால் ஒற்றுமை நிகழின் பாரதநாட்டிற் பிறந்த அனைவரும் பாரத மக்கள் என்ற உணர்வு பெறுவர். அவ்வுணர்வு, நாட்டுக் கலை - ஞானம் - வீரம் முதலியவற்றை வளர்க்கும்.

காந்தியடிகளோடு கலந்து உழைப்பதுபோல வக்கீல் கூட்டம் நடித்து, அவர்தம் இயக்கத்துக்குக் கேடு சூழ்ந்து வருகிறது. மகாத்மாகாந்தி, பாரதக் கலைகளை அதிகார வர்க்கத்தோடு கலந்து வளர்க்க முடியாதென் றுணர்ந்தே, காங்கரஸ் வாயிலாக அவைகளை வளர்க்க முயன்றார். பதவிக்கும் பட்டத்துக்கும் காங்கரஸை ஒரு நிலைக்களனாகக் கொண்டிருந்த வக்கீல் கூட்டத்தார், அடிகளின் முறைகளைக் குறை கூறிக்கூறி, அவைகளின் இடுப்பை உடைத்துச் 'சட்டசபையினுள் நுழைந்து அதைச் செய்வோம் இதைச் செய்வோம்' என்று வீண்புரளி உண்டுபண்ணி, மெல்ல மெல்லக் காங்கரஸைப் பழைய காங்கரஸாக்க முயன்று வருகிறார். இவ்வுண்மை கண்ட காந்தியடிகள், 'சட்டசபைக்குச் செல்வோர் செல்க' என்று கூறிக் காங்கரஸைத் தூய்மைப்படுத்த முயன்று வருகிறார்.

ஆக்க வேலையில் உறுதியுள்ளவர்களைக் கொண்டு, நாட்டுக் கல்லூரி – பஞ்சாயத்து முதலியவற்றைக் கண்டு, பாரத நாட்டின் கல்வி – ஒழுக்கம் – அறம் – வீரம் முதலியவற்றை ஓம்பலாமென்பது மகாத்மாவின் கருத்து.

இப்பொழுதுள்ள ஆட்சிமுறையால், நமது நாட்டின் கலைஞானம் வீரம் முதலியன வளரா என்பது திண்ணம். அவைகள் அருகினல் பாரதநாட்டிற் பிறந்த மக்களைப் பாரத மக்களென்று கூறுதல் முடியாது. நாட்டுக்குரிய கலைகளையெல்லாம் ஒழித்துவிட்டுப் பெறுஞ் சுயராஜ்யம் சுயராஜ்யமாகாது. பாரதநாட்டில் உதித்த நன்மக்களால் காணப்பெற்ற பல துறைகளை மீண்டும் உயிர்ப்பித்து, அவைகளின் வழி நடக்க முயல்பவர்களே பாரதமக்கள் எனப்படுவார்கள். அதற்குரிய வழி மகாத்மா காந்தி காட்டுவதாகும். பாரத மக்களாக விரும்புவோர் அவர்வழியைக் கடைப்பிடிப்பாராக. (6–6–1926)

# உலகின் மெலிவு

உலகு என்பது பல பொருள் கொண்ட ஒருசொல். உலகு என்னுஞ் சொல், அஃறிணைப் பொருளையும் உயர் திணைப் பொருளையும் தன்னகத்தே அடக்கிக்கொண்டிருப் பது. உலகு என்பதற்கு உயர்ந்தோர் என்றொரு பொருள் உண்டு. அவ்விழுமிய பொருள் பற்றியே நாம் இக்கட்டுரை வரையப் புகுகிறோம். 'உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டு' என்று நந்தமிழ்ப் பெரியார் அருளிய திருவாக்கு ஈண்டுப் பெரிதும் உன்னற்பாலது.

உயர்ந்தோரெனில் எத்துறையில் உயர்ந்தோர் என்னும் வினா எழலாம். அவ்வினாவிற்குப் பலவழியில் விடையிறுக்க லாம். அக்கடைகளை இன்று ஈண்டுத் திறக்கவேண்டுவது அநாவசியம். பொதுவாக அறிவில் - ஞானத்தில் - சிறந்த அனைவரையும் உயர்ந்தோர் என்னலாம். உலகத்தில் அறிவுத் துறைகள் பலபடக் கிடக்கின்றன. அவ்வத்துறையில் பயின்று அறிவு விளங்கப்பெற்ற ஒவ்வொருவரும் உயர்ந் தோரே யாவர். ஒரு துறையில் வல்ல ஒரு கூட்டத்தவரையே உயர்ந்தவர் என்று கூறுவது பொருந்தாது. உயர்ந்தவர் பல திறப்பட்டவரா யிருப்பர். சமய ஞானத்தில் உயர்ந்தவர் இருக்கலாம் ; கணிதத்தில் உயர்ந்தவர் இருக்கலாம்; சங்கீதத் தில் உயர்ந்தவர் இருக்கலாம்; சிற்பத்தில் உயர்ந்தவர் இருக்க லாம். இவ்வாறே ஒவ்வொரு துறையிலும் உயர்ந்தவர் இருக்க லாம். இவ்வுயர்ந்த அனைவருஞ் சேர்ந்த ஒன்றே உலகென் பது. இவ்வுலகே, உலகை நடாத்தல் வேண்டும். உலகை (உயர்ந்தோரை)க் குப்பை கூளங்களோடு சேர்த்துக் கணிப் பது பொருத்தமன்று.

விரிந்து பரந்த உலகம், பண்டைக் காலத்தில் உயர்ந் தோர் என்னுஞ் சீரிய உலகத்தால் நடத்தப்பட்டு வந்தது. அந்நாளில் உலகம் செழுமை பெற்றிருந்தது. இந்நாளில் (உயர்ந்த) உலகு மெலிந்து வருவதால் உலகம் பெரிதும்

இடர்ப்படுகிறது. முன்னாளில் மக்கள் தங்கள் வாழ்விற்கு வேண்டற்பாலனவாய இலெளகிக வைதிகத் துறைகளில் இறங்கி, நன்கு உழைத்துத், தங்கள் அறிவைப் பண்படுத்திக் கொண்டார்கள். உதாரணமாக நமது நாட்டை எடுத்துக் கொள்வோம்.

நமது நாட்டைச் சுற்றி ஒருவன் யாத்திரை செய்வானுல், அவன் உள்ளத்தில் கோயில்களும் கோபுரங்களும் பதியும். அவைகளைக் கட்டினவர் யாவர்? எழுப்பினவர் யாவர்? அவைகளிலுள்ள அழகிய சிற்பங்களின் திறமையென்ன? அத்துறையில் வல்லார் இப்பொழுது எத்துணைப்பேருளர்? இவ்வொரு துறையின் நிலையை நோக்கலாம். இந்நாளில் நங் கோயில்களிலுள்ள சிற்ப அழகைக் கண்டு இன்புறும் அறிவுடையார் பலருளரோ? அத்தொழில்வல்ல ஒரு சிலராவது உளரோ? மாவலிபுரம் நமது நாட்டுச் சிற்ப ஞானத்தில் உயர்ந்தவர்கள் நினைவை யூட்டுகிறது. அச் சிற்பத்தைக் காண ஆருயிர மைல் தூரத்தினின்றுஞ் சிலர் வருகின்றனர். பக்கத்துக் கிராமத்திலுள்ள நம்மனோர்க்கு அச் சிற்பத்தின் அருமை புலனாகவில்லை. என்ன மாறுதல்! பரிதாபம்! சிற்ப உலகம் நமது நாட்டில் மெலிவடைந்ததைக் குறித்துக் கண்ணீர் உகுக்கிறோம்.

சிற்ப உலக மெலிவுநிலை இவ்வாருகச், சங்கீத உலகைச் சிறிது கவனிப்போம். நமது நாட்டுச் சங்கீதம் எத்தகைத்து என்பதை விரித்துக் கூறவேண்டுவதில்லை. நமது நாட்டு இசை இன்பமும் யாழ்குழல் இன்பமும் ஆண்டவன் இன்ப வடிவைப் புலப்படுத்துவன என்று கூறுவது மிகையாகாது. நமது நாட்டு இசை, மண்ணையும் வானையும் தன்வசமாக்குந் த்ன்மை யுடையதன்றே? இற்றைக்குச் சுமார் நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர், நம் முன்னோர்கள் யாழ்குழல் முதலிய இசைக்கருவிகளைக் கண்டாரெனில் அன்னார் கூர்த்த மதியை என்னென்று புகழ்வது? இற்றை ஞான்றும் யாழ் குழல்போன்ற இசைக்கருவிகள் யாண்டாயினும் உளவோ? இச்சீரிய இசைக்கருவிகளைச் கண்ட நாட்டில் எங்கணும் 'ஹார்மோனியம்' என்னும் இசையில்லாக் கருவி மலிந்து

கிடக்கிறது. கேட்போர்க்கு ஆனந்த அமுதூட்டும் இசை பாடுங் கணிகையர் தொகை அருகுகிறது. இன்பமூட்டாத போலி முரட்டுப் பாடகர்கள் தொகை பெருகுகிறது. நமது நாட்டில் சங்கீத ஞான உலகம் மெலிந்து வருவது கண்கூடே.

கணிதத் துறையை எடுத்துக்கொள்வோம். நம் மூதாதைகள் வானசாஸ்திரத்தில் எவ்வளவு வல்லவர்களா யிருந்தார்கள் என்பதை இந்நாளிலும் வெளிவரும் நமது நாட்டுப் பஞ்சாங்கங்கள் அறிவுறுத்தும். அத்தகைக் கணித ஞானம் இப்பொழுது எங்கே? நமது நாட்டுச் சோதிடக் கலைக் கடலின் ஆழத்தை எவரே அளவிட வல்லார்? அந்தோ! நமது நாட்டுக் கணிதமும் சோதிடமும் எங்கே? உலகின் மெலிவை என்னென்று கூறுவது?

எல்லாத் துறைகளிலும் மேலாய சமயஞானத் துறையில் நம்மனோர்கள் எவ்வளவு தெளிவுடையவரா யிருந்தார்கள்? உபநிடதங்களை ஆராய்ந்தால் நமது நாட்டுச் சமய ஞானப் பெற்றி இனிது புலனாகும். உபநிடதங்களை எழுதிய நமது நாடு, இப்பொழுது உப்புவரியைப்பற்றி எழுதி வருகிறது. உபநிடதப் பொருளுண்மை கண்ட உலகம், இப்பொழுது போலி நாவல்களைக் கண்டு வருகிறதெனில், உலகம் மெலிந்து வருவதை வேறுவழியில் வலியுறுத்தல் வேண்டுமா? இக்கால உலகம், உபநிடதப் பொருள்தேறும் ஆற்றலிழந்து வாடுகிறது. எவ்வளவு அறியாமை?

இவ்வாறே உலகில் பல அறிவுத்துறைகள் பட்டு வருகின்றன. உலகம் எல்லா வழியிலும் மெலிவடைந்தே வருகிறது. மெலிவு தோன்றியதற்குக் காரணம் என்னை? மக்கள் இயற்கை வாழ்வை விடுத்துச், செயற்கை இயந்திரங்கள் உதவிகொண்டு வாழ்ந்து, தங்களுக்கேற்ற அரசாட்சிகளை வகுத்துக்கொண்டமையே யாகும். இப்பொழுது உலகில் நிலவும் அரசாட்சிகளெல்லாம் மக்களின் உள்ளறிவு விளங்கக் கூடிய கல்வித்துறைகளைப் போதிப்பதில்லை. அதனால், உயர்ந்த உலகு மெலிவடைந்து வருகிறது.

உயர்ந்த உலகு மீண்டும் உருக்கொள்ளவேண்டுமாயின், தால்ஸ்தாய் காந்தியடிகள் முதலிய சத்தியாக்கிரகிகள் வழி உலகம் நடைபெறல் வேண்டும். மக்கள் உள்ளறிவை மறைக்கும் நாத்திக அரசியல் ஞானம் வீழ்ந்துபடல் வேண்டும். தன்னையுந் தன்னைச் சூழ்ந்துள்ள பொருளையும் ஆராயாது, சட்டசபையிலும் பட்டத்திலும் தேர்தலிலும் காலத்தைக் கழித்தால் உலகம் எப்படி வளரும்? மனிதன் தன்பாலுள்ள அறிவைக்கொண்டு, தன்னைச் சூழ்ந்து தன் வாழ்வுக்கு உறுதுணை செய்துவரும் இயற்கையை ஆராய்ந்து, அதன்கண் தோய்ந்தால், அவன் அறிவு விளங்கி, உயரிய பொருளைத் தெளியும் பேறுபெறுவான். மனிதனிடத்தில் அறிவு இல்லாமல் போகவில்லை. இயற்கையின் வளமுங் குன்றவில்லை. இரண்டும் ஒன்றுபட்டு உண்மை காணும்முறை அற்றுப் போய்விட்டது. அதை ஒழுங்குபடுத்தினால் (உயர்ந்த) உலகு மீண்டும் பரிணமிக்கும். அவ்வுலகைக் காண உழைக்கவேண்டுவது அறிஞர் கடமை. அறிஞர்களே! பாழுக்கு உழைக்க வேண்டாம். பண்பிற்கு உழைத்து 'உயர்ந்தோர்' என்னும் அறிவு உலகை உண்டாக்குக. (30-3-1923)

## தேசபக்தி

தேசபக்தி இப்பொழுது நாட்டில் எங்கணும் பேசப்படுகிறது; எழுதப்படுகிறது. தேசபக்தியைப் பற்றிய பேச்சுக்கும் எழுத்துக்கும் அளவில்லை. அத்தொண்டர் தொகைக்கும் அளவில்லை. ஆனால் தேசபக்தி நிகழ்ச்சியோ * * * ?

ஒன்று செயலினின்றும் வீழ்ந்து படுமாயின், அது பேச்சிலும் எழுத்திலும் பெரிதும் இடம்பெறல் இயல்பு. இப்பொழுது நாட்டு மக்களிடைத் தேசபக்தி இல்லை என்று சொல்லுதல் முடியாது. மக்களிடைத் தேசபக்தி யுண்டு. அப்பக்தி முருகியெழுந்து வினையாற்றுவதைத் தகையச் சில

இடையீடுகள் தோன்றியிருக்கின்றன. அவைகள் மக்கள் கருத்தைத் தங்கள் வழியில் ஈர்த்திருக்கின்றன. அவைகள் எவை ?

சிலவற்றை ஈண்டுக் குறித்தல் சாலும். படித்தவர்களிடைத் தோன்றியுள்ள பதவி பட்ட வேட்கை, அவர்களிடம் நாட்டுக் கலைகள் நாட்டுப் பொருள்கள் நாட்டுத் தொழில்கள் முதலியவற்றின்மீது அன்பின்மை, நாட்டி லெழுந்துள்ள அரசியல் கட்சிப் பிணக்கு, வகுப்புப் பூசல், சமயப்போர் முதலியன. இன்னோரன்ன பிறவற்றை நேயர்கள் ஊகித்துக் கொள்ளலாம். உண்மைத் தேசபக்தி, கற்றவர்பாலும் மற்றவர்பாலும் எழுமாயின், அது நாட்டிலுள்ள குறைபாடுகளையெல்லாம் விழுங்கும் என்பது ஒருதலை. ஆகவே, இப்பொழுது வேண்டற்பாலது தேசபக்தி.

தேசபக்தி என்பது எது ? பொதுவாகத் தேசத்தினிடம் பக்திசெலுத்தல் என்று கூறிவிடலாம். ஆனால் அதைக்கொள்ளும் முறை சிறப்பாகக் கவனிக்கப்பெறல் வேண்டும். இப்பொழுது தேசபக்தி என்பது பெரிதும் மேல்நாட்டு முறையில் எங்கணுங் கொள்ளப்பட்டு வருகிறது. அதனால் உலகிற்கு இதுகாறும் நலன் விளைந்ததாகத் தெரியவில்லை.

மேல்நாட்டார்க்குத் தேசபக்தி நிரம்ப உண்டு என்பதில் ஐயமில்லை. ஆனால் அன்னார் தமது நாட்டின்மீது கொண்ட பக்தியைப் பிற நாடுகளைத் துன்புறுத்துவதின் வாயிலாக வளர்த்து வருகிறார். இதனால் உலகில் அமைதி நிலவாதொழிகிறது. எந்நேரமும் போரும் பிணக்கும் உலகிடை நிகழ்ந்தவண்ணமாயிருக்கின்றன. எனவே, அம்முறை கொள்ளற்பாலதன்று. பின்னைத் தேசபக்தி முறை யாது ?

தேசபக்தி என்பது கடவுள் பக்தியின் ஒரு கூறு. கடவுள் பக்தி என்பது ஒருத்தியும் ஒருவனும் கூடி வாழும் இல்லத்தினின்றும் அரும்புவது. பின்னை அது பல வழியில் பெருகிப் பெருகி முடிவில் எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகும் ஒரு பெரும் நிலை கூட்டும். எவ்வுயிரையும் தன்னுயிரெனக் கருதித் தொண்டு செய்வது கடவுள் பக்தி

யாகுர். இப்பக்தி பிற தேயங்களைத் துன்புறுத்துவதால் ஒருபோதும் விளையாது. கடவுள் பக்திக்குரிய பலதிறப் படிகளுள் ஒன்ருகவுள்ள தேசபக்தி, பிற தேசங்களை வருத்துவதற்கெனப் பயன்படுத்தப் பெறின், அது கடவுள் பக்தியின் கூருகுங்கொல்! பிற தேசங்களிடம் பகைமை கொள்வது, கடவுள் பக்திக்குப் படியாயுள்ள தேசபக்தி யாகாதென்பதை ஈண்டு மிக உரமாக வலியுறுத்துகிருேம்.

தேசபக்தி என்பது பகைமையை அடிப்படையாகக் கொண்டதன்று. அஃது அன்பை அடிப்படையாகக் கொண்டது. அதனைப் பகைமைக் கிரையாக்குவது அழகன்று.

தேசபக்தியாவது தேச மக்களிடத்தும் - தேசத்தின் மொழி, கலை, வழக்க ஒழுக்கம், சமயம் முதலியவற்றின் மீதும் - அன்பு செலுத்துவது. இவ்வன்பு எல்லாவற்றிற்கும் அடிப்படையாயுள்ள இறைவன் உண்மையைப் புலப்படுத்துவதாகும். இதற்கென ஏற்பட்ட தேசபக்தியைப் பகைமை வளர்ச்சிக்குப் பயன்படுத்துவது அறிவுடைமை யாகாது. தேசத்தின் இயற்கைக்கேற்றவண்ணம் அமையுங் கலைகள் முதலியன கடவுள் உணர்விற்குக் கருவி போன்றன என்பதை மறத்தலாகாது.

மேல்நாட்டுத் தேசபக்தி, பிறநாட்டு மொழி கலை வழக்க ஒழுக்கம் முதலியவற்றைக் குலைக்குந் துறையில் கொள்ளப்பட்டு வருவது கண்கூடு. அச்செயல் இயற்கை நெறிக்கு அரண் செய்வதா முரண் செய்வதா என்பது ஆராயற்பாலது. ஒரு தேசத்தின் கலை முதலியவற்றைப் பலியிடுவது கடவுள் நெறியை எங்ஙனம் கூட்டும்?

இப்பொழுது நமது நாட்டில் தேசபக்தி என்பது எவ்வழியில் நிகழ்ந்து வருகிறது? நாட்டுக் கலை மொழி வழக்கவொழுக்கம் முதலியவற்றின்மீது 'தேசபக்தர்கள்' என்று சொல்லப்படுவோர்க்குக் கவலை யுண்டா? நேயர்களே! சிந்தியுங்கள்.

இப்பொழுது தேச பக்தர்களென்று வெளிவந்துள்ளவர்களுள் பெரும்பான்மையோர்க்கு நாட்டுமொழி நாட்டுக்

கலை நாட்டுப் பொருள்மீது பக்தியுண்டா என்று கேட்கிறோம். நாட்டுப் பற்றுக்கு அடிப்படை நாட்டுமொழிப் பற்று. அம்மொழிப் பற்று, மற்றக் கலை முதலியவற்றின்மீது பற்றுண்டாக்கும். நந் தேசபக்தர்களின் மொழிப்பற்றை நேயர்கட்கு விரித்துக் கூறவேண்டுவதில்லை. தமிழ் மக்களிடை ஒரு தமிழன் அந்நியமொழி பேசுவது எற்றுக்கு? தாய்மொழியில் கருத்தை வெளியிட்டா லென்ன? தலை வெடித்தா போகும்? தாய்மொழிப் பற்றில்லா ஒருவன் எங்ஙனந் தேசபக்தனாவன்? மொழியினிடத்தும் கலைகளிடத்தும் பற்றின்றி விடுதலை முழக்கத்தில் தலைப்படுவதால், தேசபக்தி மறைந்து, தேசப் பகைமை யுண்டாகிறது.

நாட்டு மொழி கலை முதலியவற்றின்மீது அன்பு செலுத்தாத ஒருவன், நாட்டு மக்களிடத்தும் அன்பு செலுத்தான். மக்களிடம் அன்பு செலுத்தாதவன், கடவுளிடத்தும் அன்பு செலுத்தாதவனாவன்.

நமது நாட்டில் இப்பொழுது உட்பகை மூண்டு வருதல் கண்கூடு. உட்பகைமையினிடைத் தேசபக்தி வளருமா தேசத்துரோகம் வளருமா என்பதை நேயர்களே உன்னிப் பார்த்தல் வேண்டும். இந்நாளில் தேசபக்தர் என்று சொல்லிக் கொள்வோர் ஒருவரை ஒருவர் வைதுகொள்வதும் பழித்துக் கொள்வதும் இயல்பாய்விட்டன. இவைகள், தேசபக்தி மேலீட்டான், தேச மாதாவை அர்ச்சிக்கும் மலர்கள் போலும்!

உரிமை யிழந்த ஒரு நாட்டார்க்குள் இப் பொல்லாப் பகைமை வளர்ந்துவரின், நாட்டின் நிலை என்னாகும்? நாட்டில் தேசபக்தி மறைந்து, தேசத் துவேஷம் நாளுக்குநாள் வளர்ந்து வருகிறது. அத் துவேஷத்தினின்றும் கட்சிப் போரும் வகுப்புப் பிணக்கும் சமயப் பூசலும் எழுந்து கொழுந்துவிட் டெரிகின்றன. தலைவர்கள் என்போர் தேசபக்தி என்னுந் தண்புன லாடுகின்றாரில்லை; தேசத் துவேஷம் என்னும் எரியிடை மூழ்கி நிற்கின்றார்.

இங்கிலையில் நாட்டார் என்செய்தல் வேண்டும்? நாட்டார் ஒழுங்குபடின் தலைவரும் ஒழுங்குபடுவர். நாட்டார் தேசபக்தியில் நாட்டஞ் செலுத்தின், தலைவரும் தேசபக்தியில் நாட்டஞ் செலுத்துவர். தலைவர்கள்வழி இனி நாட்டார் நடத்தலாகாது. அக்காலம் போய்விட்டது. தலைவர்கள் உட்பகைமை விளைப்பதில் கண்ணுங் கருத்துமா யிருக்கிறார்கள். இனி நாட்டார், தலைவர்களை நடாத்தப் புறப்படுதல் வேண்டும்.

முதலாவது நாட்டவர், பதவி பட்டங்களில் வேட்கை கொள்ளலாகாது. 'பதவி பட்டங்களில் வேட்கை கொள்வோர் படித்தவரே யன்றி நாட்டவரல்லர்' என்று சிலர் கருதலாம். நாட்டவர் அவைகளின்மீது நேரே கருத்துச் செலுத்துகிறாரில்லை. ஆனால் அவர் பதவி பட்டங்கட்குப் பெருமை அளித்தல் வெள்ளிடைமலை. அதிகார வர்க்கப் பெரும்பதவிகட்கு நாட்டார் மதிப்புக் கொடுப்பது உண்மை. இவ்வெண்ணம் மாறுதல் வேண்டும்.

எடுத்துக்காட்டாக இரண்டொன்று கூறுகிறோம். ஸ்ரீமான் சிவஞானம் பிள்ளை முன்னே பல இடங்கட்கு அழைக்கப்பட்டார்; பல மகாநாடுகளில் தலைமை வகித்தார். இப்பொழுது அவரது அரவமே காணோம். காரணமென்னை? முன்னே அவர் மந்திரி பதவியில் வீற்றிருந்தார். இப்பொழுது அவர் அப்பதவியிலில்லை. பின்னே ஸ்ரீமான் அரங்கநாத முதலியார் அப்பேறுகளைப் பெற்றுவந்தார். இப்பொழுது அவர் பெயரைப் பத்திரிகைகளில் காண்டலும் அரிதாயிருக்கிறது. எடுத்துக் காட்டாகவே இவர்கள் பெயர்களை ஆள்கிறோமன்றி, வேறு கருத்துக்கொண்டு ஆள்கிறோமில்லை. மற்றப் பெயர்களையும் இப்பெயர்களுடன் கூட்டிக்கொள்க. நாடு, இவர்கட்கு மதிப்புக் கொடுத்ததா அல்லது இவர்கள் பதவிக்கு மதிப்புக் கொடுத்ததா என்பது கவனிக்கப்படல் வேண்டும். பதவி பட்டங்களை நாடு ஒரு பக்கம் வெறுத்துக்கொண்டே மற்றொரு பக்கம் விரும்பிக் கொண்டிருக்கிறது. உண்மையாக நாடு, பதவி பட்டங்களில் வெறுப்புக் கொள்ளுமேல், படித்தவர் எவரும் அவைகள்

மீது விருப்புக் கொள்ளார். படித்தவரது சுயநலத்துக்கு நாடு ஒரு வழியில் துணை நிற்கிறது. ஆதலால், நாடுந் திருந்தல்வேண்டும்; படித்தவர்களுந் திருந்தல் வேண்டும்.

உரிமையில்லா நாட்டில் கட்சிப் பிணக்குகள் வேண்டுவதில்லை என்று நாம் பன்முறை அறைகூவி யிருக்கிறோம். கட்சிப் பிணக்கால் நாட்டில் பிரிவு ஏற்படுகிறது. பிரிவால் ஒற்றுமை குலைகிறது. ஒற்றுமைக்குலைவு உட்பகையை விளைக்கிறது. உட்பகை தேசபக்தியைக் கெடுக்கிறது. ஆகவே, உரிமை பெறும்வரை நாட்டில் கட்சிப்பிரிவு நிகழ்தலாகாது. தற்காலக் கல்வியாளர்கள் தங்கள் நலன் கருதி, வேண்டுமென்றே கட்சிகளை உண்டாக்குகிறார்கள். அக்கட்சிகளுக்கு நாட்டார் துணைசெய்யாது நிற்பரேல் அவை தாமே மாண்டு போகும்.

பதவி பட்ட வேட்கையும் கட்சிப் பிணக்குகளும் அந்நிய ஆட்சிமுறைக்கு ஆக்கந் தேடுகின்றன. அந்நிய ஆட்சிமுறையில் நாட்டுமொழி, நாட்டுக் கலை, நாட்டுப்பொருள் முதலியன அழிந்துபடல் இயல்பே. அந்நிய ஆட்சிமுறைக்கு அந்நிய மொழியும் பிறவும் வேண்டப்படுகின்றன. இவ் வேண்டுதல் நாட்டுக்கலை முதலியவற்றைச் சாகச் செய்கிறது. கலைகளின் அழிவு தேசபக்தியைக் குலைக்கிறது.

காங்கரஸிலும் மகாநாடுகளிலும் நாட்டுப் பொருளை வாங்கவேண்டுமென்றும், அந்நியப் பொருளை விலக்கவேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்படுகின்றன. அத்தீர்மானங்களால் அந்நிய நாட்டுப் பொருள் நாட்டிடை இறங்குதல் குறைவுபடுகிறதா?

இப்பொழுது பிரிட்டிஷ் பொருள் விலக்குப் பிரசாரம் யாண்டும் நடைபெறுகிறது. அப்பிரசாரம் போற்றற்குரியதே. அப்பொருள் விலக்கப்பட்டதும் அவ்விடத்தில் வேறு எப்பொருளை வைப்பது? அமெரிக்காவி னுடையதையா? ஜெர்மெனியினுடையதையா? மேல்நாட்டுப் பொருள் பல இன்றி, இந்நாளில் வாழ்வு நடைபெறுதல் அரிது என்று கருதப்படுகிறது. அதன்பொருட்டு, இன்னின்ன மேல்நாட்டுப்

பொருளை விலக்கல் வேண்டுமென்று ஒருவித வரம்பு கோலக் காங்கரஸ் சார்பில் ஒரு கூட்டம் ஏற்படுத்தப்பட்டது. அஃது எவ்வழியிற் சென்றதோ தெரியவில்லை.

பிரிட்டிஷ் பொருள்களை விலக்கி, மற்ற அமெரிக்கா ஜெர்மெனி முதலிய நாட்டுப் பொருள்களைப் பெறுவது தேச பக்தியாகாது. ஒல்லும் வகை நாட்டுப் பொருள்களையே வாழ்விற்குரியன வாக்கிக்கொள்வது தேசபக்தியை வளர்ப்ப தாகும். தற்போது வாழ்விற் கின்றியமையாத அந்நியப் பொருள் சிலவற்றைக் காலநிலை நோக்கிப் பெற்றுவரலாம். அவைகளை நீடூழியாகவும் நிலைபேறாகவும் வைத்துக்கொள் ளுதல் கூடாது. அப்பொருள்களை நாட்டில் செய்யவே முயலுதல் வேண்டும்.

மற்றப் பொருள்களெல்லாம் ஒருபால் கிடக்க. துணி ஒன்றை எடுத்துக் கொள்வோம். துணி நமது நாட்டில் நெய்துகொள்ளக் கூடியதே. கதரியக்கந் தோன்றி ஏறக் குறைய எட்டு ஆண்டுகளாகின்றன. இன்னும் நூற்றுக்கு அறுபது பேரிடைக் கதர் பரவவில்லை. இடையிடையே தேச பக்த ரென்போர் கதரியக்கத்துக்குச் சூழ்ந்து வந்த கேடு நாட்டார்க்குத் தெரியும். போனதுபோக, இனியாதல் தேச பக்திகொண்டு, நாட்டுக்கதரை நாட்டார் அணிவாராக. இவ் வொரு முயற்சி வெற்றிதரின், எவ்வளவோ நலன் விளையும்.

நாட்டுமொழி, நாட்டுக்கலை, நாட்டுப்பொருள் முதலிய வற்றின்மீது பக்தி கொண்டு, நாட்டு மக்களிடம் எக்கார ணம் பற்றியும் பகைமை கொள்ளாது, அன்பு செலுத்தித், தேசபக்தி வளர்க்குந்துறையில் நாட்டார் நாட்டஞ்செலுத்து வாராக; அத் தேசபக்தி மேலீட்டான் நாட்டிலுள்ள குறை பாடுகளை யொழிப்பாராக. தேசபக்தி எல்லாக் குறைபாடுகளை யும் விழுங்கும் என்பது திண்ணம். (18-4-1928)

# வகுப்பா ? தேசமா ?

நமது தேசத்தில் பலதிற வகுப்பினர் வாழ்கிறார். தேசத்தின் பொருட்டு அவ்வகுப்பினரெல்லாரும் ஓரினத்தவராக ஒருப்பட்டுக் கடனாற்றுவரேல், தேசத்துக்கு நலம் விளையும் என்பதில் எட்டுணையும் ஐயமின்று. தேசத்தின் பொருட்டு, வகுப்பு வேற்றுமையைத் தொலைக்க முயல்வோருள்ளும், தொன்றுதொட்டு வரும் வழக்க ஒழுக்கங்கள் குறுக்கிட்டு, அவர்தம் ஒருமை உணர்வையுங் குலைக்கின்றன. வழக்க ஒழுக்கங்களை விட்டுக்கொடுக்க மக்கள் மனம் எளிதில் விரைந்தெழாது. சில வழக்க ஒழுக்கங்கள் வகுப் புணர்வுக்குக் காரணமாக நிற்கின்றன. வழக்க ஒழுக்கங்கள் உடலைப்பற்றியனவே யன்றி உயிரைப்பற்றியன வல்ல. புற வழக்க ஒழுக்கங்கள்மீது கருத்தைச் செலுத்தாது, அக ஆன்ம நேயத்தின்கண் கருத்தைச் செலுத்தின், வகுப்பு வேற்றுமை தலைகாட்டா தொழியும். ஆகவே, புற வழக்க ஒழுக்கத்தினும் ஆன்ம நேய ஒருமைப்பாட்டை ஓம்ப முயல்வது அறிவுடைமை.

இப்பொழுது நமது நாட்டிலுள்ள வகுப்பு வேற்றுமைகளை விரைவில் களைய இயலாதென்பது எவரும் அறிந்ததொன்று. அவ்வகுப்பு வேற்றுமைகளைப் பாராட்டாது கடனாற்றும் உறுதியில் நிலைத்து நிற்க முயல்வது அரியதன்று. இம்முயற்சியில் தலைப்பட்டுழைக்கவே அறிஞர்கள் முயலல் வேண்டும். ஆனால் நமது நாட்டு அறிஞர்களிற் பெரும்பான்மையோர், வகுப்பு வேற்றுமையைத் தமது நலத்துக்கு ஒரு கருவியாகக்கொண்டு, வகுப்புப் பூசலைக் கிளப்பி வருகிறார். இப்பூசலைக் கிளப்புவோர் தேசத்தை மறந்தவர் என்று கூறவும் வேண்டுமோ ?

'வகுப்பு நலன்' என்னும் எண்ணம் தோன்றும்போது 'தேச நலன்' ஆண்டழிதல் கவனிக்கத்தக்கது. 'தேசநலன்' என்னும் எண்ணத்தில் தேசத்திலுள்ள எல்லா வகுப்பு

நலன்களும் ஒன்றுதல் காண்க. நமது தேசத்துப் பொருள் பல, மேல்நாட்டுக்குச் சென்றவண்ணமா யிருக்கின்றன. அதனால் தேசத்தில் வறுமை முதலிய சிறுமைகள் வேரூன்றி விட்டன. அவ்வறுமை முதலியன தேசத்திலுள்ள ஒரு வகுப்பாரை மாத்திரம் பாதிக்குமா எல்லாரையும் பாதிக்குமா என்பது சிந்திக்கற்பாலது. அங்ஙனே அரசாங்கத்தால் விதிக்கப்படும் வரி சட்டம் முதலியனவும் தேசத்திலுள்ள எல்லா வகுப்பாரையும் பாதித்தல் வெளிப்படை. இத்தகைத் துன்பம் களையத் தேச உரிமை வேண்டற்பாலதா வகுப்புரிமை வேண்டற்பாலதா என்பது ஊன்றி ஆராயற்பாலது. தேசத்தின் சிறுமை போக்க முயல்வோர் உள்ளத்தில் வகுப்பு வேற்றுமையே தோன்றாது. தோன்றினும் அதை அவரது தேசபக்தி விழுங்கிவிடும். வகுப்பு வேற்றுமையுணர்வும் பற்றும் தேசத்தை மறத்தல் செய்யும். ஆதலால் தேசத்திற் பிறந்தவர்கள் தேச நலத்தின்மீது கவலை செலுத்தல் வேண்டும்.

நமது தேச நலத்தின் பொருட்டுக் காங்கரஸ் என்றோர் அமைப்பு அறிஞர்களால் காணப்பட்டது. அவ்வமைப்புத் தேசத்தைக் குறிக்கொண்டதன்றி, வகுப்பைக் குறிக்கொண்டதன்று. காங்கரஸில் தேசத்திற் பிறந்த அனைவர்க்கும் உரிமையுண்டு. அதன்கண் எல்லா வகுப்பாரும் அமர்ந்திருக்கிறார். அதன் வாயிலாகச் சேவை செய்துவரின் தேசபக்தியே வளர்ந்துவரும். இது வாசாஞானமன்று. இவ்வுண்மை செயலிற் காணப்பட்டதொன்று. ஒத்துழையாக் காலத்தில் காங்கரஸ் ஆணைதாங்கிச் சிறை புகுந்தவருள் எல்லா வகுப்பாரும் கலந்திருந்ததொன்றே நங்கூற்றுக்குச் சான்று பகரும். காங்கரஸிலுள்ள சிலர்க்கு வகுப்பு உணர்வு எழினும், அன்னார் அதை வளரவிடாது, தேச சேவையில் ஈடுபடுகிறார். எவ்வழியிலும் எவர்பாலும் வகுப்பு வேற்றுமை எழாதவாறும், எழினும் அதை அடக்கியும் ஒடுக்கியும் காங்கரஸ் காத்துவரல் கண்கூடு.

காங்கரஸ் வகுப்பு வேற்றுமை உணர்வை வீழ்த்திக், தேசநேசத்தை வளர்த்துவரும் வேளையில், ஆங்கிலம் பயின்ற

ஒருசிலர், தமது நலம்பேணி, வகுப்பு நலன் நாடுவார்போல வகுப்புச் சபைகள் கண்டு தேசத்தை மறந்தனர். அன்னார் விதைத்த விதை நச்சு மரமாகி இதுபோழ்து தேசத்தை இடர்ப்படுத்துகின்றது. வகுப்பு மகாநாடுகள் யாண்டுங் கூடுகின்றன. ஒன்றுமறியாத ஏழை மக்கள் வகுப்புத் துவேஷம் என்னும் மாயவலையில் சிக்குறுகிறார்கள். 'வகுப்பு வேற்றுமை ஒழிதல் வேண்டும் ஒழிதல் வேண்டும்' என்று ஒருபால் கூக்குரலிட்டு, மற்றொருபால் வகுப்புப் பூசலை எழுப்பிச் செய்யுஞ் சேவை எத்தகைச் சேவையோ தெரியவில்லை. வகுப்புரிமை குறித்து வகுப்புப் பூசலைக் கிளப்புவோர் பெரிதும் ஆசார சீர்திருத்தக்காரரென்றும், சாதி வேற்றுமையில் பற்றில்லாதாரென்றும் தம்மைச் சொல்லிக் கொள்வது வழக்கம். ஆனால் அன்னார் செயலோ சாதிவேற்றுமையை நிலைபெறுத்த முனைந்து நிற்கிறது. வகுப்புரிமைப் போராட்டத்தால் விளைந்துள்ள தீமைகள் பற்பல. அவைகளைப்பற்றிப் பன்முறை நாம் எழுதியிருக்கிறோம்.

இப்பொழுது வகுப்பு வேற்றுமையைப்பற்றியும், வகுப்புரிமையைப்பற்றியும், வகுப்புப் பூசலைப்பற்றியும் பல இடங்களில் பிரசாரங்கள் மிக உரமாக நடைபெற்று வருகின்றன. அப்பிரசாரத்தால் வகுப்பு வேற்றுமை வாடை உரமாக வீசினும், அதை எதிர்த்து நிற்கவேண்டுவது தேசபக்தர் கடமை. இவ்வேளையில் காங்கரஸுக்கு ஏற்பட்டுள்ள இடர்கள் பலப்பல. அவ்விடர்களை யெல்லாம் கடந்தே தீரல் வேண்டும். உண்மைத் தேசபக்தர்கள் தேசத்தை வகுப்புப் பூசலுக்கு இரையாக்காது, பரந்த உணர்வு கொண்டு, வகுப்புரிமையை மறந்து, தேச உரிமையை நாடி உழைப்பது அறமாகும்.

அந்தோ ! முப்பது கோடி மக்களை ஈன்ற தாயின் நிலை எவ்வாறிருக்கிறது ? வகுப்புப் பூசலை எழுப்புவோர் நம்மை ஈன்ற தாயை மறக்கிறார் போலும் ! இந்தியாவில் பிறந்த ஹிந்துக்கள் யார் ? முஸ்லிம்கள் யார் ? பிராமணர் யார் ? பிராமணரல்லாதார் யார்? எல்லாரும் பாரதமாதா வயிற்றிற் பிறந்த மக்களல்லரோ ? ஒரு தாயின் புதல்வர்கள் என்னும் நினைவினின்றும் வழுவாதநிலை பெறல்வேண்டும். இப்பொழுது

தோன்றியுள்ள வேற்றுமைகளும், பூசல்களும் ஒழியவேண்டுமானால், தேசத்தில் சுயராஜ்ய வேட்கை கிளர்ந்தெழல் வேண்டும். அவ்வேட்கை எழுச்சி எல்லாச் சிறுமைகளையும் போக்கி விடும். இதுபோழ்து தேசத்தில் வகுப்புணர்வே மலிந்து வருகிறது. அவ்வுணர்வால் விளையுந் தீமைகளைத் தேசபக்தர்கள் மக்களுக்கு விளக்கிக் காட்டல் வேண்டும். வகுப்புப் போரில் தலைப்பட்டுள்ள தலைவர்கள், 'சுயராஜ்யத்தை அளிக்க வல்லது வகுப்பா தேசமா' என்பதைச் சிந்தித்து உண்மை தேறுவார்களாக. (21-5-1926)

## வகுப்பும் தேசமும்

நமது தேசம் பெரிதும் பலதிற வகுப்புக்களால் ஆக்கப்பட்டது. வகுப்பை மறந்து, தேசத்தை நினைந்து, சேவை செய்வது தேசநலத்தை நாடுவதாகும். நமது பாரத நாடு ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகளாக வகுப்புப்பூசலுக்கு இரையாகி வருகிறது. பழைய காலத்தில் நிகழ்ந்த வகுப்புப் பூசல்களைப்பற்றி ஈண்டுக் கவலையுற வேண்டுவதில்லை. இந்நாளில் - இருபதாம் நூற்றாண்டில் - விஞ்ஞானக் கலைகள் வளர்ந்து வரூஉம் இவ்வேளையில் - இந்தியா வகுப்புப் பூசலுக்கு இரையாவதை 'வெட்கம்' என்று குறிப்பிடுவதா அல்லது 'வீரம்' என்று குறிப்பிடுவதா ?

இந்தியா அந்நிய ஆட்சியின் வயப்பட்டதற்கு அடிப்படையான காரணம் வகுப்புவாத மென்பதில் சிறிதும் ஐயமில்லை. ஹிந்துக்களிடையும் - முஸ்லிம்களிடையும் - மூண்டு கொண்டிருந்த வகுப்புக்கனல், சுதேச ஆட்சியை எரித்துப், பரதேச ஆட்சியை முளைக்கச் செய்தது. லார்ட் கிளைவின் வெற்றிக்குத் துணை நின்றது எது ? ஹிந்து - முஸ்லிம் வேற்றுமையன்றோ ? அவ்வேற்றுமையால் விளைந்ததென்னை ? அன்பர்கள் கூர்ந்து உன்னுவார்களாக.

நாடு, ஒன்றரை நூற்றூண்டாகச் செல்வமிழந்து, வறுமைக் குழியில் வீழ்ந்து, இடர்ப்பட்டு வருவதைக் கண்டும், அநுபவித்தும், இன்னும் நம்மவர்களை வகுப்புப் பித்தம் விடாதிருப்பது குறித்து வருந்துகிறோம். வகுப்புப் பித்தம் உள்ளவரை நாட்டை அடிமை நோய் அரித்து நிற்கும். இதை இந்தியாவிலுள்ள எல்லா வகுப்பாரும் உணர்கிறார். உணர்ந்தும், சகோதரர்கள் சமயத்தில் வகுப்புப் பித்தத்தால் மயக்குறுகிறார்கள். என் செய்வது ?

ஒரு நாட்டிலுள்ள சகோதரர்கள் பலதிறக் கொள்கையுடையவர்களாய், பலதிறக் கோலமுடையவர்களா யிருக்கலாம். இவ்வேற்றுமை காரணமாக ஒருவர் ஒருவர்க்குள்ள சகோதர நேயத்தை இழப்பது அறிவுடைமையாகுமா ? நாட்டில் பிறந்தவர்கள் தங்களுக்குள்ள வெவ்வேறு புற வேற்றுமைகளைக் கருதி, ஆன்மநேய ஒருமைப்பாட்டை அழித்துக்கொள்வது அறமாகுமா ?

இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி வேரூன்றிய நாள் முதல் நாட்டில் ஒருவித ஒற்றுமை மலர்ந்தே வந்தது. அவ் வொற்றுமை மலர், காய்த்துக் கனியாவதற்குள், காய்ந்து உலரத் தொடங்கியிருக்கிறது. இப்பொழுது நாடு முழுவதும் வகுப்பு வாத மயமாயிருத்தல் வெள்ளிடைமலை. சிலர் வகுப்பு வாதத்தை வெளிப்படையாகக் காட்டிக்கொள்கிறார். சிலர் அந்தரங்கத்தில் அதை வைத்துக் கொண்டிருக்கிறார். தேச பக்தி வகுப்புப் பக்தியாக மாறிவிட்டது. வகுப்பு வேற்றுமையைத் தொலைக்க எத்துணையோ சீர்திருத்த மகாநாடுகள் கூடுகின்றன. சீர்திருத்த மகாநாடுகள் பெருகப் பெருக வகுப்புவாதங்களும் பெருகிக்கொண்டே போகின்றன. நாட்டில் பேச்சு பெருகியிருக்கிறது; செயல் சுருங்கிவருகிறது.

இப்பொழுது தோன்றியுள்ள வகுப்புப் பூசல் நாட்டுக்குச் சொல்லொணு இடரை விளைக்கும் என்பது உறுதி. இவ் விடர் அணுகாதவாறு காப்பதா ? காவாது விடுவதா ? தீமை அணுகாதவாறு காப்பதே அறிவுடைமை. இதற்கு வழி என்ன ? ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுக்கும் அறத்தைக்

கடைப்பிடிப்பதே யாகும். விட்டுக்கொடுக்க மனம் வருமா என்பது கேள்வி. விட்டுக் கொடாவிடின், அடிமை நோய் நாட்டை விடுத்து அகலப்போவதில்லை.

நாட்டில் பெரும்பான்மையோர் கருத்து, வகுப்புப் பிணக்கில் படிந்து கிடப்பதாயின், 'என் செய்வது' என்று சிலர் கருதலாம். வகுப்புப்போரில் பெரும்பான்மையோர் தலைப்பட நேரும்பொழுதும், அதை வெறுக்குஞ் சிறு பான்மையோர் அஞ்சாது தங் கடனையாற்றிக்கொண் டிருத்தல் வேண்டும். இயக்கங்கள் தோன்றுவதும் அழிவதும் இயல்பு. தோன்றி நின்றழியும் இயக்கங்களின் வேகத்தையுஞ் செல்வாக்கையுங் கண்டு மனச்சான்றை விற்பது இழிவாகும். வகுப்புப் பிணக்கால் நாட்டுக்குத் தீமையுண்டு என்று உண்மையாக நம்பும் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒன்றுபட்டுத் தேச சேவை செய்வது நலம். எவ்வறைக்காதல் வகுப்புவாதம் ஒரு முடிவிற்கு வந்தே தீரல் வேண்டும். தீப்பற்றிய வீடு என்றும் எரிந்துகொண் டிருப்பதில்லை. எரிமலையின் கனல் தணியாமற் போவதில்லை. இயற்கை எதையும் ஒழுங்குபடுத்தியே நடாத்தும். வகுப்புவாதம் நாட்டைக் கெடுக்கும் என்னும் எண்ணமுடையார் அனைவரும், ஆண்டவன் திருவருளை முன்னிட்டுத் தங்கடனை ஆற்றி வருவாராக. விளைவது விளைக.

இப்பொழுது சைமன் குழு நாட்டிடை நுழைந்து கடனாற்றி வருகிறது. அக்குழுவுடன் சிலர் ஒத்துழைக்கிறார்; சிலர் ஒத்துழைக்கவில்லை. ஒத்துழைப்போர் சைமனுடன் கூடிக்குலாவுகிறார்; ஒத்துழையாதார் அடியுதைபடுகிறார். இவ்வடி யுதை எவர் பொருட்டு? தேசத்தார் பொருட்டன்றோ? ஒத்துழைக்குந் தேசத்தார், தம் சகோதரர்கள் அடிபடுவதைக் கண்டும், ஒத்துழைப்பினின்றும் விலகினாரில்லை. லாகூரில் மாபெருந் தலைவர் (லஜபதிராய்) அடிபட்டு இன்னுயிரே துறந்தார். இலட்சுமணபுரியில் இளஞ்சிங்கங்கள் பட்ட அடி மனதை உருக்குகிறது. தேசத்தின் பொருட்டு இத்துணைத் துன்பங்களைத் தேசபக்தர் ஏற்றும், ஒத்துழைப்பாளர் மனோநிலை மாறவில்லை. சைமனுடன் ஒத்துழைக்கும் சகோதரர்

களின் மனோநிலையைத் தேசபக்தர்களின் மரணமும் அடியுதையும் பிறவும் மாற்றவில்லையெனில், வேறென் செய்வது என்பது விளங்கவில்லை. பஞ்சாப் படுகொலைக்குப் பின்னும் - ஒத்துழையாமைக்குப் பின்னும் - நாட்டில் ஒற்றுமை நிகழாது, சைமனுக்கு வரவேற்பு நிகழ்வதை நாட்டார் கவனிப்பாராக. இம்மாறுபட்ட நிகழ்ச்சிக்குக் காரணமென்னை? வகுப்புவாதமே யாகும். தேசபக்தர்கள் தேசத்தின் பொருட்டுச் சாதலையும் அடியுதைபட்டு வருந்துதலையும் வகுப்புவாதம் மறைத்துவிடுகிறது. நாட்டில் வகுப்புவாதக் கிளர்ச்சியின் திண்மையை அளந்து கூற இன்னுஞ் சான்றுகள் திரட்ட வேண்டுவதில்லை. வகுப்பு நேயம், தேச நேயத்தை விழுங்கி நிற்றல் அங்கை நெல்லிக்கனியென விளங்குவதொன்று.

இந்நிலையுற்றுள்ள தேசம் என்றே செம்மையுறும்? நினைக்க நினைக்க உள்ளங் குழைகிறது. முப்பதுகோடி மக்களை ஈன்ற ஒரு நாட்டின் நிலை இவ்வாறிருக்கிறது! நாட்டார்க்குள் பொறாமை, பகைமை, காழ்ப்பு, சூழ்ச்சி, கரவு முதலியன நிலவுமட்டும், நாடு விடுதலை யடைதல் எக்காலம் எக்காலம் என்று அலமரல் வேண்டுவதே.

கல்கத்தாவில் கூடப்போகுங் காங்கரஸ், நாட்டின் நிலையை விளங்கச் செய்யும். கல்கத்தா காங்கரஸ் வெற்றியுடன் நடைபெறின், காங்கரஸ் மீண்டும் புத்துயிர் பெறும்; வெற்றி பெறுதொழியுமேல், நாட்டில் அரசியல் கிளர்ச்சிக்கு இடமிராதென்று சொல்லிவிடலாம். அந்நிலை நேராதிருக்குமாறு ஆண்டவனை வேண்டுகிறோம்.

வகுப்புவாத மலிவைக் கண்டும் - காங்கரஸ் நிலையைக் கண்டும் - வேறு பல சிறுமைகளைக் கண்டும் - வகுப்புவாதத்தை வெறுக்குந் தேசபக்தர்கள் சோர்வடைதல் கூடாது. அவர்கள் தங்கள் வழி நின்று சேவை செய்த வண்ணமாயிருப்பார்களாக. இயற்கை அன்னை துணை செய்வாள்.

(12–12–1928)

# உலகத்தின் முன் இந்தியா

இன்று இம்மகுடமிட்டு எழுதுவான் புகுந்ததன் கருத்தை நேயர்களுக்கு விரித்துக் கூறவேண்டுவதில்லை. இந்தியாவின் முன்னை நிலையும், அதன் பின்னை நிலையும் ஒவ்வோர் இந்தியர் உள்ளத்திலும் ஊறவேண்டுமென்பது எமது நோக்கம். எல்லா வழியிலுஞ் சிறப்புற்றோங்கிய இந்தியா - உலகத்துக்கு நாகரிகத்தை வழங்கிய இந்தியா - உலகத்துக்கு அறிவை யூட்டிய இந்தியா - இப்பொழுது எந்நிலையிலிருக்கிறது? உலகத்தார் கண்ணிற்கு இதுகாலை அஃது எவ்வாறு புலனாகிறது? இவ்வாராய்ச்சியை ஒவ்வொருவருஞ் செய்து தேசபக்தராகிச் சுதந்திரம் பெற மன்றாடவேண்டுமென்பது எமது தலையாய நோக்கம்.

உலகம் பல தேசங்களால் ஆக்கப்பட்டிருக்கிறது. அத்தேசங்களுள் இந்தியாவும் ஒன்று. இந்தியா அத்தேசங்களுள் புறத்தான் ஒன்றுபட்டிருப்பினும், அகத்தான் வேறுபட்டிருப்பது. கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ? உலகத்திலுள்ள எல்லாத் தேசங்களினும், இந்தியா எல்லா வழியினுஞ் சிறந்து விளங்குவது என்று இறுமாந்து கூறுவது மிகையாகாது.

இந்தியாவின் இயற்கை நலம் பெரிதும் போற்றுந் தகையது. வடக்கே வானளாவிய மலையும், மற்ற முப்புறமுங் கடலும் சூழ்ந்து பொலிதரும் நாடு வேறு உண்டோ? முகத்திலிருந்து பாதம் வரை முத்துக் கோவைபோல அணியணியாக நதிகளும் நதங்களும் பாயும் நாடு வேறு உண்டோ? கொல்லுங் குளிரும், அலைக்கும் வெயிலும் நமது நாட்டில் உண்டோ? நெல், வரகு, கோதுமை முதலிய தானியங்களும்- பொன், வயிரம், முத்து முதலிய மணித்திரள்களும் - கரும்பு, பருத்தி முதலிய பொருள்களும் - மனிதவாழ்க்கைக்கு வேண்டிய வேறு பொருள்களும் இந்தியாவில் விளைகின்றன அல்லவா? இந்தியாவின் இயற்கை நலத்தை என்னென்று

புகழ்வது? புலவர்க்கு விருந்தாக விளங்குவது இந்தியாவின் இயற்கை வளமன்றோ? செயற்கை நஞ்சை வெறுத்து, இயற்கை அமிழ்தை நுகரும் முனிவர் உறையும் நாடு நமது பாரத நாடன்றோ? இந்தியாவின் இயற்கையை உன்னுந் தோறும் உன்னுந்தோறும் உள்ளத்தில் அமிழ்தம் ஊறுநிற்கும்.

இத்துணை இயற்கைச் சிறப்பு வாய்ந்த இந்தியாவில் வாழ்ந்த மக்கள், செயற்கை மோகத்தில் சிக்குறாது, இயற்கை வழி நின்று, புறப்பொருள் அகப்பொருளாய்ந்து, இன்பநலந் துய்த்து வந்தார்கள். இந்திய மக்கள், தங்கள் வாழ்க்கைக் குரிய பொருள்களைப் பெரிதுந் தங்கள் நாட்டிலேயே பெற்று வாழ்ந்தார்கள். அவர்கள் தங்கள் வயிறு வளர்க்க வேறுநாடு புகுந்து இரந்து காலங் கழித்தார்களில்லை.

இந்திய மக்களிடம் பல்வகை நறுங்குணங்களுண்டு. அவைகளுள் தலையாயது ஒன்று. அவ்வொன்று, 'நிறைவுள் ளம்' என்பது. 'நிறைநெஞ் சுடையாரை நல்குரவு அஞ்சும்' (கிடைத்த மட்டும் திருப்தி யடையும் மனமுடையவரைக் கண்டு தரித்திரம் பயப்படும்) என்னும் சீரிய மொழி ஈண்டுக் கருதற்பாலது. வறுமையும் செழுமையும் நமது உள்ளத்தின் அளவாக நிற்கின்றன. கோடி கோடியாகச் செல்வமுடைய ஒருவன் நிறைவுள்ளங் கொள்ளாதவனாயின், அவன் வறி யனே யாவன். சிறு வருவாயுடைய ஒருவன், நிறைஉள்ளங் கொண்டவனாயின், அன்னான் செல்வனேயாவன். இந்திய மக்கள் தங்கள் நாட்டுப் பொருள் அளவாக நிறைவு கொண்டு வாழ்ந்து வந்தமையான், அவர்கள் அறிவு, இயற்கைப் பொருளினிடத்தும், அகமுகத்தினும் ஊடுருவிப் பாய, அவ ணுள்ள இன்பத்தைத் தாங்களும் நுகர்ந்து ஏனையோர்க்கும் ஈந்தார்கள். மற்ற நாட்டவர்கள் குளிரான் நலிந்து வந்தமை யான், அவர்கள் அறிவு, இயற்கையில் நுழையாது, செயற்கை யிற்பட்டுப் பிறநாடுகளைப் பற்றுவதிலும், அவைகளைப் பற்றி அலைக்க ஆயுதங்களைக் காண்பதிலும் புகுந்து உலகத்துக்கே கேடு சூழ்ந்து வருகிறது. இந்திய மக்கள் அறிவு உலகத்தை நல்வழியில் நிறுத்துவது.

இந்திய மக்கள் தங்கள் அறிவை எல்லாத் துறைகளி லும் புகுத்தி அவ்வத் துறைகளில் உழைத்துள்ளார்கள்: எல் லாத் துறைகளும் செழுமை பெற்று நிலவ நல்லாட்சி வேண் டற்பாலது. பண்டைக் காலத்தில் இந்திய மன்னர்கள், தற் பெருமை நாடாது, கடவுள் ஆணைக்குப் பயந்து, 'குடிதழீஇக் கோலோச்சி' வந்தமையால், குடிகள் சுதந்திரமுடையவர் களாய்த் தங்கள் தங்கள் தொழிலைச் செவ்வனே வளர்த்து வந்தார்கள். இப்பொழுது நாட்டுமொழியிலுள்ள ஞானநூல் கள், தத்துவ நூல்கள், பக்தி நூல்கள், வயித்திய நூல்கள், சோதிட நூல்கள், வானசாத்திரங்கள் முதலிய நூல்கள் எக் காலத்தில் யாக்கப்பட்டவை? பண்டைக் காலத்திலிருந்த நம் முன்னோர்கள் போதிய ஓய்வு பெற்றிருந்தமையாலும், சுதந் திரம் பெற்றிருந்தமையாலும் அவர்கள் பற்பல கலைநூல்களை உலகத்துக்கு வழங்கி வந்தார்கள். அவர்கள் அறிவு உழைப்பே இன்னும் உலகத்தை ஓம்பி வருகிறது.

நம் முன்னோர்கள் தொழில்துறைகளிலும் வல்லவர்களா யிருந்தார்கள். அவர்கள் அழகிய வஸ்திரங்கள், கண்ணாடிகள், சித்திரப் படங்கள், வேறு பல சிற்பத் தொழில்கள் முதலிய தொழில் துறைகளிலும் கைதேர்ந்தவர்களா யிருந்தார்கள். நம்மவர்கள் சங்கீதம், புலியின் உள்ளத்தையும் குழையச் செய்வதன்றோ? நாம் இந்தியாவின் பண்டைப் பெருமையை விரித்துரைக்கப் புகுந்தோமில்லை. 'உலகத்தின் முன் இந்தியா' என்ற மகுடத்துக்கு முகவுரையாக இந்தியாவின் பண்டைச் சிறப்புகளில் சிலவற்றைக் குறிப்பிட்டோம். இந்தியா ஏனைய நாடுகளோடு வாணிபஞ் செய்தது முதலிய சரிதக் கூற்றுக் களை ஈண்டு விரிக்கவேண்டுவது அநாவசியம்.

சுருங்கக் கூறின், இந்திய மக்கள், புறப்பொருள் அகப் பொருளாய்ந்து, எல்லா உயிர்ச் சார்புகளிடத்தும் பொருட் சார்புகளிடத்தும் ஒரு பேரறிவு ஊடுருவிப் பாய்ந்து நீக்கமற நிறைந்து விளங்குவதைக் கண்டு, எவ்வுயிர்க்குந் தீங்கு செய்யாத ஒரு பெருந் தருமத்தைக் கடைப்பிடித் தொழுகி வந்தார்கள் என்று கூறலாம். இதுவே சகோதரத்துவ மென்பது. சகோதரத்வம் பிறந்த இடம் இந்தியா என்று

கூறுவது மிகையாகாது. இக் தருமத்தை முதல் முதல் கண்ட தேசம் இந்தியாவாதலால், இத்தேசத்தை ஏனைய தேசங்களோடு எவ்வழியிலும் ஒப்பிடுதல் முடியாது. எல்லாத் தேசங்களுக்கும் தாயகம் நமது இந்தியாவாகும். அது பற்றியே தொடக்கத்தில் கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ என்று கூறினேம்.

இன்னேரன்ன சிறப்புக்களையுடைய இந்தியாவில் பிறந்த மக்களை அந்தணரென்று கூறலாம்; அறவோர் என்று கூறலாம்; தேவர்களென்றுங் கூறலாம். இம்மக்கள் இப்பொழுது உலகத்தாரால் எப்படிப் பாவிக்கப்படுகிறார்கள் என்பதையும், உலகத்தின் முன் இந்தியா எவ்வாறு பாவிக்கப்படுகிறதென்பதையும் சிறிது ஆராயலாம். இவ்வாராய்ச்சிக்குக் கருவியாக ஸ்ரீமான் சி. எப். ஆண்ட்ரூஸ் மொழிகளிற் சிலவற்றை எடுத்தாள்வோம். ஸ்ரீமான் சி. எப். ஆண்ட்ரூஸ் கராச்சியில் செய்த உபந்நியாசத்தில் இந்தியர் ஏனைய தேசங்களில் எவ்வாறு பாவிக்கப்படுகின்றனர் என்பதை நன்கு விளக்கி ஓதியிருக்கிறார். அதை ஆதாரமாகக் கொண்டே இக் கட்டுரை வரைகிறேம்.

ஸ்ரீமான் ஆண்ட்ரூஸ், "இன்றிரவு உங்கள் முன்னிலையில் நான் கேள்விப்பட்டதைச் சொல்லப்போவதில்லை. நான் என் கண்ணால் கண்டதையே சொல்லப்போகிறேன்" என்று கூறியிருப்பதை நேயர்கள் கவனிப்பார்களாக.

"* * * நீங்கள் (இந்தியர்கள்) பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தில் வாழலாமா, வாழக்கூடாதா என்பதை நீங்களே அச்சமின்றி ஆராயுங்கள். இந்தியர்கள் ஏகாதிபத்தியத்தில் சகோதரர்களாகப் பாவிக்கப்படின், அவ்வேகாதிபத்தியத்தில் வாழலாம். உலகத்தில் இந்தியர்கள் அவ்வாறு பாவிக்கப்படவில்லை. * * * *" என்று ஸ்ரீமான் ஆண்ட்ரூஸ் முகவுரையில் சூசிப்பித்துள்ளார்.

ஸ்ரீமான் ஆண்ட்ரூஸ், "நான் பிரிட்டிஷ் கிழக்காப்பிரிக்காவில் இந்தியர்களோடும், இந்தியர் வீடுகளிலும் வசித்திருக்கிறேன். அங்கேயுள்ள இந்தியர் நிலையைச் சிறிது வெளியிடு

கிறேன். பிரிட்டிஷ் கிழக்காப்பிரிக்காவில் முதல் முதல் குடி புகுந்தவர்கள் இந்தியர்களே யாவர். இந்தியர்கள் முதலில் குடிபுகுந்தவர்களா யிருந்தும், அவர்கள் ஆங்கே மிக்க்கேவல மாகவே பாவிக்கப்படுகிறார்கள்.* * * ஐரோப்பியர் ஏறும் ரிக்ஷா வண்டியில் இந்தியர் ஏறலாகாது; வெள்ளைக்காரர் ஏறும் ரெயில் வண்டிகளில் இந்தியர் ஏறுதல் கூடாது; ஐரோப்பியர் உணவு கொள்ளும்போது ரெயில்வே உணவு அறைகளில் இந்தியர்கள் விடப்படுவதில்லை; அவர்கள் ஒதுக்கப்படுகிறார்கள். ரெயில்வே ஸ்டேஷன்களிலுள்ள பங்களாக்களில் ஐரோப்பியர் உறங்கலாம்; இந்தியர் ஆங்கே உறங்கலாகாது. ஐரோப்பியர்கள் வாழுமிடங்களில், இந்தியர்களுக்குச் சொந்த நிலம் வீடு முதலியன இருப்பினும் அவர்கள் அங்கே வாழும் உரிமை பெற்றில்லை'' என்று உண்மையை வெளியிட்டிருக்கிறார். பிரிட்டிஷ் கிழக்காப்பிரிக்காவில் இந்தியர்கள் எவ்வாறு பாவிக்கப்படுகிறார்கள் என்பதைச் சகோதரர்களே - இந்தியர்களே - கவனியுங்கள். கவனித்துக் கண்ணீர் விடுங்கள். நாம் ஐரோப்பியர்களை இந்தியாவில் - நாம் பிறந்த தேசத்தில் - எப்படிப் பாவிக்கிறோம்? சகோதரர்களாகப் பாவிக்கிறோம். சகோதரதரும முணர்ந்தவர் யாவர்?

ஸ்ரீமான் ஆண்டுரூஸ், "இந்தியர்கள் இழிவாக நடத்தப்படுவதைக் கண்டேன். என் சொந்த சாதியார் - என் சொந்த ஜனங்கள் - வேறு சாதியாரை இப்படியா நடத்துவது என்ற கோபமும் அவமானமும் என்னுள்ளத்தில் மூண்டெழுந்து கொதித்தன. மகாத்மா காந்தி 'பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தில் இந்தியர் தீண்டாத சாதியாராகப் பாவிக்கப்படுகின்றனர்' என்று வெளிப்படையாக எழுதியிருக்கிறார். அஃது துண்மையே. ஈண்டோர் உதாரணங் கூறுகிறேன்: "டர்பனுக்குப் போகவேண்டி ஜோன்ஸ்பார்க் ஸ்டேஷனில் காத்துக் கொண்டிருந்தேன். மகாத்மா காந்தியின் குமாரராகிய ராம் தாஸும் என்னுடன் போந்தார். விடுமுறை ஒய்வைக் கழித்துப் பாடசாலைக்குத் திரும்பும் ஓர் இங்கிலீஷ் இளைஞன், மகாத்மா காந்தியின் குமாரரைப் பிடித்துக் குத்தச் சென்றான். நான் இடையில் தடுத்தமையால் குத்து ராம்தாஸ்மீது

விழவில்லை. சிறிது நேரத்துக்குள் ஒரு கண்டக்டர் (இவர் இங்கிலீஷ்காரர்) மகாத்மா காந்தியின் குமாரரைப் பார்த்து 'வெளியே போ' என்று, இங்கே சொல்லத்தகாத ஓர் இழி மொழியை உபயோகித்தார். முப்பது விநாடிக்குள் இவ்வளவு நடந்தது. நான் அங்கிருந்தமையால் காந்தியடிகள் குமாரர் இருமுறை உதை படுவதினின்றுந் தப்பினார். காந்தி மகனார் அங்கே தீண்டாத சாதியாராகப் பாவிக்கப்பட்டார்" என்று உபந்நியசித்திருப்பதை நேயர்கள் நோக்குவார்களாக.

இன்னோரன்ன உதாரணங்கள் பலவற்றை ஸ்ரீமான் ஆண்டுரூஸ் எடுத்துக்காட்டித் தம் சாதியார் செயலுக்கு வருந்துகிறார். தென்னாப்பிரிக்காவில் தாம் கண்டதையும் அவர் எடுத்துக் காட்டினார். ஸ்ரீமான் ஆண்டுரூஸ் துரைமகனார், பிஜ்ஜித்தீவில் நம்மவர்கள் அநுபவித்துவருங் கஷ்டங்களை எடுத்துக் காட்டியதைக் கூறவும் மனமெழவில்லை. பிஜ்ஜியில் நம் பெண்மக்கள் கற்பழிந்து வருவது நம்மவர்கட்குப் பழங் கதையாய்ப் போயிற்று. நம்மவர்கள் குழப்பக்காலத்தில் வதைக்கப்பட்டதையும் நாமறிவோம். ஸ்ரீமான் அத்வானி பிஜ்ஜித் தீவில் நம்மவர்கள் படுங் கஷ்டத்தை 'எங் இந்தியா'வில் வெளியிட்டிருக்கிறார். பிஜ்ஜித் தீவிலுள்ள நம்மவர்களிற் சிலருடைய மனைவிமார்களும் பிள்ளைகளும் களவாடப் படுகிறார்களாம். அதற்குப் போலீசாரே துணை நிற்கின்றாராம். நாம் பிறந்த தேசத்தில் மாத்திரம் நமக்குப் பூரண உரிமை உண்டோ? ஆயுதச் சட்டம் - அச்சுச் சட்டம் முதலிய சட்டங்கள் நமது நிலையைப் புலப்படுத்தும். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திலேயே பிரிட்டிஷ் குடிமக்களாகிய இந்தியர்க்குப் போதிய உரிமையில்லை எனின், வேறிடங்களில் அவர் எவ்வாறு பாவிக்கப்படுவர் என்பதை விளங்கக் கூறவேண்டுவது அநாவசியம்.

எல்லா வளங்களும் கொழிக்கும் இந்திய நாட்டில் பிறந்த நாம் ஏன் இவ்வாறு உலகத்தவரால் சிறுமைப் படுத்தப்படுகிறோம் என்பதைச் சகோதரர்கள் ஆராய்தல் வேண்டும். இவ்வுண்மை காணப் பேர் ஆராய்ச்சிசெய்ய வேண்டுவதில்லை. நாம் பிறந்த தேசம் நம் வசத்தில் இல்லை. நமக்குச்

சுயராஜ்ஜியமில்லை. நாம் அதிகாரவர்க்க ஆட்சியால் கட்டப் பட்டிருக்கிறோம். நாம் அடிமைச்சாதியாயிருப்பதால் (Subject Nation) நம் சாதியார் செல்லும் நாடுகளில், அவர் மனிதராகப் பாவிக்கப்படுவதில்லை. நமக்குக் கடவுள் இமய மலையை அளித்துள்ளார்; கங்கா நதியை உதவியிருக்கிறார்; உயர்ந்த ஞானத்தைத் தந்திருக்கிறார்; நல்ல எண்ணத்தைக் கொடுத்திருக்கிறார். என்ன இருந்தும் என்ன பயன்? வெளி நாடுகளில் நாம் தீண்டாதவராகப் பாவிக்கப்படுகிறோம். வெள்ளைக்காரர்கள் நம்மை இந்தியரென்றே கருதுகிறார்கள். நம்மை நாம் ஏன் இந்தியரென்று கருதலாகாது? நமக்குள் தீண்டுஞ் சாதியார் தீண்டாத சாதியார் என்ற வேற்றுமை ஏன் உலவல் வேண்டும்? நமக்குள் சாதிப் பகை ஏன் விளைதல் வேண்டும்? நாம் அனைவரும் பிறரால் தீண்டாத கீழ் இனமாகப் பாவிக்கப்படுகிறோம். பாரதமாதாவின் வயிற்றில் பிறந்த பிராமணர்களே! பிராமணரல்லாதவர்களே! திராவிடர்களே! ஆதிதிராவிடர்களே! முஸ்லிம்களே! கிறிஸ் தவர்களே! மற்றவர்களே! நீங்கள் அனைவரும் யாவர்? இந்தியரல்லரோ? உங்களுக்குள் ஏன் பகைமை? நீங்கள் அனைவருஞ் சகோதரர்களே. நாம் நமது பழைய சாதிப் பெயர்களை மறந்து இந்தியர் என்னும் ஒரு சாதிப் பெயரைத் தாங்கிச் சுயராஜ்ஜியம் பெற முயல்வோமாக.

முப்பதாண்டுகளாகக் காந்தியடிகள் பொறுமையாக அரசாங்கத்தாரோடு ஒத்துழைத்து வந்தார். நாளுக்கு நாள் இந்தியாவின் சிறுமை வளர்வதைக் கண்டே, இப்பொழுது அவர் ஒத்துழையா இயக்கத்தைத் தொடங்கியிருக்கிறார். இவ் வியக்கத்தாலேயே இந்தியாவின் பந்தமொழிதல் வேண்டும். இல்லையேல் இந்தியாவின் பந்தம் என்றும் ஒழியாது.

சகோதரிகளே! சகோதரர்களே!! இந்தியாவின் முன்னைய நிலையை உன்னுங்கள்; தற்போதைய நிலையை எண்ணுங்கள். நாம் மாடியிலிருந்தோம்; இப்பொழுது தெருவில் அலைகிறோம். நாம் அன்னமிட்டோம்; இப்பொழுது அன்னத்துக்கு இரக்கிறோம். நிழலில் உலவினோம்; இப்பொழுது

வெயிலில் காய்கிறோம். என்னே காலம்! என்னே காலம்!! இமயமலை நம்முடையது; கங்கை நம்முடையது; உபநிடதங்கள் நம்முடையன. இருந்தும் பயனென்ன? தேச நிலையைக் கருதுங்கள்; எழுங்கள்; தியாகத்துக்குச் சித்தமாயிருங்கள்; காந்தியடிகளைப் பின்பற்றுங்கள்; உலகத்தின் முன் இந்தியா பெருமையுறும். (12-11-1920)

# இந்தியாவும் சுயராஜ்யமும்

உரிமையிழந்த ஒருநாடு உரிமைக்குப் போராடக் கடமைப்படுதல் வேண்டும். அக்கடப்பாட்டில் நுழையாதிருத்தல் இயற்கைக்கு மாறுபட்டு நடப்பதாகும். செயற்கைக் கட்டு ஒன்றுமின்றி இயற்கைவழி இன்பம் நுகர்தலே சுயராஜ்யம் என்று கூறலாம். செயற்கைக் கட்டு நேருமேல், அக்கட்டை அறுத்தெறிய அறிஞர்கள் முயன்றே தீர்தல் வேண்டும்.

நமது இந்தியா சுயராஜ்யம் இழந்திருக்கிறது. சுயராஜ்யம் இழந்த இந்தியா சுயராஜ்யத்தைப் பெற முயன்றே வருகிறது. அம்முயற்சிக்கு இடையிடையே பலதிற ஊறுகள் நிகழ்ந்து வருகின்றன. அவ்வூறுகளால், சுயராஜ்யத்துக்கு முட்டு ஏற்படுகிறது.

இந்தியா ஒரு விநோதமான நாடு. இந்தியாவில் பல சாதி பல சமயங்களிருக்கின்றன. மற்ற நாடுகளிலும் பல வகுப்பு பல சமயங்களிருக்கின்றன. இந்தியப் பன்மைக்கும் மற்ற நாடுகளின் பன்மைக்கும் வேற்றுமையிருக்கிறது. இந்திய நாட்டுப் பன்மை நாட்டை மறக்கச் செய்கிறது. மற்ற நாடுகளின் பன்மை அந்நாடுகளை மறக்கச் செய்வதில்லை. இன்னோரன்ன பல காரணங்கொண்டே இந்தியா ஒருவிநோத நாடு என்று கூறுகிறோம். இந்திய மக்களுக்கு எந்நேரமும் பிளவிலும், பிரிவிலுமே கருத்துண்டு என்பது அவர்கள் செயல்களால் செவ்வனே விளங்குகிறது. இந்தியாவில் பிறந்த

அனைவரும், 'இந்தியர்' என்னும் உணர்வுகொண்டு கடனாற்றினால், இந்தியா நாளையே சுயராஜ்யம் பெறும்.

இந்தியாவில் பல குறைபாடுகளுண்டு என்பதை மறைப்பாரில்லை. பிறப்புச் சாதியும், தீண்டாமையும், பெண்ணடிமையும் இந்தியாவின் பெருங் குறைபாடுகள் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இக்குறைபாடுகளைக் களையவேண்டுவது அறிஞர் கடமை. குறைபாடுகளை அறிவால் களைதற்குப் பதிலாக, எந்நேரமும் அவைகளைப் பாராட்டி, அவைகளை மக்களுக்கு நினைவூட்டுவது அறிவுடைமையாகாது. கையில் புண்தோன்றினால் அப்புண்ணை யாற்றுவது அறிவுடைமையா, அப்புண்ணைப் பெருக்குவது அறிவுடைமையா என்பதை நேயர்கள் கவனிப்பார்களாக.

நமது நாட்டுக் குறைபாடுகளை வளர்க்கவல்ல இயக்கங்கள் நாட்டில் நாளுக்கு நாள் பெருகுதல் கண்கூடு. அவைகளால் நாட்டுக்கு நலன் உண்டு என்று நினைப்பது, தான் சாக மருந்துண்டவன் கதையாக முடியும். குறைபாடுகளைப் பெருக்கச் செய்யப்படும் முயற்சியால் நாட்டின் பொருளாதார நிலைக்குப் பெருங்கேடு விளையும்.

சாதிக் கட்சிகளும் பிறவும், நாட்டின் செல்வத்தை அந்நிய நாடுகளுக்கு அனுப்பிக்கொண் டிருப்பதை நாட்டார் கவனித்தல் வேண்டும். மக்கள் கருத்தும் முயற்சியும், கட்சிப் பிணக்குகளில் படிந்து கிடப்பின், நாட்டின் செல்வ நிலை எவ்வழியில் வளம்பெறும்?

சாதிக் கட்சியில் சேர்ந்த ஒருவன், கதராடை தரிக்க ஒருப்படுகிறானில்லை. கதர்மீது அவனுக்குக் காழ்ப்பில்லை. கதரைப்பற்றிப் பேசுங் கூட்டத்தார்மீது அவனுக்குக் காழ்ப்பிருக்கிறது. அக்காழ்ப்பைக் கதர்மீது அவன் காட்டுகிறான் பாவம்! நாட்டில் ஒரு கூட்டத்தார்மீது கொண்டுள்ள பகைமை சைமனை வரவேற்கச் செய்கிறது; கதரைக்கொளுத்தச் செய்கிறது; கலைகளையுங் குறைகூறச் செய்கிறது. இப்பகைமை சுதேசியத்துக்கே இடர் விளைக்கிறது என்று சுருங்கச் சொல்லலாம்.

நாட்டில் கூடுஞ் சாதி மகாநாடுகளுக்கோ அளவில்லை. இரண்டொரு சாதி மகாநாடுகள் சமூக சீர்திருத்தத்தைக் குறிக்கொண்டு தொண்டாற்றுகின்றன. மற்ற மகாநாடுகள் பகைமையை வளர்த்தற்கே கூடுகின்றன என்பது வெள்ளிடைமலை. இம்மகாநாடுகள் இந்தியர் என்னும் நினைவைச் செகுக்கின்றன. நாளுக்கு நாள் 'இந்தியர்' என்னும் நினைவு அருகியே வருகிறது.

தென்னிந்தியாவில் பன்னிரண்டாண்டுகளுக்கு முன்னர், 'ஜஸ்டிஸ்' கட்சி என்றொரு கட்சி தோன்றிற்று. இக்கட்சி தோன்றியபோதே தேசபக்தர்கள் அதைக் கண்டித்தார்கள். அவருள் நண்பர் ஈ. வே. இராமசாமியாரும் ஒருவர். அக் கட்சித் தலைவர்கள், 'இவ் வகுப்புக்கட்சி நீண்டநாள் நிலவாது. பார்ப்பனரல்லாதார்க்கு உணர்ச்சி பிறக்கும்வரை நிலவும். பார்ப்பனர்கள் வகித்துவரும் பதவிகளில் பார்ப்பனரல்லாதார் நிரம்புதல் வேண்டும்' என்று சொல்லிவந்தார்கள். ஆண்டு பன்னிரண்டாயின. இன்னும் அக்கட்சி வகுப்புக் கட்சியாகவே நிலவி வருகிறது.

'ஜஸ்டிஸ்' கட்சி தோன்றிய நாள் முதல் இன்றுவரை பொதுவாக நாட்டுக்கும் சிறப்பாகப் பார்ப்பனரல்லாதார்க்கும் என்ன நலன் செய்துவிட்டது? பார்ப்பனரல்லாத ஜமீன்தார்கள் சிலர் பதவி பட்டம் பெற்றதை அக்கட்சியார் எடுத்துக் காட்டலாம். அவர் கருத்துப்படி அப்பதவி பட்டம் போக, வேறு நலன் என்னை என்று பொதுமக்கள் சிந்தித்துப் பார்ப்பார்களாக.

'ஜஸ்டிஸ்' கட்சி காங்கரஸுக்கு மாறுபட்டு நிற்றலான், அது, தேச நலனுக்கு மாறுபட்ட நெறியில் நிற்கக் கடமைப்பட்டுவிட்டது. காங்கரஸ் 'ஒத்துழையாமை' என்றால், 'ஜஸ்டிஸ்' 'ஒத்துழைப்பு' என்று சொல்லும். காங்கரஸ் 'பகிஷ்காரம்' என்றால், 'ஜஸ்டிஸ்' 'வரவேற்பு' என்று கூறும். காங்கரஸ் 'வெண்மை' என்றால், 'ஜஸ்டிஸ்' 'கருமை' என்று பகரும். இவ்வாறு தேசநலனுக்கு இடையூறு செய்வதே 'ஜஸ்டிஸ்' கட்சியின் தொண்டாக முடிந்தது.

நெறியல்லா நெறியில் 'ஜஸ்டிஸ்' கட்சி சென்றமையால், இப்பொழுது அக்கட்சிக்குப் பேரிடர் நேர்ந்திருக்கிறது. 'பாம்பின் வாய் தேரைபோல்' அக்கட்சி சிக்கி அலமருகிறது. பாம்பின் வாய்ப்பட்ட தேரைக்கு உய்வு உண்டோ? பாம்பு ஏமாந்தால் தேரை தப்பி உய்யலாம். இன்னும் பாம்பு தேரையை விழுங்கவில்லை.

செங்கற்பட்டில் கூடிய 'சுயமரியாதை' மகாநாடு, 'ஜஸ்டிஸ் கட்சியின் உயிருக்கு உலைவைத்தது' என்று நாம் எழுதினேம். அதனை 'ஜஸ்டிஸ்' கட்சித் தலைவர்கள் இப்பொழுது நன்கு உணர்ந்து வருகிறார்கள். அவர்கள் அச்சத்தால் வாயை மூடித் திரிகிறார்கள்.

'ஜஸ்டிஸ்' கட்சியார், ஈரோடு இராமசாமியாரை வரவேற்றதன் காரணத்தைச் சொல்ல வேண்டுவதில்லை. காரணம் வெளிப்படை. அவரும் இவரை மனமார வரவேற்கவில்லை; இவரும் அவரை மனமார நம்பவில்லை.

நண்பர் இராமசாமியார் உள்ளத்தில் கனன்றெழுந்த ஒன்று, 'ஜஸ்டிஸ்' கட்சிக்குத் துணை செய்ய நேர்ந்ததென்பதை நாமறிவோம். அவ்வொன்றன் வேகம், 'சுயமரியாதை' இயக்கமாகப் பரிணமித்திருக்கிறது. அவ்வேகம் தணிந்ததும், ஈரோடு இராமசாமியார் யாண்டிருப்பார் என்பது 'ஜஸ்டிஸ்' கட்சியார்க்குத் தெரியுமா? இதுகுறித்து யாம் எழுதுவதை ஒரு 'சுயமரியாதைப் பத்திரிகை' நேரிய முறையில் மறுத்துக் கூற இயலாது, வசைபுராணம் பாடிக்கொண்டிருக்கிறது. அப் பத்திரிகையில் போதரும் பொய்யையும் புளுகையும் உலகம் செவ்வனே அறிந்துவிட்டதென்று கூறலாம். பொய் புளுகு எத்துணை நாள் நிலவுமென்று அப்பத்திரிகைக்குத் தெரியவில்லை. பொறுமைவழி நின்று நாட்டார்க்கு உண்மை தெரிப்பதிலேயே நமது கருத்தைச் செலுத்துவோம். திட்டும்வழிப் பத்திரிகை வளர்ச்சி நாடுவோர் நாடுக. இது நிற்க.

'ஜஸ்டிஸ்' கட்சி, 'சுயமரியாதை' இயக்கத்தில் ஒடுங்கிவிடுமோ என்னவோ தெரியவில்லை. இப்பொழுதே 'ஜஸ்டிஸ்' கட்சியார் கண்விழித்துக் கடனாற்றினால் நலன் பெறலாம்.

முதலாவது 'ஜஸ்டிஸ்' கட்சியார், சுயராஜ்ய முயற்சிக்குத் தடை செய்தலாகாது. சுயராஜ்யத்தால் நாட்டின் பொருளாதார நிலை செழுமையுறும் என்பதை அவர் உணர்ந்து நடத்தல் வேண்டும். வறுமை எல்லார்க்கும் பொது. அதற்குச் சாதி கிடையாது. அவ்வறுமை போக்கும் முயற்சியில் 'ஜஸ்டிஸ்' கட்சியார் கலந்துகொள்ளல் வேண்டும்.

சுயராஜ்யத்துக்கு இடையூறாகவுள்ள குறைபாடுகளைக் களைவதில் 'ஜஸ்டிஸ்' கட்சி தன் கருத்தைச் செலுத்துவது நலன். சமூகச் சீர்திருத்தத் தொண்டு நாட்டுக்குப் பெரிதும் வேண்டற்பாலது. அத்தொண்டை 'ஜஸ்டிஸ்' கட்சி ஏற்று நிகழ்த்தலாம்.

'ஜஸ்டிஸ்' கட்சிக்கெனத் தனி அரசியல் இயக்கம் இருத்தலாகாதென்பது நமது கருத்து. 'ஜஸ்டிஸ்' கட்சியின் அரசியல்பகுதி காங்கரஸில் ஒன்றுவதே சிறப்பு. காங்கரஸ்மீது எவர் எப்பழி கூறினும், அது சாதி கடந்த ஓர் அமைப்பு என்பது உலகறிந்த தொன்று. 'காங்கரஸா ? அது பார்ப்பனர் உடைமையாச்சுதே!' என்று சொல்லித் திரிவது அறிவுடைமையாகாது. 'ஜஸ்டிஸ்' கட்சியார் ஏன் அதைத் தம்முடைமையாகச் செய்துகொள்ளக் கூடாது என்று நாம் கேட்கிறோம். 'ஜஸ்டிஸ்' கட்சியார் வகுப்புரிமை என்னும் பித்தத்தைத் தணிவு செய்துகொண்டதும், காங்கரஸ் அவருடைமையாதல் ஒருதலை.

'சுயமரியாதை'ச் சார்பில் வாழும்நிலை பெற்றுத், தன்னிருப்பை அழித்துவரும் 'ஜஸ்டிஸ்' கட்சியார், காலதேச வர்த்தமானத்தை ஒட்டிக் கடனாற்றுவதே அறிவுடைமை. ஒத்துழையாமை வீறிட்டெழுந்தால் நண்பர் இராமசாமியார் எல்லாவற்றையும் விடுத்து ஓடிவரினும் வருவர். 'ஜஸ்டிஸ்' கட்சியார் பழைய வழிபற்றி நடக்க உறுதிகொள்வரேல், அக்கட்சி நிர்மூலமாகி விடுமென்பதில் ஐயமில்லை. (13-3-1929)

# இந்தியாவின் தலை எழுத்து

உலகிலுள்ள எல்லாத் தேசங்களினும் இந்திய தேசம் இயற்கை வளன் செறியப்பெற்ற தென்பது எவரும் ஒப்ப முடிந்த உண்மை. இந்தியாவின் இயற்கை அமைப்பை நோக்குழி, இந்தியா இயற்கைக் கடியரண் பெற்ற ஒரு பெருந் தேசம் என்பது புலனுகும். வடக்கே மலையரணும், மற்ற மூன்று பக்கமும் நீரரணும் சூழ்ந்து நிற்கும் பெருநாடன்றோ நமது பாரத நாடு? அவ்வியற்கை அரண், கடவுளால் நமக்கென அமைக்கப்பட்டது. கடவுளால் அமைக்கப்பெற்ற அவ்வியற்கை அரணை நாம் பெற்றும் பெருதவராய் வருந்துகிரேம். 'கடவுள் காட்டுவார் ஊட்டுவாரோ' என்பது பழமொழி. கடவுள் நமக்கு இயற்கை வளனும் இயற்கை அரணும் அளித்தார். அவ்வுடைமையைக் காக்கவேண்டுவது நமது கடமை. நாம் காத்தோமா?

நம்மவர்கள், இயற்கைக்கு மாறுபட்ட பலவிதக் கொடுமைகளை மக்கள் வாழ்வில் புகுத்தினமையால், மக்கள் அன்புக்கட்டுக் குலையலாயிற்று. அன்புக்கட்டுக் குலைவுறும் நாட்டை எத்தகை அரண் சூழ்ந்திருந்தாலென்னை? பேடியின்பால் வாள் இருப்பதால் என்ன பயன் விளையும்? நாட்டைச் சுற்றிலும் இயற்கை அரண் நின்ருலென்ன? வேறு அரண் நின்ருலென்ன? அவ்வரணுக்குள் வதியும் மக்கள், தேசநேசம் என்னுங் கயிற்ருல் கட்டப்பெருதொழிவரேல், அவர்தம் நாட்டின் அரண்களால் என்ன பயன் விளையும்? சில சமயங்களில் அவ்வரண்கள் மாற்ருர் நுழைவாயிலாகவுந் துணை செய்யும். கடவுளால் அமைக்கப் பெற்ற கடியரண்கள் பயன்பட வேண்டுமேல், அவ்வரண்களுக்குள் உறையும் மக்களுக்குள் ஒன்றிய நேயம் பொலிதல் வேண்டும். இயற்கை அரண்காப்புக்கு இயற்கை நேயம் வேண்டற்பாலது.

நமதுநாட்டில் இயற்கைநேய விளைவுக்கு நிகழ்ந்த ஊறுகள் பலப்பல. இந்திய மக்களுள் அறிஞராயிருந்தோர், கடவுளை

மறந்து, இயற்கை அன்னையை மறந்து, தமது நல மேலீட்டான், சில செயற்கைக் கட்டுப்பாடுகளை மக்களிடைப் புகுத்தினர். அப்புகல் பின்னை நாட்டை அடிமைக்குழியில் வீழ்த்திற்று. மலை அரணும் கடல் அரணும் பெற்ற ஒரு நாடு அடிமைக் குழியில் வீழ்ந்து வருந்துவதை நோக்குழித் 'தலை எழுத்து' நினைவு தோன்றுது வேறென்ன தோன்றும்? இந்தியாவில் மக்கள் கூட்டத்தையே அரிக்கும் அடாதசெயல்கள் நிகழ்த்தப்பட்டன. அவை வீண்போமா? நெல்விதையினின்றும் கழுகு முளைக்குங்கொல்? எவன் எதை விதைக்கிறனே அதையே அவன் அறுப்பான்; எத்தேசம் எதை விதைக்கிறதோ அத்தேசம் அதையே பின்னை அறுக்கும். இந்தியா தேசம் தனது ஊழை இதுபொழுது அனுபவித்து வருகிறது.

இந்தியாவில் நிகழ்ந்த கொடுமைகளைப் பலபடக் கூறலாம். அவைகளுள் சிலவற்றை மாத்திரம் ஈண்டுக் குறிப்பிடுகிறேம். பிறப்பால் உயர்வு தாழ்வு கற்பித்தது - மக்களுடல் தாங்கியுள்ள சிலரைத் தீண்டாதாரெனவதைத்து ஒதுக்கியது - பெண்மக்களைக் கல்வி பெருத வழியில் அடக்கியாண்டது - கோயில்களில் மக்கள் உரிமை கடியப்பட்டது - இவைகள் குற்றமுடையன என்று சொற்ற அறவோர்களை வதைத்தது - இவைபோன்ற கருமங்கள் உருண்டு திரண்டு நாட்டை வருத்துகின்றன. என் செய்வது?

முதலாவது பிறப்பை யொட்டி உயர்வு தாழ்வு கற்பிக்கப்பட்டதை எடுத்துக் கொள்வோம். பிறப்பில் உயர்வு தாழ்வு கற்பிக்கப்பட்டதால் மக்களுள் பலர்க்கு விளைந்த துன்பம் சொல்லுந் தகையதன்று. உலகியல் நடைமுறைக்கென வகுக்கப்பெற்ற வருணச்சிரமம், பின்னைப் பிறப்பை யொட்டி இயங்கினமையான், மக்களுக்குள் உரிமை உடைந்து, அடிமை அமலாயிற்று. மனிதன் மனிதனுக்கு அடிமைப்பட்டு வாழும் முறைமையுடைய நாடு, மற்றவருக்கு அடிமைப்படாது என் செய்யும்?

மற்றுமொரு பெருங்குற்றம் தீண்டாமை வகுத்தது. மக்களுக்குள் தீண்டாமை கற்பித்தது, எவ்வளவு கொடுமை

என்று கூறவும் வேண்டுமோ? அத்தீண்டாமை பிறந்த நாடு தீண்டாத நாடாதலில் என்ன வியப்பு? இந்தியாவில் பிறந்த மக்கள் மற்ற நாடுகளில் எப்படிப் பாவிக்கப்படுகிறார்கள்? தீண்டாதாராகப் பாவிக்கப்படுவது எவரும் அறிந்தவொன்று. ஒரு கூட்டத்தார்க்குத் தீண்டாமை கற்பிக்கப்பட்ட கர்மம் நாட்டையே தீண்டாமையில் வீழ்த்தியிருக்கிறது.

பெண்களை அடிமைப்படுத்தித் துன்புறுத்துங் கர்மம் இன்னொன்று. அக்கர்மம் இந்தியாவை விட்டு என்றே அகலும்? பெண்மக்கள் கல்வி பயிலலாகாது என்னுஞ் சிறுமை விதி பிறந்த நாடன்றோ நமது நாடு? வேறு பல உரிமைகளும் பெண்மக்களிடத்திருந்து பிடுங்கப்பட்ட பாவம் வீண் போமோ?

கோயில்களிலும் மக்கட்கு உரிமை படிப்படியாக அளந்து அளந்து வழங்கியிருப்பதுங் கவனிக்கத்தக்கது. இக் கொடுமைகட்கு உடன்படாது அறவுரை பகர்ந்த மெய் யன்பர் சிலரை நாட்டார் வருத்திய கதைகள் பற்பல. சமண புத்த வரலாறுகளை ஆய்ந்தால் பல உண்மைகளைக் காணலாம். இப்பழி பாவங்களெல்லாம் திரண்டு நாட்டை அடிமைப் படுத்தியிருக்கின்றன. இவைகளின் திரட்சியையே, 'இந்தியாவின் தலை எழுத்து' என்று நாம் கூறுகிறோம்.

அத் தலை எழுத்தை அழிக்க வேண்டுமானால் நாட்டார் என் செயல் வேண்டும்? நாட்டார் தம்பாலுள்ள குறைபாடு களை முதல் முதல் களைய முயலல்வேண்டும். முதலாவது நாட்டிலுள்ள மக்களுக்குச் சமயப்பொறையும் ஆன்மநேய ஒருமைப்பாடும் வேண்டற்பாலன. இதுபோழ்து எங்கணும் சமயப்பூசல் சாதிப்பூசல் விளைந்துவரல் கண்கூடு. சமயம் என்பது கடவுள்நெறி என்று பன்முறை நாம் எழுதியிருக் கிறோம். சமயங்களின் பெயர் வழிபாடு முதலியன வேறு பட்டிருப்பினும், அவைகளின் உட்கிடக்கை ஒன்றேயாகும். சமயப் பெயரால் கோயில்களையும் மசூதிகளையும் இடித்தலும், பெண்மக்களைக் கற்பழித்தலும் எச்சமயக் கொள்கை? இச் செயல் நாட்டில் நடமாடும்வரை, நாட்டின் அடிமைத்தன்மை

எவ்வாறு நீங்கும்? எவரெவர் எவ்வெவ் வழியில் கடவுளை வழிபட விரும்புகிறாரோ, அவரவர் அவ்வவ்வழியில் வழிபட உரிமை பெறல்வேண்டும். இவ்வுரிமை பெறா நாடு விடுதலை பெறுதல் அரிது. ஆதலால், நாட்டார், சமயப் பொறையையும், ஆன்ம நேய ஒருமைப்பாட்டையும் பயிலல் வேண்டும்.

பிறப்பால் உயர்வு தாழ்வு கருதல் ஹிந்துக்கள்பாலுள்ள பெருங்குற்றம். இம்மாசு படர்ந்த ஹிந்துக்களே ஜனத் தொகையில் நாட்டில் பெரும்பான்மையோரா யிருக்கிறார்கள். ஹிந்துக்கள் பிறப்பில் சாதிவேற்றுமை பாராட்டலை நாளடைவில் ஒழிக்க முயலல் வேண்டும். நாட்டின் நிலையோர்ந்து, உரிமைவேட்கை கொண்டு, பிறப்பால் உயர்வு தாழ்வு கருதலையும் தீண்டாமையையும் ஒழிக்க முந்துதல் வேண்டும். நாடு அடிமைக் குழியில் வீழ்ந்து இடர்ப்படும் இவ்வேளையில் அவ்விடருக்குக் காரணமாக நிற்கும் குறைபாடுகளைக் களைய முயலவேண்டுவது அறிஞரது கடமை. அவைகளைக் களைய முயலாது கிடப்போர் அவைகளைக் களைய முயல்வோரைக் குறைகூறாமலிருத்தல் நலம். அவர் இவரைக் குறை கூறுவது நல்லோரைப் பொல்லாராகக் கொள்வோர் கதையாக முடியும். இவ்வாறே பெண்மக்கள் உரிமைநாடி உழைக்கும் அறிஞருங் குறைகூறப்படுகிறார். இக்குறை கூறும் பழக்கம் நாட்டிலிருத்தலாகாது.

நாட்டில் பலதிறக் குறைகளை வைத்துக்கொண்டு, வெறும் அரசியல் கிளர்ச்சி ஒன்றுமட்டும் செய்வதனால் இடுக்கண் பல நேர்கின்றன. தொடக்கத்தில் அரசியல் கிளர்ச்சியால்மட்டும் நலம் பல விளையுங் குறிகள் தோன்றின. அத்தோற்றம் உண்மைத்தோற்றமன்று என்பது இப்பொழுது புலனாகிறது. அரசியல் கிளர்ச்சி மிதவாதமாயிருந்தபோது நாட்டிலுள்ள குறைபாடுகள் தலைகாட்டாதிருந்தன. அரசியல் கிளர்ச்சி வலுக்க வலுக்க நாட்டின் குறைபாடுகளும் சிறிது சிறிதாக எழுந்து காட்சியளிக்கலாயின.

நாட்டில் எழுந்த அரசியல் கிளர்ச்சிகளுள் தலையாயது ஒத்துழையாமை. அது, தோன்றிய நாள்முதல் நாட்டிலுள்ள

பலதிறக் குறைபாடுகள் எழுந்து தாண்டவம் புரிகின்றன. நாடு குறைபாடில்லாததாயின், ஒத்துழையாக் கிளர்ச்சியின் பயனாக அது விடுதலை யடைந்திருக்கும்; குறைபாடுகள் நிரம்பிய நாடாதலால் விடுதலைக்குப் பதிலாக அதன்கண் சாதிப்போர் சமயப்போர் முதலிய உட்போர்கள் கிளம்பி யிருக்கின்றன. அடிப்படையாக உள்ள பழைய குறைபாடுக ளோடு சில புதிய குறைபாடுகளும் முளைத்துவிடுகின்றன.

இப்பொழுது அரசியல்கிளர்ச்சி என்பது எந்நிலையிலிருக் கிறது என்பதைச் சொல்லவேண்டுவதில்லை. சுருங்கக் கூறின் மனிதனை விலங்காக்கும் பேச்சுஞ் செயலும் யாண்டும் மலி தல் காணலாமென்று கூறலாம். குணமெனுங் குன்றேறி நிற்போர்க்கு அரசியல் உலகில் இடமில்லை என்று சொல்வது மிகையாகாது. ஒருவரை ஒருவர் குறைகூறலும், புறங்கூற லும், பழிகூறலும், ஒரு சாதியாரை மற்றச் சாதியார் இழித் துக் கூறலுமே மேடைப்பிரசங்கங்களாகப் பரிணமிக் கின்றன. இப்பீடைகளை வெளியிடும் பத்திரிகைகட்கு மதிப் பும் ஏற்படுகிறது. எவை எவை இந்தியாவைப் படுகுழியில் வீழ்த்தினவோ, அவை அவை அழிகின்றதற்குப் பதிலாகப் புதுக்கப்பட்டு நல்லுருவோடு உலா வருகின்றன. சாதிப் பற்றும் காழ்ப்பும் வேரூன்றிப் படர்ந்து வருகின்றன. தற்காலக் கல்வியுடையார் என்று சொல்லப்படுவோர் சாதி வேற்றுமைகளையும் சமய வேற்றுமைகளையும் கிளப்பிவிடுவ தில் கண்ணுங் கருத்துமா யிருக்கிறார். இவர்கள் வழி, இந்தியா இயங்கிவரின், இந்தியாவின் நிலை என்னாகும்?

உட்பகைகளை எழுப்புவோர்க்குப் பெருமையளிக்குங் கொடிய காலம் தற்காலமென்று அஞ்சாது கூறலாம். நாட்டாருள் பகைமை மூண்டெழும் ஒரு நிலையில் தேச பக்தி எவ்வாறெழும் என்பது கருதற்பாற்று. வடக்கே ஹிந்துக்கள் முஸ்லிம்களையும், இவர்கள் அவர்களையும், தெற்கே பிராமணர்கள் பிராமணரல்லாதாரையும், இவர்கள் அவர்களையும் பகைவர்களாகப் பாராட்டும் ஒரு நிலையை நமது நாடு இப்பொழுது நண்ணியிருப்பதை மறுப்பதும் மறைப்ப தும் அறியாமையாகும். இப் பேதங்களைக் கடந்து தேச

சேவை செய்யும் நல்லோ ரில்லாமலில்லை. அன்னார் என்செய்தல் கூடும்? மனச்சான்றுடையார் ஐயத்துக்குள்ளாகிறார். கொடிய காலம்! மிகக் கொடிய காலம்!

இப்பொழுது நாட்டுக்குரிய பணி யாது? வெறும் அரசியற் கிளர்ச்சிப் பணிமட்டும் போதாது. அதற்கு அரண் செய்யவல்ல வேறு பணிகளுந் தேவை. நாட்டில் நீண்டகாலமாக நிலவிவரும் குறைபாடுகளைப் போக்கவும், தற்போதுள்ள சில புதிய குறைபாடுகளைத் தொலைக்கவும் வல்ல பணிகளிலும் அறிஞர்கள் தலைப்படல்வேண்டும். உரிமையில்லா நாட்டில் அரசியல் கட்சிகள் வளர்வதும், அவைகளின்வழி யுழல்வதும், நாட்டைக் குழியில் வீழ்த்துவதாக முடியும். அரசியல் வேண்டாமென்பது நமது கருத்தன்று; உரிமையில்லா நாட்டில் அரசியல் கட்சிகள் வேண்டாம் என்பது நமது கருத்து.

என் செய்யலாம்? இப்பொழுது மக்களை எரிக்கும் சாதி சமயப் பூசல் முதலியன போகவேண்டுமேல், மக்கள் மனம் அன்பில் தோயும் நெறி நின்று தொண்டுசெயல் வேண்டும். மக்கள் அனைவரும் ஆண்டவன் பிள்ளைகள் என்னும் உண்மையை ஆராயும் நெறியில் அவர்களைத் திருப்பல் வேண்டும். சாதிமத வேறுபாடுகளைக் கல்லவல்ல சமரச சன்மார்க்கப் போதனை இதுகாலை வேண்டற்பாலது. இத்தொண்டால் நாட்டைப் பண்படுத்தக் கூடுமென்பது நமது நம்பிக்கை.

(9–7–1926)

# காங்கரஸ்

நமது இந்தியா தேசம் பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்பட்ட பின்னர்த் தேசநிலையின் மாறுபாட்டைக் கண்ட தேசபக்தர்களிற் சிலர் தேச நலத்தை நாடிக் காங்கரஸைக் கண்டனர். காங்கரஸ் மகாசபையை இந்திய தேசீய மகாநாடென்றும், பாரதமண்டலமென்றும் கூறலாம். இந்தியாவில் பிறந்த அனைவர்க்கும் காங்கரஸ் உரியது. அஃது ஒரு சாதியார்க்காதல், ஒரு சமயத்தார்க்காதல் உரியதன்று. காங்கரஸைக் குறை கூறுவோர் தேசநலத்தை நாடாதவரேயாவர். காங்கரஸ் ஆண்டிற் கொருமுறை ஒரு மாகாணத்திற் சிறந்த நகரத்தில் கூடிக் காலத்துக்கேற்ற பல தீர்மானங்களைச் செய்யும். அத்தீர்மானங்கள் வழிநின்று தேசபக்தர்கள் தொண்டு செய்தல் வேண்டும்.

தொடக்கத்தில் காங்கரஸில் சேர்ந்தவர்களுள் தேசபக்தர்களாக மிளிர்ந்தவர் ஒருசிலரே. ஏனையோர், தம் பெயரை விளம்பரஞ் செய்து, அதனால் ஒருவிதப் பேறு பெறும் நோக்குடையவராயும், அரசாங்க உத்தியோகத்தில் குறிக்கொண்டு நிற்பவராயும், ஆங்கிலத்தில் தமக்குள்ள நாவன்மையைக் காட்டுபவராயுமிருந்தனர். இவர் கூடிச் செய்த தீர்மானங்கள் பத்திரிகைகளாலும், அரசாங்கத்தாராலும் பெரிதுங் கவனிக்கப்படுவதில்லை. ஆண்டிற்கொருமுறை ஆங்கிலங் கற்றவர்களிற் சிலர், (அவருள் பெரும்பான்மையோர் வக்கீல்கள்) ஓரிடத்தில் கூடிக் கூச்சலிட்டு வந்தனர். அவர் கூச்சல் ஆகாயத்தோடு அத்துவிதமாகிவிடும்.

நமது சென்னை மாகாணத்தினின்றும் சில பிரதிநிதிகள் செல்வார்கள். அவர்களிற் பெரும்பான்மையோர் பின்னை நாளில் அரசாங்க உத்தியோகத்தில் அமர்ந்தனர். நமது மாகாணப் பிரதிநிதிகளை மற்ற மாகாணப் பிரதிநிதிகள் எள்ளி நகையாடுவதும் உண்டு. காலஞ்சென்ற திரு. வி. கிருஷ்ணசாமி

ஐயர் பிரதம நீதிமன்றத்தில் நீதிபதித்தொழிலை ஏற்றபோது 'வங்காளி' என்னும் பத்திரிகை 'சென்னையில் காங்கரஸ் ஆட்களே அரசாங்கத்தாரால் தெரிந்தெடுக்கப்படுகிறார்கள்' என்று எழுதி நகையாடிற்று. நமது மாகாணத்தவருள் பெரும் பான்மையோர் காங்கரஸை ஒரு விளம்பரக் கூடமாகவே கருதித் தங் காரியத்தை நிறைவேற்றிக்கொண் டிருந்தனர். காலஞ்சென்ற ஜீ. சுப்பிரமணிய ஐயர் போன்ற ஒருசிலர் அக் காலத்துக்கேற்ற அரசியல் கிளர்ச்சியில் தலைப்பட்டுத் தேச நலத்தை நாடி உழைத்து வந்தனர். அன்னார் விதைத்த விதை இப்பொழுது நமது மாகாணத்தில் மரமாகி நிற்கிறது.

அக்காலத்தில் 'காங்கரஸ் ஒன்றுண்டு; அது தேச நலத்தை நாடும் மகாசபை' என்பது எத்துணைப் பேருக்குத் தெரியும் என்ற கேள்விக்கு என்ன பதிலிறுப்பது? விழிக்க வேண்டுவதே! விவசாயிகளுக்கும், வியாபாரிகளுக்கும் காங் கரஸ் உண்மை தெரியவே தெரியாது. ஆங்கிலங் கற்ற ஒருசிலர் - அவருள்ளும் வக்கீல்கள் - ஆட்சிக்குக் காங்கரஸ் கட்டுப்பட்டுக் கிடந்தது. இப்'பெரியோர்'களும் காங்கரஸ் செய்யும் தீர்மானங்களைக் காங்கரஸ் பந்தரிலேயே விடுத்து வருவார்கள். அவ்வகைளத் தேசத்திலுள்ள பொதுமக்களுக் குத் தலைவர்கள் அறிவுறுத்துவதில்லை. அக்காலத்திருந்த காங்கரஸ் கூட்டத்தார், தாம் காங்கரஸுக்குச் சென்று திரும்புஞ் செய்தியைத் தம் மனைவி மக்களுக்கே சொல்ல மாட்டார். ஆண்டிற் கொருமுறை அவர்களுக்குக் காங் கரஸ் நினைவு உண்டாகும்.

இவ்வண்ணம் ஆண்டிற் கொருமுறை கண்விழித்துப், பின்னை யோக நிஷ்டை புரிந்துகொண்டிருந்த காங்கரஸ் 1906-ம் ஆண்டில் வீறிட்டெழுந்து, 'உறங்கும் இந்தியர்களே! எழுந்திருங்கள்' என்ற கர்ச்சனையைக் கல்கத்தாவில் செய் தது. 1906-ம் ஆண்டில் கூடிய காங்கரஸில் தலைமை வகித்த தாதாபாய் நௌரோஜி 'கிளர்ச்சி செய்யுங்கள்; கிளர்ச்சி செய்யுங்கள்; கிளர்ச்சி செய்யுங்கள்' என்று ஆர வாரஞ் செய்தார். நம் திலகர் பெருமான் அவ்விடத்தில்தான் தேசீயக் கட்சியை வகுத்தார். நம் லோகமான்யர் 'பிறவைக்

கெஞ்சிக் கேட்கும் முறையை அறவே ஒழித்தல்வேண்டும்’ என்னுங் கொள்கைவழித் தேசத்தைத் திருப்ப முயன்றார். திலகர் பெருமான் அமிழ்த உரைகளைப் பாரதமாதா செவி மடுத்தாள். இலங்கையில் பூம்பொழிலில் வருந்திக்கொண் டிருந்த சீதாதேவி, தன் முன் எழுந்தருளிய ஹனுமந்தனை இராம தூதன் என்று உணரப்பெற்றதும், அவள் அடைந்த மகிழ்ச்சியினும், பல்கோடி பங்கு அதிக மகிழ்ச்சியை நம் பாரததேவி யுற்றாள். பாரததேவியின் திருவருள் நோக்கம் திலகர் பெருமான்மீது பதிந்துவிட்டது. திலகர் பெருமான், ‘அஞ்சாமை’ என்னும் ஆயுதந்தாங்கிப் புறப்பட்டுவிட்டார். அவருக்குத் துணையாகப் பாலர் புறப்பட்டார்; அரவிந்தர் புறப்பட்டார்; லஜபதி புறப்பட்டார்; அதுகாலை பாரத மாதாவின் வயிற்றில் பூத்த இளைஞர் பலர் திலகர் பெருமான் அறப்போருக்குச் சேனைகளாகப் புறப்பட்டனர். தேச முழுவதும் கிளர்ச்சி மயமாக இருந்தது.

காங்கரஸ்பெயரை உச்சரித்துக்கொண்டு, அதிகாரவர்க்க தேவதையைப் பூசித்துப், பட்டம் உத்தியோகம் முதலிய இழிவுச் சிறப்புக்களைப் பெற்றுவந்த கூட்டத்தார், மிதவாதி கள் என்ற பெயரை அணிந்து, திலகர் பெருமானையும் அவரது கூட்டத்தாரையும் அடக்கக் கங்கணங் கட்டினர். அதிகார வர்க்கத்தாரும் மிதவாதிகளை ஆதரித்து வந்தனர். இம்மிதவாதப் பாவிகள் திலகர் பெருமான் கிளர்ச்சிக்குக் கேடு சூழாமலிருந்திருப்பார்களாயின், பாரதமாதாவின் கட்டுகளுள் பல ஒழிந்திருக்கும். மிதவாதிகள் எனப்படு வோர் தேச நலத்தை நாடாதவர்; தியாகத்துக்கு உடன் படாதவர்; வாயால் அரசியல் ஞானம் பேசியும் சட்ட சபை யில் சிறிது எடுப்பாகப் பேசியும் தேசத்தை வஞ்சித்து வரு பவர். இக்கூட்டத்தார், ‘காங்கரஸைத் திலகர்பெருமான் கூட் டத்தார், தம்வழியே திருப்பிவிடுவர்’ என்ற ஐயங்கொண்டு, சூரத்தில் கூடிய காங்கரஸில் ஒரு மிதவாதியைத் தலைவராக அமர்த்தித் தம்வழிக் காங்கரஸைத் திருப்ப முயன்றனர். பாரத நாட்டின் சுதந்திரத்துக்கெனக் கடவுளால் அனுப் பப்பட்ட சிங்கமாகிய நமது அருமைத் திலகம், மிதவாத

நரிக்குழாத்தின் ஊளை மருட்டலுக்கு அஞ்சி நிற்கவில்லை. நம் திலகர், சூரத் காங்கரஸைச் சூறையாடிவிட்டார். மித வாதிகள் மருண்டு மருண்டு ஓட்டம் பிடித்தார்கள். அவர்கள் அவமான மேலீட்டான் வன்மங்கொண்டு, அதிகாரவர்க்கத் தார்க்குத் துணைநின்று, திலகர் பெருமானையும் அவர் துணை வர்களையும் சிறைக்கனுப்பத் தவங்கிடந்தார்கள்; தங்கள் முயற்சியில் வெற்றியும் பெற்றார்கள்.

திலகர் பெருமானும், அவர்தம் துணைவர்களும் சிறை புகவே, மிதவாதிகள் தங்கள் விருப்பப்படியே சென்னையில் காங்கரஸைக் கூட்டி வழக்கம்போல ஊளையிட்டார்கள். தேச மகா சபையாகிய காங்கரஸ், மிதவாதிகள் வயப்பட்டுக் கிடந்தது.

திலகர்பெருமான் சிறைவாசஞ்செய்து, மீண்டும் தேசஞ் சேர்ந்து, தேச சேவை துவங்கினார்; இலட்சுமணபுரியில் 1916-ம் ஆண்டில் கூடிய காங்கரஸில் பிரசன்னமானார். 10 ஆண்டு காங்கரஸ் நடைப்பிணமாக நிலவிற்று என்று கூறு வது மிகையாகாது. அன்றுதொட்டுக் காங்கரஸ் மீண்டும் வீறுகொண்டு எழலாயிற்று. தேசத் துரோகத்தில் பேர் பெற்ற மிதவாதக் கூட்டம் நாளடைவில் காங்கரஸை விட்டுக் கழியலாயிற்று. பாரதமாதா ஆனந்தவாரிதியில் திளைத்தாள். ஆனால் சில சுயநலப் பிரியர்கள் - தியாகத்துக்கு அஞ்சுங் கோழைகள் - வாய்ப் பேச்சால் தேசத்தை ஏமாற்றலாம் என்ற எண்ணங்கொண்டு, தேசிய வேடந்தாங்கி, உண்மைத் தேச பக்தர்களோடு கலந்து நடித்து வந்தார்கள். இப் போலித் தேசிய வாதிகளும் காங்கரஸினின்றுங் கழிய வேண்டுமென்பது பாரதமாதாவின் விருப்பம்.

அவ்விருப்பம், சென்ற மாதம் கல்கத்தாவில் கூடிய தனிக் காங்கரஸில் நிறைவேறிற்று. 1906-ம் ஆண்டில் கல்கத்தாவில் கூடிய காங்கரஸில் திலகர் பெருமான் புது எழுச்சியைத் தோற்றுவித்தார். சென்ற மாதம் அவ்விடத் தில் கூடிய தனிக் காங்கரஸில் மகாத்மா காந்தி எந்நாளும் நமது தேசத்திலெழாத புது எழுச்சியைத் தோற்றுவித்தார்.

கல்கத்தாவில் கூடிய தனிக் காங்கரஸ் செய்த தீர்மானம், தேசீய வாதிகளென்று நடித்துவந்த அந்தரங்க மிதவாதிகளை நடுக்குறச் செய்துவிட்டது. நமது மாகாணத்தில் ஆரவாரஞ்செய்து மக்களை ஏமாற்றிக் கொண்டிருந்தவர்கள் மனங் கலங்கி, நிலைகுலைந்து, தலைசாய்ந்து, சென்னை சேர்ந்தார்கள். 'காங்கரஸ் காங்கரஸ்' என்று கூச்சலிட்டுத் திரிந்தவர்கள், காங்கரஸுக்குப் பகைவர்களாக மாறிவிட்டார்கள். காங்கரஸ், வாய்ப் பேச்சுத் தீர்மானஞ் செய்யுமென்று நண்பர்கள் நினைத்தார்கள். ஆனால் காங்கரஸ், செய்கையில் கொள்ளத்தக்க தீர்மானத்தைச்செய்துவிட்டது. காங்கரஸ், பட்டத்தை விடுமாறு கூறுகிறது; காங்கரஸ் வக்கீல் வேலையை விடுமாறு கட்டளையிடுகிறது; காங்கரஸ் அரசாங்க உதவிபெறும் பள்ளிகளினின்றும் பிள்ளைகளை விலக்குமாறு பணிக்கிறது; சட்டசபைப் பற்றைத் தொலைக்குமாறு ஆணையிடுகிறது. அந்தோ! இத்தீர்மானங்கள் எளியனவோ? இவைகள் இந்தியாவிற்கு முழு உரிமையை நல்குவனவல்லவோ? இவைகளை ஏன் ஏற்று நடத்தலாகாது? எவரால் ஏற்று நடத்தல் முடியும்? அதிகாரவர்க்க தேவதையின் பாத சேவை செய்வோரால் முடியுமோ? இவைகளை ஏற்றுழுக எவர் வேண்டும்? தியாகமூர்த்திகள் வேண்டும்; பொருளை மதியாப் புனிதர்கள் வேண்டும்; உடலை மதியா உண்மையாளர் வேண்டும்; உயிரை மதியா உறுதியாளர் வேண்டும். பட்டத்தையும், வீட்டையும், மாட்டையும், உடலையும் பொருளாக் கொண்டுள்ள தேகாத்ம வாதிகளுக்குக் காந்தியடிகளின் மாண்பு எளிதிற் புலனாகுமோ?

தனிக் காங்கரஸில் காந்தியடிகள் கொணர்ந்த தீர்மானத்தை எதிர்த்தவர் யாவர்? பெரும்பான்மையோர் வக்கீல்களே யாவர்? ஏழை விவசாயிகள் பணத்தை உறிந்து உறிந்து சுவை கண்ட பூனைகளாகிய வக்கீல்கள் காந்தியடிகளை எதிர்த்தே தீர்வார்கள். தியாகத்துக்கு அஞ்சி ஓடும் வக்கீல்களது பந்தத்தினின்றுங் காங்கரஸ் வெளிப்பட்டுவிட்டது. இப்பொழுது காங்கரஸில் ஜனநாயகத் தெய்வம் தாண்டவம்

புரிகிறது. பணப்பேய்கள் - பட்டப்பேய்கள்-சட்டப்பேய்கள் ஓடுகின்றன. காங்கரஸில் இருள் ஒழிந்தது; காந்தி வீசுகிறது.

தனிக் காங்கரஸ் செய்த தீர்மானம் வட இந்தியாவில் பொன்னே போல் போற்றப்படுகிறது. காங்கரஸ் தீர்மானத்தை எதிர்த்த பண்டித மாளவியாவும், தம் மாகாணத்தில் அத்தீர்மானம் அதி தீவிரமாக வேலை செய்வதைக் கண்டு சட்டசபையில் வைத்துக்கொண்டிருந்த மோகத்தை வெறுத்தார். தென்னிந்தியாவில் பண்டித மாளவியாவைப் பற்றுங் கட்சியார் இன்னும் ஏன் சட்டசபையில் மோகங் கொண்டு அலைகிறார்? திலகர்பெருமான் குமாரர் - பி. ஏ. வகுப்பு மாணுக்கர் - தனிக் காங்கரஸின் தீர்மானத்தைச் செவியுற்றதும், பாடசாலையினின்றும் விலகினர். என்ன தேசபக்தி! என்ன காங்கரஸ் பக்தி!! திலகர் பெருமான் காளைக்குள்ள தேசபக்தி - காங்கரஸ் பக்தி - சென்னையிலுள்ள வயது முதிர்ந்த கிழவர்கட்குமில்லையே! சென்னையில் காங்கரஸ்வாதிகளிற் பலர் காந்தியடிகளைக் குறைகூறுகிறார்; தனிக் காங்கரஸ் தீர்மானத்தைக் குறைகூறுகிறார். இவர் செயலுக்கு இரங்குகிறோம்! பரிதாபம்!!

நமது மாகாணத்தில் காங்கரஸ் வேடம்பூண்டு, அரசாங்கத்தில் நடித்தவர்களுடைய உண்மைச் சொரூபம் இப்பொழுது புலனாயிற்று. தமிழ்நாடு இன்னும் உண்மையாளர் இன்னார் என்ற அறிவைப் பெற்றதோ இல்லையோ தெரியவில்லை. கல்கத்தாவில் கூடிய தனிக் காங்கரஸ் செய்த தீர்மானத்தை ஏற்க முதுகெலும்பில்லாத கோழைகள் இப்பொழுது என்ன செய்கிறார்கள்? காந்தியடிகளை வைகிறார்கள்; அப்பெருமானைத் தூற்றுகிறார்கள்; அவர்மீது பலவித பழிசுமத்த முயல்கிறார்கள். காந்தியடிகளைப் பின்பற்ற ஆற்றலும் வீரமும் ஞானமுமில்லாத பேதைகள், வெளிப்படையாக மிதவாதக் கூட்டத்தாரோடு சேர்ந்து பட்டத்தையும் சட்டசபையையும் நாடி ஓடலாமே. இவர்கள் ஏன் நமது மகாத்மாவைக் குறைகூறல் வேண்டும்? ஏன் எரிவாய் நரகத்துக்கு ஆளாகல் வேண்டும்?

தியாகத்துக்கு அஞ்சும் பேதைகள் இப்பொழுது என்ன முயற்சி செய்கிறார்கள் ? நாகப்பூரில் கூடப்போகுங் காங்கரஸில் தனிக் காங்கரஸ்செய்த வீரதீரத் தீர்மானத்தை உடைத்தெறிய முயற்சி செய்கிறார்கள். பணக்கார வக்கீல்கள், ஏராளமான பணத்தைச் செலவு செய்தாவது, மூதேவிப் பிரதிநிதிகளைத் திரட்டிச்சென்று, காந்தியடிகள் தீர்மானத்தைப் பாழ்படுத்த எண்ணங் கொண்டிருக்கிறார்கள். உண்மை கடைப்பிடித்தொழுகும் காந்தி தாசர்கள் எச்சரிக்கையாக இருத்தல் வேண்டும். காந்தியடிகளைக் காங்கரஸ் கைவிட்டாலும், தேசம் கைவிடாதென்பது நிச்சயம். நாகப்பூர் காங்கரஸில் தலைமைவகிக்கப்போகும் பெரியார் ஸி. விஜயராகவாச்சாரியாரும் காந்தியடிகள் கொள்கைக்கு மாறுபட்டவர் என்பதை ஈண்டு வலியுறுத்துகிறோம்.

தலைமை வகிப்போர் எக்கொள்கை யுடையராயினுமாக. அதை நாம் கவனிக்க வேண்டுவதில்லை. கல்கத்தா தனிக் காங்கரஸ் செய்த தீர்மானத்தை ஆண்டும் வலியுறுத்தி நிறைவேற்ற வேண்டுவது நமது கடமை. தமிழ் நாட்டிலுள்ள காந்தியடியவர் பலரும் காங்கரஸ் அபிமானிகளும், நாகப்பூருக்குச் சென்று, பாரதமாதாவின் உள்ள நிலையைப் புலப்படுத்தல் வேண்டும்.

மீண்டும் காங்கரஸைப் பழைய பிச்சைக்கார வழியில் திருப்புவது அறிவுடைமையாகாது; காலத்துக்கேற்றவழியில் காங்கரஸை நடாத்துவதே அறிவுடைமை. காங்கரஸை விடுத்து ஓடுவோர் ஓடுக. ஓடுவோர் யாவர் என்பதை மாத்திரம் கவனிக்க. பட்டதாரிகள் ஓடுவார்கள் ; வக்கீல்கள் ஓடுவார்கள் ; உத்தியோகத்தைக் குறிக்கொண்டுள்ளவர்கள் ஓடுவார்கள். அவர்கட்குப் பதிலாகத் தேசத்தின் பொருட்டு உயிரையுங்கொடுக்கச் சித்தமாகவுள்ள இளஞ்சிங்கங்கள் பல சேரும். சகோதரர்களே ! ஒன்றுக்கும் அஞ்சாதேயுங்கள் !!

தமிழ்நாடே ! உன் பண்டைப்பெருமை என்ன ! தற்போதைய சிறுமை என்ன !! செங்குட்டுவனை ஈன்றது

நீயன்றோ? கரிகாலனைப் பெற்றது நீயன்றோ? வீரத் தாய்மார்களைத் தந்தது நீயன்றோ! வள்ளுவர் உன் வயிற்றிலன்றோ பிறந்தனர்! சங்கரர் இராமாநுஜர் முதலியோர் உன் வயிற்றிலன்றோ தோன்றினர்! வீரர்களையும் ஞானிகளையும் ஈன்ற நாடே! இப்பொழுது ஏன் கோழைகளை ஈனுகிறாய்! உனக்கு ஏதாயினும் சாபம் உண்டோ? ஒரு திலகரை நீ அளிக்க மாட்டாயோ! ஒரு காந்தியை எமக்கு உதவமாட்டாயோ! ஒரு லஜபதி உன் வயிற்றில் தோன்றமாட்டாரா! ஒரு மகமத் அலி உன் வயிற்றில் உதிக்கமாட்டாரா! ஒரு ஷாக்குத் அலியைக் கொடுக்கமாட்டாயா! தமிழ்நாடே! தமிழ்நாடே!!

ஆண்டவனே! தமிழ்நாட்டுக்குப் புத்துயிர் நல்காயோ! திலகர் பெருமானை மீண்டுந் தமிழ்நாட்டில் பிறக்குமாறு திருவருள் செய்வாயாக.

காந்தியடிகள் வாழ்க; அவர் இயக்கம் ஓங்க.

(29-10-1920)

## உரிமைப் போர்

உலகில் நிகழும் போர்கள் பலதிறத்தன. மண்ணைப் பற்றிய போர்கள் சில; பொன்னைப் பற்றிய போர்கள் சில; பெண்ணைப் பற்றிய போர்கள் சில. வேறு சில போர்களும் உண்டு. எல்லாப் போர்களினுந் தலையாய போர், உரிமைப்போராகும். இப்போர் புரிவோரே சிறந்த வீரர். இப்போரில் தலைப்படுவோர்பால் பொதுவகையில் பல நல்லியல்புகளும், சிறப்பு வகையில் பல நல்லியல்புகளும் மிளிர்தல் வேண்டும். இந்நல்லியல்புகள் அமையப்பெறாது வெறுங் கிளர்ச்சி செய்வோர் உரிமைப் போர்வீர ராகார்.

உரிமைப் போரில் தலைப்படுவோர் முதலாவது உரிமை இயல்பை நன்குணர்ந்தவரா யிருத்தல் வேண்டும். உரிமை

என்பது எவ்விதக் கட்டுக்கும் உட்பட்டதன்று. வானத்திலே ஓடும் மேகத்துக்கு ஏதாயினும் பிணிப்புண்டோ? கடலி லெழும் அலைக்கு ஏதாயினும் அணையுண்டோ? இவைபோலக் கட்டின்றி ஒளிரும் உரிமை மாண்பை என்னென்று உரைப் பது! உரிமை என்பது இயற்கையையும் இறைவனையும் கடந்து நிற்பது என்றுங் கூறலாம். அவ்வியற்கையையும் இறைவனையும் வருணித்துக் கூறும் பாட்டை யொத்தது உரிமை. இளங்கோவடிகள், சேக்கிழார், கம்பர், ஷேக்ஸ் பியர், ஷெல்லி, ஓர்ட்ஸ் வொர்த் முதலிய கவிவாணர் பாட்டின்வழி உரிமை இன்பம் நுகர்ந்தவர். உரிமைக்கு மாறுபட்ட - கட்டை - இருளை - அறியாமையைக் களைந்த போர்வீரர் சிறந்த கவிகளே யாவர். பரந்த வானத்தையும் விரிந்த உலகத்தையும் பாட்டாகப் பாடும் உள்ளத்தைக் கட்டுப்படுத்தும் பொருளும் உண்டோ? உரிமையின்பம் என்பது கவிஞர் உள்ளத்தில் ஊர்ந்து நிற்பது என்று கூறுவது மிகையாகாது. ஆகவே, உரிமைப் போரில் தலைப்படுவோர் உரிமையுண்மையைப் புலப்படுத்தும் இயற்கையின் இயல்பை யும், இறையின் இயல்பையும், பாட்டின் இயல்பையும் நன்கு உணர்ந்தவரா யிருத்தல்வேண்டும். இவ்வியல் புணராதார் ‘உரிமை’ ‘உரிமை’ என்று பேசுவது வெறும் பேச்சே யாகும்.

உரிமையின் இயல்பு உணர்ந்தோர் இன்னார் - உணரா தார் இன்னார்-என்று எவ்வாறு பகுத்துக்கூறுவது என்னும் வினா எழலாம். உரிமைக்கடவுள் கோயில்கொண்ட உள்ள முடையார் எக்காரணம் பற்றியும் பிறரை அடிமைப்படுத்த முயலமாட்டார். தன் மனைவிக்கும் தன் பிள்ளைக்கும் உரிமை வழங்க ஒருப்படாதான், ஒருநாட்டு உரிமைக்குப் போர்புரிய எவ்வழியில் வல்லவனாவான்? இயற்கை எவ்வாறு உயிர் நலத்துக்குத் துணைசெய்து வருகிறதோ, அவ்வாறே உரிமை யுளத்தான் பிறர் நலத்துக்குத் துணை புரிபவனா யிருத்தல் வேண்டும். பிறர்நலன் நாடாது தன்னலன் நாடி உழைப் போன் உரிமை உறையும் உள்ளமுடையனாகான். உரிமை இன்பம் திளைக்கும் மனமுடையானது நிலையை, அவனது

எழுத்தும் பேச்சும் நடையும் பிறவும் செவ்வனே புலப் படுத்தும். ஒருவனது எழுத்தும் பேச்சும் நடையும் அவனது அகநிலையைப் புலப்படுத்தும் கருவிகள் என்பது ஊன்றிக் கவனிக்கத்தக்கது.

நமது நாட்டின் உரிமை குறித்துப் பெரும் போர் தொடங்கப்பட் டிருக்கிறது. அப்போரில் பலர் தலைப்பட் டுழைக்கின்றனர். அப்போர் நிலை இதுபோழ்து எவ்வாறிருக் கிறது? நவிலவும் நாவெழவில்லை; எழுதவுங் கையோட வில்லை. நமது நாட்டு உரிமைப் போர், தற்போது நமது உரி மையைத் தகைந்துள்ள அதிகாரவர்க்க ஆட்சிமுறைத் தூற் றைக் கல்லும் வழியைக் குறித்தியங்குகிறதா என்பது ஆரா யத்தக்கது. ஒருவகுப்பார் இன்னொரு வகுப்பாரைத் தாக்குவ திலும், ஒரு தலைவர் மற்றொரு தலைவரைக் குறை கூறுவதி லும், ஒரு கட்சியார் வேறொரு கட்சியாரை இழித்துரைப் பதிலும் கருத்தை இருத்தி நிகழ்த்தும் போர் உரிமைப் போராகுமோ? இச்சிறுமைப் போர் பெருகி வருதற்குக் காரணம், உரிமைப்போரில் தலைப்படுவோர் உரிமை இயல்பு இத்தகையதென உணராதிருப்பதே யாகும்.

நாட்டின் உரிமைப் போர்க்களத்தில் நிற்போர், நாட்டிற் பிறந்த புலி கரடியினிடத்திலும் அன்புடையவரா யிருத்தல் வேண்டும். அவ்வன்புடைத் தலைவர் எத்துணைபேர் இருக்கி றார் என்பதை விரல் வைத்து எண்ணிவிடலாம். பிறரைத் திட்டுவதையும் குறை கூறுவதையுமே உரிமைப் போரெனக் கொண்டு, தொண்டாற்றுந் தலைவர்கள்வழி, நாடு உழலுமட் டும், நாடு உட்பகைக்கே இரையாகி மாள்வதாகும்.

நமது நாட்டில் இதுபோழ்து வகுப்புப் பூசல் யாண்டும் பரவி நிற்கிறது. வடக்கே ஹிந்து முஸ்லிம் பிணக்கு; தெற்கே பிராமணர் பிராமணரல்லாதார் பிணக்கு. இப் பிணக்கு, நாட்டில் ஒரோ இடங்களிலாதல் இயங்கிவந்த உரிமைப் போரையும் வீழ்த்தி, அப்போருக்குரிய தலைவர் களையும் ஒதுங்குமாறு செய்திருக்கிறது. இவ்வகுப்புப் பிணக்கை வளர்ப்பதா? தேய்ப்பதா? வளர்க்க வேண்டு மென்று எவருங் கூறுர்; தேய்க்க வேண்டுமென்றே

எவருங் கூறுவர். தேய்ப்பதற்கு வழி என்ன? வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவம் என்று சொல்லப்படுகிறது. வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவம் நாட்டிலுள்ள பிணக்கை ஒழிக்கும் மருந்தாயின், அம்மருந்து அதிகாரவர்க்க ஆட்சிமுறையை வீழ்த்துவதாகுமா என்று சிந்தித்தல் வேண்டும்.

நமது நாட்டை வகுப்புப் பிரிவு பல வழியிலும் ஊறு படுத்துவ துண்மை. அப்பிரிவை வலியுறுத்தி நிலைபெறுத்தல் சிறப்பா அதைத் தொலைப்பது சிறப்பா என்பதை ஆராய்ந்து முடிவு காண்டல் வேண்டும். நந்தமிழ் நாட்டைப் பொறுத்த அளவில், ஹிந்துக்களுக்குள் இதுபோழ்து மூன்று பிரிவுகள் தோன்றியிருக்கின்றன. அவை பிராமண வகுப்பு, பிராமண ரல்லாத வகுப்பு, மற்ற ஆதிதிராவிடர் முதலியோர் சேர்ந்த வகுப்பு. இம்மூன்று வகுப்பினரும் பிரிந்து பிரிந்து பிரதி நிதித்துவம் பெற்றால் எப்பொழுது இவரனைவரும் ஒன்று படுவது? வகுப்புப் பிரதிநிதித்துவம் தற்போது இன்புடைய தாகத் தோன்றலாம். பின்னை அதனால் விளையப்போகுந் துன்பத்தையே பெரிதுங் கவனித்தல் வேண்டும்.

வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் தற்கால நிலைக்கென்று ஜஸ்டிஸ் கட்சியாரும் சென்னை மாகாணச் சங்கத்தாரும் வலி யுறுத்திவந்தனர். அதன் பயனாகச் சட்டசபையில் சில பீடங் கள் வழங்கப்பட்டன. ஏறக்குறைய ஐந்தாண்டுகளாக அதன் பயனை நாடு அடைந்துவருகிறது. அப்பயனை நல்ல தெனக் கூறுவோருமுளர்; தீயதெனக் கூறுவோருமுளர். தற்கால நிலைக்கெனக் கேட்கப்பட்ட வகுப்புவாரிப் பிரதி நிதித்துவத்தை என்றுங் கேட்டுக்கொண்டிருத்தல் நியாய மாமோ? வேறுபட்டுள்ள வகுப்புக்களை ஒன்றுபடுத்தச் செய்வோர் முயற்சியை வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் கெடுத்துக்கொண்டே நிற்கும்.

தமிழ்நாட்டில் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் எக்கார ணம் பற்றிக் கேட்கப்படுகிறது என்பது நேயர்கட்குத் தெரி யும். அரசாங்க பீடங்களில் பிராமணர்களைப்போல மற்றவர் களும் அமரவேண்டுமென்பது வகுப்புவாதமிடுவோர் நோக்க மாம். நாட்டிலுள்ள எல்லா வகுப்பார்க்கும் வழங்கும் பீடங்

கள் அரசாங்கத்திலுண்டோ என்பது முதலாவது கவனிக்கற்பாற்று. திருநெல்வேலியில் வேளாளர்க்கு மாறுபட்டு மற்றவர் கிளர்ச்சி செய்கிறார். தென்னார்க்காட்டில் ரெட்டிமார்களுக்கு மாறுபட்டு மற்றவர் கிளர்ச்சி செய்கிறார். மற்ற இடங்களிலும் இத்தகை மாறுபாடுகள் உண்டு. பிராமணரல்லாதாருள் பல வகுப்பினர் கூடும் மகாநாடுகளில் அவரவர் தத்தம் வகுப்பினர் பிரதிநிதித்துவம் பெறவேண்டுமென்று வேண்டுகிறார். கிறிஸ்துவர்களுக்குள் புரோடஸ்டென்ட் - கத்தோலிக் வேற்றுமையை வகுப்பு நினைவு கிளப்பியிருக்கிறது. வகுப்புகள், வகுப்புக்குள் வகுப்பாகப் பிரிந்து கொண்டேபோனால் நாடு உரிமைபெறல் எப்பொழுது ?

மற்றுமொன்று கவனிக்கப்படல் வேண்டும். இதுபோழ்து பிராமணர்கள் ஆதிக்கம், மற்றவர் முன்னேற்றத்தைத் தடுத்து நிற்கிறது என்று சொல்லப்படுகிறது. சிறு தொகையினராக உள்ள பிராமணர்கள் அந்நிலை எய்தியதற்குக் காரணமென்னை? அவர்கள் கல்வியாலும் முயற்சியாலும் ஆதிக்கம் பெற்றிருப்பது உண்மையே. வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் அவ்வாதிக்கத்தை எவ்வாறு குறைக்கும்? வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம், போட்டியை அழித்தலால் பிராமணரல்லாதாரையும் மற்றவரையுங் கல்வியிலும் முயற்சியிலும் முன்னேற்ற மடையச்செய்யாது. வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம், பிராமணரல்லாத ஜமீன்தார்களைச் சட்டசபையில் நுழையுமாறு செய்து, ஏழைமக்களை இடர்ப்படுத்துவதாகும். பிராமணரல்லாதார் ஊக்கத்தை வகுப்புவாரிப் பிரதிநிதித்துவங் குலைக்கும் என்பதில் ஐயமில்லை.

வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் இல்லாதொழியுமேல் பிராமணரல்லாதாரும் மற்றவரும் ஊக்கங்கொண்டு பிராமணரைப்போல முயன்று உழைத்து நலம் பெறுவர். அந்நல முறும் நாளில், பிராமணர்-பிராமணரல்லாதார்-மற்றவர் என்னும் வேற்றுமை ஒழியும். பிராமணர்க்கு ஆதிக்கந் தேடியுள்ள நூல்களையும், பிறவற்றையும் ஒருபக்கங் குறைகூறி, வகுப்புப் பிரிவை மற்றொரு பக்கம் வலியுறுத்தி வந்தால் என்ன விளையும்? ஆதலால், வகுப்புப் பிரிவை வளர்க்கும்

முறைகளில் நுழையாது, தேய்க்கும் முறையில் நுழைந்து உழைப்பது உரிமைப் போருக்கு உரிய முறையாகும்.

தீண்டாதார், வைக்கத் திருவீதியில் போதல் கூடா தென்னுங் கட்டையறுக்கத் திரு. இராமசாமி நாயக்கர் முயன்றார்; வெற்றியும் பெற்றார். தொடக்கத்தில் எதிர்த்த பிராமணர்கள் இப்பொழுது இணங்கிவிட்டார்கள். உற்ற குறைகளைச் சத்தியாக்கிரக முறையால் களைவது சிறந்த உரிமைப் போராகும். அப்போர் நிகழ்த்தவேண்டிய இடங்கள் பலப்பல உண்டு. அப்போருக்குத் துணைபுரிய பிராமணரிலும் பலர் சித்தமாயிருக்கிறார். வைக்கச் சத்தியாக்கிரகப்போரில் எல்லாச் சாதியாரும் தலைப்பட்டுழைத்தது அன்பர் நாயக்கருக்குத் தெரியும். வகுப்புப்போர் சமரச நோக்குடைய பிராமணரையும் வேறுபடுத்திவிடும். அன்பு முறையால் எல்லாரையும் ஒன்றுபடுத்திக் குறைகளைக் களையப் புகுவதில் விளையும் நலன், வேறு முறையில் விளையாதென்பது திண்ணம். வகுப்புப் பிரிவால் நமது நாடு உற்ற அல்லல் போதாதோ? இன்னுமா அப்பிரிவை நிலைபெறுத்தவல்ல முறைகளைக் கைபாள்வது? வகுப்புவாரிப் பிரிதிநிதித்துவம் தற்போது அமுதமாகத் தோன்றினும், பின்னை அது நஞ்சாக நாட்டை எரிக்கும் என்பது உறுதி. வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத் துக்கு விதை விதைத்த டாக்டர் நாயர் முதலியோரும் 'தற்காலம்' என்று கூறிப்போந்தது கருதற்பாலது. 'தற்காலம்' 'தற்காலம்' என்று எக்காலமும் அப்பாட்டைப் பாடிக்கொண்டிருத்தல், வகுப்புப் பிரிவை நிலைபெறுத்துவதோடு, வகுப்புப் பூசலையுங் கிளப்பிக்கொண்டே யிருக்கும். ஆதலால் வகுப்புப் பிரிவை உண்டுபண்ணும் முறையில் கிளர்ச்சி செய்யாது, தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஊக்கம் ஊட்டும் முறையில் கிளர்ச்சி செய்வது நலம்.

உரிமைப்போரில் தலைப்படுவோர் மனம் சினத்தில் விழுதல்கூடாது. அன்னார் மனம் எந்நாளும் இன்பத்தில் திளைத்திருத்தல் வேண்டும். உரிமை இயல்புணர்த்தும் இயற்கையில் அறிவைச் செலுத்திவரின், உரிமைப் போர்த் துறை நன்கு புலனாகும். காந்தியடிகள் அன்புவழிநின்று

உரிமைப்போர் நிகழ்த்துவதற்குத் துணையாக நிற்பது அவரது இயற்கை வாழ்வேயாகும். சமீபத்தில் அயர்லாந்தின் உரிமைப் போர்முனையில் நின்று வெற்றிபெற்ற வீரர் கிரீபத் என்பார் சிறந்த கவிராயர் என்பது கவனிக்கத்தக்கது. இந்திய நாட்டின் உரிமை குறித்துப் போர்புரிவோர் இந்தியாவை ஒரு காப்பியமாகவும் அதனிடை வாழும் உயிர்களைப் பாட்டு வடிவமாகவுங் கொள்வாராயின், அப் பாட்டிற்குற்றுள்ள சிதைவுகளைப் புதுக்கவே முயல்வர்; அப்பாட்டினத்தைச் சிதைக்க முயலார்; முயலார். உரிமையின்பப் பாட்டுளம் பெறுதார், தாம் புரியும் போர் உரிமைப்போர் என்று அவர் கருதினும், அவரது முயற்சி, நாட்டை இடர்ப்படுத்திக் கட்டில் அடைப்பதாகும். ஆதலால் உரிமைப் போர்முனையில் நிற்போர் பாரதிகளாயிருத்தல்வேண்டும். (11–12–1925)

# சுயராஜ்யமும் ஒற்றுமையும்

பார்ப்பாரப்பட்டியில் சொற்பொழிவு நிகழ்த்தப் போந்தேன். அங்கே தர்மபுரி வாசிகளிற் சிலர் விரும்பியவாறு இங்கும் (தர்மபுரியில்) பேச ஒருப்பட்டேன்.

இப்பொழுது யான் சமய சம்பந்தமான சொற்பொழிவுகள் நிகழ்த்திக் கொண்டிருக்கின்றேனே யன்றி அரசியல் தொடர்புடைய சொற்பொழிவுகள் பெரிதும் நிகழ்த்துவதில்லை. காரணங்கள் பல உண்டு. அவைகளுள் ஒன்று எனது மனதுக்கினிய ஓர் அரசியல் கட்சியும் இன்மையேயாகும். ஆதலால் இன்று ஈண்டுப் பொதுவாகச் சில உரைகள் பகர விரும்புகிறேனேயன்றித் தற்கால அரசியல் நிலை குறித்து விரிவாகப் பேச விரும்புகிறேனில்லை.

சகோதரர்களே! உலகிலுள்ள பல தேசங்களையும் நினைந்து நோக்குங்கள். நமது பாரதநாட்டையும் உன்னிப்

பாருங்கள். அந்நாடுகளெல்லாம் உரிமைபெற்றனவா யிருக்கின்றன. முப்பதுகோடி மக்களையுடைய பாரதநாடு மாத்திரம் உரிமையிழந்து கிடக்கிறது. பாரதநாட்டின் உரிமை குறித்து நம்மவர்கள் காங்கரஸ் வாயிலாகக் கிளர்ச்சிசெய்து வருகிறார்கள்.

காங்கரஸை முதல் முதல் நடாத்திய அறிஞர்கள் அக்காலத்துக்கேற்ற வழிநின்று கிளர்ச்சி செய்தார்கள். அவர்கள் கொண்டமுறை இப்பொழுது வெறுக்கத்தக்கதா யிருக்கிறது. அவ்வறிஞர்கள் உழைப்பு, தற்காலக் கிளர்ச்சியாகப் பரிணமித்திருப்பதால், அவர்களைக் குறை கூறலாகாது. தொடக்கத்திலேயே நந்தலைவர்கள் ஒத்துழையாமை கொண்டிருந்தால், நாடு இதுபோழ்து உரிமைபெற்றதா யிருக்கும். ஆங்கிலம் பயின்று எல்லா உத்தியோக பீடங்களையும் பற்றிக்கொள்வதே சுயராஜ்யம் என்று பழந்தலைவர்கள் நினைந்து, அவ்வழி நின்று, அதற்கேற்ற முறையில் கிளர்ச்சி செய்தார்கள். அந்நாளைய காங்கரஸில் ஆங்கிலப் பேச்சும் பரதேச ஆடையுமே மலிந்து கிடந்தன. அந்நாளைய தலைவர்கள் பதவி பட்ட நோக்கங்கொண்டே காங்கரஸில் கிளர்ச்சி செய்து வந்தார்கள். நமது மாகாணத்தில் உயர்பதவி பெற்ற பெரியோர்களைச் சிந்தித்துப் பாருங்கள். டாக்டர் சுப்பிரமணிய ஐயர், ஸர். சங்கரன் நாயர், வி. கிருஷ்ணசாமி ஐயர், ஸர். சிவசாமி ஐயர் முதலியோர் காங்கரஸ் மேடைகளில் நின்று பேசியவர்களே.

எந்தப் பதவி பெற்றாலும், அதிகாரவர்க்கம் முழுவதும் இந்திய மயமானாலும், நாட்டுக்குச் சுயராஜ்யம் வாராது என்னும் உண்மை நாளடைவில் சில தலைவர்கள்பால் தோன்றிற்று. அத்தலைவருள் சிறப்பாகப் பாலகங்காதர திலகரையும், அரவிந்த கோஷையும் குறிப்பிடலாம். சுயராஜ்யம் நமது உழைப்பில் நம்மிடத்திலிருக்கிறதென்று லோகமான்ய பாலகங்காதர திலகர் யாண்டும் பறைசாற்றி வந்தார். அவர் பெரிதும் மாணுக்கர்கட்கே போதித்துவந்தார். அவரைச் சிறுவர் தலைவரெனச் சில மிதவாதிகள் ஏசியும் வந்தார்கள். இன்று இளைஞராயிருப்போரே நாளை இராஜ்யத்தை நடாத்து

வோராவர் என்பது அக்கிழ மிதவாதிகளுக்குத் தெரியாதிருந்தது போலும்!

அதுபோழ்து கிளம்பிய எழுச்சியைச் சுதேசியக் கிளர்ச்சியெனத் தேசத்தார் சொல்வர். அப்பொழுது கொலை முறை கையாளப்பட்டது. தலைவருள் சிலர் மூர்க்கசக்தியால் சுயராஜ்யம் பெறலாமென நம்பினர். அப்போரால் பயன் விளையவில்லை. நமது நாட்டுக்குரிய போரும் அஃதன்று. அக் கிளர்ச்சியின் பயனாக மிண்டோ - மார்லி சீர்திருத்தம் கிடைத்தது.

பின்னர்ச் சில ஆண்டு கடந்து ஐரோப்பாவில் மகா யுத்தம் தோன்றிற்று. அந்த யுத்தத்தில் இங்கிலாந்துக்கு இந்தியா அளவிலா உதவி புரிந்தது. அதுபோழ்து இந்தியா உதவி புரியா தொழிந்திருக்குமேல் இங்கிலாந்து வெற்றி யடைதல் அரிதாகவே முடிந்திருக்கும். பிரான்சிலும், மெஸபடோமியா முதலிய இடங்களிலும் நமது இந்தியச் சேனைகள் சிந்திய இரத்தமே பிரிட்டிஷாருக்கு வெற்றி யளித்தது. இதற்கென்ன கைம்மாறு பெற்றோம்? பஞ்சாப் படுகொலையை ஒரு பக்கமும், மாண்டேகு - செம்ஸ்போர்ட் சீர்திருத்தத்தை மற்றொரு பக்கமும் பெற்றோம்.

மாண்டேகு-செம்ஸ்போர்ட் சீர்திருத்தத்தில் இரட்டை யாட்சி முடிதரித்து ஆட்சி புரிகிறது. முழு உரிமையில்லா நாட்டில் இரட்டையாட்சி என்ன செய்யும்? தேசத்தார்க்குள் பிணக்கை உண்டுபண்ணும். இப்பொழுது உண்டுபண்ணி யிருக்கவில்லையா? சுயராஜ்யம் பெற்ற தேசத்தில் மந்திரிக் கட்சியென்றும் மற்றக் கட்சியென்றும் பிரிந்து நிற்கலாம். அப்பிரிவு, நாட்டின் அரசியல் வாழ்வை வளம்படுத்தும். இந்தியா சுயராஜ்யம் பெற்ற தேசமா? இங்கே மந்திரிக்கட்சி எற்றுக்கு? மற்றக் கட்சி எற்றுக்கு? மிண்டோ - மார்லி சீர்திருத்தத்தில் ஜனப் பிரதிநிதிகள் ஒரு பக்கமாகவும் அரசாங்கத்தார் மற்றொரு பக்கமாகவும் நின்று வாதம் புரிந்தனர். இப்பொழுது மந்திரிக் கட்சியென ஒன்றிருத்தலால், எதிர்ப்புகள் நமது பிரதிநிதிகளுக்குள்ளாகவே நிகழ்ந்து வருகின்றன.

முழுஉரிமை பெற்றபின்னர் நமக்குள் மந்திரிக் கட்சி ஏற்படலாம்; மற்றக் கட்சிகள் ஏற்படலாம். இரட்டையாட்சி, நமக்குள் பிரிவுகளை ஏற்படுத்துவதென்பது கவனிக்கத்தக்கது.

பஞ்சாப்படுகொலையும், இரட்டையாட்சிச் சீர்திருத்தமும் நாட்டில் உரிமை வேட்கையைக் கிளப்பின. மகாத்மாகாந்தி அஹிம்ஸா தர்ம ஒத்துழையாப் போர் துவங்கினர். இப்போர் கிழக்கிந்தியர் காலத்திலேயே தொடங்கியிருத்தல் வேண்டும்.

பிரான்ஸு, ரூர் பிரதேசத்தைப் பற்றியபோது ஆங்கிருந்த பிரான்சு பாஷை தெரிந்த ஜெர்மானியர், பிரான்சுக் காரரோடு பிரான்சு பாஷையில் பேச மறுத்ததை உங்கட்கு நினைவூட்டுகிறேன். நமது நாட்டார் அந்நிய மொழிமீது எவ்வளவு பற்றுடையரா யிருக்கிறார்? சொல்லவும் வேண்டுமோ? அந்நாளில் நம்மவர்களைப்பற்றிய அறியாமை இந்நாளில் இடர் விளைக்கிறது:

மகாத்மாகாந்தி ஒத்துழையா இயக்கத்தில் இருவிதத் திட்டம் வகுத்தார். ஒன்று அழிவுத் திட்டம்; மற்றொன்று ஆக்கத்திட்டம். இரண்டையும் ஒழுங்குபட நாம் நிறைவேற்றியிருந்தால் நாட்டில் சுதந்திரதேவி தாண்டவம் புரிவள். சட்டசபையும், நியாய மன்றங்களும், பாடசாலைகளும் அந்நியத் தொடர்புடையன. நமது நாட்டவரால் தெரிந்தெடுக்கப் படாத பார்லிமெண்ட் அங்கத்தவர்கள் நமது தலைவிதியை எழுதுகிறார்கள். அவர்கள் வழங்கிய சீர்திருத்தத்துக்குட் பட்ட சட்டசபையால் நமக்கென்ன நலமுண்டு? அச்சுச் சட்டம் முதலிய சட்டங்களெல்லாம் எங்கே பிறந்தன? இந்தியச் சட்டசபைகளிலல்லவா? நம் பிரதிநிதிகளும் அவைகளை மறுத்து மறுத்து முடிவில் இணங்கவில்லையா? ஜனப் பிரதிநிதிகள் சட்டசபையில் நிறைவேற்றுந் தீர்மானம் எவர் தடையுமின்றிச் சட்டமாகும் பொறுப்பிருத்தல் வேண்டும். அப்பொறுப்பில்லாச் சட்டசபையில் நுழைவதால் என்ன விளையும்?

வக்கீல் தொழிலைப்பற்றி விரித்துக் கூறவேண்டுவதில்லை. மனித சமூக வாழ்வைக் குலைப்பது அத்தொழில். எல்லாத்

தொழில்களும் சமூகத்தை இசைபட வாழச்செய்வன. வக்கீல் தொழிலோ முற்றிலும் மாறுபட்டது. 'எவன் சண்டை செய்வான் ; நமக்கு வழக்கு வரும்' என்ற தவமன்றி வேறு தவம் வக்கீலுக்குண்டோ? நீதிமன்றங்களிலாதல் நீதிகிடைக்கிறதோ? ஒருகோர்ட்டில் ஒரு நீதி; இன்னொரு கோர்ட்டில் மற்றொரு நீதி. சில சமயங்களில் நீதிபெறக் கடல் கடத்தலும் நேரிடுகிறது. பண்டை நாளில் பஞ்சாயத்துக்கள் கிராமங்களை நல்வழிப்படுத்தி வந்தன. பஞ்சாயத்தும் தருமமுமே நமது கிராமங்களில் அமைதி காத்து வந்தன. இப்பொழுது அமைதி காக்கத் துப்பாக்கி பீரங்கிகள் தேவை. காலத்தின் கோலம்! கோர்ட்டுகளாலும் வக்கீல்களாலும் நாட்டுக்கு நன்மை விளையுமென்று சொல்லுதல் முடியாது. ஆதலால் கோர்ட்டைப் பகிஷ்கரிக்குமாறு மகாத்மா காந்தி கேட்டார்.

நம்மவர்கட்கு முதல் முதல் அடிமை விதை விதைக்கப்படுமிடம் ஆங்கிலப் பள்ளிக்கூடமாகும். அறிவு விளக்கத்துக்கு நம்மவர்கள் ஆங்கிலம் பயில்கிறார்களா? அடிமை வேலைக்கு ஆங்கிலம் பயில்கிறார்களா? அடிமைத் தொழிலுக்கென ஏற்பட்டுள்ள படிப்பு எற்றுக்கு? அதை விலக்க வேண்டுவது கடமையன்றோ?

மகாத்மா காந்தி, வக்கீல்களையும் மாணாக்கர்களையும் ஓராண்டு தேசத்தொண்டு புரியவே அழைத்தார். எல்லாரும் அவர் வேண்டுகோட் கிணங்கியிருப்பரேல் தேசம் சுயராஜ்யம் பெற்றிருக்குமே. ஐரோப்பா யுத்தத்தில் ஆஸ்குவித், லாயிட்ஜார்ஜ் முதலியோர் தாய்நாட்டின் பொருட்டுப் போர் புரியப் பள்ளிப் பிள்ளைகளைக் கூப்பிடவில்லையா? எத்துணை மாணாக்கர் போர்முனையில் நாட்டின் பொருட்டு இன்னுயிர் துறந்தார்? மகாத்மா காந்தி எவரையும் இரத்தஞ் சிந்தும் போருக்கு அழைக்கவில்லையே!

ஒருசிலரே தியாகத்துக் குட்பட்டனர்; சிறை புகுந்தனர். அத் தியாக உணர்வு வளர்ந்திருக்குமேல் சுயராஜ்யம் மலர்ந்திருக்குமன்றோ? நமது தியாக முயற்சி எவ்வளவு தூரம் செல்கிறது என்று பிரிட்டிஷார் சோதித்துக்கொண்

டிருந்தாரென்று யான் சொல்வேன். அடக்குமுறைக்கு அடங்காத தேசமே தன்னைத்தான் ஆளவல்லது. ஒத்துழையாமையைக் குறை கூறுது, மேலும் மேலும் நம்மவர்கள் முன்னேறி, ஒத்துழையாப் போர் செய்திருத்தல் வேண்டும். பகிஷ்காரத்திட்டஞ் செவ்வனே நடைபெறவில்லை. நிர்மாணத் திட்டமும் போதிய அளவு நிறைவேறவில்லை. மேலும் ஒத்துழையா உணர்வைப் போக்கச் சுயராஜ்யக் கட்சி என்ருென் றெழுந்தது.

அக்கட்சி தோன்றியபோது சில உத்தமக் காங்கரஸ்காரர்கள் ஐயுற்ருர்கள். சட்டசபை நுழைவு என்பது ஒத்துழைப்பென்று வாதிக்கப்பட்டது. சுயராஜ்யக்கட்சிக்காரர், காங்கரஸ் ஆதரவுபெற்றுப் பல இடங்களில் தேர்தலில் வெற்றி பெற்றுச் சட்டசபைகளைப் பற்றினர்; இரண்டு மாகாணங்களில் சட்டசபை இயக்கத்தையும் ஒடுக்கினர். அதனுல் அதிகாரவர்க்கத்துக்கு என்ன குறை நேர்ந்துவிட்டது? அவ்வம் மாகாணங்களில் அரசாங்கம் இயங்காமற் போய்விட்டதா? சட்டசபை இயக்கத்தை ஒடுக்கிய பின்னர்ச் சுயராஜ்யக் கட்சிக்காரர், சட்டமறுப்புப் போன்ற ஒன்றைத் தொடங்கியிருத்தல் வேண்டும். அதற்குப் பதிலாகச் சுயராஜ்யக்கட்சிக்காரர் ஒத்துழைக்க உளங்கொண்டிருப்பது உலகறிந்ததொன்று. ஸ்ரீமான் படேல் இந்தியச் சட்டசபையில் தலைமைப் பதவி ஏற்க இசைந்ததும், பண்டிதமோதிலால்நேரு ஸ்கின் கமிட்டியில் அங்கம் பெற்றதும், ஸ்ரீமான் ஏ. அரங்கசாமி ஐயங்கார் நீதிமன்ற அவமதிப்பு மசோதாவைப் பற்றிய தனிக்கமிட்டியில் அங்கம் பெற்றதும் என்ன காட்டுகின்றன? ஒத்துழைப்பைக் காட்டவில்லையா? சுயராஜ்யக் கட்சிக் கொள்கைப்படி அக்கட்சித் தலைவர்கள் நடத்தல் காணேம்.

காந்தியடிகள் கோலிய முறைகளே நாட்டிற்குரியன. அவர் திட்டம் இப்பொழுதில்லாவிட்டாலும், அது வருங்காலத்தில் பயன் தந்தே தீரும். பட்டதாரிகள் உத்தியோகத்துக்குப் படும் பாட்டை நான் நன்கு அறிவேன். ஓரிடத்தில் ஓர் உத்தியோகம் காலியென்ருல் அதற்கெனக் குவியும் விண்ணப்பங்கள் பலப்பல. எத்துணையோ பட்டதாரிகள்

வேலையின்றித் திண்டாடுகிறார்கள். நாளடைவில் நம்மவர்கட்குத் தற்காலக் கல்வியின் சிறுமை தெரியவரும். அப்பொழுது தாய் தந்தையர் முயற்சியாலேயே பள்ளிப் பகிஷ்காரஞ் செவ்வனே நடைபெறும்.

வக்கீல் கூட்டமும் பெருகிவருகிறது. அவர்களில் பலர்க்குப் போதிய வருவாய் கிடைப்பதில்லை. அவர்கட்கும் அத்தொழிலில் வெறுப்புத் தோன்றுங் காலம் நெருங்கியே யிருக்கிறது. காந்தியடிகள் விதைத்த விதை தேசத்தில் முளையாமற் போகாது.

ஒத்துழையா இயக்கத்தைச் செவ்வனே நடத்தாது நாம் தோல்வி யடைந்ததும், சுயராஜ்யக் கட்சிக்காரர் சட்டசபையில் தடைவேலை செய்வது தவறியதும் சுயராஜ்யத்தை நீண்ட தூரத்தில் தள்ளியிருக்கின்றன. சுயராஜ்ய வேட்கையை எழுப்பத்தக்க ஒரு கட்சி இப்பொழுது தேவை. தலைவர்கள் ஒத்துழைக்க முயன்றாலும் தேசம் எச்சரிக்கையாயிருத்தல்வேண்டும். தேச மக்கள் உள்ளத்தில் உரிமை வேட்கை குன்றாமலிருக்கிறது. தேச விருப்பத்தை நிறைவேற்றத்தக்க ஒரு புதுக்கட்சி வேண்டும்.

ஒத்துழையாமையில் தோல்வி நேர்ந்த பின்னர்த் தேசத்தில் சாதிச் சண்டையும் சமயச் சண்டையும் பெருகி வருகின்றன. வடக்கே ஹிந்து முஸ்லிம் பிணக்கு ; தெற்கே பிராமணர் பிராமணரல்லாதார் பிணக்கு. ஒத்துழையாக் காலத்தில் சாதிபேதம் சமயபேதம் பாராட்டப்படவில்லை. ஹிந்துக்களும், முஸ்லிம்களும், பிராமணரும், பிராமணரல்லாதாரும், மற்றவரும், எல்லாரும் பாரதப் புதல்வர்கள் என்னுஞ் சகோதர உரிமை பூண்டே சிறை புகுந்தார்கள். தியாக உணர்வு, சாதி சமயப் பூசல்களை அழிக்க வல்லதன்றோ ? சட்டசபை நுழைவோ சாதிசமய நினைவூட்டுகிறது. அததற்கேற்ற பீடங்களும் அமைக்கப்படுகின்றன. சுயராஜ்யக் காலத்தில் ஏற்படும் சட்டசபையில் சாதி சமயச் சண்டைகள் நிகழா. சிறைபுகுந் தேசபக்தி ஒற்றுமையை உண்டு பண்ணுகிறது. சட்ட சபை நுழைவோ ஒற்றுமையைக் குலைக்கிறது.

தேர்தல்காலங்களில் ஒருவரை ஒருவர் தூற்றலும், அத னால் விளையும் போரும் தேசத்தின் நிலையைப் புலப்படுத்து கின்றன. நம்மவர்கட்குள் விளையும் பூசல் அதிகாரவர்க்க ஆட்சிமுறையை மறக்கச்செய்கிறது. நமக்குள் வேண்டற் பாலது ஒற்றுமை. நாமனைவரும் ஒரு தாயின் புதல்வரே; இந்தியரே. நமக்குள் கட்சி வேண்டாம்; பிணக்கு வேண் டாம். 'எல்லாரும் இந்தியர்' என்னும் எண்ணத்தை ஓங்கச் செய்யவல்ல ஒரு கட்சி நமக்கு வேண்டும். சகோதரர்களே! உங்களைத் தொழுகிறேன். உங்களை ஹிந்துக்களென்று தொழு கிறேனில்லை; முஸ்லிம்களென்று தொழுகிறேனில்லை; பிரா மணரெனத் தொழுகிறேனில்லை; பிராமணரல்லாதாரெனத் தொழுகிறேனில்லை; இந்தியராகத் தொழுகிறேன். சகோ தரர்களே! உங்கள் தாய்முகம் நோக்குங்கள். நீங்கள் முப்பதுகோடி பிள்ளைகள். நீங்கள் பிள்ளைகளா? வற்றல் மரங்களா? உங்கள் தாய் எந்நிலையிலிருக்கிறாள்? மற்றவர்கள் எந்நிலையிலிருக்கிறார்கள்? நோக்குங்கள்; இந்தியர் என்ற எண்ணத்தோடு நோக்குங்கள்; அவ்வெண்ணத்தோடு வாழுங்கள். வேண்டற்பாலது ஒற்றுமையே. வந்தேமாதரம்!

(11-9-1925)

## அணிந்தோ? செய்ந்தோ?

நமது பாரதநாட்டின் நிலையை உன்னி, ஒவ்வொரு பாரதப் புதல்வனும், 'சுயராஜ்யம் அணிந்தோ செய்ந்தோ' என்ற வினாவைத் தனக்குத்தானே பொறித்துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறான். அறிவிற்கும், அன்பிற்கும், அரு ளிற்கும், செல்வத்திற்கும், பிற நலங்கட்கும் ஊற்றாயிருந்த பாரதநாடு, இதுபோழ்து உலகிலுள்ள எல்லாத் தேசங்களி லும் இழிநிலையெய்தி, வறுமையாஞ் சிறுமைக்குழியில் வீழ்ந்து இடர்ப்படுவதை யோருங்கால், பாரத நாட்டிற் பிறந்த எவனே சுயராஜ்ய வேட்கையின்றி உலவுதல் கூடும்? அவ்வேட்கை ஒவ்வொருவர்க்கும் எழவேண்டுமென்பதைப் பற்றி நாம் விரித்துக் கூறவேண்டுவதில்லை. அவ்வேட்கை,

'சுயராஜ்யம் அணித்தோ சேய்த்தோ' என்ற வினவை இடையறாது எழுப்பிக்கொண் டிருக்குமன்றோ? இந்தியச் சுயராஜ்யம் சமீபத்திலிருக்கிறதா தூரத்திலிருக்கிறதா என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டுவது நம்மனோர் இன்றியமையாக் கடமை.

முதலாவது, சுயராஜ்யம் பிறரிடத்திலிருந்து வருவதா, நம்மிடத்திலிருந்து அரும்புவதா என்பதை ஆராய்ந்து முடிவு காண்டல் வேண்டும். சுயராஜ்யம் பிறரிடத்திலிருந்து வருவது என்னும் எண்ணமுள்ளவரை அது சேய்மையாகவே தோற்றும். சுயராஜ்யம் நம்மிடத்திருப்பது என்னும் உறுதியுள்ளவரை அஃது அணித்தாக நின்று காட்சியளிக்கும். பாலகங்காதர திலகர் பெருமானும், மகாத்மா காந்தியும் சுயராஜ்யம் நம்மிடத்திருப்பது என்பதை உள்ளங்கை நெல்லிக் கனிபோல் விளங்க வைத்தனர். அவர்கள் தேசபக்தி வாழ்க.

சுயராஜ்யம் நம்பாலுள்ளதென்பதை ஒத்துழையா இயக்கம் செவ்வனே அறிவுறுத்திற்று. அவ்வுண்மை தெரிவித்த நல்லதோர் இயக்கத்தை ஒடுக்க, நம்மவர்களே முயன்றார்களெனில், நம்மவர்கள் நிலையை என்னென்று கூறுவது? ஒத்துழையா இயக்கம் இப்பொழுது ஒடுங்கியுள்ளது. இவ்வேளையிலேயே, அதனால் நலனுண்டா தீமையுண்டா என்பதை நேயர்களுக்கு எடுத்துக்காட்டுவது நலந்தருவதாகும்.

நமது நாடு, பல சமயம் - பல சாதி - பல பாஷை - பல வழக்க ஒழுக்கங்களைக் கொண்டதென்பது வெள்ளிடைமலை. இப் பன்மையுணர்வே நம்மை அடிமைக் குழியில் வீழ்த்தியதென்பது கூர்ந்து சிந்திப்போர்க்கு இனிது விளங்கும். இப் பன்மையுணர்வு இந்தியாவில் விளங்குமட்டும், இந்தியா தன்னைத்தான் காத்துக்கொள்ள இயலாது, மூன்றாவது மனிதன் துணையை நாடியே நிற்கும் என்பது அநுபவத்தில் விளங்கும் உண்மை. அப் பன்மையுணர்வை ஒழிக்கவே ஒத்துழையா இயக்கந் தோன்றிற்று. சமயம் சாதி முதலிய நினைவுகளை யூட்டி, வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ மோகத்தைக் கிளப்பவல்ல சட்டசபையை விலக்குமாறு ஒத்துழை

யாமை அறிவுறுத்திற்று. ஆசையைக் கிளப்பி நமக்குள் ஒற்றுமையை அழிக்கும் வேறு பலவற்றையும் விலக்குமாறு ஒத்துழையாமை உணர்த்திற்று. நாட்டிலுள்ள பன்மையுணர்வைப் போக்கத்தக்க கதருடை, ஹிந்திபாஷை, அஹிம்ஸா தர்மம் முதலியவற்றையும் ஒத்துழையாமை போதித்து வந்தது. கதர், உடை ஒற்றுமையையும் - ஹிந்தி, பாஷை ஒற்றுமையையும் - அஹிம்ஸா தர்மம், சமய ஒற்றுமையையும் உண்டுபண்ணுவன. இன்னும் ஒத்துழையாமையிலுள்ள முறைகளை ஆய்ந்தால், பன்மையை ஒருமைப்படுத்தும் நோக்கங்கள் அவைகளின்மாட் டொளிர்தலைக் காணலாம்.

ஒத்துழையாமை செயலில் நிகழ்ந்தபோது, சட்டசபையை விடுத்து விலகினவர்களுள் எல்லாச் சமயத்தாரும் எல்லாச் சாதியாரும் இருந்தனர். நீதிஸ்தல பள்ளி விலக்குச் செய்தவருள்ளும் பலதிறப்பட்டவர் இருந்தனர். இவர்கள் அனைவரும் தமது வேற்றுமைகளைக் கருதாது, பாரதப் புதல்வர் என்ற எண்ணத்தோடு பகிஷ்கார வேலை செய்தனர். கதரை அணிவதிலும், ஹிந்தியைப் பயில்வதிலும், அஹிம்ஸா தர்மத்தை அனுஷ்டிப்பதிலும் சாதிபேதமாதல் சமயபேதமாதல் தலைகாட்டிற்றா? ஒத்துழையா விரதந் தாங்கிச் சிறைபுகுந்த தேசபக்தருள் எந்தச் சாதியாரில்லை? எந்தச் சமயத்தாரில்லை? சிறைபுகுவதில் ஹிந்து முஸ்லிம் சண்டை எழுந்ததா? பிராமணர் பிராமணரல்லாதார் போர் நிகழ்ந்ததா? இல்லையே! எல்லாரும் பாரதப் புதல்வர் என்ற எண்ணத்தோடு சிறைபுகுந்தனர். அத்தகைய ஒற்றுமையை நிகழ்த்தியது எது? நமது அரிய ஒத்துழையா இயக்கமன்றோ?

ஒத்துழையா இயக்கம், ஒற்றுமையை மாத்திரமா நிகழ்த்தியது? ஒற்றுமையின் அறிகுறியாக உள்ள உறுதி அஞ்சாமை முதலிய சீரிய குணங்களையும் வழங்கிவந்தது. இளவரசர் வரவேற்பு மறுப்பு ஒன்றை எடுத்துக்கொள்வோம். அஃதொன்று நாட்டுக்கு எத்தகை ஒற்றுமையை-உறுதியை-அஞ்சாமையை - நல்கிற்று. அதிகாரவர்க்கம் என்றால் ஆகாயத்திலிருந்து இழிந்த ஒரு தெய்விகமென்று நம் மக்கள்

நினைந்துகொண்டிருந்தது பறந்து ஓடி அவர்கள்பால் மெய்யறிவு அரும்பிற்று. லார்ட் ரெடிங் சென்ற இடங்களிலெல்லாம் பகிஷ்காரப்பிரசாரம் முதலியன இனிது நடைபெற்றன. இவ்வளவும் அஹிம்ஸாதர்ம வழியில் நடைபெற்றமையை மறந்துவிடலாகாது. அதிகாரவர்க்க ஆட்சி முறையின் ஆக்கத்தை அருகச்செய்தது ஒத்துழையாமை என்று கூறுவது மிகையாகாது. ஒத்துழையாமை, அதிகாரவர்க்க ஆட்சி முறையின் சிறுமையை நன்கு புலப்படுத்திற்று. ஒத்துழையாமையால் நாட்டில் எழுந்த ஒற்றுமை உணர்வையும் பிறவற்றையும் என்னென்று கூறுவது? ஒத்துழையாமையை விரும்பிய நேயர்களும் வெறுத்த நேயர்களும் 'ஒத்துழையாமை நாட்டுக்கு நலம் விளைத்ததா தீமை விளைத்ததா' என்பதை ஆராய்வார்களாக.

ஒத்துழையாமையின் உயிர்நாடியாக உள்ள சட்டசபை பகிஷ்காரத்தை நிறுத்தக் காங்கரஸ் உடன்பட்ட நாள் தொட்டு - சட்டசபை நாடிச் சுயராஜ்யக் கட்சியார் புகுந்த நாள்தொட்டு - நாட்டில் என்ன நிகழ்ந்து வருகிறது? சொல்லவும் வேண்டுமோ? சமயச்சண்டை சாதிப்போர் முதலியன தலைவிரித்தாடுகின்றன. சட்டசபை பகிஷ்காரம், வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தை வலியுறுத்திற்ரு? இல்லையே! சட்டசபைப் பிரவேசம் எதைச் சிறப்பாக வலியுறுத்துகிறது? சுயராஜ்ய வேரைக் கல்லவல்ல வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தையன்றே வலியுறுத்துகிறது? வடக்கே வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தைக் குறித்து ஹிந்துமுஸ்லிம்கள் போராடுகிறார்கள். தெற்கே அதுகுறித்துப் பிராமணர் பிராமணரல்லாதார் போர் நிகழ்ந்து வருகிறது. வகுப்பு எண்ணங்கள் நிகழ நிகழச் 'சுயராஜ்யம் அணித்தோ சேய்த்தோ' என்று அழ வேண்டியதே. சட்டசபைப் பிரவேசமும் பிறவும், நாட்டை இனி எவ்வெவ்வழியில் அலைக்கப்போகின்றன என்பதை நாம் கூறவேண்டுவதில்லை.

சுயராஜ்யக்கட்சி வலியுறுத்திய சட்டசபைப் பிரவேசத்தை நாம் கடிந்தெழுதியபோது எத்துணை நண்பர்கள் எம்மை வைதார்கள். அப்பொழுது நாம் எடுத்துக்காட்டிய குறிப்புகள்

இப்பொழுது படிப்படியாக நிகழ்ந்து வருகின்றன. பல சமயம் பலசாதி பல வழக்க ஒழுக்கங்களுடைய ஒருதேசம் சுதந்திரமிழந்து நிற்கும் வேளையில், அஃது ஒத்துழைப்பை நாடுமாயின் - அதினும் ஒத்துழையாமை தொடங்கி மீண்டும் ஒத்துழைப்பை விரும்புமாயின் - அது பலவழியிலும் சீர்குலைந்து வாட்டமுறுதல் இயல்பு. நமதுநாடு சுயராஜ்யம் பெறுமாயின், உட்குழப்பங்கள் பல விளையுமென்று சில அரசியல் நிபுணர்கள் கூறுவது வழக்கம். சுயராஜ்யம் பெரு முன்னரே அக்காட்சி தோன்றியிருப்பது கவனிக்கத்தக்கது. காரணம் ஒத்துழையாமை ஒடுக்கப்பட்டதே. மகாத்மா காந்தி, ஒத்துழையாமையை ஒடுக்கவில்லை. ஒடுக்குமாறு செய்வித்த நண்பர்கள் யாவர் என்பதை நாம் கூறவும் வேண்டுமோ? 'சட்டசபையில் நுழைந்து வானத்தை வில்லாக வளைக்கப்போகிறோம்' என்று எங்கணும் முழங்கிச் சட்டசபை போந்து, இப்பொழுது எங்கணும் வகுப்பு நினைவை நண்பர்கள் ஊட்டிவருகிறார்கள். எம்மைக் காய்ந்து கடிவோர் கடிக. எமது மனத்துக்குத் தோன்றும் உண்மையை உணர்த்தவேண்டுவது எமதுகடன்.

இப்பொழுது நாட்டார் நினைவு எதைப்பற்றி நிற்கிறது? சுயராஜ்ய நினைவு சில தேசபக்தர் உள்ளத்திலுந் தோன்றுதல் காணோம். முஸ்லிம் தலைவர்களிற் சிலர் முஸ்லிம் லீக்கை வலுப்படுத்த முயல்கிறார். ஹிந்து தலைவர்களிற் சிலர் ஹிந்து மகாசபையை வலுப்படுத்த முயல்கிறார். இனி அத்தலைவர்கள் 'சுயராஜ்யம் வேண்டாம்' என்று சொல்லி, அதிகாரவர்க்க ஆட்சிமுறைக்கு ஆசி கூறவும் முந்துவார்கள் போலும்! தீண்டாமை என்றும் நாட்டிலிருக்கவேண்டுமென்று தவங்கிடப் போரும், வடக்கே நிகழும் ஹிந்துமுஸ்லிம் குழப்பங்களைக் கேள்வியுறுவோரும் 'ஐயா! சுயராஜ்யம் வேண்டாம்; பாழும் வேண்டாம். எல்லாம் ஊழ்வழி நடக்கும்' என்று பேசத் தொடங்கியிருக்கிறார். இத்தகைப்பேச்சு, சுதந்திரம் இல்லாத ஒரு தேசத்தில் எழலாமோ? எழுமாறு செய்வித்த நண்பர்களுக்கு இரங்குகிறோம். ஒத்துழையாக் காலத்தில், 'சுயராஜ்யம் அணித்தே புலனாகிவிட்டது' என்று எண்ணிக்கொண்டிருந்த தேசம், இப்பொழுது 'சுயராஜ்யம்வேண்டாம்' என்று

கூறும் நிலையை அடைந்திருக்கிறது. ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையின்றிச் சுயராஜ்யம் எங்கிருந்து வரும்? ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்கு நேர்ந்துவரும் அழிவை நினைக்க நினைக்க மனம் பதைக்கிறது. பாழான ஒத்துழைப்பு - சட்டசபை நுழைவு, இவ்வளவு அல்லலை - தொல்லையை - விளைத்திருக்கின்றன. தலைவர்கள் பலர் ஒத்துழையாமையை ஒடுக்கி, ஒத்துழைப்பை நாடுவது கருதி, மகாத்மா காந்தியும் ஒத்துழையாமையை நிறுத்தியிருக்கிறார். அவரென் செய்வார்?

சட்டசபைப் பிரவேசத்தால் விளைந்துவரும் தீமைகளைக் கண்ணாரக்கண்டும், நண்பர்கள் இன்னும் அதையே கட்டியழ முயன்று வருகிறார்கள். சட்டசபைப் பகிஷ்காரம் மேலும் மேலும் வலியுறுத்தப்பட்டு வந்தால், சட்டசபைப் பிரவேச நாட்டமுடைய மிதவாதக் கட்சியும், ஜஸ்டிஸ்கட்சியும், பிறவும் தேசத்தார் முன்னிலையில் சிறுமைப்பட்டு அழிந்துபோயிருக்கும். இப்பொழுது அவைகள் உயிர்பெற்று வருகின்றன. சட்டசபை நுழைந்து, ஒத்துழையாமை நிகழ்த்தச் சென்ற சுயராஜ்யக்கட்சியும், இனி ஒத்துழைப்புக் கட்சியாக மாறும் என்பதில் ஐயமில்லை.

அறிவு விளக்கத்துக்கென ஆங்கிலம் பயிலாது, வயிற்றுக்கும் பதவிக்கும் பட்டத்துக்கும் அதைப் பயில்வோர், தேசத்தைத் தாம் விரும்புமாறெல்லாம் இடர்ப்படுத்துவரென்பது திண்ணம். ஆங்கிலம் அறியாத தேச மக்களுக்குள், ஹிந்து முஸ்லிம் வேற்றுமையோ பிராமணர் பிராமணரல்லாதார் பூசலோ நிகழ்தல் காணோம். கற்றவர்களென இதுபோழ்து போற்றப்படும் ஆங்கிலம் பயின்ற நண்பர்களே, தேசத்தில் வகுப்புச் சண்டைகளுக்குக் காரணர்களாக நிற்கிறார்கள். அவர்கள் வேறுவழியில் பிழைக்க முடியாமல் உத்தியோகங்களுக்குச் சண்டையிட்டுத் தேசத்தைப் பிளந்துவிடுகிறார்கள். அவர்கள் சுயநலம், தேசத்தைத் துன்புறுத்துகிறது. விரிக்கிற் பெருகும்.

போனது போக. இப்பொழுது நாம் என் செய்தல் வேண்டும்? ஒத்துழையாமையை உணர்வளவிலாவது காத்து

வரல்வேண்டும். வக்கீல்மார் ஓர் உதவி செய்யல்வேண்டும்—அதாவது தங்கள் பிள்ளைகளை அத்தொழிலுக்கனுப்பாதிருக்க வேண்டுமென்பது. பெற்றோர்கள் பிள்ளைகளுக்கு நாட்டுக் கல்விபோதித்தல்வேண்டும். ஆங்கிலம்பயின்று பரீட்சைகளில் தேறிப் பட்டம்பெற்ற பிள்ளைகள் எத்துணைபேர் வயிற்றுணவுக்கே வருந்தி வருகிறார்கள். உலகில் எப்படிப் பிழைப்பது என்ற ஏக்கம் அவர்களை நடுக்குறச் செய்துகொண்டே யிருக்கிறது. பிள்ளைகளுக்குத் தொழில்முறைகள் கற்பிப்பது நலம். கிராமத்தார், பஞ்சாயத்து வாயிலாக வழக்குகளை முடித்துக் கொள்ள உறுதிகொள்ளல்வேண்டும். பொதுவாகப் பரதேசப் பொருள்களை - சிறப்பாகப் பரதேச ஆடையை - எக்காரணம் பற்றியும் உபயோகித்தலாகாது. எல்லாருங் கதர் தரித்தல் வேண்டும். இன்னோரன்ன தொண்டுகள் பல கிடக்கின்றன. அவைகளைத் தேசத்தார் செய்துவரின், ஆங்கிலம் பயின்ற அறிஞர்கள், சட்டசபையிலும் வேறிடங்களிலும் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவச் சண்டை புரிந்து ஓய்ந்து, ஒத்துழையாமையை உயிர்ப்பிக்க வருவார்கள் என்பது நிச்சயம்.

அஹிம்சா தர்மத்துக்கு உட்பட்ட ஒத்துழையாப்போர் ஒன்றே, சுயராஜ்யம் நம்பால் உண்மையை விளங்கச்செய்யும். ஆதலால், அதை உயிர்ப்பிக்க நாம் முயன்று வருவோமாயின், 'சுயராஜ்யம் அணித்தோ சேய்த்தோ' என்ற கவலையின்றி, 'அணித்தே அணித்தே' என்று ஊக்கங்கொண் டுழைத்தலாகும். (16-1-1925)

# கிராமத் தொண்டு

உண்மைத் தேசத்தொண்டு யாண்டுளது ? கிராமத்தில் என்று எவ்வறிஞரும் விடையிறுப்பர். தற்போதைய இந்தியக் கிராமங்களின் நிலையைப்பற்றி விரித்துக்கூற வேண்டுவதில்லை. இந்தியக் கிராமங்கள் குருதியின்றிச் சவலையுற்ற உடலுடையான் போல இருக்கின்றன. கிராமங்களின் குருதி, வழக்குகளாலும், வக்கீல்களாலும், மேல்நாட்டுப் பொருள்களாலும் உறிஞ்சப்படுகிறது. கிராமங்களின் மென்மை தேசத்தின் உயிர்நீப்பிற்குக் காரணமாக நிற்குமென்று சொல்லாமலே விளங்கும். ஆதலால் கிராமங்களின் மென்மையைப் போக்க முயலவேண்டுவது தேசபக்தர்களின் முதற்கடமை.

கிராமங்களில் நாட்டுணர்வை மிக எளிதில் நிலைபெறுத்தலாம். கிராமங்களில் மேல்நாட்டு நாகரிகம் அசரீரியாய் நிலவுகின்றதன்றி இன்னுஞ் சரீரங் கொண்டு உலவவில்லை. இப்பொழுதே முயன்றால் அந்நாகரிகம் அவண் உருக்கொள்ளாதவாறு அதைத் தொலைக்கலாம்.

முதலாவது கிராமத்தார் பொருள் மூட்டைகட்டி நீதிமன்றங்கட்குப் போதலை ஒழிக்குமாறு செய்வித்தல் வேண்டும். கிராமத்தார் நெற்றிநீர் நிலத்தில் வீழ உழைத்து, வயிறார உண்ணாமலும் ஈட்டும்பொருளை மூட்டை மூட்டையாகச் சுமந்துபோந்து, வக்கீல்கள் வாயில் காத்து ஈந்து திரும்பும் அறியாமையினின்றும், அவர் உய்யும் நல்லறிவு பெறுதல் வேண்டும். கிராமத்தார் உழைப்பன்றோ நகரங்களில் வக்கீல்மார் மாடமாளிகைகளாகவும் களியாடல்களாகவும் பரிணமிக்கிறது? கிராமத்தார் பொருளைக் கொள்ளையிடும் வக்கீல்கள், அப்பொருளை நாட்டுப் பொருளுக்காதல் செலவழிக்கிறார்களா ? இல்லையே. ஏறக்குறைய எல்லாவற்றையும் மேல்நாட்டுப் பொருள்களுக்கே அவர்கள் அழுகிறார்கள். ஒரு வக்கீல் இல்லத்தில் நுழைந்து பார்ப்போமாயின், அவர் வீடு முழுவதும் பரதேசியமா யிருப்பது காணலாம். கிராமத்

தார் உழைப்பு எவ்வாறு மேல்நாட்டுச் செல்வத்தை வளம் படுத்துகிறது என்பது கவனிக்கத்தக்கது. கிராமத்தார் நீதி மன்ற மேறுவதை இன்று நிறுத்துவரேல், நாளை எவ்வளவு நலன் விளையுமென்று சொல்லவும் வேண்டுமோ ?

தற்போதைய நீதிமன்றங்களால் விளையுங் கேடுகளைக் கண்ணுற்றே, மகாத்மா காந்தி, நீதிமன்றங்களைப் பகிஷ்கரிக்குமாறு வக்கீல்களைக் கேட்டுக்கொண்டார். அடிகள், வேண்டுகோளுக்கு வக்கீல்கள் செவி சாய்த்தார்களில்லை. செவிசாயா அளவோடு நில்லாது, ஒத்துழையா வளர்ச்சி பின்னே தங்களுக்குப் பெருந் தலைநோயாக முடியும் என்று எண்ணி, அதை வீழ்த்த முயன்று, அவர்கள் வெற்றியும் பெற்றார்கள். இனி நீதிமன்றப் பகிஷ்காரம், வக்கீல்கள்வழி நடைபெறுமென்று கனவிலுங் கருதற்கிடமில்லை. ஆதலால் கிராமத்தாரே நீதிமன்றப் பகிஷ்காரத்தில் தலைப்படல் வேண்டும். அத்தொண்டு கிராமத்தாரிடை இதுபோழ்து செய்யப் படல் வேண்டும். கிராமத்தார் உள்ளத்தில் ' வழக்கு ' என்னும் பேய், கோயில் கொள்ளாதவாறு தேசபக்தர் முயலல் வேண்டும்.

கிராமத்தார் உள்ளம், மேல்நாட்டுப் பொருள்களில் படாதவாறு செய்வது பெருந்தேசத்தொண்டு. கிராமங்களிலும் மேல்நாட்டுப் பொருள்கள் மலியாமலில்லை. அவைகளைத் தகைந்து கிராமத்தார் வாழ்வு நடாத்தல்கூடும். கிராமங்களில் இதுபோழ்து காப்பி தேயிலை மண்ணெண்ணெய் முதலியன யாண்டும் பரவியிருக்கின்றன. காப்பி தேநீரால் விளைந்துவரும் துன்பங்களைக் கிராமத்தார் நன்குணர்வரேல் அவைகளைக் கையாலுந் தீண்டார். காசம் நீரிழிவு முதலிய தீரா நோய்கட்கு ஊற்றாயிருப்பன காப்பி தேநீர் முதலிய பானங்களும் பிறவுமாகும். அவைகளையுண்டு நோய்வாய்ப் பட்டு வருந்துவானேன் ? பழைய காலத்தில் கிராமத்தார் கேழ்வரகுக் கூழ் களி முதலியன உண்டுவந்தார். கேழ்வரகு நீரிழிவு நோய்க்கு எமன்போன்றது. ஆங்கில டாக்டர்கள் நீரிழிவால் பீடிக்கப்படும் நோயாளிகட்குக் கேழ்வரகுக் கூழ் களி முதலியவற்றை உண்ணுமாறு கட்டளையிடுகிறார்கள்.

அவர்கள் கட்டளைப்படி மாடியில் உலவும் மன்னர்களும் கேழ்வரகை உண்டு வருகிறார்கள். கேழ்வரகை இழிவெனக் கருதிய கர்மத்தை நகரத்தார் இதுகாலை அநுபவித்து வருகிறார். நாட்டுப் பொருளையும் நாட்டு வழக்க ஒழுக்கங்களையும் அவமதிப்பது இயற்கை அன்னையை அவமதிப்பதாகும். பெரும் பெருங் கல்லூரிகளில் அமர்ந்து, இயற்கையைப் பற்றிப் பன்னூல்கள் பயின்று, உண்மையுணர்ந்தும், நாட்டுக் கேழ்வரகைப் பயன்படுத்தாது, காப்பி தேநீரைப் பயன் படுத்தி நீரிழிவால் மொத்துண்ட பின்னர், ஆங்கில டாக்டர்கள் ஆணைப்படி நாட்டுக் கேழ்வரகு உணவுகொள்ள முயலும் அறியாமையை என்னென்று வருணிப்பது? ஆதலால், நாட்டுப் புறங்கள் காப்பி தேநீருக்கு இரையாகாதவாறு காக்கத் தேசபக்தர்கள் முயலலா மன்றோ?

கிராமங்களில் நாட்டுக் கல்விக்கும் இதுபோழ்து இடர் நேர்ந்திருப்பது வெள்ளிடைமலை. நாட்டுக் கல்வியை உயிர்ப்பிக்கத் தேசத்தொண்டர்கள் ஏன் முயலலாகாது? ஆத்திசூடி, கொன்றைவேந்தன், சதகங்கள், எண்சுவடி, இலக்கம் முதலியன இப்பொழுது கிராமங்களிலும் மறைந்து வருகின்றன. அவைகளைக் கிராமச் சிறுவர்கள் பயிலுமாறு நாட்டுப் பள்ளிகள் அமைக்கப்படல் வேண்டும். நாட்டுவைத்தியம் சோதிடம் முதலியனவும் கிராமங்களில் நிலைக்குமாறு செய்யல் வேண்டும். கிராம வாழ்விற்கு இன்றியமையாத சுகாதார முறைகள் போதிக்கப்படலாம். மேல்நாட்டார் எழுதிவரும் நூல்களிலுள்ள சுகாதார முறைகள், பெரிதும் பழைய கிராம வாழ்வில் விரவி நின்றனவே என்பதைக் கிராமத்தார்க்குத் தற்கால முறையில் போதித்தால் பெரும்பயன் விளையும்.

கிராமத்தார் மேல்நாட்டு உடை தரியாதவாறும், கதராடை தரிக்குமாறும் அவருக்குச் சொல்லிவரலாம். கதருணர்ச்சி கிராமங்களில் பரவிவரும் இவ்வேளையில், கதர்த் தொண்டு அவ்விடங்களில் பயன் விளைப்பதாகும். கிராமத்தார்க்கு அறிவுறுத்தவேண்டுவது மற்றொன்றுளது. அஃது உயிர்போன்றது. அஃது யாது? அது விவசாயம். விவசாயத் தொழிலாளர் நகரங்கட்கும், வெளிநாடுகளுக்கும்

செல்ல ஒண்ணுதவாறு தகைதல் வேண்டும். அவ்விடங் கட்குச் சென்று துன்புறுந் தொழிலாளர் நிலையைத் தேச பக்தர்கள் விளக்கித் தெள்ளத் தெளியக் கூறினால் கிராமத் தார் செவிசாய்ப்பார்.

இப்பொழுது கிராமங்களிலும் சாதிப்பூசல் கிளம்பி யிருத்தல் எவரும் அறிந்தவொன்று. சாதிக் கொடுமையால் நமது நாடு அடிமைக்குழியில் வீழ்ந்த வரலாற்றையும், சாதிப் பூசலால் நமது அடிமை வாழ்வு நீங்காதென்பதையும் கடவுள் படைப்புக்கு உட்பட்ட அனைவரும் சகோதரர் என்பதையும் தேசத் தொண்டர்கள் கிராமங்களில் போதித்துவரலாம்.

கிராமங்களில் செய்யவேண்டிய தொண்டுகள் இன்னும் பற்பல உண்டு. அவைகளை விரிக்கிற் பெருகும். இன்று சிற் சில குறிப்பிட்டோம். சமயம் நேர்ந்துழிப் பிறவற்றையுங் குறிப்பிடுவோம். இவ் வாக்கவேலைகள் தேசத் தொண்டுக ளல்லவோ? வெறும் அரசியல் கிளர்ச்சிதான் தேசத் தொண்டோ? அரசியல் கட்சிகளால் தேசம் சீர்குலைந்து வருதலைக் காண்போர்க்கு ஆக்கத் தொண்டின்மீதும் காந்தி யடிகள்மீதுமே கருத்துச் செல்லும். (16–7–1926)

## நெய்தற்றொழில்

உலகில் மக்கள் வாழ்விற்கு இன்றியமையாது வேண் டற்பாலன இரண்டு. ஒன்று உணவு; மற்றொன்று உடை. இவ்விரண்டனுள் உணவை முதலாவதாகவும், உடையை இரண்டாவதாகவும் கூறலாம். பொதுவாக மனிதன் உலகில் உணவிற்கும் உடைக்குமே பெரிதும் உழைத்தல் வெள் ளிடைமலை. ஏழைத் தொழிலாளிகள், 'உலகில் என்ன இருக் கிறது? வயிற்றுக்குச் சோறும், இடுப்புக்குத் துணியுந்தானே' என்றுமொழிவதை நாம் அடிக்கடி செவிமடுக்கிறோம். ஏழை மக்கள் வாழ்வு, உணவு உடை என்ற இரண்டையும் குறிக்

கொண்டு நிற்கிறது. செல்வர்கள் வாழ்வோ, வேறு பல களியாடல்களைக் குறிக்கொண்டு நிற்கிறது. ஏழைகள் களியாடல்களை மறந்து வாழ்தல்கூடும். செல்வர்கள் உணவையும் உடையையும் மறந்து வாழ்தல் முடியுமோ ? உலகினுள்ள அனைவர்க்கும் உணவும் உடையும் இன்றியமையாதன என்பது எவரும் அறிந்ததொன்றாகும்.

அடியேன் கட்டுரைக்குப் பொருளாயிருப்பது நெய்தற்றெழிலாதலால், ஈண்டு உடைமீது கருத்தைச் செலுத்த வேண்டுவது எனது கடமை. இயற்கையையும் இயற்கை நூல் பலவற்றையும் ஆராய்ந்து நோக்குழி, மனிதன் விலங்கினின்றும் பிறந்த நாள் முதல், நீண்டநாள் உடையின்றி, விலங்களைய வாழ்வையே நடாத்தி வந்தான் என்பது பெறப்படுகிறது. மனிதன் வாழ்வு முதல்முதல் மலையில் தொடங்கப் பெற்றமையால், அவனுக்கு உடை அநாவசியமாகத் தோன்றிற்றுப் போலும்! தொடக்கத்தில் மனிதன் உடைமீது கவலை செலுத்தாதிருந்ததற்குப் பல காரணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளை ஈண்டு விரிக்கிற் பெருகும். மனிதன் விலங்கினின்றும் தோன்றினவன் ஆதலால், அவன் விலங்குபோல் உடையின்றி வாழ்ந்தான் என்று சுருங்கச் சொல்லிவிடலாம். முதல்முதல் தோன்றிய மனிதக் கூட்டத்தாரது இயற்கைத் தோற்போர்வையில், மயிர்கள் அடர்ந்தும் மலிந்தும் கிடந்தமையால், அவர் உடற்காப்புக்கு வேறு செயற்கை உடை நாடாதிருந்தனர் என்றுங் கூறலாம். பின்னை மனிதன் அறிவு வளர்ந்து வளர்ந்து, பண்படப்பட, அவ்வறிவு, அவனை விலங்கினின்றும் வேறுபடுத்தி, நாகரிகம் இன்னது என்று உணர்த்திய காலந்தொட்டு, அவன் உடைமீது கவலை செலுத்தியிருத்தல் வேண்டும். அக்காலமே, மனிதனை மூடிக்கொண்டிருந்த மயிர் உதிர்காலம் போலும்!

நாணம் இஃது என்று மனிதன் உணர்ந்தபோது, அவன் தன்னைச் சுற்றித் தனக்கு நிழலளித்துக்கொண்டிருந்த மரத்தழைகளையும் மரப்பட்டைகளையும் அணிந்து வந்தான். சில இடங்களில் மனிதன் விலங்கைக் கொன்று, அதன் மாமிசத்தை உணவாக்கொண்டு, அதன் தோலை உடையாக

(போர்வையாக)த் தரித்தான். சில இடங்களில் மனிதன் சில விலங்கினங்களின் நீண்ட மயிர்களைப் பரப்பிப், பசையால் ஒட்டவைத்து, அதை ஆடையாக அணிந்து வந்தான். இக் காலத்தும் ஐரோப்பியப் பெண்மணிகள் பலர் மயிர்மாலை களைப் பூண்டு திரிவதைக் காண்கிறோம். இவ்வாறு மனிதன் பல இடங்களில் பலதிற ஆடைகளை அணிந்து தன் மானங் காத்து வந்தான்.

முதல் முதல் மனிதன் உடையணிந்த இடம் இப்பாரத நாடேயாகும். நாகரிகம் இந்நாட்டிலிருந்தே பிற நாடுகளுக் குச் சென்றது என்று சரித்திரங் கூறுகிறது. மேல்நாட்டார் தழைகளையும் தோல்களையும் அணிந்து அநாகரிகராய் உலவிய போது, நமது நாட்டார் பட்டினாலும் மயிரினாலும் பருத்தி நூலினாலும் நெய்யப்பட்ட அழகிய ஆடைகள் தரித்து வாழ்ந் தார்கள் என்று சரித்திரங் கூறுகிறது. சாரைப்பாம்புத்தோல் போன்ற துணிகளும், பாலேடுபோன்ற வஸ்திரங்களும் இற் றைக்குச் சுமார் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் நமது நாட்டில் நெய்யப்பட்டன என்று நமது நாட்டு நூல்கள் கூறுகின்றன. பேர்பெற்ற டாக்காமஸ்லீன் நெய்யப்பட்ட இடம் நமது நாடன்றோ? எகிப்து தேசச் சவக்குழியிலுள்ள பிணங்கள்மீது நமது டாக்காமஸ்லீன் சுற்றப்பட்டிருப்பதை இன்றுங் காணலாம். நமது நாட்டில் நெய்யப்பட்ட ஆடை கள் மரக்கப்பல் வாயிலாக இங்கிலாந்து முதலிய இடங் களுக்கு அனுப்பப்பட்டன என்றும் — அவைகள் ஆங்கே ஏராளமாக விலையாயின என்றும் — வில்சன், டிக்பி முதலிய மேல்நாட்டுச் சரித்திரக்காரர்களே எழுதியிருக்கிறார்கள். உலகத்துக்கே உடை வழங்கிவந்த நமது நாடு இப்பொழுது எந்நிலையிலிருக்கிறது? அந்தோ! பரிதாபம்! நமது நாட்டா ருள் எத்தனை பேர் நமது நாட்டு உடை தரிக்கிறார்? நேயர் களே! சிந்தியுங்கள் எங்கணும் எங்கணும் மேல்நாட்டுஉடை!

பண்டைநாளில் நமது நாடு அருட்செல்வம் முதலிய எல்லாச் செல்வங்களையும் பெற்றிருந்ததென்றும், இந்நாளில் அஃது எல்லாவற்றையும் இழந்து வருந்துகிறதென்றும் நம் மவர் பேசுகிறார்; எழுதுகிறார். அந்நாளில் நமது நாட்டில்

செழுமை கொழித்துக்கொண் டிருந்ததற்கும், இந்நாளில் வறுமை நெருக்குவதற்குங் காரணமென்னை என்று ஆராய்ந்தால் உண்மைபுலனாகும். அந்நாளில் இமயமிருந்து இந்நாளில் இல்லாமற் போய்விட்டதோ? அந்நாளில் ஓடிய கங்கை இந்நாளில் ஓடாமல் நின்றுவிட்டதோ? பின்னை என்னை? அந்நாளில் நெய்தற்றொழில் யாண்டும் பரவியிருந்தது; இந்நாளில் அத்தொழில் யாண்டும் பரவி நிற்கவில்லை. நெய்தற்றொழில் ஆக்கமுற்றிருந்தபோது நமது நாடு காமதேனுவா யிருந்தது; அத்தொழில் கேடுற்ற இந்நாளில் நமது நாடு வறுமையால் பீடிக்கப்பட்டிருக்கிறது. ஒரு நாட்டின் செல்வம் பொதுவாக அந்நாட்டின் கைத்தொழிலை-சிறப்பாக அந்நாட்டின் நெய்தற்றொழிலை - பொறுத்திருப்பது கவனிக்கற்பாலது. இவ்வுண்மையை மேல்நாட்டார் செவ்வனே உணர்ந்துள்ளார். அன்னார் செல்லுமிடந்தோறும், ஆண்டுள்ள கைத்தொழிலைக் குலைத்து, அந்நாட்டுக்கு வேண்டிய பொருளைத் தம் நாட்டிற் பண்படுத்திக், கப்பலிற் கொண்டுபோய் வாணிபஞ் செய்வதையே தமது சாதித் தொழிலாகக் கொண்டுள்ளார். கிழக்கிந்திய வியாபாரக் கூட்டத்தார் இந்தியாவில் புகுந்ததும் என்ன செய்தனர்? கிழக்கிந்திய வியாபாரக் கூட்டத்தார் இந்தியாவைப் பற்றி, இந்தியக் கைத்தொழிலிற் றலையிடா தொழிந்திருப்பரேல், இந்தியாவைப் பற்றியதைக் குறித்து நாம் வருந்த வேண்டுவதில்லை. இந்தியாவின் உயிராக உள்ள நெய்தற்றொழிலை அவர் குலைத்த ஒன்றைக் குறித்தே நாம் வருந்துகிறோம். கிழக்கிந்தியக் கூட்டத்தார் நமது நாட்டு நெய்தற்றொழிலைக் குலைத்த முறைகளை என்னென்று எழுதுவது? எழுத்தால் எழுதலும் முடியுமோ? விரித்தெழுதக் கட்டுரையும் இடந்தராது.

இந்தியாவில் நெய்தற்றொழிலுக்கு நிலைக்களனாயிருந்தது டாக்கா நகரம். அது மிகச் சிறிய நகரம். 18-வது நூற்றாண்டின் தொடக்கத்தில் அதன் ஜனத்தொகை இரண்டு லட்சம். அவ்வளவுஜனத்தொகையைக்கொண்ட அச்சிற்றூர், 1787-ம் ஆண்டில், சுமார் முப்பது லட்சம் ரூபா பெறுமான சல்லாத் துணியை இங்கிலாந்துக்கு ஏற்றுமதி செய்தது.

1817-ம் ஆண்டில் அவ்வேற்றுமதி நின்றுவிட்டது. ஜனத் தொகை எழுபத்தொன்பதினுயிரமாகக் குறைவுற்றது. இவ்வாறு ஹென்றி காட்டன் எழுதியிருக்கிருர். டாக்காவின் வளம் குறைவுற்றதற்குக் காரணமென்னே? கிழக்கிந்தியக் கூட்டத்தார் தலையீடேயாகும்.

பாடலிபுரத்தில் ஏறக்குறைய முப்பத்துமூன்று லட்சம் மக்கள் வாழ்ந்தார்களென்றும், அவருள் மூன்றுலட்சம் பேர் நூல்நூற்ருரென்றும் டாக்டர் பிரான்ஸிஸ் புச்னன் சொல்லியிருக்கிருர். மற்றும் பல சரித்திரக்காரர்கள் எழுதியதை நோக்குழிப் பதின்மருள் ஒருவர் நூற்றும் நெய்தும் வந்தார் என்பது பெறப்படுகிறது.

நெய்தற்ருெழிலுக்கு நிலைக்களனுக நமது நாடு இலங்கினமையால், நமது நாட்டுப் பாவலர்கள், பருத்தி - நூல் - இழை - இவைகளை அடிக்கடி ஆண்டுவந்தார்கள். சிறப்பாகப் பெண் மக்களைப் புலவர்கள் பருத்திப் பெண்டிரென்றும், நூற் பெண்டிரென்றும், இழைகள் என்றும் விதந்தோதியிருத்தல் காண்க. இதனுல் பெண்மக்களுக்கும், பருத்திக்கும், நூற்கும், இழைக்குமுள்ள தொடர்பு நனி விளங்குகிறது. 'நுண்ணிய பலவாய பஞ்சின் நுனிகளால் கைவல் மகடூஉ தனது செயற்கை நலந்தோன்ற ஓரிழைப்படுத்தலாம் உலகத்து நூல் நூற்றலென்பது' என்று இறையனுர் அகப்பொருள் உரையாசிரியரும், 'பஞ்சிதன் சொல்லாப் பனுவலிழையாகச் செஞ்சொற் புலவனே சேயிழையா - எஞ்சாத, கையே வாயாகக் கதிரே மதியாக, மையிலா நூன்முடியுமாறு' என்று பவணந்தியாரும் கூறியிருத்தல் ஈண்டுக் கருதற்பாற்று. எங்கணும் நூலும் இழையுமாக இருந்தமையாலல்லவோ, அவை பாவலர் உள்ளத்தைக் கவர்ந்தன. பாவலர்க்கு விருந்தளித்த அக்காட்சி இப்பொழுதெங்கே?

கிழக்கிந்திய வியாபாரக் கூட்டத்தார் நமது நாட்டைப் பற்றினதும், நாட்டுக்கு உயிராயிருந்த கைத்தொழிலைப் பொன்றச்செய்து, அத்தொழிலைத் தமது நாட்டிற்குக் குடியேற்றிக்கொண்டனர். அன்று அன்னுர் நிகழ்த்தியகொடுமையால், இன்று ஏறக்குறைய அறுபது கோடி ரூபா, மேல்

நாட்டுக்கு ஆடையின்பொருட்டு மாத்திரஞ் செல்கின்றன. உடைக்கு மாத்திரம் இவ்வளவு தொகை, நமது நாட்டினின் றுஞ் செல்வதெனில், ஏனைய மோட்டார் வண்டி முதலியவற் றிற்குச் செல்லுந் தொகையை ஈண்டுக் கணித்துக் கூறவும் வேண்டுமோ? இந்தியாவின் செல்வம் இந்தியாவில் நில்லாது, மற்ற நாடுகளுக்குப் போதலால் இந்தியா வறிய நாடாய் வருந்துகிறது. இதைக் கற்றூர் கருதுவதில்லை. இந்நாளில் கற்றூரெனப் போற்றப்படும் பெருந்தகையாளரே பெரிதும் தாம் பிறந்த நாட்டுத் திருவை மற்ற நாடுகளிற் புகச் செய் கிறூர். ஓர் உயரிய இந்திய உத்தியோகஸ்தன் உடை முதலிய வற்றைக் கவனித்தால் எனது கூற்று உறுதிப்படும். அவன் தலைமுதல் கால்வரை அணிந்துள்ள உடைகள் எந்நாட்டில் நெய்யப்படுவன? அவன் ஏறும் வண்டியோ நம் நாட்டின தன்று. அவன் வீட்டிலுள்ள தட்டு முட்டு விளக்கு முதலிய யாவும் பிற நாட்டினின்றும் வந்தனவே. இங்கிலாந்திலுள்ள ஒருவன் உண்பன உடுப்பன ஊர்வன எடுப்பன தொடுப்பன எல்லாம் அவன் நாட்டுப் பொருள்களாகவே யிருக்கும். இந்தியாவோ தன் பொருளைப் பிறர்க்கீந்து தான் வருந்து கிறது. இந்தியாவின் செல்வத்தை இந்தியாவிலேயே நிறுத்த மகாத்மாகாந்தி முதலிய பரோபகாரிகள் இதுகாலை முயன்று வருகிறூர்கள்.

மகாத்மா காந்தி தற்போது உடை ஒன்றிலேயே தம் கருத்தைச் செலுத்தி வருகிறூர். உடை ஒன்றை நாமே நெய்துகொண்டால், நாடு பண்டைய சீரையும் சிறப்பையும் பெறுமென்பது திண்ணம். உடைக்கும் பிற நாட்டை எதிர் நோக்கும் அறியாமை நமது நாட்டை விடுத்தகலல் வேண் டும். அதனினும் இழிவு வேறென்றுண்டோ? நமது நாட் டில் பருத்தி விளையவில்லையோ? பருத்தி ஏராளமாக விளை யும் ஒரு நாடு, உடைக்குப் பிற நாட்டை எதிர்நோக்குவது இழிவு! இழிவு!! நமது நாட்டுப் பருத்தி ஜப்பானுக்கும் லங் காஷையருக்கும் எவ்வளவோ செல்கிறது. அப்பருத்தியால் நாம் ஏன் நூல் நூற்று அதை நெய்து அணிதலாகாது? இவ் வொன்றைச் செய்தால் அறுபது கோடி ரூபா நமது நாட்டு

ஏழைமக்களுக்குப் பயன்படுமல்லவோ? நம் முன்னோர்கள் நமது நாட்டுப் பருத்திகொண்டு நூற்றும் நெய்தும் வந்தமையால், அவர்களுக்கு வேண்டுவன போக, மிகுதி ஆடைகளைப் பிற நாடுகளுக்கும் அனுப்பி வந்தார்கள். அந்நாளில் நமது நாடு காமதேனுவாக இருந்தது.

நமது நாட்டிலேயே நூல் நூற்கப்பட வேண்டுமென்றும், அந்நூல் நமது நாட்டிலேயே நெய்யப்படல் வேண்டுமென்றுங் கூறும் தேசபக்தரை நோக்கி, 'அக்காலநிலை வேறு; இக்காலநிலை வேறு; அக்காலத்தில் இயந்திரங்களில்லை; இக்காலத்தில் எல்லாம் இயந்திரங்களால் செய்யப்படுகின்றன' என்று எத்தனைச் சீமான்கள் சோப்பேறி ஞானம் பேசுகிறார்கள்! இயந்திரங்களால் செல்வம் ஒரு கூட்டத்தார்பால் பெருகியும் மற்றவர்கள்பால் அருகியும் வருதல் கண்ட மேல்நாட்டு அறிஞர்களே, இயந்திரங்களை ஒழிக்க முயன்று வருவதை நமது நாட்டுச் சீமான்கள் அறியார்கள் போலும்! இயந்திரத்தில் பெரு நம்பிக்கைகொண்டு, பெரும் பொருளீட்டி, இப்பொழுது பெருங் கேடுற்றுள்ள ஜெர்மெனி, நல்லறிவு பெற்றுக் கைராட்டினத்தைச் சுழற்றத் தொடங்கியிருக்கிறது. தொழிலாளர் கிளர்ச்சி எங்கணும் பரவப் பரவ இயந்திர இயக்கமே ஒழியுமென்று நான் ஊகிக்கிறேன். இயந்திர இயக்கத்தாலன்றோ மேல்நாடு நாத்திக நாடாய் விட்டது? அங்கே சகோதரத்துவங் குன்றிற்று. மேல்நாட்டுச் சகோதரர்கள் இயந்திரங்களுக்கு அடிமைகளானமையாலல்லவா, அவர்களை ஆசை என்னும் பேய் வசப்படுத்தி அலைத்துவருகிறது? அந்தோ! இயந்திரத்தால் உலகில் நிகழ்ந்துவருங் கொடுமை பெரிது! பெரிது!!

நமது நாட்டு அறிஞருட் சிலர் 'கைராட்டினமென்ன; கதர் உடை என்ன; பெருங் கஷ்டம்; இந்தியரால் மில்கள் அமைக்கப்பட்டால், இந்தியாவின் செல்வம் இந்தியாவிலேயே தங்கும்' என்று பேசுகிறார். இந்தியாவின் பொருள் இந்தியாவில் தங்குவது போற்றத்தக்கதே. இந்தியாவின் செல்வம் இந்தியாவில் எவ்வாறு தங்குதல்வேண்டும்? செல்வம் எல்லாரிடத்திலுந் தங்கி எல்லார்க்குஞ் சமமாகப் பயன்படல்

வேண்டும். மில்கள் அமைப்பால் செல்வம் எல்லார்க்குஞ் சமமாகப் பயன்படுமோ? முதலாளிகளிடத்தில் செல்வம் பெருகும்; தொழிலாளிகளிடத்தில் செல்வம் அருகும். செல்வம் எல்லாருக்கும் பயன்பட வேண்டுமென்பது மகாத்மா காந்தியின் உள்ளக்கிடக்கை. எல்லார்க்குஞ் செல்வம் ஒரேவிதமாகப் பயன்பட மகாத்மா என்ன அறிவுறுத்துகிறார்? போரையா? குழப்பத்தையா? அன்று; அன்று. பின்னை என்னை? அவர் எல்லாரையும் ராட்டினஞ் சுழற்றச் சொல்கிறார். எவ்வளவு எளிய வழியை மகாத்மா நமக்குக் காட்டுகிறார். மில்பைத்தியமுடையார் இதைக் கவனிப்பாராக.

நமது நாட்டிற் பொன்றிய நெய்தற்றொழிலை மீண்டும் உயிர்ப்பிக்க வேண்டுமானால் நாம் என்ன செய்யல்வேண்டும்? ஒவ்வொரு வீட்டிலும் ஒவ்வொருவரும் இராட்டினஞ் சுழற்றல் வேண்டும். இத்தொழிலில் பெரிதும் பெண்மக்கள் தங்கள் கருத்தைச் செலுத்தல் வேண்டும். உணவைச் சமைப்போர் யாவர்? அவரல்லரோ உடையையும் அமைத்தல் வேண்டும்? நம் பெண்மணிகள் உணவிற்காக நாடோறும் ஏறக்குறைய இரண்டு மணி நேரம் கழிக்கிறார்கள். அதற்கு அவர்கள் என்ன ஊதியம் பெறுகிறார்கள்? ஒன்றுமில்லை. உடைக்கு இரண்டு மணி நேரம் வேண்டுவதில்லை; அரை மணி நேரம் சாலும். நாடோறும் ஒவ்வோரில்லத்திலுமுள்ள ஒவ்வொரு பெண்தெய்வமும் தனது அருமைத் திருக்காத்தால் ராட்டினஞ் சுழற்றினால், தேசத்தின் வறுமை தீரும்; தேசத்தில் செல்வம் பெருகும்; எல்லாரும் இன்பம் நுகர்வர்; இறைவனை நினைப்பர். 'கைராட்டினம்' 'கைத்தறி' என்ற உடனே 'கூலி என்ன கிடைக்கும்?' என்ற அடிமை உணர்வு முளைத்து முனைந்து நிற்கிறது. அவ்வுணர்வு அறவே ஒழிதல்வேண்டும். வியாபார முறையில் இராட்டினஞ் சுழற்றுவதாலும், நெய்வதாலும் நலன் விளையாது. உணவைப்போலவே உடையையுங் கொள்ளல்வேண்டும். ஒவ்வொரு குடும்பத்தாரும் தத்தமக்குவேண்டிய துணியைத் தாமே நெய்துகொண்டால் கூலிப் பேச்சேது? மகாத்மா காந்தி 'கதர் வியாபாரம் வேண்டாம். அவரவர் நூற்ற

நூலால் நெய்யப்படும் ஆடையையே அவரவர் அணிதல் வேண்டும்' என்று நமக்கு அறிவுறுத்துவதோடு நில்லாது, தாமுஞ் செய்து காட்டுகிறார்.

பண்டைக் காலத்தில் நமது நாட்டுப் பெண்மக்கள் கைராட்டினத்தைக் கடவுளாகப் போற்றிப் பூசித்து வந்தார்கள். பெண்மக்களுக்குக் கைராட்டினம் தெய்வம் போன்றது. அஃது அவர்கள் உடலை ஓம்புவது; செல்வத்தையும் பெருக்குவது. பெண்மக்கள் இராட்டினஞ் சுழற்றும் போது, அவர்கள் முதுகுத் தண்டம் நிமிர்ந்து நின்று வருவதால் அவர்கள் உடல் உரம்பெறுகிறது. அத்தண்டு வளைவுறலால் பலதிற நோய்கள் நண்ணி, நரம்பு தளர்ந்து, அகால மரணம் நிகழ்கிறதென்பதை ஈண்டு நேயர்களுக்கு நினைவூட்டிச் செல்கிறேன். மாதரசிகள் இராட்டினத்தில் நினைவைச் செலுத்தலால், அவர்கள் மனம் வேறொன்றிலுஞ் செல்வதில்லை. அதனால் அவர்கள் ஒழுக்கம் ஓம்பப்படுகிறது. கற்புக்கரசிகள் இராட்டினஞ் சுழற்றலால் அவர்கள் வீட்டுச்செல்வம் அவர்கள் வீட்டிலேயே தங்குகிறது. இன்னோரன்ன நலம்பல கண்டே பண்டைக்காலத் தாய்மார்கள் கைராட்டினத்தைக் கடவுளாகப் போற்றி நேசித்தார்கள். அந்நாளில் பெண்களுக்குச் சீதனப் பொருள் பலவற்றோடு சிறப்பாகக் கைராட்டினமொன்றும் கொடுக்கப்பட்டு வந்தது ஈண்டுக் கவனிக்கத்தக்கது. இவ்வழக்கம் இன்னுஞ் சில கிராமங்களில் படாது நிகழ்ந்து வருவதாக எனக்குக் கேள்வியுண்டு. ஆகவே, நெய்தலுக்கு இன்றியமையாத நூற்றல் ஒவ்வோர் இல்லத்திலும் நடைபெறல்வேண்டும்.

இப்பொழுதும் நமது நாட்டில் பல இடங்களில் கைத்தறிகள் ஓடுகின்றன. ஆனால் அவைகள் நெய்வது பரதேச நூல் என்பதை மிக வருத்தத்தோடு முறையிடுகிறேன். பரதேச நூல்களைத் தாங்கியோடுந் தறிக் கூட்டங்களை நான் காணும்போது எனது உள்ளம் நடுக்குறுவது வழக்கம். நமது நாட்டார் நிலையென்னே! என்னே!! தாஞ் சாக மருந்துண்போரைக் காண எவருள்ளந்தான் வருந்தாது? நமது நாட்டுத் தறிகள் பரதேச நூல்களைத் தட்டிக்கொண்

டிருக்குமட்டும், நாட்டின் வறுமைநிலை யொழியாது. தரித்திரத்தை நம்மவர்களே விலைக்கு வாங்குகிறார்கள். என் செய்வது ?

நமது நாட்டில் நெய்தற்றொழிலுக்கெனச் சில வகுப்பார் இருக்கின்றனர். அவரனைவரும் உயரிய முனிவரர் வழி வந்தவர். அவருள் சிறப்பாகச் செங்குந்தர், தேவாங்கர், சாலியர் முதலியோரைக் குறிப்பிடலாம். வீரவாகு தேவரும், தேவாங்க ரிஷியும், சாலிய முனிவரும் பரதேச நூல்களைக் கொண்டு நெய்யவா உபதேசித்தனர் ? அப்பெரியோர் வழி வழி வந்தவர்கள் பரதேச நூலைக் கரத்தினாலுந் தொடலாமா ? செங்குந்தரே ! தேவாங்கரே ! சாலியரே ! மற்றவரே ! தேசத்தாய் உங்களை நோக்குகிறாள் ; கண்ணீர் விடுகிறாள் ; நீங்கள் பரதேச நூலைத் தொடும்போது நடுங்குகிறாள் ; உங்களைப்பெற்ற அன்னை, நீங்கள் பரதேச நூலைக் கொண்டு நெய்யுமட்டும் அவள் நிர்வாணியாகவே கதறிக்கதறி நாணி மறைந்து வதிவாள். தாய்க்குக் கட்டத் துணியில்லையே ! சகோதரர்களே ! பரதேச நூலைத் தொடாதேயுங்கள் ; சுதேச நூல்களைப் பெருக்க முயலுங்கள் ; பரதேச நூல்களைத் தொடுவதில்லை என்ற விரதத்தை நீங்கள் கொண்டால், சுதேச நூல் தானே பெருகும். தேசத்தின் செல்வம் உங்கள்பாலிருக்கிறது. அச்செல்வமுடைய நீங்களும் வறுமையால் வருந்துகிறீர்கள் ; தேசமும் வருந்துகிறது. உங்கள் முன்னோர்வழி நின்று உங்கள் கடனை ஆற்றுங்கள். //

'தேவாங்க மித்திரன்' என்னும் இப்பத்திரிகை தன் பெயருக்கேற்பத் தன் தொண்டைச் செய்யவே தோன்றியிருக்கிறது. இப்பத்திரிகை சிறப்பாக ஒரு சாதிக்குரியதாகக் காணப்பட்டாலும், அது செய்துவரும் தொண்டு நாட்டிற் பிறந்த அனைவர்க்கும் உரித்தாகலான், எல்லாரும் அதை ஆதரிப்பாராக. கதர் இயக்கம் பெருகிவரும் இந்நாளில் இப்பத்திரிகையின் இன்றியமையாமையை நான் விரித்துக்கூற வேண்டுவதில்லை.

காலநிலை தேசநிலை முதலியவற்றை யுணர்ந்து, இப்பத்திரிகையை நடாத்த முன்வந்த எனது கெழுதகை நண்பரும்,

உழுவலன்பரும், பரோபகாரத் தொண்டரும், ஊக்கமும் உறுதியும் உண்மையும் மிகுந்த இளைஞருமாகிய திருவாளர் நாராயணசாமிச் செட்டியார்க்கு எனது நன்றியறிதலைச் செலுத்துகிறேன். அவர்க்கு நீண்டநாளும், நோயற்ற யாக்கையும், பரோபகார சிந்தையும் பெருக பெருக என்று இறைவனை வழுத்துகிறேன். (18-7-1924)

# தொழிலாளர் இயக்கம்

'சுதேசமித்திரன்' வருஷ அநுபந்தத்துக்கு முன்னர் இருமுறை கட்டுரை வரைந்துள்ளேன். இம்முறையும் அத்தொண்டாற்றுமாறு கேட்கப்பட்டேன். தொழிலாளர் இயக்கத்தின்மீது எனது கருத்துச் செல்கிறது. அதுபற்றிச் சுருக்கமாக எழுதப் புகுகிறேன்.

தொழிலாளர் யாவர்? உலகிலுள்ள அனைவரும் தொழிலாளரேயாவர். அறிவால் தொழில்புரிவோர் சிலர்; கையால் தொழில் புரிவோர் பலர். இவ்வுலகை உற்று நோக்குழித் தொழில் புரியாதாரிலர் என்றே கூறலாம். இவ்வுலகந் தொழின்மயமா யிருத்தலான், இவ்வுலகுக்குக் காரணனாயுள்ள ஆண்டவனும் தொழிலாளியாகவே யிருத்தல்வேண்டும். ஆண்டவன் உண்மை கண்ட அறிஞர்களும் அன்பர்களும் அவனை 'ஐந்தொழிலாளி' என்று கூறிப்போந்தார்கள். ஐந்தொழிலாவன:—ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பன. எல்லாம்வல்ல இறைவனே பெருந்தொழிலாளன் எனில், ஏனையோரைத் தொழிலாளர் என்று சொல்வது இழுக்காகாது. உலகில் பெரிதுங் கையால் பணியாற்றுவோரே தொழிலாளர் என்றழைக்கப்படுகின்றனர். இது பெரும்பான்மை நோக்கி எழுந்த ஆட்சியென்க.

முன்னை நாளில் மக்கள் தொழின்முறைகள் நாலாகக் கூறுபட்டிருந்தன. இந்நான்கனுள் அறிவுத்தொழில் என்ப

தும், கைத்தொழில் என்பதும் அடங்கும். அந்நாளில் மக்கள் குருமார்களென்றும் அரசர்களென்றும் வாணிபர்களென்றும் வினைஞர்களென்றும் பிரிந்து உலகை அழகுற இயக்கிவந்தார்கள். இப்பிரிவு உலகிடை யாண்டும் இயல்பாக நிலவவேண்டுமென்பதை ஈண்டு விரிக்கிற் பெருகும். இம்முறைக்கு ஊறு நிகழின், உலகியல் நடைமுறைக்கும் ஊறு நிகழும்.

இந்நால்வகைப் பிரிவிற்குத் தோற்றுவாயாயிருந்த நமது இந்தியாவில் பின்னை நாளில் இப்பிரிவு பிறப்பையொட்டி நிகழலாயிற்று. பண்டை நாளில் இந்நால்வரும் பிறப்பால் உயர்வு தாழ்வு கருதாது, தத்தங் கடனாற்றி வந்தமையான், உலகியல் ஒழுங்குபெற இயங்கி வந்தது. நாளடைவில் அவரவர் தத்தங் கடன்களினின்றும் வழுக்கிப், பிறப்பில் உயர்வு தாழ்வு கருதுஞ் செருக்கில் வீழ்ந்தமையான், வாழ்விற் கேற்பட்ட கட்டே குலைந்துவிட்டது. இதுபோழ்து, குருமார் ஆட்சியும் அரசர் ஆட்சியும் வாணிபத்தில் ஒன்றி, முதல் மூன்றினமும் முதலாளியென் றோரினமாய், நான்காவது இனமாய தொழிலாளியை வருத்தத் தொடங்கியிருக்கின்றன.

இம்முதலாளி தொழிலாளி என்னும் பிரிவிற்குப் பிறப்பிடம் மேல்நாடென்பதை யான் சொல்லவேண்டுவதில்லை. இனி உலகம் சில ஆண்டு முதலாளி தொழிலாளி என்னும் பிணக்குக்கு இரையாகிப், பின்னை முதலாளி என்னும் இனம், தொழிலாளி என்னும் இனத்தோடு கலப்புற்று, உலக இடர் போக்குமென்பது திண்ணம். குருமார் ஆட்சியும், அரசர் ஆட்சியும் பொன்றின என்றும், இதுபோழ்து வாணிபர் ஆட்சி நடைபெறுகிறதென்றும், அஃதும் இறந்துபட்டுத் தொழிலாளர் ஆட்சி யெழுமென்றும் சுவாமி விவேகானந்தர் உரைத்த தீர்க்கதரிசனம் மெய்ப்படும் நாள் சேய்மையிலில்லை என்பது எனது நம்பிக்கை. இந் நம்பிக்கையை வலியுறுத்த உலகில் தோன்றியுள்ள குறிகள் பற்பல. அவைகளில் இரண்டொன்றை ஈண்டுக் குறிப்பிடுகிறேன்.

ஐரோப்பாவில் நடைபெற்றுத், தற்போது ஓய்வடைந்துள்ள பெரும் போரும், நமது காந்தியடிகளின் தெய்வீக

இயக்கமும் எனது நினைவிலுறுகின்றன. ஐரோப்பாப் போர் உலகிலுள்ள தொழிலாளர் கண்களைத் திறந்திருக்கிறது. 'அக்கொடும்போரில் தலைப்பட்டு அமர் விளைத்து உயிர் துறந்தோர் யாவர்? அதன் பயனாக இன்பம் நுகர்வோர் யாவர்?' என்னும் ஆராய்ச்சி ஏழை மக்களிடை உலவிவருகிறது. ஜர்மெனி பெயராலும், பிரான்சு பெயராலும், இங்கிலாந்து பெயராலும், மற்ற நாட்டுப் பெயராலும் ஏழை மக்களைத் தூண்டிப் போர் புரிவித்து, ஆங்காங்குள்ள முதலாளிகள் இன்பநுகர்கிறார்கள் என்னும் உணர்வு ஏறக்குறைய எல்லாத் தேசங்களிலும் அரும்பியிருக்கிறது. ஏழைத் தொழிலாளர் துணையின்றி எவரால் போர் நடாத்தல் இயலும்? எல்லா நாட்டுத் தொழிலாளரும் ஒன்றுபட்டு, 'முதலாளிகள் தங்கள் நலங் கருதிக் கிளப்பும் போர்களுக்குத் துணை நில்லோம் நில்லோம்' என்று உறுதி கொள்வரேல் உலகில் போர் நிகழுமோ? அவ்வுறுதியை நிலைபெறுத்த உலகத் தொழிலாளர் இயக்கந் தோன்றியிருக்கிறது.

இவ்வியக்கத்தின் நோக்கமென்னை? உலகில் முதலாளி தொழிலாளி என்னும் வேற்றுமை யிருத்தலாகா தென்பதும், செல்வப் பொருளும் பிறவும் எல்லார்க்கும் பொதுவாகப் பயன்பட வேண்டுமென்பதுமாகும். உலகில் போருக்குக் காரணமாக நிற்பது எது? செல்வமன்றோ? செல்வம் ஒருவர்பால் பெருகியும் மற்றவர்பால் அருகியும் பயன்படுவதால், உலகம் அழுக்காறு அவா வெகுளி முதலிய பேய்கட்கு இரையாகிறது. போருக்கு நிலைக்களனாக உள்ள செல்வம் எல்லார்க்கும் ஓரளவினதாகப் பயன்பட்டுவரின் உலகில் போரேது? பொறாமையேது? ஆதலால், கடவுள் படைப்புக்கு உட்பட்ட எல்லாம் பொது உடைமையாகி எல்லார்க்கும் பயன்படவேண்டுமென்பது இயற்கை நியதி. அதற்கு மாறுபட்டுள்ள செயற்கை முறைகளைத் தொலைத்து, இயற்கை அறத்தை ஓம்பவேண்டுமென்பது, இப்பொழுது தோன்றியுள்ள உலகத் தொழிலாளர் இயக்கத்தின் உள்ளக்கிடக்கை.

இந்நோக்கம் செயலில் நிறைவேறக் கூடியதா என்று சிலர் வினவலாம். இது செயலில் நிறைவேறக்கூடியது

என்பதைத் தற்போதைய ருஷ்யாவின் ஆட்சிமுறை அறிவுறுத்துகிறது. ஒரு தேசத்தில் செயலில் வந்துள்ள ஒருமுறை, மற்ற இடங்களில் ஏன் செயலில் வாராது? இன்று வாராதொழியினும் நாளடைவில் அது வந்தேதீரும். விலங்கினின்றுந் தோன்றிய மனிதன்பாலுள்ள பேய்க்குணங்கள் அழியுங்காலம் ஒரு காலமுண்டு. அக்காலக் காட்சிக்கு அடிகோலுவது இத்தொழிலாளர் இயக்கமென்க. எல்லாம் 'உன்னுடைமையே..........' என வரூஉந் திருவாக்கு ஈண்டுக் கருதற்பாற்று.

அப்பேரியக்கத்தின் நோக்கத்துக்கு மாறுபட்டு நிற்குந் தொழிலாளர் யாண்டுமில்லை. ஆனால் அதனை நிறைவேற்று முறையில் தொழிலாளர்க்குள் மாறுபாடு உண்டு. தோள்வலியாலும் வாள்வலியாலும் முதலாளிகளின் ஆட்சிமுறைகளை நீறுபடுத்திப் பொதுவுடைமைக் கட்சியை நிலைபெறுத்த ஒரு சாரார் முயன்று வருகிறார். மற்றொரு சாரார், கொலைவினையின்றி, அருள்நெறி நின்று, அறவுரையால் மக்கள் மனநிலையை மாற்றித், தற்பொழுதுள்ள முதலாளி ஆட்சிகளின் அமைப்புக்களைப் பற்றித், தங் கோள்வழி ஆட்சிமுறையை இயக்க முயன்று வருகிறார். இவ்விரு முறைகளுள் கொள்ளற்பாலது எது? தள்ளற்பாலது எது? 'கொள்ளற்பாலது பின்னையது; தள்ளற்பாலது முன்னையது' என்று யான் சொல்வேன். தோள்வலியாலும் வாள்வலியாலும் பிறரை நடுக்குறுத்திக் கொல்லும் முறையால் பெறும் ஒன்று நீண்ட நாள் நிலவுதல் அரிது. கொல்லும் முறை, கொல்லும் முறையால் விழுங்கப்படுதல் இயல்பு. தோள்வலியால் பிறரை ஒருவர் வருத்தும்போது, வருந்துவோர், அச்சத்தால், வருத்துவோர்வழி இணங்கி நிற்பினும், அவர் எண்ணம் வேறுபட்டன்றே நிற்கும்? அவ்வெண்ணம், பின் தன் கடனாற்றாதொழியுமோ? எண்ணத்துக்குள்ள ஆற்றல் வேறெதற்கு உண்டு? இன்று எண்ணமாயிருப்பது நாளை செயலாக மாறியே தீரும். ஒருவரது எண்ணத்துக்கு மாறாக அவரை வலியுறுத்தி இணங்கச் செய்வதினும், அவர் எண்ணத்தை

மாற்றி, மனமார அவரை இணங்கச் செய்வதே சால்புடைத்து. ஆதலால் பின்னை முறையே போற்றுந் தகையது.

பேர்பெற்ற லெனின் கொலைமுறையைக் கையாண்டே ருஷ்யாவின் பொதுஉடைமைக் கட்சியை நிறுவினார். மெக்டானல்ட் முதலிய அறிஞர்கள் அம்முறையை மறுத்து, அற வழி நின்று, முதலாளியின் ஆட்சிமுறை அமைப்புக்களைப் பற்ற முயன்று வருகிறார்கள். மெக்டானல்ட் முறை விரைவில் பயனளியா தொழியினும், பின்னை நாளடைவில் அஃது என்றும் நின்று பயனளிப்பதாகும். லெனின் கொலைமுறையால் நிறுத்திய ஆட்சி மாறுமென்று சிலரால் எதிர்பார்க்கப் படுகிறது. அம்மாற்றம் நேருமேல் அதற்குக் காரணம் கொலை முறையைக் கையாண்டமை என்று உலகங் கூறும். மாற்றம் நிகழினும் மீண்டும் ருஷ்யா அறவழியில் பொதுஉடைமை ஆட்சியை நிறுவிக்கொள்ளும் என்பது ஒருதலை. மாற்ற முறாது காத்துக்கொள்ள ருஷ்ய மக்கள், ஆன்மஞானத்தில் உறுதிகொண்டு, உண்ணாவிரதம் போன்ற விரதங்களேற்றுத் தாங்கள் கொலைமுறையைக் கையாண்டதற்குக் கழுவாய் தேடிக்கொள்வார்களாக. இல்லையேல் கொலை, கொலையைக் கூட்டாமற் போகாது.

மெக்டானல்ட் முறை போற்றக்கூடியதாயினும் அதன்கண்ணும் ஒருகுறையுளது. முதலாளி என்னும் வகுப்பைப் படைத்த தற்கால நாகரிகத்தைச் செருக்கும் வழி காணாது, தொழிலாளர் ஆட்சியென்று, முதலாளி ஆட்சியைப் பற்றுதலால், மீண்டும் முதலாளி ஆக்கத்துக்கு இடந் தருவதாகும். ஆதலால், தற்கால நாகரிகத் துறைகள் பலவற்றைக் களைந்தெறியும் முறைகளைக் கண்டுவரல் வேண்டும். தற்கால நாகரிகமெனுஞ் சேய்க்குத் தாயாயிருப்பது இயந்திர இயக்கம். இவ்வியக்கம் உள்ளவரை உலகில் முதலாளி தொழிலாளி போர் எவ்வழியிலாதல் முளைத்துக்கொண்டே யிருக்கும். ஆகவே, தொழிலாளர் இயந்திர இயக்கத்தை யொழிக்கத் தக்க வாழ்வில் தலைப்பட முயலல் வேண்டும்.

இயந்திர இயக்கத்தை எப்படி ஒழிப்பது? வழி முறைகளை ஈண்டு யான் எடுத்துக் காட்டவேண்டுவதில்லை. ஆண்டவனருளால் காந்தியடிகள் தெய்வீக இயக்கந்தோன்றியிருக்கிறது. காந்தியடிகள் இயக்கம் இயந்திர இயக்கத்தை அழிப்பதென்பதை அறியாதாரில்லை. காந்தியடிகள் தாங்கியுள்ள ராட்டையெனும் அறவாழி, இயந்திர இயக்கத்தையும் அதன்வழித் தற்கால நாகரிகத்தையும் வீழ்த்துமென்க. காந்தியடிகள் அறிவுறுத்தும் இயற்கைவாழ்வும் இராட்டின வாழ்வும் ஆன்ம ஞானத்துக்குரிய பொதுஉடைமைக் கட்சியை நிறுவுமென்பது திண்ணம். மேல்நாட்டில் தோன்றியுள்ள தொழிலாளர் இயக்கம் பொருளளவில் பொதுஉடைமைக் கட்சியை நிறுத்தவல்லது. நம்பெருமான் காந்தியடிகள் இயக்கம் அருள்வழியில் அக்கட்சியை நிறுத்தவல்லது. தெய்வத் திருவருளை அடிப்படையாகக்கொள்ளாது, வெறும் பொருளளவில் கோலப்படும் பொதுஉடைமை ஆட்சி, மக்களை மாக்களாக்கிப், பின்னை அவர்களை நாற்கால் விலங்குகளாக்குவதாக முடியும். ஆதலால் மேல்நாட்டுத் தொழிலாளர் இயக்கத்தோடு காந்தியடிகள் இயக்கமும் ஒன்றுபடுமாறு இந்தியத் தொழிலாளர் முயலல்வேண்டும்.

காந்தியடிகள் இயக்கத்தில் பொதுஉடைமைக் கூறு யாண்டுளது என்னும் ஐயம் சிலர்பால் நிகழலாம். ஒவ்வொருவரும் தத்தமக்கு வேண்டற்பாலனவாய உணவுப் பொருளையும் உடைப் பொருளையும் தாமே முயன்று ஆக்கிக் கொள்ளின், அவரவர் பொருண் முயற்சி அவரவர்பால் தங்கிவிடும். பொருட் செல்வம் ஒரு கூட்டத்தார்பால் பெருகுவதற்கு வழியில்லாமல் போகும். இந்நுட்பம் காந்தியடிகள் இயக்கத்தில் ஊடுருவி நிற்கிறது. இக்கொள்கையினடியில் ஆன்மஞானம் உண்ணாவிரதம் முதலிய அருட்டுறைகள் கிளைத்தப்பட்டிருத்தல் கவனித்தற்குரியது. பண்டை இந்திய வாழ்வு இதுவே. இஃது உலகில் பரவாதொழிந்தமையான், உலகில் மறவினைகள் மலியலாயின.

காந்தியடிகள் கோலியுள்ள முறைப்படி உலகெங்கும் ஆன்மஞானப் பொதுஉடைமை ஆட்சி நிலவுமேல், உலகில்

மக்கள் மேற்குறிப்பிட்ட நால்வகைத் தொழிலில் தலைப்பட்டுப், பிறப்பால் உயர்வுதாழ்வு கருதாது, தங்கள் தங்கள் கடனாற்றி வாழ்வார்கள். இப்பொழுது தோன்றியுள்ள தொழிலாளர் இயக்கத்தின் முடிவு, பழைய இந்திய வாழ்வை உலகில் யாண்டும் பரப்பவும், இடையில்தோன்றிய வகுப்புவேற்றுமை செல்வ வேற்றுமை முதலிய வேற்றுமைகளைக் களையவும் துணை புரிவதாகும். தொழிலாளர் ஆட்சியென்பது மன்பதைக்கு இன்றியமையா நால்வகைக் கடனை வகுத்து அமைதிகாக்கும் அருளாட்சி யென்க.

காந்தியடிகள் இயக்கம் இந்நாளுக்குரியதாகுமோ என்று எண்ணி நகையாடுவோரும் உளர். முதலாளி தொழிலாளி பிணக்கு வலுக்க வலுக்க, அதனால் போர்கள் நிகழ நிகழ, நெருக்கடி நேர நேர, இயல்பாகவே காந்தியடிகள் இயக்கம் கால்கொள்ளும். ஒரு நூற்றாண்டுக்கு முன்னர் ருஷ்யாவில் பொதுஉடைமை ஆட்சி உண்டாகுமென்று எவராயினும் நம்பினரோ? கதராடை இந்நாளில் இவ்வளவு பரவும் என்று மேத்தா, கோகலே காலத்தில் எதிர்பார்க்கப்பட்டதோ? நாளை நிகழ்வதை எவரே இன்று அறியவல்லார்? தற்காலந் தோன்றியுள்ள பல குறிகளும், உயிர் வளர்ச்சியின் போக்கும் காந்தியடிகள் இயக்கத்தைக் கூவியழைத்துக் கும்பிட்டு நிலைபெறுத்துமென்று யான் நம்புகிறேன். இது நிற்க.

இந்தியாவிலும் சில இடங்களில் மேல்நாட்டு முறைப்படி தொழிலாளர் இயக்கந் தோன்றியிருக்கிறது. தற்காலம் இவ்வியக்கம் தொழிற்சாலைகளில் வேலை செய்வோர்க்குச் சிறிது காப்பளிப்பதாகும். இந்தியாவில் தொழிற்சாலை பெருகப் பெருக இந்திய வாழ்விற்கே கேடு நிகழும். மேல்நாட்டு இயந்திரங்களும் மேல்நாட்டு முதலாளிகளும் பாரதமாதாவின் குருதியை உறிஞ்சத் துணைபுரிவதோ தாய்க்குச் சேய்கள் ஆற்றுங் கடன்? இந்திய மக்கள், கிராமங்களை விடுத்து, நகரங்களிற் போந்து, தொழிற்சாலைகளெனும் சிறைவாய்ப்படாது, தங்கள் தங்கள் பதிகளிலிருந்தே உழவுத்தொழிலையும் நெய்தற்றொழிலையும் ஓம்பி வருவார்களாக. தொழிற்சாலைகளும் இயந்திரங்களும் மேல்நாட்டை எரிப்பதைக்

கண்கூடாகக் கண்டும், அப்பீடைகளை இந்தியாவில் ஏன் பெருக்க முயலல் வேண்டும்? அப்பெருக்கு இந்தியாவின் உயிர்நாடியாக உள்ள ஆன்ம ஞானத்தைக் கல்லிக் கல்லிப் பாழ்படுத்துமன்றோ? ஆன்ம ஞானத்திற் சிறந்த இந்தியா மேல்நாட்டு முதலாளி தொழிலாளி போரைப் போக்கக் காந்தியடிகள் வழிநின்று துணைபுரிவதாக. இப்பொழுது தோன்றியுள்ள உலகத்தொழிலாளர் இயக்கம், காந்தியடிகள் இயக்கத்தோடொன்ற, எல்லாம் வல்ல இறைவன் அருள் செய்வானாக. 'உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்.' (1-1-1926)

## முதலாளி - தொழிலாளி

உலகத்தில் பல யுத்தங்கள் தோன்றி மறைந்தன. இப்பொழுது உலகத்தில் முதலாளி - தொழிலாளி சண்டை நடந்து வருகிறது. காலைமுதல் மாலைவரை முதலாளி-தொழிலாளி கூச்சலே கடல்போல் கோஷிக்கிறது. எந்த நாட்டிலும், எந்தப் பத்திரிகையிலும், எக்கூட்டத்திலும் முதலாளி-தொழிலாளி வழக்கே பேசப்படுகிறது. மனிதர்களுக்குள் முதலாளி-தொழிலாளி என்ற வேற்றுமை உள்ள மட்டும் உலகத்தில் சமாதானம் ஏற்படுதல் அருமை.

கடவுள் படைப்புக்கு உட்பட்ட பொருள்பகுதி எல்லார்க்கும் உரியதே யாகும். அதற்கு மாறாகப் பொருட்பகுதியில் சிலர்க்கு உரிமையும் பலர்க்கு உரிமையின்மையும் ஏற்பட்டன. இம்மாறுபாட்டால் முதலாளி - தொழிலாளி என்ற இரு வகுப்பு தோன்றலாயின. முதலாளி தனக்குள்ள செல்வப் பெருக்கால், தனக்கெனப் பத்திரிகை, பாடசாலை, தொழிற்சாலை, அரசாட்சி முதலியவற்றை வகுத்துக் கொள்கிறான். முதலாளி, தனக்குச் செல்வத்தை உழைப்பால் உதவி வரும் தொழிலாளியை எந்த வழியிலும் ஏற்றமுறா வண்ணம் தகைந்து வருகிறான். தொழிலாளி,

'எல்லாம் என்னால் ஆகின்றன' என்ற உணர்வு பெற்றுச் சுதந்திரம்பெறக் கிளர்ச்சி செய்கிறான். அக் கிளர்ச்சியை ஒடுக்க முதலாளி தனக்குள்ள செல்வாக்கை உபயோகிக்கிறான். அதனால் உலகத்தில் குழப்பங்கள் நிகழ்கின்றன. கடவுள் படைப்புக்கு உட்பட்ட பொருள் எல்லார்க்கும் பொதுவாகப் பயன்பட்டுவரின், உலகத்தில் குழப்பமே நிகழாது. உலகம் ஞான மயமாகப் பொலியும்.

பண்டைக் காலத்தில் நமது நாட்டில் முதலாளி-தொழிலாளி என்ற வகுப்பே இல்லாமலிருந்தது. ஆண்டவன் படைப்புக்கு உட்பட்ட பொருள்பகுதி, எல்லார்க்குஞ் சமமாகப் பயன்பட்டு வந்தமையான், முதலாளி-தொழிலாளி என்ற வேற்றுமை தோன்றாமலிருந்தது. பின்னை நாளில் பொருள் பகுதியில் ஒருசிலர் உரிமையும் மற்றவர் உரிமையின்மையும் பெற்றமையால், முதலாளி - தொழிலாளி என்னும் வேற்றுமை உண்டாயிற்று. ஒவ்வொரு மனிதனும் இயற்கைவழி நின்று தன் கரங்களையே தனக்குரிய இயந்திரங்களாகக் கொண்டு, தொழில் புரிந்து வாழ்வானாயின், முதலாளி - தொழிலாளி சண்டையே நிகழாது. செயற்கை இயந்திரங்கள் தோன்றிய நாள்முதல், முதலாளி - தொழிலாளி விவாதம் வளர்ந்து வருகிறது. நம் முன்னோர்கள் இயற்கை வழியே நின்று தொழில் புரிந்து வந்தமையால் நமது நாட்டில் முதலாளி - தொழிலாளி போர் நடவாமலிருந்தது.

மேல்நாட்டினின்றும் அநேக அநாசாரங்கள் நமது நாட்டில் குடியேறி யிருக்கின்றன. அவைகளில் ஒன்று, முதலாளி - தொழிலாளி வாதம். மேல்நாட்டு முதலாளிகள் நமது நாட்டில் புகுந்து தொழிற்சாலைகளை அமைத்தார்கள்; அமைக்கிறார்கள். உழவுத் தொழில் நெசவுத் தொழில் முதலிய கைத்தொழில்கள் செய்துவந்த தொழிலாளிகள், தங்கள் தொழில் முறைகளிலுள்ள பெருமையை உணராது, இயந்திரத் தொழிற்சாலைகளில் அமர்ந்து சிறுமை தேடிக் கொண்டார்கள். தொழிலாளிகள் கிராமங்களை விடுத்து நகரங்கள் போந்து வருந்தலானார்கள். இக்காரணத்தால் நமது

நாட்டுக் கைத்தொழில்கள் நாசமாயின. இந்தியத் தொழிலாளிகள் மாதம் மாதம் சம்பளத்தைக் காசு வடிவமாகப் பெறுவதையே மேன்மையெனக் கொண்டு தங்கள் மானிய உரிமைகளை இழந்தார்கள்; அவ்வுரிமையை இழந்ததோடு அவர்கள் தங்கள் மானத்தையும் இழந்தார்கள். இயந்திரத் தொழிற்சாலைகளில் இந்தியத் தொழிலாளர்கள் பட்டுவரும் துன்பத்துக்கு அளவேயில்லை.

முதலாளி - தொழிலாளி வாதம் என்று ஒழியுமோ அன்றுதான் உலகத்தில் அமைதி நிலவும். இவ்வுண்மை கண்ட மேல்நாட்டுத் தொழிலாளிகள், கிளர்ச்சி செய்து தொழிற்சாலைகளைத் தங்கள் வசப்படுத்தவும், தேச ஆட்சியைத் தங்கள் வசப்படுத்தவும் முயன்று வருகிறார்கள். சில இடங்களில் அவர்கள் தங்கள் முயற்சியில் வெற்றியும் பெற்றிருக்கிறார்கள். தொழிலாளர்வழி அரசாட்சி நடைபெறுமளவும் உலகத்தில் அமைதி நிலவுதல் அருமை. முதலாளிகள் வழியே இப்பொழுது பெரிதும் ஆட்சிமுறை நடைபெற்று வருதலால், தொழிலாளர்கள் பல கஷ்டங்களை அனுபவித்து வருகிறார்கள்.

உதாரணமாகச் சென்னை அரசாட்சியை எடுத்துக்கொள்வோம். சென்னை அரசாட்சி, தற்பொழுது சென்னைக் கர்நாட்டிக்-பக்கிங்காம் மில் வேலை நிறுத்தத்தால் ஏற்பட்ட குழப்பத்தின் மூலகாரணத்தை உணராது, தொழில் தலைவர்கள் மீது பாய எண்ணங் கொண்டிருப்பதை ஈண்டுக் குறிப்பிடுகிறோம். தொழிலாளர்கள் பெருங்கிளர்ச்சி செய்து பொருள் உரிமை பெறுவதோடு அரசையுந் தங்கள்வழித் திருப்ப முயலல் வேண்டும். தொழிலாளர் அரசாட்சியில் மனித தருமத்துக்கு அழிவு நேராதென்பது திண்ணம். (8-7-1921)

# கல்வியும் கைத்தொழிலும்

கல்வி என்பது இந்நாளில் பெரிதும் நமது நாட்டில் ஏட்டுப் படிப்பைக் குறிக்கொண்டு நிற்கிறது. கல்லூரிகளில் பயில்வதும், பட்டம் பெறுவதும், கணிதராவதும், வக்கீலாவதும், நீதிபதியாவதும் வழக்கத்தில் வந்திருக்கின்றன. கல்வியறிவுடையார் இத்துறை நண்ணலால் விளையுங் கேடுகள் பலப்பல. இவ்வறிஞர்கள் பெரும் பதவிகளேற்றதும், இந்நாட்டு நடை உடை பாவனைகளை மாற்றி, மேல்நாட்டு நடை உடை பாவனைகளைக் கொள்ளத் துவங்குகிறார்கள். இவர்கள் உடுக்கும் உடைகள், உண்ணும் கலன்கள், குடிக்கும் பானங்கள், ஏறும் வண்டிகள், வீட்டில் எரியும் விளக்குகள், அமரும் பீடங்கள், எழுதுகோல்கள், காகிதங்கள், புத்தகங்கள், மருந்துகள் யாவும் பிற நாட்டினின்றும் போதருகின்றன. இவ்வந்நியங்கள், 'இச்சுதேசிகள்' வாழ்வை நடாத்துகின்றன. சுருங்கக் கூறின், இக் 'கல்வியாளர்கள்' பதவியேற்றுப் பெறும் பொருளெல்லாம் பெரிதும் அந்நிய நாட்டுக்கு அழுகிறார்கள் என்னலாம். இவர்கள் அறியாமை இவர்கள் அளவில் நின்றுவிடுவதில்லை. இவர்கள் வாழ்விற்கு எவ்வெப் பொருள்கள் மேல்நாட்டினின்றும் வருகின்றனவோ, அவ்வப் பொருள்கள் இந்நாட்டில் செய்யப்படாமல் ஒழிகின்றன. நாட்டின் கைத்தொழிலுக்கு நாசம் விளைப்பவர்கள் 'கற்றவர்கள்' என்று பட்டம் பெற்றவர்கள் என்பதை நாட்டார் கவனிப்பாராக.

தற்கால வாழ்விற்கு வேண்டற்பாலனவாய பொருளெல்லாம் நாட்டில் கிடைக்குமோ என்று 'கற்றவர்கள்' கேட்கிறார்கள். நாட்டில் கிடைக்காத பொருள்களை நாட்டார் கொள்ளாமலும் வாழ்தல் முடியும். தொடக்கத்தில் 'கற்றவர்களென்ற பெரியோர்கள்' காட்டிய வழியில் நம்மவர்கள் நடந்து நடந்து பழகியபடியால், சில மேல்நாட்டுப் பொருள்கள் வாழ்விற்கு இன்றியமையாதனவாய்விட்டன. அவைகளையும் நாட்டில் உண்டுபண்ணிக்கொள்வதே அறிவுடைமை. 'கற்றவர்கள்' தங்கள் அறிவைப் பதவிகளில் செலுத்தாது, கைத்தொழில்களிற் செலுத்துவார்களாயின், நாட்டில் வாழ்விற்கு வேண்டப்படும் பலவிதப் பொருள்களையும் பெறலாம்.

கைத்தொழிலை வளர்ப்பதற்குப் பயன்படவேண்டிய கல்வி, பதவிக்கும், பட்டத்துக்கும், தேர்தலுக்கும், பிற சிறுமைக்கும் பயன்படுகிறது! என் செய்வது?

நமது நாட்டில் என்ன இல்லை? வாழ்விற்கு வேண்டப்படும் பலதிறப் பொருள்களை இயற்கை அளிக்கிறது. அவைகளை எடுத்துப் பண்படுத்திப் பதன் செய்யத்தக்க கல்வியறிவு நாட்டில் இல்லை. ஏட்டுக்கல்வி பதவிக்கென வழங்கப்படுகிறது. அவ்வேட்டுக்கல்வி நாட்டைக் கெடுக்கிறது.

மக்கள் வாழ்விற்கு உணவும் உடையும் இன்றியமையாதன. உணவுப் பொருளும் உடைப்பொருளும் நாட்டில் ஏராளமாக விளைகின்றன. மக்கள் உறைவதற்கு வீடு வேண்டற்பாலது. வீடு கோலற்குரிய பொருள் நமது நாட்டிலில்லையோ? எல்லாமிருக்கின்றன. போலி அலங்காரத்துக்கென இருப்புப் படிகளையும், வளைவுகளையும், பிறவற்றையும் எற்றுக்கோ மேல்நாடுகளினின்றும் வரவழைத்தல்வேண்டும்? நாடு அளிக்கும் பொருள்களைக்கொண்டு வீடு கட்டி வாழலாம். கிராமங்களிலுள்ள ஏழை மக்கள், நாட்டு மண், நாட்டு மரம், நாட்டு ஓலை அல்லது ஓடு கொண்டு வீடுகள் கட்டுகிறார்கள். இவர்களால் கட்டிடங்களுக்கெனப் பெரும் பொருள் அந்நியநாடுகளுக்குச் செல்வதில்லை. இவர்கள் கல்வி அறிவுடையவர்களா அல்லது ஏட்டுக்கல்வி பயின்று ஏழை மக்கள் உழைப்பைக் கொள்ளையடித்துப்பொருளைப் பயனற்ற இரும்புக்கும் பிறவற்றிற்கும் மற்ற நாட்டுக்கு அழுபவர்கள் கல்வியறிவுடையவர்களா? நேயர்களே! சிந்தியுங்கள்.

தற்கால நாகரிக வீடுகளிலுள்ள காட்சிகளிற் பல அந்நிய நாட்டுப் பொருள்களாகவே யிருக்கின்றன. இவைகள் எற்றுக்கு? அழகு, அந்நியநாட்டுப் பொருள்களில்தானா இருக்கிறது? என்ன அறியாமை! வீட்டைச் சுற்றிலும் மரஞ்செடி கொடிகளை வளர்த்து அழகு செய்தல் கூடாதா? அழகிய பயிர்களை வளர்த்துக் காய்கறிகளைப் பெறுதல் கூடாதா? மாதுளை எலுமிச்சை கிச்சிலி நாரத்தை முதலியன உடலைப் பலவழியிலும் ஓம்பும் இயற்கை மருத்துவர்களல்லவோ? கண்ணையும் மனதையுங் கவரத்தக்க அழகுவடிவங்

கள் குழந்தைகளாகவும் பெண்தெய்வங்களாகவும் வீட்டில் உலவுகின்றன. அந்நடமாடும் பாவைகளைக் கண்டுகண்டு மகிழாது, மேல்நாட்டினின்றும் கல் செம்பு பாவைகளை ஏன் வரவழைத்து வீடுகளில் நாட்டல்வேண்டும்? வேண்டுமேல் நமது நாட்டில் செய்யப்படும் படங்கள் பாவைகள் முதலிய வற்றை வீட்டில் வைத்துக்கொள்ளலாம். இன்னும் எத் துணையோ அந்நிய நாட்டுப் பீடைகளை வீட்டில் அடைத்து, நாட்டுக் கைத்தொழில்களை நாசமாக்குவோர் 'கற்றவர்' என்போரேயாவர்.

வீட்டில் எரியும் விளக்குகளும் அந்நிய நாட்டினின்றும் வருவன. எண்ணெய்களும் அத்தன்மையனவே. நாட்டு விளக்கையும் நாட்டு எண்ணெயையும் கிராமங்களில் காண்ட லும் அரிதாகிவிட்டது. கோயில்களில்கூடப் பிறநாட்டு விளக்குகள் எரிகின்றன. இவைகளால் நாட்டின் கைத் தொழில்கள் இறந்துபடுவதோடு நாட்டுச் செல்வமும் நாட்டில் நில்லாதொழிகிறது. ஆமணக்கெண்ணெயும் தேங்கா யெண் ணெயும் எவ்வளவு நல்லன? அவைகளை யொழித்து மண் ணெண்ணெய்கொண்டு இடர்ப்படுவானேன்?

உணவுப்பொருள்களை நொறுக்க எத்துணை அந்நிய நாட்டுப் பொறிகள் வரவழைக்கப்படுகின்றன! பொறிகளால் நொறுக்கப்படும் பொருள்கள் பலதிற நோய்களை உண்டாக்கு மென்று அறிஞர்கள் அறைகூவியும் நம்மவர்கள் செவிசாய்க் கிறார்களில்லை. இயந்திரத்தால் நொறுக்கப்படும் அரிசி கூடாது என்று நீதிபதி இராமேசம் அவர்கள் எழுதிய கட்டுரை சென்ற 'நவசக்தி' பாலில் வெளிவந்தது. அதை நேயர்கள் கவனித்திருப்பார்கள். எவர் என்ன கூறினும் 'கற்றவர்' என்று வெளிவருவோர், தங்கல்வியை நாட்டுத் தொழிலை அழிப்பதற்கும் பிறநாட்டுப் பொருளைப் புகுத்துவ தற்கும் துணைப்படுத்தி வருகிறார். உணவுப் பொருளை நொறுக்கும் பொறிகள் மட்டுமா பிறநாட்டினின்றும் வரு கின்றன? வேறு பல உணவுப்பொருள்களும் பிறநாட்டினின் றும் போந்து நம்மவர்கள் வயிற்றில் புகுகின்றன. இவ்வாறு நம்மவர்களைக் கெடுக்குங் கல்வியா கல்வி?

உணவு போக ; உணவை உடைக்கும் பொறிகள் போக. உணவைச் சமைக்கும் அடுப்பு, பாத்திரங்கள் முதலியனவும் பரதேசிய மயமாகவா இருத்தல் வேண்டும் ? அநாவசியமாக நாட்டுச் செல்வம் ஏன் மற்ற நாட்டுக்குச் செல்லல்வேண்டும்? உண்கலன்களாதல் சுதேசியமா யிருக்கின்றனவா ? இல்லையே. இலையில்லையா ? குயவன் கலமில்லையா ? சுதேசியப் பற்று முறுகி யெழுந்து நிற்பின், அது நாட்டு மட்கலத்தில் உண்ணவுஞ் செய்யும். களிமண் அடுப்பில் மட்பானையில் சமைத்த உணவை மட்கலத்தில் உண்பது உடலுக்கு நலன் செய்யும். இது தத்துவ சாத்திரிகளால் ஏற்றுக்கொள்ளப்பட்ட உண்மை. 'நாகரிகம் நாகரிகம்' என்று நாட்டுச் செல்வத்தையும் நாட்டுக் கைத்தொழிலையும் அழிப்பது அறியாமை. அழிப்பது ஒருபால்கிடக்க. உடலுக்காதல் நலன் உண்டா? நாட்டையுங் குலைத்து உடலையுங் குலைத்துக்கொள்ள அறிவுறுத்துங் 'கல்வி' எத்தகைக் கல்வி ?

காரணமின்றி அநாவசியமாக நம்மவர்கள் கண்மூடிக் கொண்டு நாட்டின் செல்வ நிலையைப் பாழாக்குகிறார்கள். நாட்டுக்குச் செலுத்தவேண்டிய கடமைகளுள் தலையாயது நாட்டுப் பொருளைப் பயன்படுத்துவது. நாட்டுப் பொருளை மதியாது, அந்நியநாட்டுப் பொருளை வாழ்வில் பயன்படுத்திச் சுயராஜ்யக் கிளர்ச்சி செய்வதற்குப் பொருளில்லை. ஆதலால் ஒல்லும்வகை முயன்று நாட்டுப் பொருளை வாழ்வில் பயன்படுத்த உறுதிகொள்ளல் வேண்டும். நாட்டார் நாட்டுப் பொருளைப் பயன்படுத்தினால் நாட்டுத் தொழில்கள் வளரும். அந்தோ ! எத்துணை நாட்டுத் தொழில்கள் இறந்துபட்டன ! ஊசிக்கும் உப்புக்குமா பிறநாட்டை நோக்கல் வேண்டும் ? நாடு எந்நிலையை அடைந்துவிட்டது ! இவ்வளவுக்குங் காரணர் யாவர் ? 'கற்றோர் !' 'கற்றோர் !'

இக்கற்றோர், இனித் தங் கல்வியைப் பதவிப்போரிலும், பட்டப்போரிலும், தேர்தல்போரிலுஞ் செலவழியாது, கைத்தொழில் வளர்ச்சிக்குப் பயன்படுத்துவது அறிவுடைமை. இந் நல்வழியில் நின்றுழைக்கக் கற்றவர் ஒருப்படுவரேல் நாடு பாதி உரிமை பெற்றதாகும். நமது நாட்டில் எத்துணைத்

தொழில்கள் இருந்தன! அவைகளை நினைக்க நினைக்கக் கண்ணீர் பெருகுகிறது. பண்டைத் தமிழ் நாட்டில், ஒரு பகுதியில், ஒருமூலையில் நிலவியிருந்த கைத்தொழில், தொழிலாளர் வீதி முதலியன சிலப்பதிகாரத்தில் காணக் கிடக்கின்றன. நேயர்கள் அவைகளை உற்று நோக்குவார்களாக.

"வேயா மாடமும் வியன்கல இருக்கையும்
மான்கண் காலதர் மாளிகை இடங்களும்
கயவாய் மருங்கிற் காண்போர்த் தடுக்கும்
பயனற அறியா யவனர் இருக்கையும்
கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள்
கலந்திருந் துறையும் இலங்குநீர் வரைப்பும்
வண்ணமுஞ் சுண்ணமுந் தண்ணருஞ் சாந்தமும்
பூவும் புகையும் மேவிய விரையும்
பகர்வனர் திரிதரு நகர வீதியும்
பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்
கட்டு நுண்வினைக் காருகர் இருக்கையும்
தூசுந் துகிரும் ஆரமும் அகிலும்
மாசறு முத்தும் மணியும் பொன்னும்
அருங்கல வெறுக்கையோ டளந்துகடை அறியா
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகும்
பால்வகை தெரிந்த பகுதிப் பண்டமொடு
கூலங் குவித்த கூல வீதியும்
காழியர் கூவியர் கண்ணொடை யாட்டியர்
மீன்விலைப் பரதவர் வெள்ளுப்புப் பகருநர்
பாசவர் வாசவர் பன்னிண விலைஞரோ
டோசுநர் செறிந்த ஊன்மலி இருக்கையும்
கஞ்ச காரரும் செம்புசெய் குநரும்
மரங்கொல் தச்சரும் கருங்கைக் கொல்லரும்
கண்ணுள் வினைஞரும் மண்ணீட் டாளரும்
பொன்செய் கொல்லரும் நன்கலந் தருநரும்
துன்ன காரரும் தோலின் துன்னரும்
கிழியினுங் கிடையினுந் தொழில்பல பெருக்கிப்

பழுதில் செய்வினைப் பால்கெழு மாக்களும்
குழலினும் யாழினும் குரன்முத லேழும்
வழுவின் றிசைத்து வழித்திறங் காட்டும்
அரும்பெறன் மரபிற் பெரும்பாண் இருக்கையும்
சிறுகுறும் கைவினைப் பிறர்வினை யாளரொடு
மறுவின்றி விளங்கு மருவூர்ப் பாக்கமும்
கோவியன் வீதியும் கொடித்தேர் வீதியும்
பீடிகைத் தெருவும் பெருங்குடி வாணிகர்
மாட மறுகும் மறையோர் இருக்கையும்
வீழ்குடி உழவரொடு விளங்கிய கொள்கை
ஆயுள் வேதரும் காலக் கணிதரும்
பால்வகை தெரிந்த பன்முறை இருக்கையும்
திருமணி குயிற்றுநர் சிறந்த கொள்கையொ
டணிவளை போழுநர் அகன்பெரு வீதியும்
சூதர் மாகதர் வேதா ளிகரொடு
நாழிகைக் கணக்கர் நலம்பெறு கண்ணுளர்
காவற் கணிகையர் ஆடற் கூத்தியர்
பூவிலை மடந்தையர் ஏவற் சிலதியர்
பயிறொழிற் குயிலுவர் பன்முறைக் கருவியர்
நகைவே ழம்பரொடு வகைதெரி இருக்கையும்
கடும்பரி கடவுநர் களிற்றின் பாகர்
நெடுந்தே ரூருநர் கருங்கண் மறவர்
இருந்து புறஞ்சுற்றிய பெரும்பா யிருக்கையும்
பீடுகெழு சிறப்பிற் பெரியோர் மல்கிய
பாடல்சால் சிறப்பிற் பட்டினப் பாக்கமும்
இருபெரு வேந்தர் முனையிடம் போல
இருபாற் பகுதியின் இடைநில மாகிய
கடைகால் யாத்த மிடைமரச் சோலைக்
கொடுப்போர் ஓதையும் கொள்வோர் ஓதையும்
நடுக்கின்றி நிலைஇய நாளங் காடியில்............" (2-2-1927)

# வாழ்வு

உலகத்தில் வாழ்வு தாழ்வு என்ற இரண்டு சொற்கள் ஆட்சியில் இருக்கின்றன. உலகத்தில் வாழும் உயிர்கள் அனைத்தும் வாழ்வை விரும்புகின்றன; தாழ்வை வெறுக்கின்றன. வாழ்வும் தாழ்வும் உயிர்கள் முயற்சியைப் பொறுத்திருக்கின்றன. ஒருவன் முயற்சியால் வாழ்வுபெறுதல் கூடும்; மற்றொருவன் முயற்சியின்மையால் தாழ்வு பெறுதல் கூடும். 'பெருமையுஞ் சிறுமையுந் தான்தர வருமே' என்றார் அதிவீரராம பாண்டியரும்.

வாழ்வுக்கும் தாழ்வுக்கும் காரணம் ஊழெனச் சிலர் கூறுப. அந் நண்பர்கள் 'ஊழையும் உப்பக்கங் காண்பர் உலைவின்றித்-தாழா துஞற்று பவர்' என வரூஉந் திருக்குறளின் நுண்ணிய கருத்தை ஆராய்வார்களாக.

வாழ்வை இரு கூறுகப் பிரிக்கலாம். ஒன்று இகவாழ்வு; மற்றொன்று பரவாழ்வு. முன்னையது அநித்தியம்; பின்னையது நித்தியம். நித்தியமாகிய பரவாழ்வுக்கு அநித்தியமாகிய உலக வாழ்வு இன்றியமையாதது. நித்திய வாழ்விற்குக் காரணமாக உள்ள உலக வாழ்வை வெறுப்பது கடவுள் நெறியை வெறுப்பதாகும். ஆதலால், உலக வாழ்வைச் செழுமை செய்துகொள்ள வேண்டுவது உயிர்களின் கடமை.

உலக வாழ்வை முக்கூறுபடுத்தலாம். அவை, சமய வாழ்வு, சமூக வாழ்வு, அரசியல் வாழ்வு என்பன. இம் மூன்றனுள் சமய வாழ்வின் பொருட்டு ஏனைய சமூக வாழ்வும், அரசியல் வாழ்வும் வகுக்கப்பட்டன. சமய வாழ்வைக் கருதாத சமூக வாழ்வும் அரசியல் வாழ்வும் கேடு தருவனவாம். சமயமென்னும் உயிருக்குச் சமூகமும் அரசியலும் உடல்போன்றன. சமூகத்தை எலும்பாகவும், அரசியலை இரத்தமாகவுங் கொள்ளலாம். கீழ்நாட்டவர் சமய வாழ்வு கருதியே சமூக வாழ்வையும், அரசியல் வாழ்வையும் ஒழுங்குபடுத்தினர். மேல்நாட்டவர் சமய வாழ்வைக் கருதாது, சமூக வாழ்வையும் அரசியல் வாழ்வையும் அவலம்பித்து வருகின்ற

னர். இக்கூற்றை மேல்நாட்டுப் பொருள்நூல்கள் வலியுறுத்தும். சமய வாழ்வை நாடாத சமூகமும் அரசியலும் உலகத்தில் அசத்தியத்தையும் தீயொழுக்கத்தையும் நிரம்பச் செய்யும். சமய வாழ்வை நாடும் சமூகமும் அரசியலும் தெய்வத் திருவருள் வழியை வளர்க்கும். சமய ஞானத்தை நிர்மூலமாக்கும் சமூகத்தால் ஆக்கப்படும் அரசியலில் சிக்குற்று இடர்ப்படும் நாட்டு வாழ்வினும் காட்டு வாழ்வு சிறந்ததாகும். ஆதலால் எவ்வெவ்விடத்தில், சமய வாழ்வைக் குன்றச் செய்யும் சமூக வாழ்வும் அரசியல் வாழ்வும் நிலவுகின்றனவோ, அவைகளை அழிக்க அறிஞர் முயலல்வேண்டும். அக் கடனை ஆற்ற முன்வாராத அறிஞர் அறிஞராகார். அவர் மக்கட் பதடிகளாவர்.

சமயவாழ்வு என்பது, அறிவு வடிவமான கடவுளுண்மையைக் காணவும், அவ்வுண்மையைக் கண்டின்புறவும், அவ்வின்பத்தில் இடையறாது திளைப்பவும், கொல்லாவிரதம் முதலிய ஒழுக்க நெறிபற்றி நடப்பது. ஒவ்வோர் உள்ளத்தையுங் கோயில்கொண்டு, அதைச் செலுத்துங் கடவுள் குறிப்புவழி நடப்பது, சமயவாழ்வு என்று இன்னும் நுட்பமாகக் கூறலாம். சமய வாழ்வின் நோக்கம், உலகத்தில் தனக்கென வாழாமையும், பிறர்க்கின்னா செய்யாமையும் வளர வேண்டுமென்பது. இந்நோக்கம் நிறைவேறும்பொருட்டு உலகத்தில் பலதிறச் சன்மார்க்கத்துறைகள் தோன்றியிருக்கின்றன. அத்துறைகள் எவ்வித இடையூறுமின்றி நடைபெறுவதற்குச் சில முறைப்பாடுகளும் அமைப்புகளும் வேண்டற்பாலன. அம்முறைப்பாடுகளும் அமைப்புகளும் ஒன்றுபட்டு நடைபெறுங்கால், சமூக வாழ்வும் அரசியல் வாழ்வும் அவைகளினின்றும் அரும்பும்.

சமூகவாழ்வு, காலதேச வர்த்தமானத்துக் கேற்றவாறு பல முகங்கொண்டு நடைபெறுவது. சமூக வாழ்வைச் செம்மை செய்யும் வழக்க ஒழுக்கங்கள் யாண்டும் என்றும் ஒரே தன்மையனவா யிருக்கமாட்டா. அவை காலத்துக் கேற்றவாறும் தேசத்துக் கேற்றவாறும் மாறுபட்டுக் கொண்டே வரும். அவை காரியத்தில் மாறுபடுவன போலத்

தோன்றினும், காரணத்தில் மாறுபடுவதில்லை. உலகத்தில் பலதிறமாக நிலவும் வழக்க ஒழுக்கங்கள் ஆன்மாவின் விளக்கத்துக்கு அனுஷ்டிக்கப்படுகின்றன என்பது அறிஞர் பலர் ஒப்ப முடிந்த உண்மையாம். ஆதலால், சமூக வாழ்வு, சமய வாழ்வுக்கு இன்றியமையாத தென்பது செவ்விதிற் புலனாகும்.

அரசியல் வாழ்வு, சமூக வாழ்வையும், அதன்வழிச் சமய வாழ்வையும் வளர்ப்பது. அரசில்லாத நாட்டில் கொலையும், கொள்ளையும், மாற்றார் படையெழுச்சியும், குழப்பமும், வறுமையும், பிறவும் தாண்டவம் புரிந்து நிற்கும். இவைகளால் சமூக வாழ்வு பண்படாது. சமூக வாழ்வு வளம் பெறாத இடத்தில் சமய வாழ்வும் வளம்பெறாது. அரசால் நாட்டில் அமைதியும் செல்வமும் ஒழுங்கும் நிலவும். அதனால் சமூகம் ஒழுங்குபட்டுச் சமயவாழ்வில் தலைப்படும். ஆதலால் அரசியல் வாழ்வின்றி ஏனைய இரண்டு வாழ்வும் நிலவுதல் அருமை என்பது உன்னற்பாலது. உலகத்தில் மக்கள் வாழ்விற்கெல்லாம் அடிப்படை அரசியல் என்பதை ஈண்டு ஒருமுறைக்குப் பன்முறை வலியுறுத்துகிறோம்.

பண்டைக் காலத்தில் நமது பரத கண்டத்தின் வாழ்வு எந்நிலையிலிருந்தது என்பதைப்பற்றி நாம் பலமுறை எழுதியுள்ளோம். ஆனால் ஈண்டு ஒன்றை மட்டும் குறிப்பிடுகிறோம். அது, பண்டைக் காலத்தில் பரத கண்டத்தில் சமய வாழ்வு செழுமை பெற்றிருந்தது என்பது. பழைய காலப் பாரதமக்கள் சமய ஞானிகளாக வாழ்ந்தார்கள் என்று உலகமே உரைக்கும். பாரதவாசிகள் உழைப்பெல்லாம் சமய ஞான உழைப்பேயாகும். அவர் பேச்சும் எழுத்தும், சமயப் பேச்சும் எழுத்துமாகவே யிருந்தன. இந்திய நூல்களிற் பெரும்பான்மையன சமய நூல்களேயாகும். எல்லாவற்றிற்கும் இந்தியர் கடவுள் கடவுள் என்று கடவுள்மேல் பாரத்தைச் சுமத்துவர். கொடிய விலங்குகள் எதிர்ப்பினும், நோய்வாய்ப்படினும், மாற்றார் வயப்படினும், வேறு பல தீமைகள் சூழினும் இந்தியர் அவைகளை விலக்கக் கடவுள் திருவருளையே வேண்டுவர். இந்தியர், தாம் பெறும் பேறுகள்

எல்லாம் கடவுள் அருள் என்றே கருதிவந்தனர்; எல்லாம் கடவுள் மயம் என்ற உயரிய ஞான வாழ்வையே தமக்குரிய வாழ்வாகப் போற்றிவந்தனர். நம் முன்னோர்கள் சமய வாழ்வில் இடையீடின்றித் தலைப்பட்டு வாழ்ந்துவந்ததை நோக்குழி, நமது நாட்டில் சமூக வாழ்வும், அரசியல் வாழ்வும் எந்நிலை பெற்றிருந்தன என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளங்கும்.

அரசியலும் சமூகமும் நன்னிலை பெற்றிருந்தமையால், தேசத்தில் கொலையும், கொள்ளையும், வேறு பல குழப்பமும் நிகழாதிருந்தன. மக்கள் வயிற்றுக்கு வனவாசஞ் செய்யும் வாழ்வு ஏற்படவில்லை. எல்லாம் நலமாயிருந்தன. கொடுமையில்லா வாழ்வைச் செங்கோன்மை நல்கிக்கொண்டிருந்தது. சமய வாழ்வு எவ்வித இடையூறுமின்றி ஓங்கி வளர்ந்தது. எந்த நாட்டில் சமய வாழ்வு நலம்பெறுகிறதோ, அந்த நாட்டில் சமூகவாழ்வும் அரசியல்வாழ்வும் வளம்பெறும். கீழ்நாடு சமயவாழ்வில் வெற்றிபெற் றிலங்கியதற்குக் காரணம், மனித சமூகமும் அரசியலும் தெய்விக வழியில் நடைபெற்றுச், சமய வாழ்வுக்குத் துணைசெய்து வந்தமையேயாகும். மேல் நாடு இன்னும் சமய வாழ்வு பெறுது இடர்ப்படுதலால், பேய்ச்சமூகமும் பேய் அரசியலும் ஆண்டு நடைபெறுகின்றன. சமயவாழ்வைக் குறிக்கொண்டு சமூகமும் அரசியலும் என்று நடைபெறுமோ, அன்றே மேல்நாடு தெய்வ நாடாகும். (கிறக)

சமயவாழ்வு மலர்ந்து, ஞானமணங் கமழ்ந்துகொண்டிருந்த நமது பாரதநாட்டிலும், சமயவாழ்வு இப்பொழுது குன்றிவருகிறது. இப்பொழுது சமயவாழ்வு போலியாகி மாழ்கிறது. சமயவாழ்விலும் வேஷம் நுழைந்துவிட்டது. மடங்களும், கோயில்களும் சீர்குலைந்து வருகின்றன.

பண்டைக்காலத்தில் கடவுளைக் கண்டதாகவும், அவரோடு பேசியதாகவும் பல பெரியோர்கள் தங்கள் அனுபவத்தை வெளியிட்டிருக்கிறார்கள். அப்பெரியோர்கள் மொழிகளைப் பாராட்டிப்பேசும் வாய்ப்பேச்சுமதமே இப்பொழுது

நிலவுகிறது. பண்டைப் பெரியோர்களைப்போலக் கடவுளைக் காண முயல்கிறவர்கள் எத்துணைபேர்? அம்முயற்சி செய்வோர் அரியராயினர். 'மாடர்ன் ரிவியு' பத்திரிகை, சமயவாதிகளை நோக்கி, "நாம் பண்டை முனிவர்கள் கண்ட நிலையைக் குறித்துப் பேசுகிறோமா? தற்போதைய நிலையைக் குறித்துப் பேசுகிறோமா? பழையகாலத்தில் கடவுள் உயிர்களிலிருந்து பேசியதுபோல, இப்பொழுது நம்முடைய ஆன்மாக்களில் ஆண்டவன் பேசுவதைக் கண்டு வருகிறோமா? வேத மொழிகளுக்கு நாம் செவிகொடுக்கிறோமா? ஜனநாயக ஒலிக்குக் கீழ்ப்படிகிறோமா? நம்முடைய ஆன்மாவிலிருந்து எழும் கடவுள் ஒலிக்கு நாம் செவிசாய்க்கிறோமா? * * *" என்று கேட்டிருக்கிறது. வாய்ப்பேச்சு மதம், இப்பொழுது வாழ்வு பெற்றிருக்கிறதன்றி, அனுபவ சமயம் இப்பொழுது தாழ்வே பெற்றிருக்கிறது.

சமயவாழ்வின் நிலை இவ்வாறாகச் சமூகவாழ்வு நிலை எவ்வாறிருக்கிறது என்பதைச் சிறிது நோக்குவோம். சமூக வாழ்வு தலைதடுமாறி யிருக்கிறது. சமூக ஒற்றுமை அறவே குலைந்துவிட்டது. எல்லாத் தேசத்து அநாசாரங்களும் நமது தேசத்தில் குடியேறி யிருக்கின்றன. இந்திய சமூகத்தின் மேனி குலைந்துவிட்டது. சமூகவாழ்வு, சமயவாழ்வுக்கு அடிப்படை என்ற எண்ணம் அழிந்துபட்டது. விலங்கியல்பு சமூகத்தில் பரவிவருகிறது. நமது சமூகம் தற்போது ஒரு பெற்றியதாயில்லை. கீழ்நாட்டு வழக்க ஒழுக்கங்களைச் சிலர் கொண்டுள்ளார். மேல்நாட்டு வழக்க ஒழுக்கங்களைச் சிலர் கொண்டுள்ளார். சிலர் இரண்டுக்கும் இடையில் திரிசங்கு போல் தொங்குகிறார். பழைய காலத்தில் சாதி பேதங்களிருந்தும் சண்டைகள் இல்லாமல் இருந்தன. இப்பொழுது சாதிச்சண்டையும் பகைமையும் கொழுந்துவிட்டெரிகின்றன. இந்தியாவிலுள்ள சாதிப் பகைமை, ஜர்மெனி-பிரான்சு பகைமைக்கும் ஈடாகாது. இந்திய சமூக இயல்பு யாது என்ற கேள்வியை ஒரு தேசத்தான் பொறிப்பானாயின், அதற்கு விடையிறுக்க இயலாத நிலையில் நம்மவர்கள்

இருக்கிறார்கள். நம்மவர்கள் சமூகவாழ்வின் குலைவு, ஆத்ம ஞான வாழ்வைச் சிதைத்துவருகிறது.

நமது நாட்டு அரசியல் வாழ்வைப்பற்றி விரிவுரை கூற வேண்டுவதில்லை. நமக்கென எவ்வித அரசியலும் இல்லை. இந்தியாவின் இயல்பை அறியாத இங்கிலாந்துபார்லிமெண்ட், இந்திய அரசியல் குழவியை ஈன்றுவருகிறது. அக்குழவி, அதிகாரவர்க்கத்தார் வசத்தில் ஒப்புவிக்கப்படுகிறது. அஃது இந்தியாவில் மருள்போல் உருண்டுகொண்டிருக்கிறது. இந்தியாவிற்கெனத் தனி அரசியல் (சுயராஜ்ஜியம்) இல்லை. இவ்வொன்று இந்தியர் வசமிருப்பின், ஏனைய இரண்டும் தாமே ஒழுங்குபெற்றுவிடும்.

இந்தியாவின் சமயம், சமூகம், அரசியல் ஆகிய மூன்றும் தாழ்வுபெற்றிருக்கின்றன. அவைகளைப் பண்டை வாழ்விற்குக் கொண்டுவரவேண்டுவது எவர் கடமை? இந்தியர் கடமையே யாகும். அது பிறர் கடமையாகாது. இந்தியாவின் வாழ்வுக்கு இந்தியரே உழைத்தல் வேண்டும். ஏனையோரை நம்புவது ஆடு கோனுயை நம்பிச்சென்ற கதையாக முடியும். இந்தியர் எவ்வழியில் தம் வாழ்வை நிறுத்திக் கொள்ளவேண்டும் என்பது கவனிக்கப்படல்வேண்டும்.

இப்பொழுது இந்தியாவில் சிலர் சமயத்துக்கும், சிலர் சமூகத்துக்கும், சிலர் அரசியலுக்கும் உழைத்துவருகிறார். இவரனைவரும் ஒன்றுபட்டுழைக்க முயலல்வேண்டும். எல்லாவற்றிற்கும் அடிப்படை அரசியலாயிருத்தலால், எல்லாரும் அவ்வியலைப் பண்படுத்தும் வழியில் தஞ்சிந்தையைச் செலுத்தல்வேண்டும். அரசியலின்மீது கவலை செலுத்தாது, சமயத்துக்கும் சமூகத்துக்கும் மட்டும் உழைப்பது கானல் நீரைப் பருக முயன்றவன் கதையாக முடியும்.

அரசியல் இயக்கங்கள் பலவற்றுள்ளுஞ் சிறந்தது காந்தியடிகளது இயக்கமாகும். அவ்வியக்கத்தைத் தமக்குரிய சமய இயக்கமாகவும் சமூகஇயக்கமாகவும் ஒவ்வோர் இந்தியரும் கருதி உழைத்தல் வேண்டும். அவ்வியக்கத்தால் நமக்குரிய அரசியல்வாழ்வு ஏற்படும். அதனுல் சமூகவாழ்

வும், சமயவாழ்வும் பண்புபெறும். இம்மூன்று வாழ்வும் பழைய இந்தியாவின் இகவாழ்வை உயிர்ப்பிக்கும். அநித்தியமாகிய இகவாழ்வு செம்மை பெறுவது நித்தியமாகிய பரவாழ்வுக்கு வழிகோலுவதாகும்.

ஆதலால், சமயவாதிகளே! சமூக போதகர்களே! அரசியல் ஞானிகளே! நீங்கள் அனைவரும் ஒன்றுபட்டு உழையுங்கள். இந்தியாவின் பந்தம் நீங்கும்; ஆத்ம ஒளி வீசும்; ஆத்திகம் பெருகும்; இந்தியா வாழ்வுபெறும்.

(25-3-1921)

# நோயற்ற வாழ்வு

'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்பது பழமொழி. நோயில்லா வாழ்வே வாழ்வு. நோயுடை வாழ்வு எத்தன்மையதாயினும் அது வாழ்வாகாது. ஆதலால், நோயின்றி வாழவே ஒவ்வொருவரும் முயலல்வேண்டும்.

நோயுற்ற வாழ்வை எவரேனும் விரும்புவரோ? எல்லாரும் நோயற்றவாழ்வையே விரும்புவர். வெறும் விருப்பம் என்ன நல்கும்? விரும்பும்வழி நடத்தல்வேண்டும். நடக்கை நல்வாழ்வளிக்கும்.

நோயற்ற வாழ்விற்குரிய முறைகளைப்பற்றி இது போழ்து வெளிவரும் சஞ்சிகைகட்கும் நூல்கட்கும் அளவில்லை. சஞ்சிகையும் நூல்களும் பெருகியுள்ள இந்நாளில் நோய் பெருகுகிறதா அல்லது அருகுகிறதா என்றுநேயர்கள் கூர்ந்து ஓர்வார்களாக. பண்டைக்காலமக்கள் இத்துணைச் சஞ்சிகைகளையாதல் நூல்களையாதல் எழுதி வெளியிட்டார்களில்லை. அவர்கள் நோயற்ற வாழ்வு பெற்று இன்பம் நுகர்ந்தார்கள். அந்நாளில் இவ்வளவு நோய்ப்பெருக்கம் இல்லை. காரணமென்ன? அவர்கள், இயற்கையோடியைந்த வாழ்வு நடாத்தியதும், அதற்கேற்ற வண்ணம் நாடு நகரங்களும் அமைந்திருந்ததுமாகும்.

இந்நாளில் மக்கள், நாகரிகம் என்னும் பெயரால், இயற்கைக்கும் தங்கட்கும் உள்ள தொடர்பை யுணராது, செயற்கை நரகிடை வீழ்ந்து, பேய்வாழ்வு நடாத்துகிறார்கள். அவ்வாழ்வுக்கேற்றபடி நாடும் நகரமும் பிறவும் அமைகின்றன. இந் நெருக்கிடைப்பட்டு இடுக்கணுறும் மக்கள் நோயற்ற வாழ்வெனுங் குறைவற்ற செல்வத்தைப் பெறாதொழிகிறார்கள்.

நோயற்ற வாழ்விற்குரிய இயற்கை முறைகள் பலபடக் கிடக்கின்றன. அவைகளில் சிலவற்றை ஈண்டுப் பொறிக்கிறேன்.

முதல் முதல் மலச்சிக்கலை எடுத்துக்கொள்வோம். மலச்சிக்கல் எல்லா நோய்கட்குந் தாயாகும். மலச்சிக்கல் இல்லா மனிதன், நோயை அறியாதவன் என்க. நாடோறுங் கழிய வேண்டிய மலம், கழியாமலும், சிக்குற்றும், சிறிது சிறிது கழிந்துங் கிடப்பது மனிதனை நோய்வாய்ப்படுத்தும். மலச்சிக்கலால் குடலுறுப்புக்கள் தத்தங் கடனைக் குறைவற ஆற்றாதொழியும். அதனால் அவ்வுறுப்புக்களின் சினைகளும், அச்சினைகட்கு ஊக்கமூட்டும் அரும்புகளும் சோர்வடையும். அச்சோர்வு மண்ணீரலைப் பற்றும். மண்ணீரலின் சவலை, குருதியோட்டத்தைத் தகையும். அத்தகைவால் பேருயிர்க் கருவிகளுக்குப் பலதிற ஊறுகள் நிகழும். அந்நிகழ்ச்சி உடலுறுப்புக்கள் பலவற்றின் இயக்கத்தைக் கெடுத்துப் பிணிக்கும். அப்பிணியால் விளையுந் துன்பமே நோயென்பது. நோயென்பது ஒரு பொருளன்று. விரிக்கிற் பெருகும். மலச்சிக்கல், நோய்களுக்குப் பிறப்பிடம் என்று சுருங்கக் கூறலாம். ஆதலால், மலச்சிக்கலுறாத வழியில், வாழ்வு நடாத்தவேண்டுவது மக்களது தலையாய கடன்.

எண்ணமே வாழ்வு என்று கூறல் மிகையாகாது. 'அகமே புறம்' என்னும் ஆன்றோர் மொழியும் கருதற்பாலது. எண்ணத்துக்கும் உள் உறுப்புக்கட்குந் தொடர்பு உண்டு. எண்ணமின்றி மக்கள் வாழ்தல் இயலாது. எண்ணமின்றி வாழுமாறு எவ்வறிஞருங் கூறார். அவ்வெண்ணங்கள் நல்லனவா

யிருத்தல் வேண்டும். அவை தீயனவாயிருந்தால் என்னை என்று சிலர் வினவலாம். நல்லெண்ணங்கள் உறுப்புக்களை ஓம்பும் அமிழ்தாகின்றன. தீய எண்ணங்கள் அவைகளை எரிக்கும் நஞ்சாகின்றன. அழுக்காறு அவா வெகுளி முதலியன ஒருவனுக்கு நல்லுடல் வழங்கா. அன்பு அருள் பொறுமை முதலியன ஒருவனுக்கு நல்லுடல் வழங்கும். தீய எண்ணங்கள் ஜீரண உறுப்புக்களைத் தாக்கும் இயல்பின. அவை நாளடைவில் உறுப்புக்களின் உரத்தைக்கெடுத்து மலச்சிக்கலை உண்டு பண்ணும். எண்ணங்களில் மக்கள் வாழ்விற்குப் பொருந்திய இயற்கை எண்ணங்களும் உண்டு; வாழ்விற்குப் பொருந்தாத செயற்கை எண்ணங்களும் உண்டு. ஆகவே, மனிதன் இயற்கைக்கு அரணாகும் எண்ணங்களை உன்னி வாழ்வானாக. எண்ணத்துக்கேற்ற செயலே நிகழும்.

அகத்தை நல்ல எண்ணங்களால் தூய்மை செய்வது போலப், புறத்தை நீராலும், காற்றாலும், ஞாயிற்றொளியாலும் தூய்மைசெய்தல் வேண்டும். நீரும், காற்றும், ஒளியும் மனிதனை வளர்க்கும் இயற்கைத் தெய்வங்கள் என்று சொல்வேன். ஊற்று நீரில் நாடோறுங் காலையில் தலைமுழுகல் வேண்டும். மூழ்குதற்குத் தண்ணீரே சால்புடைத்து. நரப்புக்கட்குத் திண்மையும் உரமும் ஊட்டும் நீர்மை தண்ணீருக்குண்டு. நறுந்தண்ணீர் கிடையாவிடத்து வெந்நீரில் மூழ்குவது நலம். வெந்நீரையும் தண்ணீரையும் கலந்து மூழ்கல் நலன் பயப்பதாகாது. நோயாளர், மெலியர், ஒரு சில மூளை உழைப்பாளர் முதலியோர் வெந்நீரில் மூழ்கல் நலமென்று சில மருத்துவ அறிஞர் கூறுகிறார். தண்ணீரினும் வெந்நீர் அழுக்கை விரைவில் போக்கும். ஆனால் தண்ணீரைப்போல வெந்நீர் நரப்புக்களுக்குத் திண்மை வழங்காது.

தலை முழுகும்போது இந்நாளில் சிலர் 'சோப்'பைக் கொண்டு உடலைத் தேய்த்துத் தேய்த்துக் கழுவுகிறார். 'சோப்'பை அதிகமாகப் பயன்படுத்துவதால் தோற்பசை குன்றும். பச்சைப்பயறு மிகப் பொருந்தியது. நமது நாட்டு நிலைக்கு அஃது உரியது. எண்ணெய் தேய்த்து நீராடும் வேளையில் சீயக்காய் தேய்த்துக்கொள்வது நலம்.

நறுங்காற்று உடலில் படருமாறு வாழ்தல் வேண்டும். நாட்டின் தட்பவெப்பநிலை யுணராது, கற்றோர் சிலர், குளிர் மிகுந்த நாட்டாரது உடைக்கோலந் தாங்கித் திரிவது, உடல் வளத்துக்குக் கேடுசூழ்வதாகும். காற்றின் நுழைவைக் கடியாத மெல்லிய போர்வை நமது நாட்டார்க்குச் சாலும். நறுங்காற்றை மூக்கின்வழி ஈர்த்து விடும் பயிற்சி செய்வது நுரையீரலெனுங் காற்றுப்பையைக் காப்பதாகும். நுரையீரலுள் தூய தீங்காற்றுச் சுழன்று சுழன்று திரியப்பெறாத வாழ்வுடையோர் காசநோய்க்கு எளிதில் இரையாவர். மலக்குழிகளும், முடைநீர்க்கால்களும் மிடைந்துகிடக்கும் நகரங்களில் தூய தீங்காற்றுப் பெருமிதமாக உலவாது. மலக்குழி, முடைநீர் முதலிய அழுக்குகளினின்றெழும் நஞ்சு, இயற்கைக் கடவுள் வழங்கும் நறுங்காற்றில் நுழைந்து, அதன் தூய்மையைக் குலைத்து, வெம்மைப்படுத்துகிறது. அவ்வெங்காலிடையுலவி, அதை முகருவோர்க்குக் காசப்பேய் பிடியாதொழியுமோ? தற்கால நாகரிகவாழ்வு மிகுந்த நகரவாழ்வை நரக வாழ்வு என்று சொல்லாது வேறென் சொல்வது?

ஞாயிற்றொளி உடல் வாழ்விற்கு அமிழ்தம்போன்றது. அவ்வொளியில் ஒருவித உணவும் உண்டு. அவ்வொளி படரும் இடங்களில் மனிதன் வாழ்தல்வேண்டும். காலைமாலைகளில் ஞாயிற்றொளி உடலில் படரச் சிறிது நேரம் நிற்பது நலம். அச்சிறுநேரத்துக்குள் உடலின் அகத்தே தேங்கியுள்ள நஞ்சு, வியர்வைவாயிலாக வெளியே வரும். அந்நஞ்சு, வியர்வைவாயிலாக வெளியே வாராதொழியுமேல், அஃது உள்ளே தங்கி, உறுப்புக்களை அரித்து அரித்துப் புண்படுத்தும்.

'காலைவெயில் பித்தம்' என்று நமது நாட்டார் சொல்வது வழக்கம். அவர் கூற்றை ஈண்டு ஆராய யான் புகவில்லை. ஞாயிற்றொளியில் மூழ்குதற்குரிய காலைநேரம் எட்டுமணியன்று; ஒன்பது மணியன்று. ஞாயிறு செவ்விய கோலத்தோடு காட்சியளிக்கும்போது, அஃது உமிழும் ஒளியிடைச் சிறிதுநேரம் நிற்பது பித்தத்தை யுண்டுபண்ணாது. வைகறைத் துயிலெழுந்து காலைக்கடன்களை முடித்துச்

செஞ்ஞாயிற்றின் ஒளியில் மூழ்குவது சிறப்பு. அவ்வேளையில் ஞாயிறு மிகத் தூய உயிர்ப்பை (Ozone) வழங்குகிறது. அவ்வுயிர்ப்பு வாழ்விற்கு இன்றியமையாத ஜீவாதாரம்.

உடற்பயிற்சிகள் பலதிறத்தன. அவைகளை ஈண்டு விரிக்கிற் பெருகும். உடற்பயிற்சி மிக மிக இன்றியமையாதது. உடற்பயிற்சியின்றி ஒருவன் நாடோறுஞ் 'சோப்'பைக் கட்டிக் கட்டியாகத் தேய்த்துக் குளித்தாலும் பயன் விளையாது. குளித்தலின் பயன், தோலழுக்கை மட்டுங் கழிப்பதன்று. உள்ளேயுள்ள நஞ்சு, மயிர்க்கால்கள் தோறும் வெளியே வருமாறு, வியர்வை சொட்டச் சொட்டப் பயிற்சி செய்து, பின்னைச் சிறிதுநேரங் கடந்து நீராடல், பொருளுணர்ந்து கடனாற்றுவதாகும். உடற்பயிற்சி செய்யாத ஒருவனது உடலில் வியர்வை அரும்புதல் அரிது. அவன் தோலைக் கழுவ இரண்டுமணிநேரம் நீராடினாலும் மெய்ப் பயன் விளையாது. வெயிலிலே வியர்வை சொட்டச்சொட்டத் தொழில் புரிவோனுக்குள்ள புற நலனும் அக இன்பமும், படுக்கையில் கிடந்து, பலவகை உண்டியை மெல்லாது விழுங்கிக் கைகால் அசையாமல் வாழ்ந்து ஓராள் உடல்தேய்க்க மற்றோராள் நீர்சொரியக் குளிக்குஞ் செல்வனுக்கு உண்டோ? வியர்வை சொட்டச் சொட்டப் பயிற்சி செய்து பின்னைச் சிறிது நேரம் தாழ்த்து நீராடுதல் வேண்டும்.

உடற்பயிற்சிக்குரிய நேரம் காலையும் மாலையுமாகும். இருவேளை செய்ய இயலாதார் காலையில் மட்டும் செய்வது நலம். காலையில் இயலாதார் மாலையில் ஆற்றலாம். காலை நேரம் மிக உரியது.

பலதிற முரட்டுப் பயிற்சிகளில் தலைப்பட இயலாதார் பந்தாடலாம்; நடக்கலாம்; தோட்டவேலை செய்யலாம். தோட்டவேலையில் சிறப்பும் பயனும் உண்டு. பந்தாட்டத்தில் சிலபோழ்து பரபரப்பெண்ணமுறும். நடையில் சிலபோழ்து மனம் வேறுபடும். இவை எல்லார்க்கும் எப்பொழுதும் நிகழ்வதில்லை; சிலவேளைகளில் சிலர்க்கு நிகழ்வதுண்டு. தோட்டவேலையில் அவ்விதக் குறைபாடுகள் நிகழ்வதற்கு இடனில்லை. அவ்வேலை, புலன்களையும் மனத்தையும்

ஒன்றுபடுத்துகிறது. அவரவர் தத்தம் உடல் வளத்தை அளந்துணர்ந்து, அதததற்கேற்றவண்ணம், உரிய பயிற்சி இஃதெனத் தெரிந்துகொள்வாராக.

நீர், காற்று, ஒளி மூன்றும் உணவுப்பொருள்களேயாம். இவைகளுடன், இவ்வுலகில் உழைத்து வாழ்வதற்கு இன்றியமையாத சில இயற்கைப் பொருள்களை உணவாக அருந்தலாம். பழங்கள், காய்கள், கீரைகள், பருப்புகள், தானியங்கள் முதலியவற்றுள், நாட்டுநிலை உடல்நிலை முதலியவற்றுக்குப் பொருந்திய சிலவற்றை உண்ணலாம். பழங்களில் 'ஆரஞ்சு' மிகப் பொருந்தியது. கொட்டைத்திராட்சை சாப்பிடலாம். காய்களில், அவரை-கத்திரி-வண்டை முதலிய இனங்கள் நல்லன. கீரைகளில், அறைக்கீரை-பொன்னாங்கண்ணி-வல்லாரை-தூதுளை - மணித்தக்காளி-பசலை-வசலை - தாளி முதலிய சில வகைகளைச் சிறப்பாகக் குறிப்பிடலாம். பருப்புகளில், நிலக்கடலை வாதுமை-சாரை முதலியன சிறந்தன. கடலைப்பருப்பு மொச்சைக்கொட்டை முதலியவற்றை விலக்குதல் நலம். தானியங்களில், கேழ்வரகு - அரிசி - கோதுமை இவைகளைச் சிறப்பாகச் சொல்லலாம்.

நமது தமிழ்நாட்டார் பெரிதும் அரிசியை அவித்துச் சோறாக்கி யுண்கிறார். இயந்திரத்தால் நன்றாகக் குத்தப்பட்டுத் தவிட்டின் சத்தும் முளைச்சத்தும் நீங்கப்பெற்ற அரிசி முற்றும் நீக்கப்பெறல்வேண்டும். இப்பொழுது நாட்டாரைப் பீடித்துத் துன்புறுத்தும் பலதிற நோய்கட்குக் காரணமாக நிற்பது இயந்திரங்களால் நன்கு தீட்டப்பெற்ற அரிசியாகும். இந்நாளில் எங்கணும் அவ்வரிசி விற்கப்படுகிறது. எங்கணும் நகராண்மைக் கழகங்களும், நாட்டாண்மைக் கழகங்களும், அவைகளைத் தொடர்ந்து அரசியல்கட்சிப் போர்களும், பிணக்குகளும் நாளுக்குநாள் பெருகுகின்றன. இவைகள், மக்கள் வாழ்விற்கு இன்றியமையாத உணவுப் பொருளாகிய அரிசிக்கு உற்றுள்ள இடரைக் களைய முற்படுகின்றனவா? இல்லையே! மக்களே ஒல்லும்வகை முயன்று, நெல்லை வீட்டிலேயே குத்திக், கொழியல் அரிசிபெற உறுதிகொள்வார்களாக. நெல் குத்துவதும் ஒருவித உடற்பயிற்சியாகும்.

கள், காபி, தேநீர், கொக்கோ முதலியன பொருந்தாப் பானங்கள். இவைகளை விலக்குதல் நல்லது. இவைகட்குப் பதிலாகக் கேழ்வரகுக் கஞ்சி, மோர், பழரசம், இன்ன பிற வற்றைக் கொள்ளலாம்.

புலால் உணவு விலக்கப்படல்வேண்டும். நம் முன்னோர்கள் ஜீவகாருண்யத்தை அடிப்படையாகக் கிளத்திப் புலால் உணவை மறுத்தார்கள். இப்பொழுது மேல்நாட்டு அறிஞர்கள் உடற்கூற்றுத் தத்துவங்களைக் காரணமாகக் கிளத்திப் புலால் உணவை மறுத்துவருகிறார்கள். ஆதலால், புலால் உணவைத் தொலைக்க ஒவ்வொருவரும் முயலல்வேண்டும். புலாலில் உரமும் வீரமும் இருக்கின்றன என்று கூறுவோர் தத்துவநுட்பங்களை உணராதாரென்க. நிலக்கடலை, வாதுமை, சாரை இவைகளிலுள்ள கொழுமை, புலாலுக்கு இல்லை என்றுமட்டும் ஈண்டுக் குறிப்பிட்டு மேலே செல்கிறேன்.

உறக்கம் வாழ்விற்கு வேண்டற்பாலது. உறக்கமாவது மன ஓய்வு. அவ்வோய்வு, உடற்பயிற்சி, உணவு, உழைப்பு முதலியவற்றைப் பொறுத்து நிற்பது. ஒருவனது உடல் நிலையை அவனது உறக்கத்தைக்கொண்டு அளந்து கூறலாம். இரவில் உறக்கம் வாராது இடர்ப்படுவதினும் சிறந்த நரகத் துன்பம் வேறில்லை. உடற்பயிற்சி, பொருந்திய உணவு முதலியன கொள்ளாது, உறக்கத்துக்கெனச் சிலர் மருந்துண்கிறார்; சிலர் மதுபானஞ் செய்கிறார். இஃது அறியாமை. மருந்தும் பானமுமூட்டும் உறக்கம், மனிதனை விரைவில் ஈமத்துக்கு ஈர்ப்பதாகும். உடற்பயிற்சி செய்து, பொருந்திய உணவுகொண்டு, உழைத்து, உறக்கத்தை ஒழுங்குபடுத்தலே அறிவுடைமை.

இந்தியநாட்டில் வாழ்வோர் கிழக்குப்பக்கந் தலை வைத்து உறங்கல்வேண்டும். இடப்பக்கஞ் சாய்ந்து உறங்குவது இயற்கை. இதற்கு மாறுபட்டு ஈரல் நோயுடையார் உறங்குவர். அந்நோய் தீர்ந்ததும் அவர் இடப்பக்கம் சாய்ந்து உறங்குவர்.

படுக்கைஅறை முதலியவற்றின்மீது கவலைசெலுத்தல் வேண்டும். எல்லாவற்றையும் காற்றும் ஒளியும் படரும்

முறையில் வைத்தல்வேண்டும். முகத்தைமூடி உறங்குதல் கூடாது. ஒரு படுக்கையில் இருவர் சேர்ந்து உறங்குதல் கூடாது. ஒருவருக்குக் குறைந்தது ஆறுமணிநேரத் துயில் தேவை.

உணவிலோ, உறக்கத்திலோ, பிறவற்றிலோ பிழைபாடு நிகழ்ந்து, மலச்சிக்கல் நோய் நேருமாயின், அந்நோயை விரதத்தால் ஒழித்தல்வேண்டும். அந்நோய்க்கு விரதத்தினுஞ் சிறந்த மருந்தொன்றில்லை. குறைந்தது மாதத்துக்கொரு முறை விரதமிருத்தல்வேண்டும். அதனால் உள்ளுறுப்புக்களுக்கு ஓய்வு கிடைக்கும். அவ்வோய்வு, உள்ளேயுள்ள அழுக்குகளை வெளியே தூரத்துவதோடு, உறுப்புக்கட்கும் புத்துயிரளிக்கும். விரதம் விரதம் என்று பலகாரங்களை உண்டு கழிப்பது தவறு. அது விரதமுமாகாது. விரதமுறைகளை விரத நூல்களினும், விரதம் வல்லாரிடத்திலும் கேட்டுத் தெளிக.

வழிபாட்டைப் பற்றி இரண்டோர் உரை கூறி இக்கட்டுரையை முடித்துவிடுகிறேன். ஒவ்வொருவரும் கடவுளை வழிபடல்வேண்டும். கடவுள் எது? அழுக்காறு முதலியவற்றைக் கடந்து விளங்கும் அன்பே கடவுள். அவ்வன்பை உன்னுவதால் தீமைகள் அழியும். அன்பு வழிபாடு, நோயற்ற வாழ்விற்கு இன்றியமையாதது. கடவுள் அன்பு, இயற்கை வடிவாகப் பரிணமித்திருக்கிறது. அவ்வியற்கை வழிபாடு மக்களை அன்பர்களாக்கும். அவ்வழிபாட்டிற்கு இல்லறம், பிள்ளைப்பேறு முதலியன வேண்டற்பாலன.

இயற்கையோடியைந்த வாழ்வே நோயற்ற வாழ்வு. அவ்வாழ்விற்கேற்ற அகப்புற அறநெறிகளைக் கோலிக் கொள்ள வேண்டுவது மக்கள் கடமை. ஒருவன் தன்னளவில்-தன்வீட்டளவில்-நோயற்ற வாழ்வுமுறைகளைக் கோலிக் கொள்வதால் பெரும்பயன் விளையாது. அவன், தான் வாழும் நகரையும் நாட்டையும் அவ்வாழ்வில் பண்படுத்த உழைத்தல் வேண்டும். அவ்வன்பும் ஒப்புரவும் அவனுக்கு நோயற்ற இன்பவாழ்வை நல்கும். (16-2-1927)

# இன்ப வாழ்வு

இன்ப வாழ்வு எது? பலர் பலவாறு கூறுப. நால்வருள் ஒருவரும், இல்லறவாழ்வு நடாத்தி, அதன் வாயிலாக இன்ப அன்பைக் கண்டு, ஆண்டவனோடு தோழமை பூண்டவரு மாகிய வன்தொண்டப் பெருந்தகையார் திருவாக்குகளுள் ஒன்று நினைவிற்கு வருகிறது. அதைப் பீடிகையாகக் கொண்டு இக்கட்டுரை வரைவான் புகுகிறேன். அத்திரு வாக்கு வருமாறு :—

‘இறைகளோ டிசைந்த இன்பம்
இன்பத்தோ டிசைந்த வாழ்வு.’

இத்திருவாக்கு, பாட்டா ? மலரா? திங்களா ? அமிழ்தா? தால்ஸ்தாயா ? காந்தியா ? இதை என்னென்று கொள்வது ? ‘இறைகளோ டிசைந்த இன்பம் இன்பத்தோ டிசைந்த வாழ்வு’ என்றே கொள்ளல்வேண்டும். இறையே ! இன்பமே ! வாழ்வே! நீங்கள் வெவ்வேறு ? உங்களுக்குள்ள தொடர்பை என்னென்று சொல்வது ? அத்தொடர்பை உணர்வதன்றோ அறிவு ?

இவ்வுலக வாழ்வு எற்றுக்கு வழங்கப்பட்டது ? இன் பத்தை நுகரும் பொருட்டன்றோ ? இன்பத்தை வாழ்வின் வழியன்றோ நுகர்தல்வேண்டும்? வாழ்வின்வழி நுகரும் இன்ப மும் இறையின்பமாகும். இறையின்பம் என்பது மேலான இன்பம். அதைப் பேரின்பம் என்றுங் கூறுப. இன்பங்களுள் தலையாயது - அரசு போன்றது - தனக்கு ஒப்பாகவும் உயர் வாகவும் பிறிதோர் இன்பமில்லாதது - இறையின்பம். அவ் வின்பமே இன்பம் ; அவ்வின்ப வாழ்வே வாழ்வு.

ஒருவர், தம்வாழ்வை ஒழுங்கானமுறையில் நடத்தாமை யால் துன்பத்துக்காளாகிறார். சிக்கலான வழியில் வாழ்வை நடத்தும் ஒவ்வொருவரும் ஒவ்வொரு குடும்பமும், ஒவ் வொரு நாடும் துன்பத்தையே அனுபவிக்கும். ஒழுங்குபட்ட

வாழ்வு, ஏட்டுக்கல்வியால் - செல்வத்தால் மட்டும் - வருவதன்று. மக்கள், படிக்கவேண்டிய படிப்பைப் படித்துச், சேர்க்கவேண்டிய செல்வத்தைச் சேர்த்தால், அவர்கள் ஒழுங்குபட்ட வாழ்வைப் பெறுவார்கள். தற்காலச் சர்வகலாசாலைப் படிப்பும், வலிமையால் ஈட்டுஞ் செல்வமும் மக்கள் வாழ்வைச் சீர்படுத்தல் அரிது.

இப்பொழுது போதிக்கப்படும் கல்வி, ஒரு தேசத்தை நேசிக்க – மற்றத் தேசங்களை அழிக்கச் – சேனைகளில் சேரவும், கப்பல்கள் கட்டவும், கொலைக்கருவிகள் செய்யவும் பெரிதும் பயன்படுகிறது ; ஈட்டப்படுஞ் செல்வமோ எளியவரைத் துன்புறுத்துகிறது. இக்கல்வியும் செல்வமும் இன்ப வாழ்வை எங்ஙனம் நல்கும் ?

மக்கள் இயற்கையைப் படித்தல் வேண்டும். இயற்கை தனக்கென நிலவுவதில்லை ; உயிர்கட்கென்று நிலவுவது. அதுபோல இயற்கைப் படிப்பாளியின் வாழ்வும், உடல் - பொருள் -- ஆவி மூன்றையும் மற்றவர்க்கு அர்ப்பணஞ் செய்வதில் பயன்படும்.

தற்காலச் சர்வகலாசாலைப் பட்டம் பெற்று உயர்ந்த உத்தியோகத்திலுள்ள ஒருவன் வாழ்வை உதாரணமாக எடுத்துக்கொள்வோம். அவன் கல்வியாளன் ; பொருளுடையான். ஆனால், அவன் வாழ்வு பெறாதவன் ; இன்பமில்லாதவன் ; இறைவனோடு பேசாதவன். அவ்வுத்தியோகஸ்தன் படுக்கையினின்று விழித்தெழுவது முதல், மீண்டும் உறக்கத்துக்குச் செல்லும்வரை, அவன் பிறர் உதவியை நாடுகிறான். அவன் படுக்கையைச் சுருட்டுகிறவன் எவன்? அவன் உடம்பைக் கழுவுகிறவன் எவன்? அவன் துணியைத் தோய்க்கிறவன் எவன்? அவனுக்கு உணவு அமைக்கிறவன் எவன்? எத்துணைபேர் உதவியை அவன் எதிர்பார்க்கிறான் ! பாவம் ! மற்றவர்க்காக வாழ வந்த இவன், மற்றவர் உழைப்பை ஏற்றுக் கெடுகிறான் ! இது வாழ்வாகுமா ? இஃது இயற்கையோடு மாறுபட்டு வாழ்வதாகும்.

இத்துணைப்பேர் உழைப்பைப்பெறும் இவன், தான் ஈட்டும் செல்வப்பொருளைத் தன் உடைக்கும், தன் உணவுக்கும், வேறு பல களிக்கூத்துக்கும் செலவழிக்கிறான். இச்செல்வன், தனக்கு உதவி செய்யும் தன்னைப்போன்ற மனிதர் பட்டினி கிடக்க, கால் வயிறு அரை வயிறு உண்டு வருந்த, உடையின்றிக் குளிரால் மெலிய, அன்னார் உதவியால் தான் பெறும் பொருளை, வேறு துறைகளில் செலவழிப்பது இயற்கையாகுங்கொல்? அஃது இயற்கைக்கு மாறுபட்டு நடப்பதாகும். இயற்கைக்கு மாறுபட்ட வாழ்வை நடாத்தும் ஒருவனது கல்வி கல்வியாமோ? அவனது செல்வம் செல்வமாமோ?

பிறர்க்கு எவ்வழியிலுந் துன்பந் தாராது, பிறர்க்கு உழைக்க முயல்பவர் வாழ்வு, இயற்கை வாழ்வாகும். அண்டை வீட்டில் ஏழைகள் பட்டினி கிடப்பதைக் கருதாது ஒருவன் தான் அறுசுவையோடு கூடிய உணவை உண்பதும் - பக்கத்து வீட்டுப் பெண்மக்கள் ஆடையின்றி வருந்துவதைக் கண்ணோக்காமல், ஒருத்தி தான் விலையுயர்ந்த பட்டாடைகளையும் மாணிக்கக் கற்கள் பதித்த நகைகளையும் பூண்பதும் - ஏழைகள் ஆண்டவன் அளித்த இரண்டுகால்களால் நடந்து செல்ல, ஒருவன் அவர்கள் கண்களில் தூசு படிய மோடார் வண்டியில் ஊர்ந்துசெல்வதும் - இயற்கை வாழ்வாகுமோ? ஏழைகள் உழைப்பால் பெறும் பொருளை ஒருவர் தமது நலத்துக்குப் பயன்படுத்துவது இயற்கை அறமாகாது. அவர் வாழ்வும் இயற்கை வாழ்வாகாது. அவர் உள்ளத்தில் அன்பு மலராது; அருட்டேன் பிலிற்றாது.

ஏழைகள் உழைப்பால் பெரும் பொருள் சேர்த்து, அதனால் தன்னல வாழ்வு நடாத்துவோன் கடவுள் அடியவனாகான். அவன் எத்துணை ஆலயங்கள் கட்டினாலும், எத்துணை முறை க்ஷேத்திர யாத்திரை செய்தாலும், எத்தனை தீர்த்தங்கள் படிந்தாலும், எத்தனை முறை மணியுருட்டினாலும், நாள்தோறும் வேத பாராயணஞ் செய்தாலும் அவன் உள்ளத்தில் இறைவன் கோயில் கொள்ளான் கொள்ளான். நாடோறும் நெற்றிநீர் நிலத்தில்விழ வேலைசெய்து, பெறும் ஊதியத்தை மனைவி மக்களோடு உண்டு, ஒருகாசும் சேர்த்து

வையாமல், மீண்டும் அடுத்தநாள் வேலைக்குச் செல்லும் ஒரு வன் உள்ளத்திலன்றோ ஆண்டவன் கோயில் கொள்வான்? அவன் தனக்கென்று பொருள் சேர்க்கவில்லை. அவன், தான் கஷ்டப்பட்டுப் பெற்றகூலியை மனைவி மக்களென்னுஞ் சில உயிர்களுக்கு உதவுகிறான். அதற்குமேல் அவன் பொருள் பெற்றால் அதை மற்றவர்க்கும் உதவுவான். அவன் ஊழியர் களைத் தேடுகிறானில்லை; களியாடல்களுக்குச் செல்கிறா னில்லை. இயற்கை அவனுக்கு ஊழியஞ்செய்கிறது. இயற்கை வழி அவன் வாழ்வு நலமுறுகிறது. அவனைப் பேராசையும் அகங்காரமும் அரித்துத் தின்பதில்லை. பேராசையும் அகங் காரமும் அவனைக் கண்டு வணங்கி ஓட்டம் பிடிக்கின்றன. அவனல்லவோ அரசன்? அவனல்லவோ ஆண்டவன்?

வாழ்வைப் பேராசையிலும் அகங்காரத்திலும் தோய விடாது, இயற்கைவழிச் செலுத்த முயலல் வேண்டும். தாம் சுகமாக வாழவேண்டும் என்ற நினைவின் உதயமே, மனித ரைப் பேயாக்கி, அவர் வாழ்வைக் குலைக்கிறது. வாழ்வுகுலைந் தால் இறை ஏது? இன்பம் ஏது? பிறர் உழைப்பால் பெறும் பொருளைத் தம்முடையதாகக் கருதி, அதை மற வழியில் செலவழித்து, இறுமாப்புக் கொண்டு திரிபவர், இன்ப வாழ் வுக்கு அடிகோலுபவரல்லர். இன்ப வாழ்விற்கு அடிகோலு பவர், சென்றது கருதாமலும், சேர்வது நினையாமலும், மற் றையோர் உழைப்பை எதிர்நோக்காமலும் அடங்கி வாழ்வர்.

பிறர் உழைப்பால் பொருளீட்டுவோரிடம் மன அடக்கம் உண்டாதல் அரிது. மனம்போன வழியெல்லாம் உழல்வோர் இறைவனோ டிசைந்த இன்பவாழ்வை எவ்வாறு நடத்தல் கூடும்? அவர் பணச்செருக்கால் பிறரை அடிமை கொள்ள வும், தாம் உல்லாசமாக வாழவும் நினைப்பர்; தம்மைப் பிறர் தெய்வம் என்று நினைக்கவேண்டுமென்ற கருத்தும், நினைத் தனவெல்லாம் செய்யவேண்டுமென்ற திமிரும் அவருக்கு இயல்பாக உண்டாகும். அவர், தம்முடைய உடல் பொருள் ஆவியைக் கடவுளுக்கு அர்ப்பணஞ் செய்யமாட்டார்; அதாவது மற்றவர்க்காகத் தாம் வாழ்வதாகக் கருதமாட்டார்.

கொலை களவு கள் காமம் பொய் முதலிய எல்லாப் பாவங்களும் அவரைச் சூழ்ந்து நிற்கும். இவ்வளவுக்குங் காரணம் தன்னலங் கருதும் வாழ்வேயாகும்.

தன்னலங் கருதா வாழ்வை நடாத்த வேண்டுமென்பது நம் முன்னோர்கள் நோக்கம். அதை நம் முன்னோர்கள் வாழ்வில் வலியுறுத்தி வந்தார்கள். எந்த நூலை - எந்தச் சாத்திரத்தை - எடுத்தாலும் அவைகளில், தன்னல மறுப்புப் பேசப்படுவது காணலாம். பண்டை நாளில் மக்கள் தன்னல மறுப்பைப்பற்றிய கல்வியைப் பயின்று வந்தார்கள். அது காலை அவர்கள் பொருளாதார நூல்களைப் பயின்றார்களில்லை. பொருளாதார நூற் பயிற்சி, தன்னலத்தை - தன் குடும்ப நலத்தை-தன் தேசநலத்தை-மட்டும் வளர்ப்பதாகும். பொருளாதார நூல் பயின்றவர்க்குத் தேசபக்தி ததும்பி வழியலாம். அத்தேச பக்திக்குப் பொருள் யாது? பிறதேசங்களை வருத்துவது என்பதே. பிறதேசங்களை வருத்தி, அவைகளிலுள்ள பொருள்களை வலிந்து திரட்டிவரும் தேசபக்தி போதிக்கப்படும் கலாசாலைகளில் ஞானவாணிக்கு இடம்ஏது? பேராசைப் பேயன்றோ அக்கலாசாலைகளில் நடம் புரியும்?

நம் முன்னோர்கள் 'அறஞ்செய விரும்பு' என்று குழந்தைகளுக்குப் போதித்து வந்தார்கள். இவ்விதை பின்னே எத்தகைக் கனியை அளிக்கும்? சிந்திந்துப் பார்க்க. நம்மவர்கள் கல்வி தன்னலங் கருதாமையை அடிப்படையாகக் கொண்டது. தன்னலங் கருதாத பேரறத்தை ஊட்டுங் கல்வி, இளமை உள்ளத்தில் பதிந்தால், முதுமை வாழ்வு மற்றவர்க்குரிய வாழ்வாக முடியும்.

கல்விக்குப் பின்னர்க் கட்டழகியோடு கலந்து, அக்கல்வியின் பயனாகிய இறைவனோடிசைந்த இன்பவாழ்வைப் பெற முயலல்வேண்டும். 'இறைகளோடிசைந்த இன்பம் இன்பத்தோடிசைந்த வாழ்வு' என்று அருளிச்செய்த பெரியார் இல்லறத்தில் வாழ்ந்து, பெண்ணின்பத்தைப் பேரின்பமாகக் கண்டவர். 'பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்கும் எனக்கும் பற்றாய பெருமானே மற்றாரை யுடையேன்' என்று அவர் ஓதியிருத்தல் காண்க.

தன்னலங் கருதி - கேவலம் மிருக சுகம் விரும்பி - ஒரு பெண்ணை மணஞ் செய்கிறவன், இறைவனோடிசைந்த இன்பத்தை நுகராதொழிவன். பெண்ணை இழிவாகக் கருதுகிறவன் அன்பை அறியாதவன் ; இன்பத்தை உணராதவன். உலகத் தோற்றத்துக்குக் காரணமாக உள்ள தெய்வமாகிய பெண்ணைப் பேயெனக் கருதுவதும் - நாயென நினைப்பதும் - இன்பத்துக்குக் கேடு சூழ்வதாகும். பெண்ணை - இல்லறத்தை - இயற்கை வாழ்வை - ஆண்டவன் நெறியை - வெறுப்பது அறியாமை. நம் முன்னோர்கள் 'கேவலம் மிருக இன்பங் கருதி எவன் பெண்ணை மணஞ் செய்கிறானோ அவன் நரகடைவான்' என்று சொல்லியிருக்கிறார்கள். புத்திரப் பேறு கருதிப் பெண்ணை மணஞ்செய்தல் வேண்டுமென்று நம் பெரியோர்கள் வலியுறுத்திப் பேசியிருக்கிறார்கள்.

ஆன்மா தேகந் தாங்குவதற்குமுன்னர் அஃது எங்கிலையிலிருந்ததென்பது நமக்குத்தெரியாது. அந்நிலையைப் பலர் பலவாறு ஊகஞ் செய்துரைக்கலாம். ஆன்மா, தேகந் தாங்கிய பிறகு, அறிவு விளங்கிப் பற்பல ஆராய்ச்சி செய்து, பல உண்மைகளைக் கண்டு இன்பத்தை நுகர்கிறது. அறிவு விளக்கத்துக்குக் கருவியாக உள்ளது உடல். அது முளைக்கும் பூமி எது ? தாய்மையுடைய பெண் தெய்வமல்லவா ? அவ்வருமைத் தாயையா பேய் என்று கூறுவது ? நாயென்று ஏசுவது ? பெண்ணை வெறுக்கிறவன் உயிர்கள் சிருஷ்டியை வெறுக்கும் பாவியாவன். தான் தேகந் தாங்கி இன்ப நுகர்வதைப்போல, ஏனையோரும் தேகந் தாங்கி, இன்ப நுகர எண்ணங் கொள்ளாத ஒருவனைப் பாவியென்றழைக்கலாம். பெண்ணோடு கூடி வாழும் அறநெறியில் பரோபகார சிந்தை வளர்தல் இயல்பு.

சில ஞானிகள், பெண்களை மிக இழிவாகக் கூறியிருப்பதென்னை என்று சிலர் வினவலாம். அதற்கு, உடலின்பமூட்டும் வேசைமார்களையே ஞானிகள் இழித்துக்கூறியுள்ளார்களென்று பதிலிறுத்தல் வேண்டும். காதலின்பமூட்டும் நாயகியை ஒருநாளும் பெரியோர் இகழமாட்டார். காதலென்பது இருவர் உயிர்பற்றி நிகழ்வது. அவ்வின்பமே பேரின்ப

மென்பது. காதல் இன்பம் நுகர்வோர் தொகை அருகிவரும் இந்நாளில் இக்கூற்றுப் பித்தர் கூற்றாகக் கருதப்படும். ஆன்ம நேய ஒருமைப்பாட்டுக்கு அடிகோலும் இல்லறம், இறைவனோடிசைந்த இன்பவாழ்விற்கு அடிப்படை.

பெண் என்பதும் ஆண் என்பதும் இயற்கையின் உயரிய கூறுகள். இன்பவாழ்விற்கு மண் நீர் காற்று நெருப்பு ஆகாயம் எவ்வளவு இன்றியமையாதனவோ, அவ்வளவு பெண்ணுக்கு ஆண் இன்றியமையாதவன்; ஆணுக்குப் பெண் இன்றியமையாதவள். இன்றியமையாத பெண்ணை ஆண் வெறுப்பதும், ஆணைப் பெண் வெறுப்பதும் இயற்கைக்கு மாறுபட்ட வாழ்வாகும். அவ்வாழ்வில் இன்பம் விளையாது. இன்பமில்லாவிடத்தில் இறைவனில்லை. இயல்பாக ஏற்பட்டுள்ள இன்பக்கிளர்ச்சியை ஒருவன் அடக்குவதும், ஒருத்தியோடு கூடி உயிர்களை உண்டுபண்ணும் பரோபகார சிந்தை கொள்ளாது வேசைமாரிடத்தணைவதும், வேறுபல தீயொழுக்கங்களில் நுழைவதும், இயற்கையோடு எதிர்த்து நிற்குஞ் செயல்களாம். இயற்கையோடு கலந்து வாழாதவனுக்கு இன்பம் ஏது? இறை ஏது? வாழ்வு ஏது?

இயற்கை - இறை - இன்பம் என்று தொடர்புபடுத்திக் கூறி வருவதைக் குறித்துச் சிலர் ஐயுறலாம். 'இயற்கை சடம்; இறை சித். இரண்டையும் ஒன்றுபடுத்துவது நாத்திகம்' என்று சிலர் கூறுப. இயற்கையைக் கடவுள் சாயலென்றும், அதைக் கடவுள் உடலென்றும், அதையே கடவுளென்றும் தத்துவ ஞானிகள் பலவாறு கூறியிருக்கிறார்கள். இவர்கள் கொள்கை சொல்லால் மாறுபட்டாலும், பொருளால் மாறுபடுவதாகத் தோன்றவில்லை. அவ்வாதத்தை ஈண்டெழுப்பவேண்டுவதும் அநாவசியம். இயற்கை, இறையின் சாயலாயினுமாக; அஃது இறையின் உடலாயினுமாக; அல்லது அதுவே இறையாயினுமாக. இயற்கை, இறையை விடுத்துத் தனித்து இயங்குவதில்லை என்பதும், இயற்கைச் செயல்களெல்லாம் இறையின் செயல்களென்பதும், இயற்கையோடு கலந்து வாழ்வது இறையோடு கலந்து வாழ்வதென்பதும், அவ்வாழ்வில் விளைவதே இன்பமென்பதும் மறுக்கப்படாத

உண்மைகள். ஆகவே, இயற்கை - இறை - இன்பம் மூன்றும் ஒன்றுக்கொன்று தொடர்புடையன என்க.

இயற்கை இன்பத்தை அளிக்கும் பெண்ணை வெறுப்பது இறைவனை வெறுப்பதாகும். பெண்ணை வெறுப்பது ஆண்டவன் படைப்பு நோக்கத்துக்கு முரண்பட்டு நிற்பதாகும். சராசரங்களெல்லாம் பெண் ஆண் வடிவாகப் படைக்கப்பட்டிருக்கின்றன. இயற்கையின் ஒவ்வொரு கூறும் பெண் ஆண் வடிவாகவே யிருக்கிறது. படைப்பில் பெண்ணுலகம் அமையாமலா இருக்கிறது? பெண்ணால் உலகம் நடைபெறவேண்டியிருத்தலால், படைப்பில் பெண்ணுலகமும் அமைகிறது. உலகம், என்றும் நடைபெறுவதற்கே பெண் படைக்கப் படுகிறாள். உலக வளர்ச்சிக்குக் கருவியாக ஆண்டவனால் அளிக்கப்பெற்ற பெண்ணை வெறுப்பது, இயற்கைக்கு முரண்பட்டு நடப்பதாகும்.

(காட்டுக்குச் சென்று, தான் ஒருவனே வீடுபேறெய்தல் வேண்டும் என்னும் எண்ணங்கொண்டு, யோகஞ் செய்கிறவனைப் பார்க்கிலும், ஒரு மாதை மணந்து, சில உயிர்களைத் தோற்றுவிக்கிறவன் ஜீவகாருண்ய முடையவனாவன். இல்லறம், ஜீவகாருண்ய நெறியை ஓம்பும் அறம் என்பது வெளிப்படை. ஆதலால், பெண்ணை வெறுக்கும் வாழ்வு இன்ப வாழ்வாகாது.)

பெண்ணோடு கூடி வாழாதவன் அடிக்கடி நோய் வாய்ப்படுவன். உற்ற வயதில் நுகரவேண்டிய இன்பத்தை நுகராதொழிவது துன்பத்தை விலைக்கு வாங்குவதாகும். இல்லற இன்பத்தையும் அளவாக நுகர்தல் வேண்டும். வரம்பு கடந்தால் பெருந்துன்பம் விளையும் என்பது நிச்சயம். ‘அளவிற்கு மிஞ்சினால் அமுதமும் விஷமாம்.’

திருமணத்துக்கு முன்னர்ச் சிலர் பலவித நோய்வாய்ப்பட்டு வருந்துகிறார். அன்னார் மனைவாழ்க்கை ஏற்றதும் நோய் தீரப்பெறுகிறார். எனவே, நோய்க்கு மருந்தாக உள்ள பெண்ணை வெறுப்பது தன்னுடலைத் தானே கொல்வதாக முடியும். இன்ப வாழ்விற்குப் பெண் ஆண் வாழ்வு இன்றியமையாதது என்பதை விரித்துச் சென்றால் இக்கட்டுரை நீளும்.

கல்வி பயிலுதற்கும், தன்னல மறுப்புக்கும், இன்பம் நுகர்தற்கும் கருவியாயிருப்பது நமது அரிய உடல். உடல் காணியன்று; பூமியன்று; பொன்னன்று; பொருளன்று. அஃது ஆன்மாவிற்கு ஆண்டவனளித்த ஒரு பெரும் உடைமை. காணி பூமி முதலியன ஆன்மாவிற்கு விவகார நிலையில் வேறாக விளங்குவன. உடலோ ஆன்மாவோடு நெருங்கிய உறவுகொண்டு உடன் இருப்பது. அத்தகை உடலை நாம் எவ்வாறு ஓம்புதல் வேண்டும்? காணியை, பூமியை, பொன்னை, பொருளை நாம் எவ்வளவு பற்றுக் கொண்டு பாதுகாக்க முயல்கிறோம்? இவைகளினும் கோடி பங்கு உயர்ந்த உடலினிடத்தில் எவ்வளவு பற்றுக் கொண்டு, அதை ஓம்புதல்வேண்டும்? உடல் நன்றாயிருந்தால் இன்பத்தை நன்கு நுகரலாம். உடல் மெலிவுற்றுத் தளர்ச்சியடைந்தால் இன்பமே நுகரல் இயலாது. இன்ப நுகர்விக்குங் கருவி உடல். அவ்வுடலை ஓம்பாது விடலாமோ? உடலை நல்வழியில் பாதுகாவாதவன் ஆண்டவன் அருளுக்கு உரியவனாகான். இயற்கை இன்பத்தை நுகர்ந்து, தன்னின்பத்தைப் பெறும்பொருட்டு, ஆண்டவன் உயிருக்கு உடலை நல்குகிறான். அவ்வுடலை ஓம்பாதுவிடின், இயற்கை இன்பமேது? இறையின்பமேது? இன்ப வாழ்வேது? உயிர் உடலோடு கூடி இன்பத்தை நுகர்வது வாழ்வெனப்படும். வாழ்வு என்பது உடலை ஒட்டி நிற்பது. அவ்வுடலை வெறுப்பது வாழ்வை வெறுப்பதாகும். ஆகவே, உடலை ஓம்புவது இன்பவாழ்வைப் பெறக் கால்கொள்வதாகும்.

உடலை ஓம்ப உறுதிகொள்வோர் வயித்தியனையும் மருந்தையும் விலக்கி வாழ்தல் வேண்டும். இயற்கைவழி வாழ்வை நடாத்துபவருக்கு வயித்தியனும் வேண்டுவதில்லை; மருந்தும் வேண்டுவதில்லை. மனிதர் நீரிலும் காற்றிலும் ஒளியிலும் நாடோறும் முறைப்படி மூழ்கி வருவாராயின், அவரை நோய் அணுகாது. இம் மூன்றையும் ஒழுங்குபடப் பயன்படுத்திக் கொள்ளாது, பெரும் தீண்டியால் உடல் ஊரம் பெறுமென்று, வேளை நாழி கருதாது, விரும்பியவற்றை உண்பவரது உடலில் நோய் நடம்புரிந்து நிற்கும்.

அமித உணவின் விளைவு மரணம். ஜீரண சக்திக்கேற்ற அளவில் உணவு கொள்ளல்வேண்டும். பசி எடுக்கிறதோ எடுக்கவில்லையோ, அதைக் கருதாது, மணியைப் பார்த்து உணவு கொள்வோர், உடலை ஓம்புவோராகார். பசி எடுத்த பின் ஜீரணிக்கக்கூடிய பொருளை உண்டு வாழ்வது சிறப்பு. வைகறை எழுந்து, நீரில் மூழ்கி, இளஞாயிற்றைக் காணாது உறங்குவோரது ஆயுள் குறைந்துவிடும்.

விரதமிருப்பதாலும் உடல் நலம்பெறும். விரதத்தால் உடலுக்கு விளையும் நலன்களைப் பக்கம் பக்கமாக வரையலாம்; ஈண்டு விரிக்கிற் பெருகும். நமது நாட்டுப் பெரியோர்கள் ஏற்படுத்தியுள்ள விரதங்களை முறையாக அனுஷ்டித்தால் வச்சிர தேகம் பெறலாம். பன்றிகளைப்போலக் கண்டதைத் தின்பதால் மரண நோய் விரைவில் அடரும். உடலை நல்வழியில் ஓம்புவது இன்ப வாழ்விற்கு இன்றியமையாதது.

இயற்கைவழி வாழ்கிறவர் இறைவன் நியதிவழி வாழ்கிறவராவர். இயற்கையை விடுத்து, இறைவனை மட்டும் தனியே பிடிக்க முயல்வது, உண்மை நீரைக் கானலாகக் கருதியும் கானலை உண்மை நீராகக் கருதியும் இடர்ப்பட்டவர் கதையாக முடியும். இறைவனது தனிநிலை வாக்குமனங் கடந்தது. மன உணர்வினர், அதன்மீது கருத்துச் செலுத்துவது பாழாக முடியும். மன உணர்வினர், இறைவனை இயற்கையினின்றும் வேறு பிரித்து நிகழ்த்தும் வழிபாடு, இறைவனுக்குச் செல்லுதலரிது. அவர், இயற்கையை இறைவனாகக் கொண்டு வழிபடலாம். இவ்வுண்மை தெளிவோர்க்கு, 'இறைகளோ டிசைந்த இன்பம் இன்பத்தோ டிசைந்த வாழ்வு' என்ற திருவாக்கின் செம்பொருள் இனிது புலனாகும்.

இறைவனோடு இசைந்திருப்பது இன்பம்; அவ்வின்பத்தோடு இசைந்திருப்பது வாழ்வு. இதை, இறை - இன்ப - வாழ்வு என்று சுருங்கக் கூறலாம். இறை இன்பம்; இன்பம் இறை. ஆதலால் 'இறை வாழ்வு' என்பதும், 'இன்ப வாழ்வு' என்பதும் ஒன்றே. மனிதர் தமது நலத்தைமறுத்து, இயற்கையோடு இயைந்து வாழ்வாராயின், அஃதவருக்கு இறையின்ப

மாகவே தோன்றும். தம்நலமறுக்கிறவர், பிறர்க்குத் தாம் உழைக்கவேண்டுமென்று வாழ்கிறவராவர்; தம்நலமறாதவர் பிறர் உழைப்பைத் தமது நலத்துக்கெனக் கொள்கிறவர். தன்னலமறுப்பும் பிறர்க்குழைக்கும் பெருந்தகையும் பொலியும் உள்ளம், காம குரோத முதலிய இராட்சத குணங்கட்கு இரையாகாது. அதன்கண் அரும்பும் இன்பம், இயற்கை இன்பமெனப்படும். அவ்வுள்ள முடையார், நீரையும், காற்றையும், ஒளியையும், இன்ன பிறவற்றையும் இறையாகவேகொள்வர். அவைகளை இறையாகக் கொண்டு, அவைகளோடு கலக்கும் போது பிறக்கும் இன்பம் இறையின்பமாகும். நீரையும், காற்றையும், ஒளியையும் இறையாக ஏற்பது, இறையோடு இசைந்த இன்பம் நுகர்வதாம். அஃது இன்பவாழ்வெனப்படும்.

மணந்த மனைவியைத் தெய்வமாகக் கருதி இன்ப நுகர்வது ஆன்மநேய ஒருமைப்பாடென்பது. அவ்வாறு கருதாது நுகரும் இன்பம் மிருக இன்பமாகும். பண்டைக் காலத்தில் நாயகன் நாயகியை உந்தியில் தியானிப்பதும், நாயகி அவ்வாறே நாயகனைத் தியானிப்பதும் வழக்கத்திலிருந்தன. அத் தியானத்தின் பின்னர் நுகரும் இன்பத்தில் ஒருவித அக இன்பம் விளையும். ஆண்டவனை நாயக நாயகி முறையில் வழிபடுவது எல்லா வழிபாடுகளினுஞ் சிறந்ததாம். நாயக நாயகி பாவனையே இப்பொழுது அறுந்துவிட்டது. மனைவியை வேலைக்காரியாகப் பாவிக்குங் காலம் தோன்றியிருக்கிறது. இப்பொல்லாத காலம் ஒழிக. நாயகன் நாயகியை ஆண்டவனாகக் கருதுவதும், அவள் அவனை அவ்வாறே பாவிப்பதும் இறைவனோடிசைந்து நிற்றலாகும். இவ்விசைவு, இன்ப வாழ்வெனப்படும்.

இன்ப வாழ்வையளிக்கும் மனைவியை ஏன் துறந்து ஓடுதல் வேண்டும்? ஒவ்வொரு வீட்டிலும் உலவும் உயிர்களைக் கடவுளாகப் போற்றாது, வேறிடங்களில் கடவுள் இருக்கிறார் என்று ஓடுவது அஞ்ஞானம். வீட்டிலுள்ள மனைவி மக்களை - தாய் தந்தையர்களை - பிறரை - ஏன் மனிதராகப் பாவித்தல்வேண்டும்? அவர்களை ஏன் தெய்வமாகக் கொள்ளலாகாது? வீட்டிலுள்ள் மனைவிமக்களென்னும் ஒரு சில

உயிர்கள் நலங்கருதி, அவ்வுயிர்கட்குத் தொண்டு செய்வது முதிர முதிர, அது சுற்றத்தார் வழிபாடாய், கிராமத்தார் வழிபாடாய், தேசத்தார் வழிபாடாய், முடிவில் எல்லா உயிர்கள் வழிபாடாய் முடியும். அவ்வழிபாடு செய்கிறவர், உலகத்தையே இறைவனாக வழிபடுகிறவராவார். அவர் மன மொழி மெய் - அவர் வாழ்வு-என்றும் இறைவனோடிசைந்து நிற்கும்.

இத்தகை வாழ்வை நடாத்தவே மக்கள் படைக்கப்பட்டார்கள். அவ்வாழ்விற்கெனவே மக்களுக்குத் தனுகரண புவனபோகங்கள் வழங்கப்பட்டன. இந்நாளில் அந்நோக்கம் நிறைவேறுகிறதா? உலகத்தில், 'இறைகளோடிசைந்த இன்பம் இன்பத்தோடிசைந்த வாழ்வு' நடைபெறுகிறதா ? தன்னலமென்னும் பேயும், பேராசை என்னும் பைசாசமும் உலகத்தை அலைத்துச் சாத்தானோடு வாழ்வைப் பிணித்து, மக்களைக் கெடுத்து வருகின்றன. இவ்வழி உழல்வோரால் உலகக் காரியங்கள் நடத்தப்படுகின்றன. அவர் செயலால் சாத்தான் கல்வி, பேய்மணம், பைசாச வாழ்வு, அரக்க ஆட்சிமுறைகள் முதலியன பெருகுகின்றன. இப்பெருக்கால், உலகம் வருந்துகிறது; இயற்கை அலமருகிறது; வாழ்வு குலைகிறது. இன்பத்தைக் காணோம். அறம் தலைசாய்ந்துவிட்டது. ஒப்புரவு ஒடுங்கிவிட்டது. இந்நாளில் நாம் வாழ்கிறோம். நமது வாழ்வு, 'இறைகளோடிசைந்த இன்பம் இன்பத்தோடிசைந்த வாழ்வாவது' எப்பொழுது? அவ்வாழ்வை உயிர்ப்பிக்க எவ்வறிஞர் முயல்கிறார்? பட்டம் உத்தியோகம் முதலிய துன்பங்களை இன்பமாகக் கருதுவோர் கூட்டம் பெருகு நாளன்றோ இந்நாள் ! இவ்வேளையில் எவர் நன்முயற்சியில் தலைப்படுவர் ?

உலகம் தன்னலத்துக்கும் பேராசைக்கும் இரையாகி வருந்தும் வேளைகளில், கடவுளருளால் பெரியோர்கள் தோன்றுவது வழக்கம். இதுகாறும் பெரியோர்கள் பலர் உலகத்தில் தோன்றினர். இந்நாளில் உலகத்தைச் சாந்தி செய்ய மகாத்மாகாந்தி தோன்றியிருக்கிறார். அவர் உபதேசத்தால் உலகம் உய்தல்கூடும். அவர் உபதேசத்தை உலகம் ஏற்றுக்

கொண்டால், மக்களை இப்பொழுது பிடித்தாட்டும் தற்கால நாகரிகப் பேய் ஓடிப்போகும். உலகம் தூய்மைபெறும்.

காந்தியடிகள், 'இறைகளோடிசைந்த இன்பம் இன்பத் தோடிசைந்த வாழ்வை'க் கொள்ளுமாறு போதிக்கிறார். அவர் போதனைக்கு மாறாக நிற்பது தற்கால நாகரிகம். தற்கால நாகரிகம், மனித வாழ்வை இயந்திர வாழ்வாக்கி யிருக் கிறது. தற்கால நாகரிகம், செல்வத்தை ஒரு கூட்டத்தாரிடத் தில் திரட்டிச் செலுத்துகிறது. தற்கால நாகரிகம், முதலாளி தொழிலாளி என்ற வகுப்பை உண்டுபண்ணி யிருக்கிறது. சுருங்கக் கூறின், தற்கால நாகரிகம் மக்களுக்கும் கடவு ளுக்குமுள்ள தொடர்பை அறுத்திருக்கிறது என்று கூற லாம். அத்தொடர்பை மீண்டும் புணைக்க மகாத்மா காந்தி தோன்றியிருக்கிறார். அவர் இவ்வுலகையே இன்ப மயமாக்க முயன்று வருகிறார்.

உலகம், காந்தியடிகளின் வழி நின்று, 'இறைகளோ டிசைந்த இன்பம் இன்பத்தோ டிசைந்த வாழ்'வைப் பெறு மாறு ஆண்டவன் அருள் செய்வானாக. (8, 22-12-1922)

## அரிசி

'நோயற்ற வாழ்வு' என்பதுபற்றிச் சென்ற வாரத் துக்கு முந்தியவாரம் எழுதினேன். அதன்கண் அரிசியைக் குறித்துச் சில உரை பகர்ந்திருப்பதை நேயர்கள் கவனித் திருப்பார்கள். இன்று அவ்வரிசியைப்பற்றிச் சிறிது விரித் துக்கூறப் புகுகிறேன்.

மக்கட்கு உணவு இன்றியமையாதது. அவ்வுணவு ஒவ் வொரு நாட்டில் ஒவ்வொரு விதமாக இருக்கிறது. அஃது எவ்விதமாயினும், அஃது உடலுக்கு நலன் செய்வதா யிருத் தல்வேண்டும். அதன்கண், சத்தும், கொழுமையும் இருத்தல் வேண்டும். அவையில்லாத உணவை உண்பதால் உடலுக்கு

நலன் விளையாது. நலன் விளையாதொழியினும் தீமை விளையாமலிருந்தால் போதும். சத்தும் கொழுமையும் நிலவாப் பொருளால் தீமை உண்டா இல்லையா என்பதைச் சிறிது நோக்குவோம்.

சத்தும் கொழுமையும் இல்லாப் பொருளை உண்பதனால் அது வெறும் மலமாகிக் கழியும். சத்தையும் கொழுமையையும் சிறிதும் வழங்காது, முற்றும் மலமாகிக் கழியும்பொருள், ஜீரண உறுப்புக்கட்குப் பசை வழங்குவதில்லை. இயற்கையாக உள்ள பசையும் நாளடைவில் அருகும். பசை அருக அருக, உறுப்புக்களில் வெம்மையேறும். அதன் காரணமாகப் பலதிற நோய்கள் உண்டாகும். ஆகவே, உணவுப் பொருட்கண் சத்தும் கொழுமையும் இருத்தல் வேண்டும். இல்லையேல் தீமை விளையும்.

நாம் எதை உண்கிறோம்? பெரிதும் அரிசியாலாகும் சோறு உண்கிறோம். அதனுடன் சிறிது பருப்பு, நெய், கறி, மோர் முதலியன சேர்த்து உண்கிறோம். சில இடங்களில் அரிசிக்குப் பதிலாகக் கோதுமை, உருளைக்கிழங்கு, பார்லி முதலியன உணவுப் பொருளாகக் கொள்ளப்படுகின்றன. அரிசியாலாகுஞ் சோற்றைத் துவையல்போலச் சிறிது தொட்டுக்கொள்ளும் நாட்டாரும் உளர். அவர்களைப்பற்றியும் அவர்கள் உணவைப்பற்றியும் ஈண்டு ஆராயவேண்டுவதில்லை.

நமக்குரிய உணவுப் பொருள் அரிசியா யிருத்தலால், அதை அளிக்கும் நெல்லையே நாம் பெரிதும் பயிரிடுகிறோம். நமது வயல்களில் பச்சைப் பசேலென நெல்முளைகள் அளிக்குங் காட்சியும், இளங் கதிர்கள் வானத்தை நோக்கி விளையாடுங் கோலமும், முதிர்ந்த கதிர்கள் தலைவணங்கி நிற்கும் அழகும் கண்ணையும் மனதையுங் கவர்கின்றன. பாவலர் பலர்க்கும் அத்தோற்றம் விருந்தாவதுண்டு. நெல், மணியென்றும், ஜீவாதாரமென்றும் சொல்லப்படுகிறது. நமது நாட்டுக்குரிய உணவு, நெல்லிலிருப்பதால், அது நமது உயிராகிறது. அத்தகை நெல்லினுள் பொலிவது அரிசி.

அரிசியும், அதன்கணுள்ள ஜீவசத்தும், அவைகளைக் காக்கும் உமியும் சேர்ந்த ஒன்று நெல்லென்பது. நெல் குத்தப்பட்டதும், அதன்மீதுள்ள உமி நீங்குகிறது; சிறிது மேல் தவிடும் நீங்குகிறது. அவ்வளவில் குத்தலை நிறுத்தி, அரிசியை எடுத்தால், கீழ்த் தவிட்டைப் பற்றிக் கிடக்கும் ஜீவசத்துக்கு அழிவில்லை. மேலும் மேலும் நன்றாகக் குத்தினால் ஜீவசத்து முற்றும் பாழ்படும். ஜீவசத்து அற்ற அரிசி நன்றாகத் துலங்கியுங் காட்டும்.

முன்னே நம்மவர்கள் நெல்லைக் கையால் உலக்கை கொண்டு குத்தினார்கள். அக்குத்தால் ஜீவசத்து அழிவதில்லை. ஜீவசத்து, கீழ்த் தவிட்டுக் கோட்டுடன் பிணிந்து கிடப்பது. கைக் குத்தால் உமியும், அதை யொட்டிய மேல் தவிட்டுக் கோடும் நீங்கும்; கீழ்த் தவிடும் அதனொடு கலந்துள்ள ஜீவசத்தும் நீங்குவதில்லை. ஜீவசத்து நீங்காத அரிசியைச் சோறாக்கி யுண்டால், அச்சத்து ஜீரணத்துக்குத் துணை நின்று, கருவிகட்குப் பசையளித்து, உறுப்புக்களுக்கும் உரனும் வளனும் ஊட்டும். ஜீவசத்தில்லாச் சோற்றை உண்டால், பசை ஏது? சத்தேது? வளன் ஏது?

இப்பொழுது நமது நாட்டார் உண்பது கைக்குத்தரிசியன்று. இயந்திரத்தால் குத்தப்பெறும் அரிசியை நம்மவர்கள் உண்கிறார்கள். இயந்திர உலக்கையின் திண்மையையும் வேகத்தையும் சொல்லவேண்டுவதில்லை. அது நெல்லின் உமியையும், மேல் கீழ்த் தவிட்டையும், ஜீவசத்தையும், பிறவற்றையும் தூள்படப் பிடுங்கி எறிகிறது. எஞ்சி நிற்பது சத்திழந்த வெறும் அரிசியே. இவ்வாறு தீட்டப்பெற்ற அரிசியைச் சமைத்து உண்டால், உறுப்புக்களில் என்ன சத்து ஏறும்?

இப்பொழுது இயந்திரக் குத்தரிசியை உபயோகிப்போர் கதி என்ன? அன்னார், சோற்றுடன் பருப்பு நெய் மோர் காய்கறிகள் உண்கிறார். இவைகளிலுள்ள ஜீவசத்து, உறுப்புக்களை ஒருவாறு காத்துவருகிறது. இவைகளின்றி வெறுங் குழம்பு ரசத்துடன் சோறு சாப்பிடுவோர் நிலை இரங்கத் தக்கதே.

பருப்பு நெய் மோர் காய்கறிகளை நம்மவர்கள் சிறிதே உண்கிறார்கள். முதன்மை உணவுப் பொருள் சோறே. அதினின்றெழும் சத்தே பெரிதும் வேண்டற்பாலது. இயந்திரத்தால் குத்தப்படும் பச்சரிசியில் சத்து ஏது? அவ்வரிசிச் சோற்றை உண்பதால் உடல்நலன் கெடுகிறது. சத்தில்லா உணவால் வறட்சியுறும் உள்ளுறுப்புக்களை இன்னும் எரிக்கக் காப்பியும் தேயிலையும் இருக்கின்றன. இவைகளை அறியாமையால் பருகுவோர் பலதிற நோய்வாய்ப்படுகிறார். மேலும் வெம்மை பெருக மருந்துகளை உண்கிறார். என் செய்வது! காலத்தின் கோலம்?

இயந்திரத்தால் குத்தப்பெறும் பச்சரிசி, சத்து அற்றது. நன்றாகத் தீட்டிய பச்சரிசிச் சோற்றை நாய் பூனைகளும் உண்பதில்லை. அச்சோற்றுடன் நெய்யோ மோரோ இன்ன பிறவோ சேர்க்கப்படின், அதை நாய் பூனைகள் உண்ணும். நாய் பூனைகட்குச் சத்துண்மையும் இன்மையும் நன்கு தெரியும். ஆறறிவுடைய மனிதருக்கோ?

புழுங்கல் அரிசிமீது சிறிது கருத்துச் செலுத்துவோம். ஆவியில் நெல் அவிக்கப்பட்ட பின்னர் புழுங்கல் அரிசி எடுக்கப்படுகிறது. நெல் புழுங்கும்போது, கீழ்த் தவிட்டை ஒட்டியுள்ள ஜீவசத்தின் சாரம், அரிசியுள் நுழைந்து படிகிறது. பின்னே, அஃது இயந்திரத்தால் குத்துப்படும் போதும் வெளிவருவதில்லை. சத்து வெளிவாராது உள்ளே நிலவினும் அதற்குத் துணையளிக்குந் தவிடு, இயந்திரக் குத்தால் முற்றும் நீங்குகிறது. புழுங்கல் அரிசியைக் கைக்குத்தால் பெறுவது சிறப்பு. அதனால் விளையத்தக்க பயனெலாம் விளையும்.

இயந்திரக் குத்துப் பச்சரிசியில் சத்து முற்றும் அற்றுப் போகிறது. புழுங்கல் அரிசியுள் சத்துச் சிறிது புகுவதால் அது மிகமிகச் சத்துடையதாகிறது. இயந்திரக் குத்துப் பச்சரிசியைவிட, இயந்திரக் குத்துப் புழுங்கல் அரிசி சிறிது குணமுடையது என்று கூறலாம். பொதுவாக இயந்திரக் குத்தரிசியே கூடாதென்று யான் சொல்வேன். 'ஊமைக்கு உளறுவாயன் மேல்' என்பதுபோல, இயந்திரப் பச்சரிசி

யினும் புழுங்கலரிசி ஏற்புடைத்து என்று ஒருவாறு கொள்ளலாம்.

கைக்குத்துப் பச்சரிசி பெற இயலாதார், புழுங்கலரிசியைப் பயன்படுத்துவது நலம்.

'இயந்திரங்கள் யாண்டும் பரவிவிட்டன. என் செய்வது ? முழுத் தவிடும் நீங்காதவாறு இயந்திரக் குத்தை ஒழுங்குபடுத்துவதே சாலும்' என்று சில அறிஞர் கருதுகிறார். முடியாத நிலையில், இக்கருத்தை ஏற்று, அதை நடைமுறையில் கொணரலாம். 'எற்றுக்கு இத்துணைப் பாடு ? கைக்குத்தரிசி பெற ஏன் முயலலாகாது ?' என்று யான் வினவுகிறேன். இயந்திரத்துக்கென ஆயிரக்கணக்கான பணத்தைப் பிற நாட்டுக்கு ஏன் அழுதல்வேண்டும் ? கைக்குத்தலைப் புதுக்கினால் அவ்வளவு பணமும் நாட்டில் நிற்கும்; ஏழைகளுக்கும் பிழைப்புண்டாகும் ; உடலுக்கும் நலன். ஆதலால், இயந்திரத்தைத் தொலைக்கவே நம்மவர்கள் முயலல் வேண்டும்.

இயந்திர அரிசியால் விளையுங் கேடுகளைப் பற்றிப் பற்பல கீழ்நாட்டு அறிஞரும் மேல்நாட்டு அறிஞரும் அரிய கருத்துக்களை வெளியிட்டு வருகிறார். அக்கருத்துக்களுக்கு எவர் செவிசாய்க்கிறார் ? எவ்வமைப்புக்கள் செவிசாய்க்கின்றன ? நகரசபைகளும் சட்டசபைகளும் எற்றுக்கு இருக்கின்றன ? ஜனப் பிரதிநிதிகள் எற்றுக்கு அங்குச் செல்கிறார்கள் ? வீண் சொற்போரும் கலகமும் விளைக்கவா அவர்கள் செல்கிறார்கள் ? அரிசியைப்பற்றிய மூச்சும் அங்குக் காணேம். அரிசியைப் பற்றிய சில சட்ட திட்டங்கள் ஏன் ஏற்படுத்தலாகாது ?

இயந்திரங்களால் நொறுக்கப்படும் அரிசியால் விளையுங் கேடுகளைத் தடுக்க எவர் என்செய்கிறார் ? இயந்திர அரிசியால் மருத்துவர்கட்கு நல்ல பிழைப்பு ! மேல்நாட்டு மருந்துகட்கு நல்ல வியாபாரம் ! சில மருத்துவ அறிஞர்கள் தீட்டிய அரிசியால் விளையுங் கேடுகளை விளக்கிக் காட்டுகிறார்கள் ; சஞ்சிகைகளிலும் எழுதுகிறார்கள். பயன் ஒன்றும் விளைவ

தில்லே. நகரசபைகளிலும் சட்டசபைகளிலும் உள்ள பிரதிநிதிகள் ஓயாமல் கிளர்ச்சி செய்தால் ஏதாயினும் வழி பிறக்கும். அக்கழகங்களில் கிளர்ச்சி செய்வோர் இல்லே. ஆதலால், பொதுமக்கள் மனஉறுதி கொண்டு தீட்டிய அரிசியை விலக்க முயலல்வேண்டும்.

இயந்திரந் தீட்டி ஈந்த அரிசியை வீட்டுப் பெண்மணிகள் நன்ருகக் கழுவுகிருர்கள் ; நன்ருக வேகவைத்துக் கஞ்சி வடிக்கிறர்கள். யாண்டாயினும் சிறிது சத்து மருந்துபோல் ஒட்டிக்கொண் டிருந்தாலும், அரிசியைக் கழுவுதலாலும் கஞ்சியை வடித்தலாலும் அச்சிறு சத்தும் ஒழிகிறது. கைக் குத்தரிசியைக் கழுவுவதுபோலப் பெண்மக்கள் இயந்திரக் குத்தரிசியையுங் கழுவுகிருர்கள். இது தொன்றுதொட்டு வந்த வழக்கம். அரிசியைத் தண்ணீர் விட்டுவிட்டுத் துலக்கிக் கொண்டிருப்பதும், கஞ்சியை வடிப்பதும் நிறுத்தப்படல் வேண்டும். அளவாக நீர் விட்டு உலே வைப்பின் கஞ்சி இறங்காது.

இவ்வளவு உழைப்பிற்குப் பதிலாகப், பெண்மக்கள் தங்கள் இல்லிற்கு வேண்டப்படும் அரிசியை விலேக்கு வாங்காது, நெல்லே வாங்கிக் குத்திக்கொள்வது நலம். வீட்டுக்கென நெல் குத்துவது இழுக்கன்று. அதனுல் உடற் பயிற்சி நிகழும் ; வியர்வை சொட்டும். நமது நாட்டுப் பெண்மக்கள் விளேயாட்டாகப் புரிந்து வந்த உடற்பயிற்சிகளுள் நெல் குத்தலும் ஒன்று. இவ்வாறு பெண்மணிகள் கடனுற்றத் தொடங்கினுல் இயந்திரக் குத்தரிசி தொலேயும். பெண்மக்கள் அருள் சுரந்தால் நலன் விளேயும்.

பெண்மக்கள் இயந்திர அரிசியால் விளேயுங் கேடுகளே நன்கு உணரப்பெறுவரேல், அவர்கள் வீட்டுக்கு வேண்டப் படும் அரிசியைப் பெறத் தாங்களே நெல் குத்திக் கொள் வார்கள்.

இப்பொழுதுள்ள நிலேயில் புழுங்கல் அரிசியால் ஆக்கப் படும் சோறுண்பது நலன். அச்சோற்றுடன் பருப்பு நெய் மோர் காய்கறிகள் கொள்ளல் வேண்டும். உலர்ந்து வற்றிய

காய்கறிகளை உபயோகித்தல் கூடாது. பசுமையான காய்கறிகளை உபயோகிப்பது நல்லது. காய்கறிகளைச் சிறிது அதிகமாகக்கொண்டு, சோற்றளவைக் குறைக்க முயலல் வேண்டும். சோறுண்பது நீண்டநாள் வழி வழி வந்த பழக்கம். அதைத் திடீரென முற்றும் நிறுத்தல் அறிவுடைமை யாகாது. சிறிது அளவைக் குறைத்துக் காய்கறி அளவைச் சிறிது மிகைப்படுத்தல் பொருத்தம்.

நிலக்கடலையை அளவாக உபயோகிக்கலாம். ஏழை மக்கள் நிலக்கடலையை எளிதில் பெறுதல் கூடும். நிலக்கடலையில் சத்துங் கொழுமையும் உண்டு. (2-3-1927)

## சத்தும் உணவும்

இவ்வுலகில் நோயற்ற வாழ்வால் குறைவற்ற செல்வம் பெற்று, வீடுபேறெய்துவது மக்கள் வாழ்வின் நோக்கம். நோயற்ற வாழ்வு பெறுதற்கு மக்கள் என் செய்தல் வேண்டும்? மக்கள் அவ்வாழ்விற்கென வலிந்து முயன்று ஒன்றும் ஆற்றவேண்டுவதில்லை. மக்கள் இயற்கையோடியைந்த வாழ்வு நடத்திவரின், அவர்கள் நோயற்ற வாழ்வையும் குறைவற்ற செல்வத்தையும் பெறுவார்கள். மக்கள் இயற்கைக்கு மாறுபட்ட துறைகளில் நண்ணுவரேல், அவர்கள் நோய்வாய்ப்பட்டு வாழ்வை இழப்பார்கள்.

நோயற்ற வாழ்விற்குரிய இயற்கைத் துறைகளை ஈண்டு விரிக்கிற் பெருகும். ஈண்டுச் சிறப்பாக மூன்றைக் குறிப்பிடுகிறோம். அவை, நல்லெண்ணம் - நல்லுணவு - நற்பயிற்சி என்பன. நல்லெண்ணம் முதலியவற்றிற்கு நல்லுணவும் அதாவது பொருந்திய உணவும் காரணமாக நின்று துணை செய்யும். உணவுக்குத் தக்கவாறு குணம் அமைதல் இயல்பு. ஆகவே, உணவின்மீது மக்கள் பெருங்கவலை செலுத்தல் வேண்டும்.

பொருந்திய உணவு கொள்ளாமையால் மக்கள் நோய் வாய்ப்பட்டு இடர்ப்படுகிருர்கள் ; அகால மரணத்துக்கும் உட்படுகிருர்கள். பொருந்தா உணவு கொள்வோரது உள் ளுறுப்புக்களில் வெம்மை எரிதலால், அவர்கட்குப் பிறக்கும் குழந்தைகள் விரைவில் இறந்துபடுகின்றன. இப்பொழுது கருக் குலேவுகளும், குழந்தைச் சாக்காடுகளும், அகால மர ணங்களும் பெருகி யிருப்பதற்குரிய காரணத்தைத் துருவித் துருவி ஆராய்ந்தால், அது பொருந்தா உணவு கொண்டதன் பயன் என்பது நனி விளங்கும்.

பொருந்தா உணவு எது? பொருந்திய உணவு எது? உள்ளுறுப்புக்கட்கு வெம்மை வெறியை வலிந்து கூட்டி, அவைகளேக் கிளர்ந்தெழுப்புவது பொருந்தா உணவு. உள் ளுறுப்புக்கள் தத்தம் இயற்கைக் கடனே நேரிய முறையில் ஆற்றத் துணேபுரிவது பொருந்திய உணவு. அதாவது சத் தில்லா உணவுப் பொருளேப் பொருந்தாத தென்றும், சத் துள்ள உணவுப்பொருளேப் பொருந்தியதென்றுங் கூறலாம்.

உணவுப் பொருள்களில் சத் (Vitamin) என்பது இயல்பா யமைந்துகிடக்கிறது. அந்தச் சத்துடன் அவ் வுணவை உண்டால் நோயற்ற வாழ்வைப் பெறலாம். சத் தழிந்த பின்னே, உணவுப்பொருளேக் கொள்வதால், பலதிற நோய்கள் தோன்றுகின்றன.

உணவுப் பொருள்களில் 'சத்' என்பது பெரிதும் ஞாயிற்ருெளியால் அமைவது. அவ்வொளியின் பரிணமம் 'சத்' தென்பது. அவ் வருஞ்சத்தே உடலே ஓம்புவது. அஃ தற்ற பொருளே உண்பதால் விளேயுங் கேடுகள் பல.

நம் தென்ஞட்டார் பெரிதும் அரிசியாலாகும் சோறு உண்கிருர். அரிசியே நமது உயிர் வாழ்வளிப்பது என்று சொல்வது மிகையாகாது. அவ்வரிசியில் இயல்பாகச் சத்து அமைந்திருக்கிறது. அதன் காப்புக்கென உமி முதலிய அரண்களும் அமைந்திருக்கின்றன.

மனிதர் என்செய்தல்வேண்டும்? பசிய நெல்கொணர்ந்து உமி போக்கிச், சத்தழியா முறையில் அரிசி எடுத்துச்

சமைத்து உண்ணல் வேண்டும். ஆனால், தற்போதைய மனிதர் என்ன செய்கிறார்? நாகரிகம் என்னும் பெயரால், இயல்பா யமைந்துள்ள ஜீவாதார சத்தைப் போக்க அரிசியைத் தீட்டித் தீட்டிவிடுகிறார். பல இடங்களில் இப்பொழுது இயந்திரங்களால் மனிதர் அரிசியிலுள்ள சத்தைப் போக்கி அசத்தை மட்டும் உண்கிறார்.

சத்தில்லா உணவு என் செய்யும்? உறுப்புக்களின் வளனை அழித்து, அவைகளின் வேலைகட்குக் கேடுஞ் சூழும். பின்னே மலச்சிக்கல், அஜீரணம் முதலியன தலைகாட்டும். இவைகளின் காரணமுணராது, மனிதர் டாக்டரிடம் சரண் புகுகிறார். டாக்டரின் மருந்து இன்னும் மேலும் மேலும் உறுப்புக்களின் இயல்பைக் கெடுக்கிறது. இவ்வாறு மக்கள் வாழ்வைக் குலைத்துக்கொள்கிறார்கள்.

சோற்றுடன் நாம் காய்கறிகளை உண்கிறோம். அக் காய்கறிகளிலுள்ள சத்து, பெரிதும் நீங்கியபின்னரே அவைகளை உண்கிறோம். செடி கொடிகளினின்றும் காய் கறிகளைக் கொய்த பின்னர், நீண்டநேரம் அவைகளை வைத்திருத்தலால் அவைகளில் நிலவும் சத்து அழிந்துபடுகிறது. புளி மிளகாய் முதலியவற்றால் நீண்டநேரம் நைய நைய வேகவைப்பதாலும் காய்கறிகளிலுள்ள சத்து பறந்துவிடுகிறது. இன்னும் பற்பல வழியில் சத்திழந்த பொருளையுண்ணும் நிலையைத் தற்கால நாகரிக மனிதர் அடைந்து அகாலத்தில் வாழ்வை இழக்கிறார்.

நகரசபைகள் நாளுக்குநாள் ஆங்காங்கே பெருகுகின்றன. தேர்தல் போராட்டத்துக்கோ அளவில்லை. நகரங்களில் குழந்தை மரணமும் அகால மரணமும் பெருகுகின்றன. இம்மரணத்திற்குப் பற்பல காரணங்கள் சொல்லப்படுகின்றன. அவைகள் யாவும் போலியாகும். மூலகாரணம் என்னை என்று ஆராய்தல் வேண்டும். மூலகாரணம், மக்கள் சத்தில்லா உணவை உண்பதேயாகும். நகரசபையார் சத்துள்ள உணவுப் பொருளை மக்கட்கு வழங்க அல்லது மக்களே பெறத்தக்க ஏற்பாடு செய்தல் வேண்டும். கட்சி

வாதங்களில் மூழ்கிக் கிடக்கும் நகரசபையார் தங்கருத்தை என்று இவ்வேற்பாட்டின்மீது செலுத்துவரோ அறிகிலேம்.

நகரசபை தனக்குரிய கடனை ஆற்றாதொழியினும், சில அறிஞர் இப்பொழுது அக்கடனாற்ற முற்பட்டிருக்கிறார். சத் உணவுப் பொருளைச் சேர்த்து, மக்கட்கு வழங்குதற்கெனக் கூட்டுறவுமுறையில் ஒரு சாலை காணும் முயற்சி சென்னையில் நடைபெற்று வருவதாக அறிகிறோம். இம்முயற்சி யாண்டும் நடைபெறுதல் நல்லது. (15-2-1928)

## பிணியும் விடுதலையும்

முன்னர் ஒருமுறை 'நவசக்தி'யில் சன்மார்க்கம் என்னுந் தலைப்பீந்து, சன்மார்க்கத்தைப்பற்றியும், அச்சங்க அமைப்பைப் பற்றியும் அடியேன் எழுதியது அன்பர்கள் நினைவில் இருக்கும். பின்னை, மாயவரமென வழங்கும் மயிலாடுதுறையில் கூடிய சன்மார்க்க மகாநாட்டில், சிறியேன் தலைமை வகிக்க நேர்ந்தபோது, முன்னுரையில் சன்மார்க்கத்தைப்பற்றியும் அதற்குரிய சங்க அமைப்பைப்பற்றியும் வலியுறுத்திப் பேசியதும் நேயர்கட்குத் தெரியும்.

சன்மார்க்கத்தின் வாயிலாகவே உலகம் உய்யு நெறி காண்டல் வேண்டுமென்று நான் நம்புகிறேன். சன்மார்க்க இயக்கம் இப்பொழுது மேல்நாடு உள்ளிட்ட பல இடங்களில் தோன்றியிருக்கிறது. மேல்நாட்டறிஞர் சிலர் இயற்கையோடியைந்த வாழ்வே சாலச் சிறந்ததென்றும், செயற்கை வாழ்வில் இன்பமில்லை யென்றும் பேசியும் எழுதியும் வருகிறார். அவர்கள் உரைகளைப் படிக்கும்போது, நமது நாட்டுப் பெரியோர்கள் அறிவுறுத்திய சன்மார்க்கம், மீண்டும் உயிர் பெற்றெழும் என்னும் உறுதி எனக்குறுதலுண்டு.

சன்மார்க்கமென்பது இயற்கைவாழ்வன்றி வேறென்னை? இயற்கையோடியைந்த வாழ்வைச் செலுத்தும் ஒருவன்

சன்மார்க்கத்தில் நிற்பவனாகிறான். இச்சன்மார்க்க இயக்கத்தின்வழி உலகம் இயங்கும் நாளே உலகவிடுதலை நாளென்க.

சன்மார்க்கம் என்றதும் 'பழைய வேதாந்தம்' 'பழங்குப்பை' என்று சிலர் எள்ளுகிறார். சன்மார்க்க நுட்பங்கள் உலகிடைப் பரவப் பரவ அவ்வெள்ளுதல் அருகுமென்பதில் சிறிதும் ஐயமில்லை. சன்மார்க்கமென்பது 'பிணியை அறுப்பது; நோயற்றவாழ்வை நல்குவது; விடுதலையை அளிப்பது' என்னும் நுட்பத்தை உலகம் உணர உணரச் சன்மார்க்க ஆட்சி உலகிடைப் பையப்பையக் கால்கொள்ளும். 'சன்மார்க்கம்' என்னும் பெயரால் வாழ்விற்கு ஒவ்வாத சில பொருள்கள் சில இடங்களில் சிலரால் வழங்கப்படுகின்றன. அப்பொருள்கள் எள்ளப்படுதல் இயல்பே. ஆதலால், சன்மார்க்கமென்பது உலக வாழ்விற்கு அரண் செய்வது என்னும் உண்மையை வலியுறுத்தித் தொண்டாற்ற வேண்டுவது சன்மார்க்கத் தொண்டர் கடமை.

சன்மார்க்கத்துக்குரிய துறைகள் பலப்பல. அவைகளுள் எதைப்பற்றி இன்று எழுதலாம் என்று சிந்தித்துக் கொண்டிருந்தேன். அவ்வேளையில், சென்றவாரம் எனது நிலையம் போந்த ஒரு பெரியார், என்னுடன் உரையாடிக் கொண்டிருந்தபோது, 'ஒரு கல்லை உயர எறிந்தால் அது கீழ் நோக்கித் திரும்பிவந்து விழுதற்கு நிலைக்களனாக இம்மண் இருப்பதுபோல, அருவமாய உயிர் உடலை நீத்ததும் அது சென்று நிலைபெறத்தக்க ஒரு களன் இருத்தல் வேண்டுமன்றோ' என்று வெளியிட்ட ஒரு கருத்தும், அடிக்கடி என்னிருக்கை போந்து செந்நெறிபற்றிப் பேசும் மற்றொரு பெரியார் பேச்சிடை 'மெய்யனுக்கு நோயேது' என்று குறிப்பிட்டதும் என் புந்தியில் படிந்தன. அப்படிவு, இன்று இங்கு எழுதத்தக்க பொருளை உணர்த்திற்று. அப்பொருள் எது? 'பிணியினின்றும் விடுதலை அடைவது எங்ஙனம்' என்பது. முதலாவது பிணிமீது கருத்துச் செலுத்துவோம்.

பிணிகள் பலதிறத்தன. அவைகளை ஈண்டு விரிக்கிற் பெருகும். உலகம் பிணிக்கு இரையாதல் வெள்ளிடைமலை. அக்கொடும் பிணி என்று ஒழியும்? என்று உலகம் அதனின்

றும் விடுதலையடையும்? உலகோர் ஓர்வாராக. அவ்வுலகில் யானும் ஒருவன்; யானும் ஓர்கிறேன். பிணி என்பது என்னை? அஃது யாண்டிருந்து பிறக்கிறது? இன்னோரன்ன வினாக்களை எழுப்பிச் சிறிதுநேரம் உன்னுவோமாக. ஒவ்வொருவரும் பிணியின் வரலாற்றை ஆராய்ந்து ஆராய்ந்து உண்மை கண்டு, பிணியை ஒழிப்பரேல், உலகில் பிணி நிலவுங்கொல்!

பிணியென்றால் என்னை? பிணி என்னுந் தமிழ்ச் சொல்லைக் காணக்காண எனக்கு மகிழ்ச்சி பொங்குகிறது. பொருந்திய காரணத்தை அடியில் கிளத்தியே நந்தமிழ்ப்பெருமக்கள் அச்சொல்லைக் கண்டார்கள். பிணி என்பது கட்டு, தேக்கம், தடை முதலிய பொருளைக் குறிக்கும் ஒரு சொல். மனிதன் உறுப்பியக்கத்திலாதல், குருதி யோட்டத்திலாதல் யாண்டாயினும் தடை நேரின், பிணி என்று சொல்கிறோம். இத்தடையை அல்லது கட்டைச் சிக்கல் என்றும் வழங்குகிறோம். அச்சிக்கல் யாண்டுறுகிறதோ, ஆண்டு நிகழும் உறுத்தல், பிணி என்று சொல்லப்படுகிறது.

பிணியுள்ள இடத்தில் நோயிருத்தல் இயல்பு. நோயென்பது துன்பமென்னும் பொருள் தரும் ஒரு சொல். அத்துன்பூட்டுமொன்று, நோய் என்றும் பிணியென்றும் வழங்கப்படுகிறது. இவ்வாராய்ச்சியில் இன்னுந் தலைப்பட்டுச் செல்லல் ஈண்டைக்கு ஏற்புடைத்தன்று.

எல்லா நோய்கட்கும் மூலம் மலச்சிக்கல் என்று எவருங் கூறுவதுண்டு. மருத்துவரும் மலச்சிக்கலுக்கு மருந்து கொடுக்கிறார்; நோயாளியும் மருந்துண்கிறான். மருந்து மலத்தைத் தள்ளிக்கொண்டே யிருக்கிறது. மருந்து நிறுத்தப்பட்டதும் மீண்டும் மலச்சிக்கல். அந்தோ! மீண்டும் மருந்து! இவ்வாறு மருந்துங் கையுமாயிருக்கும் ஒருவன் எந்நாள் பிணியினின்றும் விடுதலையடைவன்? விடுதலை யடையாது மகன் மாள்கிறான். மாளவா நாம் பிறந்தோம்?

'இப்பிறவி நீக்கி இனியொரு காயத்தில்
புக்குப் பிறவாத போம்வழி தேடுமின்'—திருமூலர்

'யானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக் கென்கடவேன்'

—மாணிக்கவாசகர்

'பாவத்தின் சம்பளம் மரணம்'—கிறிஸ்து

இத்திருமொழிகளை நோக்குக.

நோயற்று வாழ்தலே வாழ்வு என்பதை ஒவ்வொரு வரும் கூர்ந்து கூர்ந்து ஓர்தல்வேண்டும். நோய் கண்டதும் சிலர் கர்மத்தின்மீதும், சிலர் கடவுள்மீதும் பழிசுமத்துவது வழக்கம். கர்மமும் நேர்வழியில் இயங்கிவருகிறது. கடவுளும் செந்நெறியில் கடனாற்றி வருகிறார். அந்நேரிய செந்நெறி விடுத்து, மனிதமூர்க்கன் வினையாற்றினமையால், இவன் பிணிவாய்ப்பட்டு நோயுறுகிறான். பிழை யாருடையது? மனிதன் எப்பிழை நிகழ்த்திப் பிணியாளனாகிறான்?

மலச்சிக்கல், நோய்க்குத் தாயகம் என்பது மேலே சொல்லப்பட்டது. மலச்சிக்கலைப்பற்றி ஈண்டுச் சுருங்கச் சிலவுரை பகரல் வேண்டுவது எனது கடன். மலம் என்பது அழுக்கு என்று எவர்க்குந் தெரியும். அம்மலம் அதாவது அழுக்கு மலக்குடலில்மட்டுஞ் சிக்குறுகிறது என்று சிலர் கருதி, அம்மலக் கழிவிற்குமட்டும் முயன்று ஏமாந்து போகிறார். மலமெனும் அழுக்கு, குடலில்மட்டுஞ் சிக்குறுவதில்லை. அஃது உடலில் எங்கேனும் சிக்குறும். எங்கெங்கே உறுப்பியக்கத்துக்கும் குருதி யோட்டத்துக்கும் தடை நேர்கிறதோ, அங்கங்கே அழுக்கும் தேங்கி நிற்கும்; அவ்வவ்விடத்தில் நோய் தோன்றும். அந்நோய்களுக்கு வாகடத்தில் பலதிறப் பெயர்கள் சூட்டப்பட்டிருக்கின்றன. ஆகவே, மலச்சிக்கலுக்குரிய இடம் குடலொன்றே என்று கருதுவது தவறு.

எல்லா நோய்கட்குந் தாயகமாயுள்ள மலப் பிணிக்கு அல்லது சிக்கலுக்குக் காரணம் யாது? மனிதன் புலன்கட்கு அடிமையாதல் என்று சுருங்கக் கூறலாம். வேளைநாழி யின்றிக் கண்டதைத் தின்பதும், பொருந்தா உணவுகளை உண்பதும், தீயொழுக்கத் துறைகளில் புகுவதும், இன்னோரன்ன பிறவற்றில் நுழைவதும் ஜீரணக்கருவிகட்கு இடர்விளைக்கின்றன. உண்ணும் உணவு அன்றாடம் ஜீரணமாதல் வேண்டும்.

ஜீரணமாகி இரத்தநரம்புகளுடன் கலக்கும் பாற்சத்துப்போக, எஞ்சியுள்ள அசத்து, மலமாகி அன்றுடங் கழிதல்வேண்டும். அசத்து மலமாகவும் சிறுநீராகவும் வியர்வையாகவும் அன்றுடங் கழிந்தே தீரல் வேண்டும். அவை நாடோறுங் கழியத் தக்க பயிற்சிகளை வாழ்வில் கொள்ளுதல்வேண்டும். பயிற்சிகளைப் பற்றி ஈண்டு விரித்துக் கூறவேண்டுவதில்லை. ஜீரணம் ஒழுங்குபெற நிகழ்ந்துவரின், எவ்விதப் பிணியும் உருது. ஜீரணத்தில் குறைபாடு நிகழின், அழுக்கானது சிக்குற்று, நஞ்சாகிப், பல இடங்களில் தேங்கி எரிக்கப் புகுகிறது. அவ்வெரியின் மூலகாரணத்தை உணராது மனிதன் அலைகிறுன்; புரள்கிறுன்; மருந்துங் கையுமாகத் திரிகிறுன்; பொருளிழக்கிறுன்; வறியனுகிறுன்; முடிவில்.........பாவம்!

உண்ணும் பொருள், நன்றுக ஜீரணமாகிவிட்டது என்பதற்கு அடையாளம் என்னை? இயற்கைப் பசியே யாகும். பசியென்னுது இயற்கைப்பசி என்று ஏன் குறிப்பிடுகிறேன்? பசியில் போலிப் பசிகள் உண்டு. அவை மிளகாய்ப் பசி, புளிப்பசி, மருந்துப் பசி முதலியன. மருந்தால் மலங்கழிந்ததும் சிலர்க்குப் பசி தோன்றுவதும் உண்டு. அதுவும் மெய்ப் பசியன்று.

மெய்ப் பசியின் அடையாளம் யாது? உண்ணும் பொருள் ஒழுங்குபட்ட முறையில் ஜீரணமா யிருப்பின், வேளைக்கு வேளை தோன்றும் பசியினூடே ஒருவித நீர் நாவில் சுரக்கும். அந்நீர் இமிழ்நீர் எனப்படும். அதற்கு இமநீர் இமைநீர் என்னும் வழக்குகளும் உண்டு. இமிழ் நீரை, இன்ப நீரென்றும் ஆனந்த நீரென்றும் அறிஞர் கூறுப. மலச்சிக்கலுள்ள இடத்தில் அந்நீர் சுரவாது. அங்கு உமிழ் நீர் சுரக்கும். இமிழ்நீர் சுரத்தலே இயற்கைப் பசிக்கு அறிகுறியென்க.

இமிழ்நீரில் இனிமை யிருக்கும். இயற்கைப் பசியுடையார் இவ்வினிய நீருடன் உணவருந்துகிறுர். இந்நீரைச் சுரப்பிக்கும் பசி, இந்நாளில் எத்துணைப் பேருக்கு உண்டு? பசியின்றி வேளைக்கு வேளை உணவுகொள்ளும் நிலையை மனிதன்

அடைந்துவிட்டான். பறவைகள் விலங்குகள் இந்நிலை எய்த வில்லை. ஆறறிவுடைய மனிதன் இந்நிலை எய்தியுள்ளான்! என் செய்வது?

ஜீரணத்துக்குரிய பொருந்திய உணவு எது என்பது, இரண்டு வாரங்கட்கு முன்னர் 'சத்தும் உணவும்' என்னுந் தலையங்கத்தின் வாயிலாக விளக்கப்பட்டது. அதைநேயர்கள் கவனித்திருப்பார்கள். ஜீரண நிலையை ஒழுங்குபடுத்தி, மலச் சிக்கல் அதாவது பிணி யாண்டும் உறாதவாறு உடலை ஓம்பி வரும் ஆற்றல் சத்துணவிற்கு உண்டு. அவ்வுணவுடன் ஒழுக்க முறைகள் கொள்ளப்பெறல் வேண்டும். இவை யெல்லாம் இயற்கைப் பசிக்கு உரித்தாய இன்ப நீர் சுரப் பிற்குப் பெருந்துணை செய்வனவாம்.

இன்ப நீர் சுரப்பிற்கு உறுதுணை செய்யவல்லது வேறொன்றும் உளது. அதுவே எல்லாவற்றிற்கும் உயிர் போன்றது. அதன் கூட்டுறவு இன்றியமையாதது. சத்துண வுடன் - ஒழுக்கமுறைகளுடன் - இவையெல்லாவற்றிற்கும் உயிரனைய ஒன்றன் கூட்டுறவும் பெற்ற ஒருவனே, பிணியி னின்றும் முற்றும் விடுதலை அடைந்தவனாவன். அவ்வொன்று எது? சத்தெனுஞ் செம்பொருளென்க. அதைச் சத்தியம் - உண்மை - மெய் - அறம் - கடவுள் என்று எம்மொழியால் அழைப்பினும் அழைக்க.

மனிதன், காலைக்கடனைக் குறைவற முடித்து, நீரிலும் காற்றிலும் ஞாயிற்றொளியிலும் முறைப்படி மூழ்கிச், சத் துணவு கொள்ளுதற்கு முன்னர், எல்லாச் சத்துக்குஞ் சத் தாய் விளங்கும் உண்மையொளியை உன்னுதல் வேண்டும். மனிதன் உள்ளம், அச்சத்தியத்தில் தோயும்போது, இமிழ் நீர் ஊற்றுப்போற் சுரக்கும். அவ்வூற்றுக்குத் திறவாயிருப் பது சத்தெனுஞ் செம்பொருள். அச்செம்பொருள் அழுக் காறு அவா முதலியவற்றைக் கடந்து கடந்த, சத்தாய் - சித் தாய் - ஆனந்தமாய் இருப்பது. அப்பொருள் உள்ளத் தொளியாய் இருப்பது. அதை உன்ன வேறிடத்துக்கு ஓட வேண்டுவதில்லை.

'மாயனை நாடி மனநெடுந் தேரேறிப்
போயினம் நாடறி யாதே புலம்புவம்
தேயமும் நாடும் திரிந்தேங்கள் செல்வனைக்
காயம்இந் நாட்டிடைக் கண்டுகொண் டேனே '—திருமூலர்

நமதுள்ளத்துள்ள அப்பொருளை உன்ன உன்ன இமிழ் நீர் நாவில் பெருகும்.

'உள்ளத் தொளிருஞ் செம்பொருள்' சத் அல்லது உண்மை என்பதை எவரும் மறத்தலாகாது. அம்மெய்யைப் பொய்யுடைய ஒருவன் உன்னல் இயலாது. மெய்யை மெய்யே பற்றுதல் கூடும்.

நல்லியல்புக்குச் சத்துணவு இன்றியமையாதது என்று அறிஞர் கூறுவர். அவ்வுணவு, பொய்மைக்குரிய குணக் கேடுகளை யெல்லாம் நீறுபடுத்தும். நல்லியல்புகளைத் துணை கொண்டு, அறிவால், உண்முகத்தில் சத்தியப் பொருளை வழிபடுவோன் (தியானிப்போன்), பிணியினின்றும் விடுதலை அடையும் வழியைக் கண்டவனாகிறான்.

சத்துப்பொருள் உடலுக்கும், சத்தெனுஞ் செம் பொருளின் வழிபாடு உயிருக்கும் உணவாகும். இக்காரணம் பற்றியே உணவருந்தலுக்கு முன் கடவுள்வழிபாடு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. கடவுள் வழிபாடாவது சத்தில் அதாவது சத்தியத்தில் உறைந்து நிற்பது.

'பொய்வளரும் நெஞ்சினர்கள் காணாத காட்சியே
பொய்யிலா மெய்யர் அறிவிற்
போதபரி பூரண அகண்டிதா காரமாய்ப்
போக்குவர வற்ற பொருளே'

'வஞ்சனையும் பொய்யுமுள்ளே வைத்தழுக்கா றாயுளறும்
நெஞ்சனுக்கு முண்டோ நெறிதான் பராபரமே'—தாயுமானர்

சத்துணவு உண்டு, ஒழுக்க நெறியில் நின்று, சத் தெனுஞ் செம்பொருளுடன் அகத்தே உறவுகொள்ளும்

ஒருவனே சன்மார்க்கத்தில் நிற்பவன். இச் சன்மார்க்கனுக்குப் பிணியேது? மூப்பேது? சாக்காடேது?

உடலோம்பலும், ஒழுக்கமும், சத்துணவும், சத்திய வழிபாடும் உயிர்களைப் பிணியினின்றும் விடுதலை செய்யும் என்க. (29-2-1928)

## க்ஷயரோகம்

தற்கால நாகரிகம் எங்கெங்கே பரவியிருக்கிறதோ, அங்கங்கெல்லாம் க்ஷயரோகத் தாண்டவத்துக்குக் குறைபாடில்லை. தற்கால நாகரிகத்துக்கு ஏற்றபடி அமையும் நகர வாழ்வே இத்தாண்டவத்துக்குக் காரணமாகும். தற்கால நாகரிகம், க்ஷயரோகத்தை ஈன்று வளர்க்குந் தாய் என்று கூறுதல் மிகையாகாது.

நகரங்களில் வீடுகள், தெருக்கள், விளக்குகள், சாலைகள், கடைகள் முதலிய யாவும் செவ்வனே அமைந்திருக்கின்றன. புறத்தோற்றம் அழகாயிருக்கும். வாழ்வினுள்ளே நுழைந்து பார்த்தால் மலர்ச்சி இராது. மலர்ச்சிக்குரிய உயிர்ப்புக் குறைபட்டிருக்கிறது.

நகர வீடுகள் எப்படியிருக்கும்? அவை கண்ணைக் கவரும்! உள்ளே புகுந்தால் ஒலி முழக்கம் அதிகம்! என்ன ஒலி? 'கணீர் கணீர்' என்னும் இருமல் ஒலி! டாக்டர்களின் பெருக்கும், மருத்துவ சாலைகளின் அமைப்பும் நங்கூற்றை வலியுறுத்தும். நகர வாழ்வு, நரக வாழ்வாய் உயிர்களை வருத்துகிறது என்று சுருங்கச் சொல்லலாம்.

முதலாவது மனிதனுக்குத் தூநறுங் காற்றுத் தேவை. அக்காற்று வாய்ப்பு எங்கும் உண்டு. ஆனால் அதை முகர்ந்து இன்புறும் பேறு நகர மக்கட்கு உண்டோ? தெருக்களின் நெருக்கும், வீடுகளின் செறிவும் மக்கட்கு நறுங்காற்றை

எங்ஙனம் வழங்கும்? ஒரு தெருவில்-ஒரு வீட்டில்-எவ்வளவு பேர் வாழ்தல் வேண்டுமோ அவ்வளவு பேர் வாழ்கிறார்? இல்லையே. ஏழைமக்கள் வாழுந் தெருக்களின் நிலையும், வீடுகளின் நிலையும் இரக்கத்தக்கனவா யிருக்கின்றன! ஒரு வீட்டில் எத்துணை அறைகள்! எத்துணை உயிர்கள்! ஓரே அறையில் பல்லோர் வாசம்! அங்கேயே அட்டில்! அங்கேயே படுக்கை! அங்கேயே பிற எல்லாம்! அங்குள்ள அனைவரும் ஒரு குறுகிய இடத்தில் மலசலங் கழித்தல் வேண்டும்! கொடுமை! கொடுமை! இந்நெருக்கம் தூநறுங் காற்றை ஈர்க்குமா, அல்லது வெம்மைக் காற்றை உமிழுமா என்பதை அன்பர்கள் உன்னுவார்களாக.

ஏழைமக்கள் தெருக்களில் நடக்கும்போது, குதிரை வண்டிகளும், மோட்டார் வண்டிகளும், பஸ்களும், பிறவும் கிளப்பும் புழுதிகளெல்லாம் அவர்கள் மூக்கின் வாயிலாக நுரையீரலுள் நுழைகின்றன. இவையன்றித் தார் நாற்றமும், மண்ணெண்ணெய் நாற்றமும், பிற தீநாற்றமும் வீசிய வண்ணமா யிருக்கின்றன. மூக்கு எதற்காகப் படைப்பில் அமைந்திருக்கிறது? இவ்விதப் புழுதியும் நாற்றமும் நுழைதற்கா?

மனித வாழ்விற்கு வேண்டற்பாலதாய உணவைக் கொள்ளுதற்கு இரண்டு நுழை வாயில்கள் படைப்பில் அமைந்திருக்கின்றன. ஒன்று மூக்கு; மற்றொன்று வாய். மூக்கின் வாயிலாகச் செல்லும் காற்றும் இன்றியமையாத உணவே யாகும். சோற்றுணவினுங் காற்றுணவு மிகச் சிறந்தது. 'மீனுக்கு நீர் மனிதனுக்குக் காற்று' என்பது ஆன்றோர் மொழி. அக் காற்றுக்குரியதாய் அமைந்துள்ள மூக்கில் நகர வாழ்வில் என்னென்ன பீடைகள் நுழைகின்றன? இக்கழிவுகள் மூக்கின் வாயிலாக நுழைந்து நுரையீரலில் நிலைபெற்றால், அவ்விடம் என்னாகும்? அது சாக்கடை யாகுமன்றோ? அச் சாக்கடையில் புழு நெளிதல் இயல்பன்றோ? இவ்வாறு நகர மக்களின் உயிர்ப்புநிலை கெடுகிறது.

பல காரணங்களால் எழும் உஷ்ணவாயுவை ஈர்த்துத் தூய்மை செய்தற்கு ஞாயிற்றின் ஒளியும் மரங்களும்

வேண்டற்பாலன. ஒளி போதிய அளவு இருப்பினும், அதற் கேற்ற அளவில் மரச்செறிவு இருத்தல் வேண்டும். கதிரொளி மரத்தழைகள் வாயிலாகவே தனது நேரிய கடனாற்றும்.

அத்தகை மரச்செறிவை நகரங்கள் இழந்தே வரு கின்றன. நகரங்களில் மக்கள் தொகை நாளுக்குநாள் பெருகு கிறது. மரங்களின் தொகையோ நாளுக்கு நாள் அருகு கிறது. சென்னையில் நாம் வாழும் இராயப்பேட்டை, இருப தாண்டுகளுக்கு முன்னர்ப் பசுந் தண்டலைக் காட்சி வழங்கி யிருந்தது. எவ்வளவு தோட்டங்கள் இப்பேட்டையில் இருந் தன? அத் தோட்டங்களெல்லாம் இப்பொழுது அழிக்கப் பட்டன. அவ்விடங்களில் மாட மாளிகைகள் கட்டப்பட் டிருக்கின்றன. மரங்களும் செடி கொடிகளும் அழிக்கப்படு வதைக் காணும்போதெல்லாம் மனம் நடுக்குறும். மரத் துடன் வாழவேண்டிய மனிதன், மரத்தை வெட்டிய வண் ணமா யிருக்கிறான். இதற்குக் காரணமாயுள்ள நகர வாழ்வை நரக வாழ்வெனக் கூறல் பொருத்தமேயாகும்.

மரமில்லா இடங்களில் வாழும் மனிதன் - மரமில்லாப் பாதைகளில் உழலும் மனிதன் - நறுங்காற்றைப் பருகாத மனிதன் - நிலையென்னாகும்? அவன் சுகாதாரத்துக்கெனக் காணப்பட்ட நகர சங்கங்கள் என் செய்கின்றன? அவை களாதல் மரங்கள்மீது கருத்துச் செலுத்துகின்றனவா?

நகரங்களில் வாழும் மனிதனது மூக்கு, தன் இயற் கைக்கு மாறுபட்ட கடனாற்றும் நிலை எய்தி யிருக்கிறது. வாயோ? அதன் நிலையும் இரங்கத்தக்கதாயிருக்கிறது. நகரங் களில் வாழ்வோர் காலையில் படுக்கையினின்றும் எழும் போதே காப்பி தேநீர் எண்ணத்துடன் எழுகிறார். காற்றாக- நீராக - ஞாயிற்றொளியாக - நின்று, உலகை ஓம்பி வரூஉம் எல்லாம் வல்ல ஆண்டவன் நினைவுடன் எழவேண்டிய மனம், காப்பி தேநீர் கருத்துடன் எழுகிறது! சிலர் வீடு களிலேயே காப்பி தேநீர் பருகுகிறார். பலர் காபிஹோட்ட லுக்கு ஓடுகிறார். இக் காப்பி ஹோட்டல்கள் க்ஷயரோகத் துக்குத் தாயகம் என்று மட்டும் இன்று சொல்லி மேலே செல்கிறோம்.

காப்பி தேநீர் கொக்கோ முதலியன மனிதனுக்குப் பொருந்திய பானங்களல்ல. குளிர் நாட்டில் வாழும் அறிஞர்களே இதுபோழ்து அவைகளைப் பொருந்தாப் பானங்களென ஒதுக்கி வருகிறார்கள். நமது நாடோ வெம்மை செறிந்த நாடு. இந்நாட்டை அப்பானங்கள் எவ்வாறெரிக்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? இக்குடிகள் நமது நாட்டில் என்று நுழைந்தனவோ, அன்று தொட்டு நாட்டை க்ஷயம் அரித்து எரித்து வருகிறது.

காப்பி முதலிய வெம்பானங்களில் கருத்தைப் புகுத்தும் நகரம், மக்களுக்கு நல்ல காய்கறிகளையேனும் வழங்குகிறதா? அஃதுமில்லை. இரண்டுநாள் மூன்றுநாள் காய்ந்து உலர்ந்து அடிபட்ட காய் கறிகளையே பெரிதும் நகர மக்கள் உண்கிறார்கள். அக்காய்கறிகளில் சத்துப்பொருள் நிலவுதற்கும் இடமில்லை. சத்திழந்த பொருளை உண்பதால் உள்ளுறுப்புக்களுக்குப் பலதிறக் கேடுகள் உண்டு. வீட்டுக் கொல்லையில் விளைந்த காய்களையும் கீரைகளையும் பறித்து, உடனே - அதாவது சத்துப் பறந்தோடுதற்கு முன்னே - சமைத்துச் சாப்பிட்டுவந்த மனிதன், நகரம் போந்து, சத்திழந்த காய் கீரைகளை உண்டு, உறுப்புக்களின் இயற்கை நிலைகளைக் கெடுத்துக் கொள்கிறான். இவனை க்ஷயம் பீடிக்குமா? பீடியாதா?

நகர மனிதன் அரிசியையாதல் நல்லதாகப் பெறுகிறானா? 'நாகரிக' மனிதன் 'நாகரிக' முறையில் நன்றாக இயந்திரந் தீட்டிய வெள்ளிய அரிசியைப் பெறுகிறான். ஐயோ! பாவம்! அரிசியிலும் சத்திழக்கிறான் இக்கால மனிதன்! சர்க்கரை முதலிய பொருள்களும் சத்திழந்த நிலையில் இக்கால மகனுக்குக் கிடைக்கின்றன. இம்மனிதனை க்ஷயம் விடுங்கொல்!

தற்கால நாகரிக மனிதன் நகரத்தில் கொண்டுள்ள வழக்க ஒழுக்கங்களை ஈண்டு விரிக்கிற் பெருகும். கள்ளுக் கடைகளையும், வேசையர் விடுதிகளையும், வேறு பல களியாட்டங்களையும் ஈண்டு நினைவூட்ட வேண்டுவதில்லை.

நகர வாழ்வில் வயது முதிர்ந்தவர்களை மட்டுமா க்ஷயம் அடர்ந்து வருத்துகிறது? அந்தோ! இளங் கன்றுகளையும்

அது தொடர்ந்து வருத்துகிறது! இளைஞர்களைக் காணும் போது, 'இவர்கள் காளைகளா கன்னிகளா அல்லது என்புக் கூடுகளா' என்று நினைத்தல்வேண்டியதாகிறது. அவர்கள் அருகே சென்றால், அவர்கள் மூச்சுப்பை, கொல்லன் துருத்தி வேலை செய்வதைக் காணலாம்.

நகரங்களில் மாணாக்கர்கள், 'ஹோட்டல்' என்னும் சுடுகாட்டு வாழ்வு பெறுகிறார்கள். அங்கே அவர்களைக் காப்பி முதலிய பானங்கள், சிற்றுண்டிகள், சாப்பாடுகள் எரிக்கின்றன. இவைகளுடன் அவர்கட்குப் பரீட்சைக் கனல் வேறு.

மாணாக்கர்கட்கெனப் பல ஆட்டங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அவ்வாட்டங்களாதல் அவர்கட்கு நலஞ் செய்கின்றனவா? இல்லையே! மாணாக்கர்கள் பெரிதும் உடல் நலன் என்னுங் கருத்துடன் ஆட்டங்கள் ஆடுகிறார்களில்லை. அவர்கள் நெஞ்சில் 'போட்டி' என்னும் பேய் புகுந்து அவர்களை அலைக்கிறது. அதனால் ஆட்டங்களும் இளைஞர்கட்கு நலஞ் செய்வதில்லை.

மாச் செறிவில்லாத் தெருக்களின் நெருக்கமும், வீடுகளின் செறிவும், தெருப்புழுதிகளும், தீ நாற்றமும், வண்டிகளின் இரைச்சலும், தார்வெப்பமும், காப்பிமுதலிய பானங்களும், சத்திலாக் காய் கறிகளும், தீட்டிய அரிசி சர்க்கரை முதலியனவும், வேறுபல தற்கால வழக்க ஒழுக்கங்களும் ஒன்றுபட்டு மக்கள் இயற்கை நிலையைக் கெடுத்திருக்கின்றன. இயற்கை நிலை கெட்டதும் மலச்சிக்கல் உறுகிறது. மலச்சிக்கல் நாளடைவில் உறுப்புக்களின் இயக்கங்கட்கு ஊறு செய்கிறது. உள்ளே தங்கும் அழுக்குகள் பலதிற நோய்களைக் கிளப்புகின்றன. அந்நோய்கட்கு மருந்துண்ண மனிதன் புறப்படுகிறான். இவ்வாறு வாழ்வு கெடுகிறது!

கெடும் வாழ்வில் க்ஷயம் புகுந்து சூறையாடுகிறது. க்ஷயம் இளங் கன்றுகளை மேய்கிறது; இளங் காளைகளை உண்கிறது; இளங்கன்னிகளை விழுங்குகிறது. பத்துமாதஞ் சுமந்துபெற்ற தாய், தன் மக்களை க்ஷயந் தின்பதைக்

கண்ணாரக் காண்கிறாள்; அக்காட்சியைத் தந்தையுங் காண்கிறான்; மற்றவரும் பார்க்கிறார். மக்கள் என்புகளெல்லாம் உருகுகின்றன. டாக்டர்கள் வருகிறார்கள்; போகிறார்கள். என் செய்வது? முடிவில் கர்மத்தின்மீது பழி; கடவுள்மீது பழி. க்ஷயத்துக்கு மருந்துண்டோ? பின்னை வழி என்னை?

க்ஷயம் தோன்றியதற்குக் காரணமென்னை? காரணங்கள் சில மேலே சொல்லப்பட்டுள்ளன. அவைகளினின்றும் விடுதலையடைய முயல்வதே உய்யும் வழி தேடுவதாகும். நகர வாழ்வில் கொள்ளப்பட்ட பொருந்தா முறைகளை ஒவ்வொன்றாக விடுத்து வருதல்வேண்டும். காப்பி முதலியவைகளை ஒழித்து, நீர்மோர் இளநீர் முதலியவற்றைப் பருகப் பயிலல் வேண்டும். சத்துணவு கொள்ள முயலல் வேண்டும். மரங்களடர்ந்த மலையடியில் வாழ்தல் வேண்டும். நாடோறும் நீரிலும் காற்றிலும் ஒளியிலும் முறைப்படி மூழ்குதல் வேண்டும். இம்மூழ்குதலைப்பற்றி நன்கு உணர்ந்தவர்கள் வாயிலாக முறைகளைப் பயின்றுகொள்ளுதல் வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாகச் சத்தியப்பொருளாக உள்ள கடவுளை நினைந்தவண்ணமாயிருத்தல் வேண்டும். சுருங்கக் கூறின், இயற்கைக்கு மாறுபட்ட எவ்வெத் தீய பழக்கங்கள் கொள்ளப்பட்டனவோ, அவை ஒவ்வொன்றையும் விடுத்து விடுத்து, இயற்கையோடியைந்து வாழ வாழ உய்யும்வழி தோன்றும்.

நகர வாழ்வு க்ஷயத்துக்குத் தலையாய காரணம் என்று நேயர்கட்கு நினைவூட்டி, இன்று இவ்வளவுடன் நின்று விடுகிறோம். (14-3-1928)

# இயந்திரங்களும் மனிதர்களும்

கடவுள் மனிதர்களை ஏன் படைக்கிறார்? இவ்வுலகியல் இன்பத்தையும், அவ்வழித் தமது திருவடிப் பேற்றையும் மக்கள் அடைதல் வேண்டுமென்னுங் கருணை மேலீட்டான், கடவுள் மக்களைப் படைக்கிறார். மக்கள் இன்பத்தை அடைதற்கு உடலில் உரம் பெறுதல் வேண்டும். இன்பத்துக்கு உடல்நலம் வேண்டற்பாலது.

உடல்நலத்தை எவ்வாறு காப்பது? இதற்குப் பற்பல வழிகள் உண்டு. அவைகளை இங்கே குறிக்கவேண்டுவது அநாவசியம். அவைகளைப்பற்றிப் பலமுறை எழுதி யிருக்கிறோம். இன்றும் எடுத்துக்கொண்ட பொருளுக்கேற்பச் சில கூறுவோம்.

மனிதனுடைய உடலமைப்பு ஓர் இயந்திரம்போன்றது. இயந்திரம் வேலையின்றிக் கிடந்தால் அதன்மீது துருப் பிடிக்கும்; அதன் உறுப்புக்களின் ஆக்கங் குன்றும்; நாளடைவில் அதன் இயக்கத்துக்கே கேடு நேரும். அவ்வாறே உடலும் உழைப்பின்றிக் கிடந்தால், அதன் நலம் விரைவில் குன்றும்; நாளடைவில் இன்பந் துய்த்தல் அற்றுப் போகும். ஆதலால், வாழ்வுக்கு உடல்நலந் தேவை. உடல்நலம் இன்பத்தைத் துய்ப்பிக்கும். இன்பம் உடல் நலத்தைப் பொறுத்திருப்பது கவனிக்கத்தக்கது.

இயந்திரங்கள் காணப்படுதற்கு முன்னர், அவைகள் இப்பொழுது செய்து வரும் வேலைகளைப் பெரிதும் மனிதன், தன் உறுப்புக்களைக்கொண்டே செய்துவந்தான். மனிதன் கை செய்யாதது என்ன? இயந்திரங்கள் புறப்படுதற்கு முன்னர் வாழ்ந்த மக்கள், நீண்ட நாள் வாழவில்லையோ? நல்ல பிள்ளைகளைப் பெறவில்லையோ? உலக இன்பத்தை நேரிதில் துய்க்கவில்லையோ? அவர்கள் உலகின்பந் துய்த்த வண்ணம் இக்கால மக்கள் துய்க்கவில்லை என்பது வெள்

ளிடைமலே. மனிதன் உடல்நலத்துக்கென ஏற்பட்ட வேலை களையெல்லாம், இந்நாளில் இயந்திரங்கள் செய்துவருவதால், மனிதன் உடல் உரமிழந்து இன்ப நுகர்ச்சியின்றி வருந்து கிறான்; மருந்து உண்கிறான். மருந்து சிறு துணைசெய்யுமே யன்றிப் பெருந்துணை செய்வதாகாது. உழைப்பு-உழைப்பே-உடலுக்கு உரத்தையும் வளத்தையும் தரவல்லது.

இயந்திரங்களால் மனிதன் நடப்பதைத் தவிர்க்கிறான். மனிதன் உடல் நலத்துக்கு இன்றியமையாதது நடை. நகரங் களில் ஏழை மக்களும், சோம்பலால் அரையணா ஓரணா கொடுத்து, டிராம் வண்டியேறிச் செல்லவே பிரியப்படுகிறார். செல்வர்களைப்பற்றி ஒன்றும் பேச வேண்டுவதே யில்லை. அவர்கள், வீட்டுவெளியில் உலாவவும் ஒரு சிறு மோட்டார் வண்டி வைத்துக்கொள்கிறார்கள்; மாடியேறவும் மின்சாரத் தூக்கு வைத்துக்கொள்கிறார்கள். இந்தியச் செல்வர்களே இவ்வறியாமையில் வீழ்ந்து இன்பமிழந்து வாடுகிறார்கள். ஐரோப்பியர்கள் இயந்திர வாழ்வில் அழுந்தினாலும், அவர்கள் தேகாப்பியாசத்துக்கெனச் சில வேலைகளையும் சில ஆடல் பாடல்களையும் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். நம்மவர்கள் எதுவுமின்றிக் கெடுகிறார்கள். (அது நிற்க)

நம் முன்னோர்கள், உணவாக்கும் வழியிலும், உடை செய்யும் வழியிலும், திருக்கோயில் செல்லல் வலம்வரல் அலகிடல் மெழுகல் முதலிய திருத்தொண்டுகள் புரியும் வழி யிலும் தேகாப்பியாசத்தைப் பாதுகாத்து வந்தார்கள். இப் பொழுது அவ்வழக்கங்கள் அழிந்துபட்டு வருகின்றன. நம்மவர்கள் அழகும் வளமும் அறிவும் குன்றி வருகின்றன. தெருவில் விளையாடும் ஏழைக் குழந்தைகளைக் கண்டால் கண்ணீர் பெருகுகிறது. அவர்கள் முகத்தில் அழகைக் காணோம்; உடலில் வளத்தைக் காணோம். குழவிப் பருவத் திலேயே வயிறு சுரந்து பெருக்கிட்டிருப்பதைக் காண வயிறெரிகிறது. சில குழந்தைகள் மூஞ்சுறுபோல் காணப் படுகின்றன. அவைகளின் என்புகள் வேம்பின் ஈர்க்குப் போலக் காணப்படுகின்றன. இக்குலைவிற்குக் காரண மென்ன? தாய் தந்தையர்பால் போதிய உரமின்மையே.

நமது வீட்டுத் தாய்மார்கள் முன்னே எவ்வளவு வேலை செய்து வந்தார்கள் ? வீட்டிலிருந்தபடியே அவர்கள் பல வேலைகள் செய்து வந்தமையால், அவர்கள்பால் அழகு நிலவிக்கொண்டிருந்தது. இப்பொழுது நகரங்களில் வாழுந் தாய்மார்களுக்கு வீட்டு வேலை ஏது ? எல்லாவற்றிற்கும் இயந்திரங்கள் இருக்கின்றன. உணவை எடுத்துக்கொள் வோம். முன்னே நம் பெண்மணிகள் கரத்தால் உலக்கை கொண்டு குத்தி அரிசி எடுத்துச் சமைப்பார்கள். இப்பொ ழுது அவ்வழக்கம் கிராமங்களிலேயே இல்லை யென்றால், நகரத்தில் அவ்வழக்கத்தைப் பற்றிப் பேசவும் வேண்டுமோ ? நெற்பொறி (அரிசி குத்தும் இயந்திரம்) இல்லாத இடங் காண்டல் அரிது. இந்த இயந்திரம் முதலாவது நம் பெண் மக்கள் உடல்நலத்தைக் குலைத்தது ; ஏழைத் தொழிலாளி கள் வாயில் மண்ணைத் தெள்ளித் தூவிற்று ; தேசத்தில் க்ஷயரோகத்தை நிலைபெறுத்திற்று. இவ்வளவு கொடுமை கள் இயந்திரத்தில் உண்டு என்பது இந்நாளில் பலர்க்குந் தெரிந்ததொன்றே. தெரிந்தும் என்ன பயன் ? நம்மவர்கள் அறியாமைக்கு இரங்க வேண்டுவதே.

இயந்திரம், உமியைப் பிளக்கும்போது, தவிட்டை அறவே செதுக்கி, அரிசியைப் பால்போல் செய்கிறது. 'மிஷின் அரிசியைக் கழுவாமல் உலையிற் போடலாம்' என்று எத்துணைப் பெண்மணிகள் பேசுகிறார்கள் ? தாஞ்சாக மருந் துண்பவர்கள் இவர்களல்லவோ? முற்றுந் தவிடு நீங்கப்பெற்ற வெள்ளரிசி ஜீரணசக்தியைக் குறைக்குமென்றும், பலநோய் களைச்-சிறப்பாக க்ஷயரோகத்தை - உண்டுபண்ணு மென்றும் அறிஞர்கள் சொல்கிறார்கள். இவ்வுண்மை யுணராத டாக்டர் களில்லை. டாக்டர் பரீட்சைக்குப் போகும் மாணுக்கர்களுக் கும் இது போதிக்கப்படுகிறது. க்ஷயரோக ஆராய்ச்சியில் பேர் பெற்ற டாக்டர் முத்து, இயந்திரக் குத்துக்குட்பட்ட அரிசி யும் க்ஷயரோகத்துக்கு ஒருகாரணம் என்று தமது கருத்தை வெளியிட்டுள்ளார். தவிடு முற்றும் நீங்காதவாறு இயந்திரங் களில் குத்துவிக்கவேண்டுமென்று சிலர் முயன்று வருகிறார். எம்முறையிலாவது இயந்திரங்களைக் கட்டியழ நம்மவர்கள்

முயல்கிறார்களேயன்றி, அவைகளைத் தொலைக்க எண்ணுகிறார்களில்லை. கையால் உலக்கை கொண்டு குத்திப் பெறும் அரிசியில், இயல்பாக அதைப் பிடித்து ஒட்டிக்கொண்டுள்ள தவிட்டுப்பசை நீங்குவதில்லை. இயந்திரம் அதை அறவே ஒழித்துவிடுகிறது. அப்பசையில் பலதிறச் சக்திகளுண்டு. அச்சக்திகள் ஜீரணக் கருவிகளைப் பாதுகாத்து வருவதோடு நோய்களையும் தடுத்து வருகின்றன. உலக்கை பிடியாத கைக்கு உரமேது ?

நம் மாதரசிகள் அரிசியொன்றற்குமட்டுமா இப்பொழுது இயந்திரத்தை நாடுகிறார்கள் ? ஏறக்குறைய எல்லாவற்றிற்கும் இப்பொழுது இயந்திரத்தை நாடுகிறார்கள். சோம்பல் அதிகம். மிளகாய், மிளகு, சீயக்காய், கோதுமை முதலிய பலவற்றையும் இயந்திரம் பொடிபடுத்துகின்றன. இப்பொடிகள் நிணத்தை என்ன பாடுபடுத்தும்? நகர வீடுகளில் பெண்மணிகளுக்கு வளமளித்து வந்த திருவுடைப் பொருள்களாகிய அம்மி எங்கே ? உரல் எங்கே ? உலக்கை எங்கே ? எல்லாம் போயின. இலட்சுமி நமது வீடுகளை விட்டு ஓடிப்போய் விட்டாள். அரிசிக்கும் மிளகாய்க்கும் சீயக்காய்க்கும் இயந்திரங்களைத் தேடுவதால் எவ்வளவு பொருள் நஷ்டம் ! உடல் நஷ்டம் !! இவைகளை நம்மவர்கள் என்று கவனிப்பார்களோ அறிகிலோம்.

உடையைப் பண்டைக்காலத்தில் பெரிதும் நம் பெண்மணிகளே செய்துவந்தார்கள். வீடுகளில் கைராட்டினமும் தறியும் அழகுசெய்துகொண்டிருந்தன. அவ்வழகுகளையெல்லாம் பாழும் இயந்திரங்கள் அழித்துவிட்டன. உலக்கையும், குழவியும், இராட்டினமும் பெண்மக்களுக்கு எவ்வெவ்வழியில் பயனளித்து வந்தன ! அவைகள், அவர்கள் உடலை வளர்த்து வந்தன ! அழகை நிலைபெறுத்தி வந்தன ; எல்லாவற்றிற்கும் மேலாக அவர்கள் கற்பைக் காத்துவந்தன. 'இந்தியாவில் பொய் பேசும் ஒரு ஹிந்துவையும், கற்பிழந்த ஒரு ஹிந்துப் பெண்மணியையும் காண்டல் அரிது ' என்று கிரேக்க சரித்திரக்காரர் எழுதியதை ஓரிடத்தில் சுவாமி

விவேகாநந்தர் எடுத்துக்காட்டி இறும்பூதெய்துகிறார். அந்நாளில் நம்மவர்கள் தூயவர்களாயிருந்ததற்குக் காரணங்கள் பல இருக்கலாம். அவைகளுள் சிறந்தன சில. அந்நாளில் நம் ஆண்மக்களும் பெண்மக்களும் கைத்தொழிலில் பெரிதும் கருத்தைச் செலுத்தி வந்ததையும், ஓய்ந்த நேரங்களில் கடவுள் பூசையில் கவலை செலுத்தி வந்ததையும் சிறப்பாகக் குறிக்கலாம். நகரங்களில் தற்காலப்பெண்மக்கள்-பெரிதும் செல்வர் வீட்டுப்பெண்மக்கள்-வேலையின்றிப் படுத்துறங்கியும், தூர்த்த நாவல் படித்தும் வருகிறார்கள். இவைகள் பெண்மக்கள் மனத்தைக் கீழான எண்ணங்களில் வீழ்த்துவது இயல்பு. வீட்டு வேலை பெண்மக்கள் நிறைகாக்குங் கடவுளாகும்.

நம் பெண்மணிகள், வேலையின்றி வாழ்வு நடாத்தலால், அவர்கள் உடலுரங் குன்றப்பெறுகிறார்கள். அவர்கள் வயிற்றில் பிள்ளை பிறத்தல் அரிது; பிறந்தாலும் பீமன் அருச்சுனன் போன்றவர்கள் பிறப்பதில்லை. செல்வர் வீட்டுப் பெண்மக்கள் பிரசவ காலத்தில் படுங் கஷ்டத்துக்கு ஓர் அளவும் உண்டோ? சில வேளைகளில் தாய்க்கும் சேய்க்கும் மரணம் நிகழ்ந்துவிடுகிறது. உலக்கையையும் குழவியையும் பிடியாத குற்றம், தாயையும் சேயையும் கொல்கிறது.

ஐரோப்பியப் பெண்மணிகள், ஆண்மக்களைப்போலவே தங்கள் வாழ்வை நடாத்துகிறார்கள். அவர்கள் ஆண்மக்களைப் போலவே ஆடுகிறார்கள்; பாடுகிறார்கள்; குதிரை ஏறுகிறார்கள். அவர்கள் உடல்நலத்தைச் செவ்வனே பல்வழியிலும் பேணி வருகிறார்கள். அவர்கள் வாழ்வை அப்படியே நம் பெண்மணிகள் பின்பற்றி நடக்கவேண்டுமென்று கூற வந்தோமில்லை. அவர்கள் எவ்வழியிலோ உடலை ஓம்புகிறார்கள் என்பதை ஈண்டுக் குறிப்பிட வந்தோம். ஐரோப்பாவில் பெண்மக்கள் வாழ்வு வேறு துறைகளில் சிதைந்துவருகிறது. அவைகளைச் சமயம் நேரும்போது எழுதுவோம். நம் பெண்மணிகளை அவ்வாழ்வு இன்னுந் தீண்டாவிடினும், இயந்திரங்கள் அவர்கள் வாழ்வைத் துன்ப வாழ்வாகச் செய்து வருவதை ஈண்டு வலியுறுத்துகிறோம்.

நமது நாட்டு அறிஞர், இயந்திரங்களைக் காண்பதில் மனத்தைச் செலுத்தாதிருந்த நட்பம், இந்நாளில் நன்கு புலனாகிறது. இயந்திரம், மனிதனது இயற்கை வாழ்வைக் குலைக்குந்தகையதென்பது, அறிஞர் பலராலும் ஒப்பமுடிந்த உண்மை. செயற்கை இயந்திரம், கடவுளால் படைக்கப்பட்ட மனித உடலென்னும் இயற்கை இயந்திரத்தை நாசப்படுத்து வதாய் உலகில் இயங்கி வருகிறது. இயந்திரம் பொதுவாக மனிதவாழ்வைக் குலைத்து வருகிறது ; சிறப்பாக ஏழைமக்களைத் துன்புறுத்துகிறது. இயந்திரம், செல்வத்தை ஒரு கூட்டத்தார் பக்கம் பெருக்கியும், மற்றொரு கூட்டத்தார் பக்கம் சுருக்கியும் வருகிறது. முதலாளி தொழிலாளி என்னும் போராட்டத்துக்குக் காரணம் இயந்திர இயக்கமாகும். இந்திய வாழ்விற்கு இயந்திர இயக்கம் மிகக் கொடியது ; கொடியது.

இந்தியா பெரிய விவசாயநாடு. விவசாயம் எத்துணையோ ஏழைமக்களைப் போஷிக்கவல்லது. இயந்திர இயக்கம் எத்துணையோ ஏழைமக்கள் தொழிலை அழிக்கவல்லது. ' இயந்திர வேலைக்கும் ஆள் வேண்டுமல்லவோ ; அங்கே ஏழைகள் சென்று வேலை செய்யட்டும் ' என்று சில பொருளாதார நிபுணர்கள் கூறக் கேட்டிருக்கிறோம். இந்நிபுணர்கள், பள்ளியில் படிப்பு முறையில் பொருளாதார நிலையை உணர்ந்தவர்களே யன்றி, இந்திய வாழ்வில் அநுபவஞான மில்லாதவர்கள். இவர்கள் கூற்றை ஏற்றலாகாது. இயந்திரம் வருவதற்கு முன்னர், எத்துணை ஏழைப் பெண்மக்கள் நெல்குத்தி ஜீவித்து வந்தார்கள்? அவ்வளவு பேருக்கும் இயந்திரம் வேலை நல்குமோ ? மிகுதியுள்ள பேர் கதியென்ன ? நெட்டாலுக்கும் பிஜீக்கும் ஓடுவதே ! வெளி நாடுகளில் இந்தியக் கூலிகளின் தொகை பெருகி யிருப்பதைப்போல, வேறெந்தத் தேசத்துக் கூலியாட்கள் தொகையும் பெருகவில்லை. இந்தியாவில் விவசாயம் செவ்வனே நடைபெற்றால், ஏழை மக்கள் வெளிநாடுகளுக்குச் செல்லமாட்டார்கள். இயந்திரம் இந்திய மக்களை வறிபராய், நோயுடையராய், உரமிலராய்ச் செய்வதோடு, வெளி நாடுகளுக்கும் ஓட்டுகிறது.

பாரதமாதாவின் இரத்தத்தைப் பருகிப் பருகி, அவள் பொன்மேனியை (இரத்தமில்லா) வெண்மேனி யாக்கிவரும் இயந்திரத்தைத் தாய்மார்களே! ஒழியுங்கள்; ஒழியுங்கள். உங்களுடைய செல்வம் உலக்கை, உரல், குழவி, இராட்டினம். அவைகளோடு வாழுங்கள். உங்களுக்கு நலமுண்டாகும். (30-1-1925)

## வருங்காலம்

ஐரோப்பா மகாயுத்தம் நடைபெற்று ஓய்வடைந்தநாள் தொட்டு உலகில் அமைதி நிலவாதிருத்தல் கண்கூடு. அன்று தொட்டு உலகின் நாலுபக்கங்களிலும் கொலை கொள்ளை புரட்சிக்குரிய இயக்கங்கள் தோன்றியவண்ணமா யிருக்கின்றன. இவ்வியக்கங்களின் கொடுமைச் செய்திகளில்லா வர்த்தமான பத்திரிகைகளைக் காண்டல் அரிதாயிருக்கிறது. உலகம் அமைதி யிழந்து ஆவேசத்துக் கிரையாகி வருகிறது என்று பொதுவாகக் கூறலாம்.

கொலை கொள்ளை புரட்சி இயக்கங்களின் வரலாற்றையாதல், விளக்கத்தையாதல் முறைமுறையே இங்கே கிளந்து கூறல்வேண்டுவது அநாவசியம். அவைகள் தோன்றி, உலகை அல்லற்படுத்தற்குரிய காரணத்தையும், அவைகள் தொலைதற்குரிய முறையையும் ஆராய்தல் காலத்துக்குரிய ஒன்றாகும்.

காரணமின்றிக் காரியமில்லை. தற்கால அமைதியின்மைக்குப் பற்பல காரணங்கள் உண்டு. இயற்கையின்வழிக் கருத்தைச் செலுத்திச் சிந்திக்கச் சிந்திக்கக் காரணங்கள் புலனாகும். எல்லாவற்றையும் விளக்குதற்கு இயற்கையே பெருங் கருவியாகத் துணை செய்யும். நாட்டம் மட்டும் இயற்கையின்மீது செல்லல்வேண்டும். இயற்கை நாட்டம் பலதிற உண்மைகளை விளங்கச் செய்தல் ஒருதலை.

இயற்கையின் நோக்கமென்னை? உலகை ஓம்பவேண்டு மென்பதா? அல்லது அதை அழித்தல் வேண்டுமென்பதா? இயற்கை அன்னை ஒருபோதும் உலகை அழிக்க முனைந்து நில்லாள். அவள் நோக்கம் உலகை ஓம்பவேண்டுமென்பது. அஃது இயற்கையின் இயலாகும். உள்ளதைச் சிறப்பிக்க இயற்கையன்னை முயன்று வருகிறாள். அம்முயற்சியி னின்றும் அவள் வழுவுவதில்லை.

இயற்கை அன்னையின் திருவருளால் உலகம் வளர்ந்து வருகிறது. உயிர்கள், உடல் தாங்கும் வரலாற்றைப் படிப் படியாக ஆராய்ந்தால், இயற்கை அன்னையின் திருவருள் இனிது விளங்கும். உயிர்கள், படிப்படியாகப் பலதிற உடலங்களைத் தாங்கித் தாங்கி, அறிவு விளக்கம் பெறுதற்கு, இயற்கை அன்னை புரிந்துவரும் துணையை எச் சொல்லால் சொல்வது? எவ்வெழுத்தால் எழுதுவது? தாவரங்கள் முதல்-மக்கள்வரை - உள்ள உடல் அமைப்புகள், இயற்கையில் முகிழ்த்திருக்கின்றன. அவ்வவ் வுடலுக்கேற்ப அறிவு விளங்கா நிற்கிறது.

'பலதிறப் பிறவிகளுள் மனிதப் பிறவி விழுப்பமுடை யது' என்று சொல்லாத அறிஞரில்லை. அப்பிறவி எத னின்றுந் தோன்றியது? பலர் பலவாறு கூறுப. அவருள் இயற்கை ஆராய்ச்சியாளர் கூற்றுக்கு மதிப்புக் கொடுக் கலாம். அவர் என்ன கூறுகிறார்? அவர் மனிதப் பிறவி விலங்கினின்றுந் தோன்றியது என்று கூறுகிறார். விலங்கி னின்றும் மனிதப் பிறவி தோன்றுதற்குத் திருவருள் செய் தவள் இயற்கைத் தாய். அவள், மீண்டும் அப்பிறவியைக் கீழே தள்ளுவளோ? தள்ளமாட்டாள். அவ்வாறு தள்ளு தற்குரிய இயல் அவள்மாட்டில்லை

'உலகின் தற்கால நிலையை நோக்குழி, மனிதன் முழு விலங்காவனோ என்று ஐயுறுதற்கு இடமிருக்கிறதே' என்று சிலர் கருதலாம். தற்கால உலக நிகழ்ச்சியைக் கண்டு, அங்ஙனங் கருதுதற்கு இடமிருப்பினும், உண்மையில் அத் தகை நிகழ்ச்சிக்கு இயற்கையில் இடமில்லையென்று அறுதி

யிட்டுக் கூறலாம். 'பின்னை எற்றுக்குத் தற்காலத்தில் கொடுங்கொடும் நிகழ்ச்சிகள் நேர்தல் வேண்டும்?' என்று நேயர்கள் வினவலாம். கொடுங் கொடும் நிகழ்ச்சிகள் தோன்றுதற்குக் காரணங்கள் உண்டு. அந்நிகழ்ச்சிகளால் மனித உலகம் மீண்டும் விலங்கு உலகமாகாது என்பது திண்ணம். மனித உலகைத் தெய்வ உலகமாக்கவேண்டு மென்பது இயற்கை அன்னையின் நோக்கம்.

மனிதன் நோய்வாய்ப்படுதற்குக் காரணம் என்னை? அவன் இயற்கை நெறியினின்றும் வழுவுவது முதற்காரண மாகும். அப்பொழுதும் இயற்கை அன்னை என்னசெய்கிறாள்? நோயாளியினிடத்துள்ள செயற்கை அழுக்குகளை வெளிப் படுத்தி, அவனைக் காக்கவே அவள் முயல்கிறாள். மனித னிடத்தில் பொருந்தும் அழுக்குகளைத் தள்ளுதல் இயற்கை யின் கடன். அத் தள்ளுதலை மனிதன் பிணியென்று அல மந்து மருத்துவச் சிகிச்சைக்குச் செல்கிறான். நோயாளி யின் அழுக்குகளை வெளியே தள்ளுவது நல்லதா கெட்டதா? அவ்வேளையில் அவனைச் சிறிதுநேரம் நோய் வருத்துவது உண்மையே. அவ்வருத்தமுறுதலுக்குக் காரணம், இயற்கை நெறியினின்றும் வழுவியது என்று மகன் உணர்ந்து தெளிந்து, வருத்தத்தைப் பொறுத்து, மீண்டும் இயற்கைவழி நிற்க உறுதிகொள்ளல்வேண்டும். உறுதி, மகனை நல்வழிப் படுத்தும்.

நோய்வாய்ப்பட்ட ஒருவனைப்போல், இப்பொழுது உலகமும் நோய்வாய்ப்பட்டுத் தவிக்கிறது. தனித்தனி மனிதன் இயற்கையினின்றும் வழுவி வீழ்வதைப்போலத், தனித்தனிச் சமூகம், தனித்தனித்தேசம், தனித்தனிச் சமயம் முதலியனவும் இயற்கையினின்றும் வழுவி, நெறியல்லா நெறியில் வீழ்வதுண்டு. அவ்வீழ்ச்சியால் விளையுங் கர்மங்கள் யாவுஞ் சேர்ந்து, உலகில், கொலை நோயாய்க் கொள்ளை நோயாய்ப் புரட்சிப் பெருவாரியாய்ப் பரிணமிப்பது வழக் கம். இந்நோய்களால் உலகம் பின்னே தூய்மையுறும் என்பதில் ஐயமில்லை.

மனிதப்பிறவி, விலங்கிற்கும் தெய்விகத்துக்கும் இடை யில் நிற்பது. விலங்கியல்பு படிப்படியாகத் தேய்ந்து தேய்ந்து, தெய்வ இயல்பு படிப்படியாக வளர்தல்வேண்டும். இயற்கை நெறியினின்றும், மனிதன் வழுவாது செல்வானானால், அவன் பால் தெய்வ இயல்பு பரிணமித்து வளரும். அவன் இடை யிடை வீழ்கின்றானாதலால், அவன் வளர்ச்சிக்குக் கேடு சூழ்ந்து கொள்கிறான். அவன் மீண்டும் இயற்கை அன்னையை நாடி அடைவானாயின், அவனது வளர்ச்சிக்கு இயற்கை அன்னை யின் துணை கிடைக்கும். துணை புரிய இயற்கை அன்னை விரைந்து நிற்கிறாள்.

உலகின் பண்டைச் சரித்திரத்தை நோக்குழிக் கீழ்நாடு உலகிற்கு வழிகாட்டியா யிருந்ததென்பது உள்ளங்கை நெல் லிக்கனிபோல் விளங்கும். கீழ்நாடு, கடவுள்நெறி, தெய்வ பக்தி, ஜீவகாருண்யம் முதலியவற்றை வழங்கியது; கண்ண பிரான், புத்தர், கிறிஸ்து, முகம்மது, திருவள்ளுவர் முதலிய அறவோர்களை அளித்தது. இவர்கள் போதனைகள் மனித னுக்குச் சாந்தம் முதலிய நறுங்குணங்களை வழங்கி வந்தன. இயற்கை நெறியினின்றும் மனிதன் வீழாத முறைகளைக் கீழ் நாடு நல்கிற்று என்று சுருங்கக் கூறலாம்.

மேல்நாடு ஆக்கம் பெற்ற நாள்தொட்டு உலகம் எந்நிலை யுற்று வருகிறது? மேல்நாட்டு நாகரிகத்தினின்றும் பிறந்த பிள்ளைகள் இரண்டு. ஒன்று முதல்; மற்றொன்று தொழில். இவ்விரண்டு பிள்ளைகளின் வழித் தோன்றல்கள் கொலை கொள்ளை புரட்சி முதலியன. இவைகளினின்றும் பேய்ப் பரம்பரைகள் உண்டாகிவிட்டன. இவைகள் கீழ்நாட்டில் நுழைந்த நாள்தொட்டுக், கீழ்நாட்டுத் தர்மங்களும் தலை கீழாக மாறிவிட்டன. கீழ்நாட்டிலும் இப்பொழுது கடவுள் நெறி, தெய்வபக்தி, ஜீவகாருண்யம் முதலியன எழுத்தில், உதட்டில், புரோகிதத்தில் நிற்கின்றனவேயன்றி, உணர்வில் கலந்து நிற்கவில்லை.

கடவுள்நெறி, தெய்வபக்தி, ஜீவகாருண்யம் முதலியன வாழ்வில் நில்லாதபோது மன்பதை என்னாகும்? அது,

கொலை கொள்ளை புரட்சிகளுக்கு இரையாதல் இயல்பே. இவைகள் நீடூழி நிலவி உலகை விழுங்கிவிடும் என்று எவரும் எண்ண வேண்டுவதில்லை.

இயற்கை நெறியினின்றும் உலகம் வழுவிய காரணத்தால், அதுபெற்றுக்கொண்ட நோய்கள் பல. இந்நோய்கள் ஒழிய மன்பதையின் அழுக்குகள் வெளிவருதல் வேண்டும். இப்பொழுது அழுக்குகள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. அவ்வெளியீட்டைத் தற்கால ஆட்சிமுறைகளில், தேர்தல்களில், அரசியல் மேடைகளில், பத்திரிகைகளில், சத்திரஞ்சாவடிகளில், மடங்களில், கோயில் குளங்களில் காணலாம். மனிதனிடத்துள்ள ஆபாசங்கள் இப்பொழுது பல வழியிலும் வெளிவருகின்றன. இவைகள் வெளிவர வர மன்பதை தூய்மையுறும்.

மன்பதையைத் தூய்மை செய்யவேண்டுமென்னும் நோக்கினால், அதன்கணுள்ள ஆபாசங்களைத் தொலைக்க, இயற்கை அன்னை, திருவருட் காற்றை வீசத் தொடங்கியிருக்கிறாள். அக்காற்றில் ஆபாசக்குப்பைகள் பறக்கின்றன. அக்குப்பைகள் ஒழிந்ததும், மன்பதைக்கு இயற்கைவழி புலனாகும். ஆதலால், தற்காலக் கொலை கொள்ளை புரட்சி இயக்கங்கள் நீடூழி நிலவா என்று தெளிக.

தற்கால நாகரிக ஆபாசங்களைக் காற்றிற் பறக்கச் செய்வது ஒரு சக்தி ; மற்றொரு சக்தி அவ்வாபாசங்கள் நிரலே தொலையத்தொலைய அவ்வவ்விடங்களில் இயற்கை நெறியைக் கால்கொளச் செய்வது. முன்னையது கெய்ஸர் சக்தி ; பின்னையது காந்தி சக்தி. இவ்விரண்டு சக்திகளின் உழைப்பால் உலகம் நன்னிலை எய்தலாம். சில இடங்களில் கெய்ஸர் சக்தி வேலைசெய்துவருகிறது ; சில இடங்களில் காந்தி சக்தி வேலை செய்து வருகிறது. ஒன்று அழிவு ; மற்றொன்று ஆக்கம். அழிவும் வேண்டற்பாலது ; ஆக்கமும் வேண்டற்பாலது.

அழிவாலும் ஆக்கத்தாலும் முறையே தீயன அருகி, நல்லன பெருகித் தூய உலகம் தோன்றும். அதுவே வருங்கால உலகம். அவ்வுலகம் இன்னுஞ் சில ஆண்டுக்குள்

தோன்றுதல் கூடும். எகிப்தில் ஒரு மண்டபத்தில் பொறிக் கப்பெற்றுள்ள தீர்க்கதரிசன மொழிகளை யொட்டி, அறிஞர் டேவிட்ஸன் எழுதிய நூலில் குறிக்கப்பட்டுள்ளபடி, இக் காலத்தில் சில நிகழ்ச்சிகள் உற்றுவருவதைக் கண்டு, ஆராய்ச் சியாளர் அந் நூலுக்கு நன்மதிப்பளித்து வருகிறார். ஐரோப்பா யுத்தத்துக்கு முன்னர் அந்நூல் ஐரோப்பாவில் மதிப்புப் பெறுமற் கிடந்தது. அந்நூலிற் குறிப்பிட்டவாறு ஐரோப்பா யுத்தமும், அதன் பின்னர் வேறு பல நிகழ்ச்சி களும் நடைபெற்றன. பின்னே அந்நூலுக்கு மதிப்புத் தானே ஏற்பட்டது.

1928-ம் ஆண்டு முதல் 1936-ம் ஆண்டு வரை உலகம் பலதிற இன்னல்களுக்கு உட்படும் என்ற ஒரு குறிப்பு அந் நூலில் இருக்கிறது. அதைப்பற்றி 'நவசக்தி'யில் பல கட்டுரைகள் 1928-ம் ஆண்டில் வெளிவந்தன. அறிஞர் டேவிட்ஸன், எகிப்து மண்டபத் தீர்க்கதரிசன மொழியை ஒட்டிக் குறிப்பிட்ட காலவரை இப்பொழுது நடைபெற்று வருகிறது. இந்நாள் உலகம் என்ன காட்சியை வழங்கு கிறது? எங்கணுங் கொலை - கொள்ளை - புரட்சிக் காட்சியை வழங்குகிறது. இக்கொலை - கொள்ளை - புரட்சிகள் மக்களை விலங்காக்கி வருகின்றன.

உலகம் அமைதியிழந்தே வருகிறது. 1936-ம் ஆண் டிற்குமேல் உலகில் பெரு மாறுதல் நிகழுமென்று அறிஞர் டேவிட்ஸன் விளக்கியிருக்கிறார். வருங்கால உலகம் நல் லுலகமா யிருக்குமென்று கூறுதற்குப் பல சான்றுகள் இருக் கின்றன. இவ்வேளையில் தோன்றும் துன்ப உலகம் விரை வில் மறையவும், வரும் உலகம் இன்பமயமாக உருக்கொள்ள வும் அடியவர்கள் ஆண்டவனை நோக்கி மனமார்ந்த வேண்டு தல் செய்வார்களாக. (2-9-1931)

# கலியுகம்

'கலியுகமா? பொல்லாத யுகம்' என்று பலர் கூறுகிறார். உலகில் நடைபெறும் பலதிற மீச்செயல்களை நோக்கும்போதெல்லாம் 'எல்லாம் கலியின் கோலம்' என்று நம்மவர்கள் பேசிக்கொள்வது வழக்கம். மனிதன் செய்யும் அடாத செயல்கட்கெல்லாம் கலியுகத்தின்மீது பழி சுமத்தப்படுகிறது.

நேற்று எம்முடன் பேசிக்கொண்டிருந்த ஒரு நண்பர், பக்கத்திலிருந்த ஒரு பத்திரிகையை எடுத்துப் படித்துப் பார்த்து, 'இப் பத்திரிகையில் மனதுக்கு அமைதி விளைக்கத் தக்க செய்தி ஒன்றையுங் காணோம். கொலைச் செய்திகளும், விபசாரச் செய்திகளும், அடிதடிச் செய்திகளுமே நிரம்பிக் கிடக்கின்றன' என்று வெறுத்துக் கூறி, 'இன்னுங் கலியில் என்னென்ன நடக்குமோ' என்று மனமிரங்கிப், பின்னை வேறு பேச்சுப் பேசிப்போந்தார். அவர், கலியுகத்தை இழித்துக் கூறிய உரை, இன்று அதன்மீது எமது கருத்தை உந்தலாயிற்று.

கலியுகத்தைப் பற்றி நமது நாட்டு நூல்கள் சில செப்பும் மொழிகளைப் பீடிகையாகக்கொண்டு, இக்கட்டுரை வரையப் போகின்றோமில்லை; அல்லது அந்த யுகத்தைப்பற்றி ஆராய்ச்சியாதல் நிகழ்த்தப் புகுகின்றோமில்லை. 'கலியுகம் கலியுகம்' என்னும் வழக்கை யொட்டியே சில உரை பகர விரும்புகிறோம்.

'கலியுகம் பொல்லாத யுகம்' என்று கூறும் மக்கள், அப்பொல்லாமைக்குக் காரணம் கலியா அல்லது தங்கள் செயலா என்பதைச் சிந்திப்பார்களாக. 'எல்லாம் மனிதனால்' என்னும் உண்மையைக், கலியைக் குறை கூறும் நேயர்கள் உணர்வதில்லை போலும்! நன்மைக்கும் தீமைக்கும் பிறப்பிடம் மனிதன் செயலேயாகும்.

மனிதனிடத்திருந்து பிறக்கும் தீய எண்ணங்கள், கொலை களவு முதலிய பாவங்களாய் உலகை அரிக்கின்றனவே யன்றிக், கலியென்னும் ஒன்று உலகை அரிப்பதில்லை. கலியின்மீது பழி சுமத்துவது அறியாமை. கலியில் பொல்லாமை புகுத்துவோன் மனிதன். அப் பொல்லாமையைப் போக்குவோனும் அவனுயிருத்தல் வேண்டும்.

முதல் மூன்று யுகங்களினும் கலியுகம் கொடியதென்று பொதுவாகச் சொல்லப்படுகிறது. இஃது இயற்கையின் நோக்கை உணராதார் கூற்றாகும். இயற்கை நாளுக்கு நாள் உயிர்களைப் பண்படுத்த முயல்கிறதே யன்றி, அவைகட்குக் கேடுசூழ முயல்வதில்லை. இஃது இயற்கைக்கண்ணுள்ள ஒரு நியதி. 'இந்நியதிப்படி மக்கள் நாளுக்கு நாள் நல்லவர்களாதல் வேண்டும். அநுபவத்தில் அங்ஙனம் ஆதல் காணுேமே. நாளுக்கு நாள் மக்கள் பொல்லாதவர்களாய்க் கீழ்நோக்கிச் செல்கிருர்களே' என்று சிலர் ஐயுறலாம்.

மக்களை மேல்நிலைக்குக் கொண்டுபோக இயற்கை முயன்ற வண்ணமா யிருக்கிறது. அம் முயற்சிக்கு மக்கள் துணையும் வேண்டும். தங்கள் துணை உண்டா இல்லையா என்பது மக்கட்கே தெரியும். பிறப்பில் மக்களினும் இழிந்த விலங்கு பறவைகளாதல் இயற்கையோ டியைந்த வாழ்வை நடாத்தி, இயற்கை நியதிக்குத் துணைநிற்கின்றன. ஆறறிவுடைய மனிதனே ? வெட்கம் ! வெட்கம் !

மனிதனுக்குப் பகுத்தறிவு உண்டு என்பது வெள்ளிடைமலை. இயற்கை அன்னை அப் பகுத்தறிவை மகனுக்கு மிளிர்வித்ததன் நோக்க மென்னை ? அவ்வறிவுத் துணை கொண்டு, அவன் தெய்வநிலை அடைதல் வேண்டுமென்பதே. பாவி மனிதன் என் செய்கிறுன் ? அவ்வறிவைப் பாழுக்குச் செலவழிக்கிறுன். இப் பாழ்வினைகள் வீண்போமோ ? இவ்வினைகள் இப்பொழுது உலகை ஆள்கின்றன. என்செய்வது? குற்றம் யாருடையது ? இயற்கை அன்னையினுடையதா ? மகனுடையதா ? நேயர்களே ! உன்னுங்கள் !

இயற்கை அன்னையின்வழி மகன் நடந்திருப்பனேல், இக்கலியுகம் கடவுள் யுகமாயிருக்கும். இயற்கை நியதிப்படி கடவுள் யுகமாக மாறத்தக்க ஒன்றைப், பேயுகமாக மனிதன் செய்துவிட்டு, அதை வீணே குறைகூறுவது அறிவுடைமை யாகுங்கொல்? இக்கலியுகம் மனிதனைத் தெய்வமாக்கப் பிறந்தது. இதைப் பாழ்படுத்தியவன் மனிதன். அவனை ஒறுக்க வேண்டுவது இயற்கையின் கடன் அன்ரே? அவ் வொறுத்தல் இப்பொழுது இயற்கை அன்னையின் மறக் கருணைவழி நிகழ்ந்து வருகிறது. அவ்வொறுத்தலை ஏற்று, நல்லறிவு பெற்று, இயற்கை அன்னையின் ஆணைவழி நிற்க மகன் ஒருப்படுவனேல், கலியுகம் கடவுள் யுகமாக மாறுதல் ஒருதலை.

இயற்கைக்கு மாறுபட்டு மனிதன் புரிந்த தீச்செயல் களை என்னென்று கூறுவது? அவை ஒன்று இரண்டா? கோடி! கோடி! பெண்ணுலகை அடிமைப்படுத்தியது; பிறப்பில் உயர்வு தாழ்வு வகுத்தது; தீண்டாமை நுழைத் தது; முதல் தொழில் எனப் பிரித்தது; சிற்றுயிர்களை வதைப்பது; இவைகளினின்றெழும் கொலை களவு கள் காமம் பொய் என்னும் பாவங்களைப் புரிய முனைந்து நிற்பது; இவைகளில் நியாய அநியாயங் காண மன்றங்களை அமைத் தது; பொல்லாத வக்கீல் தொழிலைக் கண்டது; சமரசத்தை மறந்து அன்புக் கடவுளை அலட்சியம் செய்தது;—இன்னே ரன்ன இயற்கைக்கு மாறுபட்ட செயல்கள் கோடி! கோடி! இவ்வாறு உலகைக் கெடுத்த மனிதன், இயற்கைக் கால தேவதையைக் குறைகூறிக்கொண்டு வாழ்கிறான்!

இவ்வுலகுடன் தன் வாழ்வு முடிந்துவிடுவதாக மனிதன் கருதிய நாள்தொட்டு, மனிதனிடைப் பலதிற அறிவீனச் செயல்கள் தலைகாட்டலாயின. பின்னைப் பெருவாழ்விற்கு அடிகோலுவது இவ்வுலக வாழ்வு என்பதைப் பாவி மனிதன் மறந்தான்; மறந்து பொல்லாத வினைகளில் நுழைந்து இடர்ப்படுகிறான். அவ்விடர் களைய, அன்னை இயற்கை விரைந்து விரைந்து உழைக்கிறாள். அவ்வுழைப்பை மனிதன் உணர்ந்து நடக்க முயலுதல் வேண்டும்.

இப்பொழுது மனித உலகம் சீர்குலைந்திருப்பது கண் கூடு. மனிதனே நாளுக்கு நாள் பாவச்செயலைப் பெருக்கிக் கொண்டே போகிறான். அப்பாவச் செயல்களைத் திரட்டித் திரட்டிப் பத்திரிகைகள் நாடோறுங் காட்சியளித்த வண்ணமாயிருக்கின்றன. ஐயமும் அவநம்பிக்கையும் மனிதன் உயிரணியாய் விட்டன. ஐயமும் அவநம்பிக்கையும், அன்பையும் நட்பையும் அகற்றுதல் இயல்பு. ஐயத்தானும் அவநம்பிக்கையானும் விளையுங் கேடுகள், இப்பொழுது வீடுகள்தோறும் நிரம்பிக் கிடக்கின்றன. தலைவனுக்குந் தலைவிக்கும் பிணக்கு; தாய்க்குஞ் சேய்க்கும் பகை; தந்தைக்கும் பிள்ளைக்கும் போர்; தமையனுக்குந் தம்பிக்கும் பூசல்; இன்று நட்பு, நாளை பகைமை—என்னே உலகம்!

இக்கேட்டை உலகிற்கு விளைத்த மனிதனை இயற்கை அன்னை என்செய்து வருகிறாள்? அவனைத் தூய்மைப் படுத்தவே முயல்கிறாள். அம் முயற்சியின் பயன் தற்காலக் காட்சி என்க. மனிதன்பாலுள்ள புன்மைகளை யெல்லாம் இந்நாளில் நந்தாய் வெளியிடுகிறாள். மலங் கழிந்தாலன்றோ பிணி தீரும்?

மனிதன் புன்மைகளைத் தேர்தல்கள் வாயிலாகவும், நியாயமன்றங்கள் வாயிலாகவும், பிற வாயிலாகவும் இயற்கை அன்னை வெளியிட்டுவருகிறாள். இவ் வெளியீட்டைக் கண்டு கண்டு, மனிதன் வெட்கி வெட்கித், தூய்மைபெற முயலல் வேண்டும்.

முயற்சி எப்பொழுது ஆக்கம் பெறும்? போர் பிணக்கு பூசல் முதிர முதிர முயற்சி ஆக்கம் பெறும். வீடு முதல் உலகம் வரை, கனன்று கொண்டிருக்கும் போர் பூசல் முதலியன, மனிதனுக்கு நாளடைவில் நல்லறிவுச் சுடர் கொளுத்தும். மனிதன், தன் பகுத்தறிவைத் தீய வழியிற் செலுத்தியதைப் படிப்படியாக உணர்வான். அவ்வுணர்வு பெருகப் பெருக, மனிதன் தனது அகமே புறம் என்பதைத் தெளிந்து தெளிந்து, அகமும் புறமும் ஒத்த வாழ்வில் தலைப்படுவன். அவ்வாழ்வு, பின்னை வாழ்வின் உண்மையைப் புலப்படுத்தும். அவ்வாழ்வுப் பேற்றிற் கென்று, தான்

இவ்வுலகில் படைக்கப்பட்ட நுட்பம், மனிதனுக்கு அவ் வேளையில் புலனாகும்.

ஆகவே, இப்பொழுது மனித உலகம் வழங்குங் காட்சியை நோக்கிக், கலியுகத்தைப் பழித்துக் கூறுவதை ஒழித்து, இக்கலியுகம் தங்களை மேல்நிலைக்குக் கொணரத் தக்க யுகமென்பதை யுணர்ந்து, தங்கள்மாட்டுள்ள ஐயத்தை யும் அவநம்பிக்கையையும் போக்கி, அகமே புறம் என்னும் உண்மையை யுணர்ந்து, மக்கள் நல்வாழ்வை நடாத்துவார் களாக. இப்பொழுது எங்கணுந் தோன்றியுள்ள போர் பிணக்கு பூசல் முதலியன இயற்கை அன்னையினுடைய மறக் கருணையின் பரிணாமமெனக் கொள்க. இயற்கை அன்னை யின் நோக்கை யுணர்ந்து வாழ மனிதன் கடமைப்படுதல் வேண்டும். அந்நோக்கையுணரப் பல அறங்களைக் கடைப் பிடித்தொழுகவேண்டுமோ என்று எவரும் அஞ்சவேண்டுவ தில்லை. இரண்டோர் அறத்தைக் கடைப்பிடித்தல் சாலும். செய்ந்நன்றி மறவாமை, பழிக்குப் பழி வாங்காமை, குற்ற முணர்ந்ததும் அதை வெளியிட அஞ்சாமை, இவை போன்ற சில சாலும். இவை மக்களை உண்மை நெறியில் செலுத்தும்.

இந்நெறியை இந்நாளில் மகாத்மா காந்தி, பர்னர்ட் ஷா, எட்வர்ட் கார்பென்டர் முதலிய அன்பர்கள் காட்டி நிற்கிறார்கள். உலகம் அந்நெறி நிற்பதாக. (15-8-1928)

## அன்பு

அன்பு என்பது காணக்கூடியதன்று; ஆனால் அஃது உணரக்கூடியது. அன்பு, நிகழ்ச்சியளவில் உள்ளத்திலுறுதல் அவரவர் அநுபவத்தில் அறியக்கிடப்பது. அன்பு நிகழ்ச்சி எப்பொழுது உறுகிறது? அழுக்காறு வெகுளி முதலிய தீக்குணங்கள் ஒழிந்த வேளைகளில் அன்பு நிகழ்தல் காண் கிறோம். அன்பு என்பது அழுக்காறு முதலிய தீக்குணச் செறிவில் நிகழாதது.

கடவுள், தத்துவங்கடந்த தனிப் பரம்பொருள். தத்துவங்கள் எவை? விரிவு அநாவசியம். சுருங்கக்கூறின், அழுக்காறு அவா வெகுளி முதலியன தத்துவக் கூட்டங்களேயாம். இவைகளிடை நிகழாதது அன்பு என்பது மேலே சொல்லப்பட்டது. எனவே அன்பும் கடவுளும் ஒன்றே என்பது பெறப்படுகிறது. அன்புநிலை கண்ட பெரியோர்களும் 'அன்பே கடவுள்' என்று அறிவுறுத்திப் போந்தார்கள்.

'மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழியடைத் தமுதே
ஊறிநின் றென்னுள் எழுபரஞ் சோதி
உள்ளவா காணவந் தருளாய்
தேறலின் தெளிவே சிவபெரு மானே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த
இன்பமே என்னுடை அன்பே'

என்றார் நம் வாதவூரடிகள்.

'அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலார்
அன்பே சிவமாவ தாரு மறிகிலார்
அன்பே சிவமாவ தாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருந் தாரே'

எனவரூஉந் திருமூலர் திருவாக்கையும் ஓர்க.

என்றும் அன்புளங்கொண்டு இவ்வுலகில் வாழ்வோர் கடவுளோடு கலந்து வாழ்பவராவர். மக்களிற் பெரும்பான்மையோர் அன்புளங்கொண்டு வாழ்கிறாரில்லை. ஓரோ ஒருபொழுது மக்கள் உள்ளத்தில் அன்பு எழுந்து ஒடுங்குதல் உண்டு. மற்ற வேளைகளில் அவர்கள் உள்ளத்தில் அழுக்காறோ வெகுளியோ வேறு எத் தீக்குணமோ குடிகொண்டிருக்கும். அவ்வேளையில் அன்புக்கடவுள் அவர்கள் உள்ளத்தில் கோயில் கொள்வதில்லை.

உள்ளம் அன்பில் தோயும்போது விளையும் இன்ப நிலையையும், உள்ளத்தில் வெகுளிப்பேய் எழும்போது விளையுந் துன்ப நிலையையும் அநுபவத்தில் உணர்தல் கூடும். மக்களோ என்றும் இன்பத்தையே விரும்புகிறார்கள்; துன்பத்தை வெறுக்கிறார்கள். வாளா ஒன்றை விரும்புவதாலும் ஒன்றை வெறுப்பதாலும் ஒரு பயனும் விளையாது. விருப்பத்தைச் செயலிற் கொணர்வதே அறிவுடைமை. இன்ப வாழ்வை விரும்புவோர், அழுக்காறு வெகுளி முதலிய சேற்றில் வீழாமல், தம்மைப் பாதுகாத்துக் கொள்ளல் வேண்டும். அப் பாதுகாப்பு இன்ப வாழ்விற்கு அடிகோலுவதாகும்.

அழுக்காறு முதலிய தீமைகளினின்றும் பிழைத்து உய்வதற்குரிய வழிகள் என்னை? வழிகளை விரிக்கிற் பெருகும். கல்வி அறிவு ஒழுக்கம் உணவு சேர்க்கை முதலியன உய்யுநெறி காட்டும். இவைகளெல்லாவற்றிலும் சிறந்தவழி யொன்றுளது. அஃது ஆண்டவனை அன்பு வடிவாக்கொண்டு உன்னுவது. அன்பாகிய கடவுளை, உள்ளத்தில் அன்புக் கயிற்றால் பிணித்து, உன்ன உன்ன, அழுக்காறு முதலிய பேய்கள் ஓடியொழியும். ஆகவே, மக்கள் அழுக்காறு முதலிய தீமைகளினின்றும் விடுதலையடைவதற்கு அன்பாங் கடவுளை மனத்திலிருத்திப் போற்றுதல் வேண்டும்.

கடவுளை மக்கள் பலவாறு போற்றுகிறார்கள். எவர் எவ்வாறு போற்றினும், கடவுளை அன்பு என்னும் எண்ணத்தோடு போற்றுதல் வேண்டும். அன்பல்லாத ஒன்றைப் போற்றுவது, அழுக்காறு அவா முதலிய பேய்களைப் போற்றிப், பேய்க்குணங்களைப் பெறுவதாகும். 'அன்பே கடவுள்' என்னும் எண்ணத்தின் திண்மை, பின்னை அன்பு நிலையை எளிதிற் கூட்டும். ஆதலால், முதலில் 'அன்பே கடவுள்' என்னும் எண்ணம் வேண்டற்பாலது. அவ்வெண்ணம், பின்னை வாழ்வாக அரும்பும்.

உள்ளத்தில் அன்பு பதியப் பதிய, அழுக்காறு முதலியன தேய்ந்து தேய்ந்து மறையும். அம்மறைவிற் கேற்ற அளவு ஆன்மசக்தி எழும்பும். அவை முற்றும் மறைந்ததும்

முழு ஆன்மசக்தி கூடும். ஆன்மசக்தி என்னுந் தெய்வத் திருவருள்நிலை அன்பின்வழி கூடுவதென்பது பெரிதுங் கருதற்பாலது. இவ்வுண்மை கண்ட மாணிக்கவாசக சுவாமிகள்,

'அன்பினால் அடியேன் ஆவியோ டாக்கை
ஆனந்த மாய்க்கசிந் துருக
என்பர மல்லா இன்னருள் தந்தாய்
யானிதற் கிலனொர்கைம் மாறு
முன்புமாய்ப் பின்பு முழுதுமாய்ப் பரந்த
முத்தனே முடிவிலா முதலே
தென்பெருந் துறையாய் சிவபெரு மானே
சீருடைச் சிவபுரத் தரைசே'

என்றருளிச் செய்திருத்தல் காண்க.

அன்பினால் குழைந்து குழைந்து உருக உருக, ஆண்டவன் அருள் கூடக்கூட, ஆண்டவனது 'முன்புமாய்ப் பின்பு முழுதுமாய்ப் பரந்த' ஒரு பெருநிலை விளங்கும். இது குறித்து மீட்டும் மணிவாசகனார்,

'அரைசனே அன்பர்க் கடியனே னுடைய
அப்பனே ஆவியோ டாக்கை
புரைபுரை கனியப் புகுந்துநின் றுருக்கிப்
பொய்யிருள் கடிந்தமெய்ச் சுடரே
திரைபொரா மன்னும் அமுதத்தெண் கடலே
திருப்பெருந் துறையுறை சிவனே
உரையுணர் விறந்துநின் றுணர்வதோர் உணர்வே
யானுன்னை உரைக்குமா றுணர்த்தே'

எனவருந் திருப்பாட்டாலும் கடவுட்டன்மையை அறிவுறுத்துதல் காண்க.

'அன்பே கடவுள்' என்னும் உறுதிகொண்டு உருகும் உள்ளத்தார்க்குக் கடவுள் எல்லா உயிர்க்கும் உயிராயிருப்பதும், அந்நிலை கூடப்பெற்றோரது பிறப்பறுதலும், குணங்களெல்லாங் கடந்த வெளியில் இன்பமயமாக இறைவன்

விளங்குதலும், இவ்வயனைய் பிறவும் புலனாகுமென்க. இதனை மாணிக்கவாசகனார்,

‘ உணர்ந்தமா முனிவர் உம்பரோ டொழிந்தார்
உணர்வுக்குந் தெரிவரும் பொருளே
இணங்கிலி எல்லா உயிர்கட்கும் உயிரே
எனைப்பிறப் பறுக்கும்எம் மருந்தே
திணிந்ததோர் இருளில் தெளிந்தது வெளியே
திருப்பெருந் துறையுறை சிவனே
குணங்கள்தா மில்லா இன்பமே உன்னைக்
குறுகினேற் கினியென்ன குறையே ’

என்று விளக்கியிருத்தலை நோக்குக.

மக்கள் பிறவியில் பெறுதற்கு உரியது அன்புநிலை. அந்நிலை கூடுமாறு மனிதன் தன் வாழ்வை நடாத்தல் வேண்டும்.

உலகியலில் வீழ்ந்து கிடப்போர் சிலவேளைகளைக் குறித்துக்கொண்டு, அவ்வேளைகளில் அன்புக் கடவுளை உன்னுதல் வேண்டும். சிலர் மூன்றுவேளை ஆறுவேளை ஆண்டவனை வழுத்துவதுண்டு. வைகறைத் துயிலெழும்பொழுதும், உறங்கப் போம்பொழுதும், உணவு கொள்ளும் முன்பும், அன்புப் பொருளை மனத்திடை யிருத்தித் தியானிப்பது நலம். இப் பயிற்சி என்றும் அன்புக் கடவுளை நினைக்குமாறு செய்யும். அந்நினைவு மனிதனைத் தெய்வமாக்குமென்பதில் ஐயமில்லை. என்றும் எங்கும் ஆண்டவனை எண்ணும்நிலை கூடும்வரை, தியானத்துக்கென ஒரு தனியிடம் வகுத்துக்கொள்ளல் நல்லது. ஒவ்வொரு வீட்டிலும் பூசைக்கென ஒரு தனியிடமிருத்தல் சிறப்பு. தொடக்கத்தில் அமைதியான ஓரிடம் வேண்டற்பாலது. தியான உணர்வு முதிர்ந்த பின்னர் எத்தகை முழக்கத்திடையும் கூச்சலிடையும் இறைவனை யுன்னும் பேறு இயல்பாக அமையும்.

மனிதன்மாட்டுள்ள தீக்குணங்களைக் களையப் பல வழிப் புகுந்துழல்வதினும், அன்புக் கடவுளை இடையறாது உன்னுவதால், அவைகளை எளிதில் களைதல்கூடும்.

'புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
என்பெலா முருக்கி யெளியையா யாண்ட
ஈசனே மாசிலா மணியே
துன்பமே பிறப்பே இறப்பொடு மயக்காந்
தொடக்கெலா மறுத்தநற் சோதீ
இன்பமே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே'

எனவரூஉந் திருவாசகத்தை ஓர்க.

அந்தோ! இந்நாள் வாழ்வைப்பற்றி நினைக்கவும் மனம் நடுக்குறுகிறது. இக்கொடிய வாழ்வில் சிக்குற்றுக் கிடக்கும் மனிதன் அன்புக் கடவுளை எங்ஙனே நினைப்பான்? அவன் பொறாமை போர் வாணிபம் முதலிய பேய்களை யல்லவோ போற்றுகிறான்? இக்காலத்தில் அன்பு என்றால் கவனிப்போர் யாவர்? அன்புத்தொண்டு யாண்டும் வேண்டற்பாலது. சபர்மதியில் ஒருவர் அன்பு அன்பு என்று அறைகூவுகிறார். செவி சாய்ப்போர் காணோம். பெறுதற்கரிய மக்கள் வாழ்வு, பொறாமைக்கும் பிற தீச்செயலுக்கும் இரையாகிறதே! என் செய்வது! அன்பின்றி உரிமை யாண்டிருந்து கிடைக்கும்? அன்புக் கடவுளை உளத்திற் போற்றி, உயிர்களில் அவ்வன்பைக் கண்டால், ஒற்றுமையுணர்வு உண்டாகும். தேச மக்களுக்குள் பிளவையும் பிரிவையும் உண்டுபண்ணும் அரசியல் கட்சிகளாலும் தொண்டுகளாலும், நாடு பாழ்படுகிறது. இவ்வேளையில் அன்புப் பிரசாரம், அன்புத் தொண்டு முதலியன வேண்டற்பாலன.

'ஏழைத் தொழும்பனேன் எத்தனையோ காலமெல்லாம்
பாழுக் கிறைத்தேன் பரம்பரனைப் பணியாதே
ஊழிமுதற் சிந்தாத நன்மணிவந் தென்பிறவித்
தாழைப் பறித்தவா தோணோக்க மாடாமோ'—மணிவாசகம்

(15–10–1926)

# அறிவும் அன்பும்

காரைக்குடிக் ‘குமரன்’ ஆசிரியர் அடிக்கடி கட்டுரை வரையுமாறு கேட்பர். சில கட்டுரைகள் என்னல் வரையப் பட்டன. இம்முறை ‘அறிவும் அன்பும்’ என்னும் பொருள் பற்றி எழுதப் புகுகிறேன்.

அறிவு எது? அன்பு எது? இரண்டும் ஒன்று? வேறு? இரண்டிற்கும் உள்ள தொடர்பென்னை? இவ்வாராய்ச்சி அவசியமா? சிறிதுநேரம் சிந்திப்போம். ‘அறிவு என்பால் விளங்குகிறது; அன்பும் என்பால் நிகழ்கிறது’ என்று எவனுங் கூற முற்படுவான். ‘நான் ஏன் இவ்விரண்டையும் ஆராய்தல் வேண்டும்’ என்ற முனைப்பும் சிலவேளை அவன் பால் எழும். ‘ஐயனே! நின்பால் அறிவு விளங்குவது உண்மை; அன்பும் நிகழ்வது உண்மை. ஆனல் நீ எல்லா வற்றையும் அறிகிருயா? எல்லாரிடத்திலும் உனக்கு அன்பு நிகழ்கிறதா?’ என்ற வினு அவனை நோக்கி எழும்போது, அவன் என்ன விடையிறுத்தல் கூடும்? விழித்து விழித்து அவன் ‘அறிவு எது அன்பு எது’ என்று ஆராயப்புகுவான். அறிவும் அன்பும் ஆராய்ச்சிக்கு எட்டுவனவோ? அவை அனுபவத்திற் பெறுவனவல்லவோ?

அறிவு எது அன்பு எது என்னும் ஆராய்ச்சியிற் புகுந்து முடிவுகாண இக் கட்டுரை இடந்தாராது. கட்டுரையின் நோக்கமும் அஃதன்று. இரண்டுக்குமுள்ள தொடர்பையே இக்கட்டுரை பெரிதுங் குறிக்கொண்டு நிற்கும். சுருங்கக் கூறின் அறிவென்பது சடமல்லாததாய், சடத் தோற்றத்துக் குக் காரணமாய், சடத்தினூடே நின்று, சடத்தின் வாயி லாகத் தன்னுண்மை விளங்கச் செய்வது என்றும், அன் பென்பது அவ்வறிவினூடே பிரிவின்றி நின்று, அது விளக்க முறும்போது நிகழ்ச்சி மாத்திரையாய்த், தன் வினையை உணர்விப்பது என்றும் கூறலாம். விரிவு, அறிவு அன்பு நூல்களிற் காண்க.

ஆராய்ச்சிக்கு அரியனவாய், அனுபவத்திற் பெறுவன வாயுள்ள அறிவும் அன்பும் யாண்டில்லை? அவை யாண்டும் பொலிகின்றன. அறிவும் அன்பும் மனிதனிடத்திலுண்டு; விலங்கினிடத்திலுண்டு; பறவை புழு தாவரம் முதலிய எல்லா உயிர்களிடத்திலும் உண்டு. மனிதன், தன் அறிவால் வினைகளை நிகழ்த்துவதுபோல, விலங்கு முதலியனவும் தமது அறிவால் வினைகளை நிகழ்த்துகின்றன; அவன் அன்பால் சிலரை நேசிப்பதுபோல, அவையும் தத்தம் குட்டி குருளை குஞ்சு முதலியவற்றையும் நேசிக்கின்றன. ஆனால், மனிதனின் அறிவு விளக்கத்துக்கும் அன்பு நிகழ்ச்சிக்கும், தாவரம் பறவை விலங்கு முதலியவற்றின் அறிவு விளக்கத்துக்கும் அன்பு நிகழ்ச்சிக்கும் வேற்றுமை உண்டு. இவ்வேற்றுமை, உயிர்களின் தனு கரண அமைப்புக்கு ஏற்றவாறு நிகழ்ந்து வருகிறது.

மனிதனுடைய தனுகரண அமைப்பு, முழு அறிவு விளக்கத்துக்கும், முழு அன்பு எழுச்சிக்கும் ஏற்றவாறு ஆண்டவனால் ஒழுங்குபடுத்தப்பட்டிருக்கிறது. இக்காரணம்பற்றியே மனிதப் பிறவி விழுப்பமுடையதென்று, அதன் உண்மை கண்ட ஆன்றோர், அதனை வியந்து போற்றியுள்ளார். விலங்கு முதலிய அஃறிணை உயிர்களின் தனுகரணம், முழு அறிவு அன்பு விளக்கத்துக்கு உரியனவாக அமைந்தில்லை.

அருட்கடலாகிய ஆண்டவன், பேரறிவும்பேரன்பும் எழுதற்கு ஏதுவான உடலை மனிதனுக்கும், கட்டுப்பட்ட அறிவும் அன்பும் நிலவக்கூடிய உடலைப் பிறவற்றிற்கும் வழங்குவது அறச்செயலாமோ என்று சிலர் வினவலாம். தடங்கருணைப் பெருங்கடலாகிய ஆண்டவன், உயிர்கள் என்றும் ஒரேவித உடலைத் தாங்கி உலவி அழியுமாறு இயற்கை நியதியை நிறுத்தியிருப்பானாயின், அவனை மறச்செயலுடைய வன்கணாளன் என்று கூறலாம். எல்லா வுயிர்களும் அறிவு மயமாய், அன்பு வடிவாய்ப் பொலிந்திலங்க வேண்டுமென்பது ஆண்டவன் நோக்கம். அந்நோக்கம் நிறைவேறுதற்பொருட்டு, ஆண்டவன், உயிர்களுக்குத் தனுகரண புவனபோகங்களைத் தந்து வருகிறான்; படிப்படியாக அறிவும் அன்பும் பெருகி வருதற்கு உடல் நிலைகள் கூர்ந்துகூர்ந்து (கூர்தல் - உள்ளது

சிறத்தல்-Evolution) வளர்ந்து பரிணமிக்குமாறு இயற்கையின்பால் ஒருவித ஆற்றலையும் அமைத்திருக்கிறான். கட்டுப்பட்ட அறிவையும் அன்பையுமுடைய அஃறிணை உயிர்களின் உடலங்கள், விரிந்த பேரறிவையும் பரந்த பேரன்பையும் பெற வேண்டுமென்ற பெருங்கருணையாலன்றோ உடலங்களைப் படிப்படியாக உயர்நிலையில் பரிணமிக்கச் செய்யும் ஆற்றலை இயற்கைக்கு ஆண்டவன் வழங்கியிருக்கிறான்? இவ்வருட் குணமுடைய ஆண்டவன் செயல் மறச்செயலாமோ?

பேரறிவும் பேரன்பும் விளங்கித் தோன்றுதற்குரிய கருவியாகிய உடலை மனிதன் பெற்றிருக்கிறான். பெற்றதனால் மாத்திரம் அவன் அதனாலாய இன்பத்தை நுகர்ந்துவிடுவனோ? விலங்கு முதலிய உயிர்களிடத்து அறிவும் அன்பும் எவ்வாறு கட்டுப்பட்டுக் கிடக்கின்றனவோ, அவ்வாறே மனிதனிடத்தும் அவை தொடக்கத்தில் கட்டுப்பட்டுக் கிடக்கின்றன. உலகில் வாழும் மனிதர் அனைவரும் விரிந்த அறிவையும் பரந்த அன்பையும் உடையராய் வதிகிறாரா? எத்துணையோ பேர் மரம்போலவும், பறவைபோலவும், விலங்குபோலவும் வாழ்வு நடாத்துகிறார். ஈண்டு கருதற்பாலது ஒன்றே. அது, பேரறிவும் பேரன்பும் விளங்கி எழக்கூடிய தனுகரணங்கள் மனிதனுக்கு உண்டு என்பதும், அத்தகைத் தனுகரணங்கள் மற்ற உயிர்கட்கு இல்லை என்பதுமாகும். மனிதன் அத் தனுகரணத் துணைகொண்டு அறிவு விளங்கும் நெறியையும் அன்பு பெருகும் வழியையும் பற்றியொழுக முயலல்வேண்டும்.

அறிவும் அன்பும் ஒன்று வேறு என்பதைச் சிறிது ஆராய்வோம். அறிவையும் அன்பையும் வேறாகக் கூறுவோரும் உளர்; ஒன்றாகக் கூறுவோரும் உளர்; ஒன்றைத் தாழ்வாகவும் மற்றொன்றை உயர்வாகவும் கூறி வாதஞ்செய்வோரும் உளர். ஈண்டுக் கட்சி வாதங்களை எழுப்பிக் கடாவிடைகளான் கட்டுரையை வளர்த்துச் செல்வது அநாவசியம். அறிவிற்கும் அன்பிற்கும் உள்ள தொடர்பைச் சிந்திப்போர் எவ்வாதத்தினும் தலைப்படார் என்பது ஒருதலை. அறிவின்றி அன்பில்லை, அன்பின்றி அறிவில்லை என்பது எனது அனுபவம்.

அறிவிற்கும் அன்பிற்கும் உள்ள தொடர்பு, வித்துக்கும் மரத்துக்கும் உள்ள தொடர்பு போன்றது. பொழியும் மழை போன்றது அறிவு; ஓடும் வெள்ளம்போன்றது அன்பு. அறிவு விளக்கத்துக்கேற்ற அளவாகவே அன்பும் நிகழும்.

அன்புப் பெருக்கு, அறிவின் அளவையே பற்றிக்கிடக்கிறது. விலங்கு முதலிய உயிர்களிடத்துள்ள அறிவு, கட்டுப்பட்டுக் கிடத்தலால், அவைகளிடத்துள்ள அன்பும், கட்டுப்பட்டுக் கிடக்கிறது. காகம் தன் குஞ்சை நேசிப்பதுபோல் பிற குஞ்சுகளை நேசிக்கிறதா? இல்லை. பிற அஃறிணை உயிர்களும் அவ்வாறே. காகத்தின் இயற்கையறிவு விளக்கம் அவ்வளவினது. அதற்கேற்ற அளவினதாக அதன்பால் அன்பும் நிகழ்கிறது. மனிதரும் எவ்வளவு அறிவு விளங்கப் பெறுகிறாரோ, அவ்வளவினதாகவே அன்பும் நிகழப்பெறுகிறார். சிலர் தம்மைமட்டும் நேசிக்கின்றனர்; சிலர் தம்மொடு மனைவி மக்களையும் நேசிக்கின்றனர்; சிலர் உறவினர் அளவில் அன்பு செலுத்துகிறார்; சிலர் நண்பர்வரை அன்பு செலுத்துகிறார்; சிலர் உறவினரோ நண்பரோ பகைவரோ நொதுமலரோ எவரோ எல்லாரிடத்தும் அன்பு செலுத்துகிறார். இந்நிகழ்ச்சிகளெல்லாம் அவரவர் அறிவு நிலையையே பொறுத்து நிற்கின்றன. அறிவுக்கு ஏற்றவாறு அன்பு நிகழலால், இரண்டையும் வேறுபிரித்துக் கூறுதல்கூடாது. இரண்டுக்குமுள்ள தொடர்பை உணர்வது சிறப்பு. இரண்டிற்கும் உயர்வு தாழ்வு கற்பிப்பது தவறு. தந்தைக்கும் தாய்க்கும் உயர்வு தாழ்வு கற்பிப்பது அறிவுடைமையா?

உலகில் வாழும் மனிதரிடத்தில் பலதிற அறிவு விளக்கத்தையும் அன்பு நிகழ்ச்சியையும் காண்கிறோம். அதைக்கொண்டு அறிவும் அன்பும் பலதிறப்பட்டன என்று கொள்ளுதலாகாது. மெய்யறிவும் மெய்யன்பும் பலதிறப்பட்டனவல்ல. கல்விகற்று, மனைவி மணந்து, பொருளீட்டி, உலகியல் நடாத்தும் மனிதரே பெரும்பான்மையோர். இவர்கள் அறிவைக் கொண்டும் அன்பைக் கொண்டும், அறிவு நிலையையும் அன்புநிலையையும் அளந்து கூறலாகாது. இம்மனிதர்களின் அறிவும் அன்பும், உண்மை அறிவன்பின் சாயலாகும்.

பெருங்காயப் பானையில் பெருங்காய மணங் கமழ்வதுபோல், இம்மனிதரிடத்திலும் அறிவு மணமும், அன்பு மணமும் கமழ்கின்றன. இவர்கள்பால் மெய்யறிவும் மெய்யன்பும் யாண்டுள?

மனிதனுக்கு மூவித சரீரங்கள் உண்டு. அவை, காரண சரீரம் - சூக்கும சரீரம் - தூல சரீரம் எனப்படும். இச்சரீர இயல்புகளைத் தத்துவ நூல்களிற் காண்க. முதலிரண்டு சரீர உணர்வில்லாதாரிடம் மெய்யறிவும் விளங்காது; மெய்யன்பும் நிகழாது. மெய்யறிவையும் மெய்யன்பையும் பெற விரும்புவோர், மூன்று சரீரத் தொடர்பின் உணர்வுடையரா யிருத்தல்வேண்டும். அவர்க்கே மெய்யறிவு புலனாகும்; அவ்வழி மெய்யன்புஞ் சுரக்கும். அறிவிற்கு நிலைக்களம் காரண சரீரமென்பதும், அன்புக்கு நிலைக்களம் சூக்கும சரீரமென்பதும் அநுபவத்தில் விளங்கும். இவ்விரண்டிற்கும் போர்வையாயிருப்பது தூலசரீரம். போர்வைபோன்ற தூல சரீரத்தைமட்டும் பொருளாகக் கொள்வோர் எதை அறிய வல்லார்? அவரை விலங்கனையார் என்றுங் கூறலாம். மனிதன் அறிவும் அன்பும், முறையே காரண சூக்கும சரீரங்களை நிலைக்களனாகக் கொண்டிருப்பன.

தூலசரீரம் போர்வைதானே என்று அதன்மீது கவலை செலுத்தாதிருத்தல் தவறு. போர்வையின் வளத்தையொட்டி மற்ற சரீரங்கள் நிலவுகின்றன. தூலத்தின் செழுமை குன்றினால் ஏனைய இரண்டின் செழுமையுங் குன்றும். பழத்தின் தோலுக்குக் கேடு நேர்ந்தால் பழத்தின் நிலை என்னாகும்? தூலசரீரம் பழத்தின் தோல் போன்றது. அறிவிற்கும் அன்பிற்கும் நிலைக்களனாகக் காரண சூக்கும சரீரங்கள் நிலவினும், அவைகட்குத் தூலசரீர உதவி இன்றியமையாதது. பேரறிவையும் பேரன்பையும் விரும்பிய பெரியோர் அனைவரும் பருவுடலை ஓம்புமாறு அறிவுறுத்தியிருப்பது எற்றுக்கு? உடலை ஓம்பாது கிடப்போர், சிற்றின்பத்தையாதல் பேரின்பத்தையாதல் நுகரும் வலியின்றி, நோய்வாய்ப்பட்டு இடர்ப்படுவர். ஆதலால், பருவுடம்பை இயற்கையின்வழி நின்று ஓம்புதல் வேண்டும். அவ்வுடலை ஓம்பாதவன் அறிவொளியையும் அன்பு நிலையையுங் காணும்பேறு பெறுதவன்

ஆவன். பேரறிவையும் பேரன்பையும் பெறுதற்கன்றோ ஆண்டவன் இவ்வரிய மனித யாக்கையை நமக்கு நல்கினான்? இந்த யாக்கையைக் கொண்டன்றோ பெறற்கரும் பேற்றைப் பெறுதல் வேண்டும்? அத்தகைய யாக்கையை ஓம்பாது, அதைத் தீயொழுக்கத்துக்கு இரையாக்குவது நியாயமாமோ? அத்தகைத் தூல சரீரத்தைச் செந்நெறி பற்றி ஓம்பி, அதன் வாயிலாக அறிவையும் அன்பையும் எழுப்ப முயலல் வேண்டும்.

மெய்யறிவையும் மெய்யன்பையும் பெறும் நோக்கமாதல் முயற்சியாதலின்றித், தூல தேகத்தை மட்டும் ஓம்புவது மிருக வாழ்வை நடாத்த முயல்வதாகும். 'உடம்பை வளர்க்கும் உபாய மறிந்தே - உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த்தேனே' என்றும், 'உடம்பினுள்ளே உத்தமன் கோயில் கொண்டானென்று - உடம்பினை யானிருந்து ஓம்புவன் யானே' என்றும் திருமூலர் கூறியிருத்தல் காண்க.

மூன்று சரீரங்களுக்குமுள்ள தொடர்பை, முதலில் கலை ஞானத்தாலும், பின்னை அனுபவ ஞானத்தாலும் உணர்தல் வேண்டும். சரீர நிலைகளை உணர்ந்த பிறகு, மூலட்டான மூர்த்தியாகிய அறிவைக் காண முயலல் வேண்டும். மெய்யறிவு விளங்கினால் மெய்யன்பு தானே எழும். பண்டைக் காலத்தில் நமது நாட்டில் வாழ்ந்த பெரியோர்கள், இம்முயற்சியில் பெரிதுந் தலைப்பட்டிருந்தார்கள். இம்முயற்சியில் தலைப்பட்டு வாழ்ந்த பெரியோர்கள் வரலாறுகளை நாம் பன்முறை படிக்கிறோம். படிப்பதால் மட்டும் என்ன பயன்? முனிவர்கள் வரலாற்றில் 'ஞானதிருஷ்டி' 'ஞானதிருஷ்டி' என்று பல இடங்களில் பேசப்படுவதை நாம் காண்கிறோம். கௌதமர் தம் மனைவியாய அகலிகையின் கற்பு இந்திரனால் அழிக்கப்பட்டதை ஞானதிருஷ்டியால் உணர்ந்தனர் என்று புராணங் கூறுகிறது. இதுபோன்ற கதைகள் பல நமது நாட்டில் வழங்கப்படுகின்றன. இந்நாளில் அந்த ஞான திருஷ்டி எங்கே? இந்நாளில் ஞானக்கண் ணில்லாமற் போயிற்றோ? அஃதில்லாமற் போகவில்லை. அதனை மறைத்துள்ள திரையை ஒதுக்கும் முயற்சி இப்பொழுதில்லை. தற்

கால மனித வாழ்வு அம்முயற்சியில் தலைப்படுத்த எவரை விடும்? பண்டை நாளில் மனிதன் பயின்று வந்த கல்வியும், அவன் மேற்கொண்ட வாழ்வும் அவனது புறமுக நோக்கை அகமுக நோக்காகத் திருப்புந் தகையனவா யிருந்தன. நால் வகை ஆச்சிரமமும், இயமம் நியமம் முதலிய அட்டாங்க யோகமும் மனிதன் வாழ்விற்குப் படிகளாக நின்றன. அவை களின் வழிநின்று, வாழ்வை நடாத்தும் மனிதனிடம் மெய் யறிவும் மெய்யன்பும் விளங்கும். பண்டைக் காலத்திலிருந்த நம் முனிவரர் ஓரிடத்திலிருந்தே நீண்ட தூரத்தில் நிகழ்ந் தனவற்றை நேரிற் கண்டதுபோல் கூறினர்; வானத்துள்ள கோள் நிலைகளை அறிவால் அளந்து கூறினர். அக்காலத் தையோ தந்தி தபால் பத்திரிகையில்லா அநாகரிகக் கால மென்று பழிப்பது? அறியாமை! அறியாமை! அகக் கண் ணைத் திறக்கும் ஆற்றலிழந்த பேடியாக மனிதன் மாறிவிட்ட மையால் தந்தி தபாலை அவன் தடவிக்கொண்டிருக்கிறான்.

அமெரிக்காவில் ஞானதிருஷ்டி - யோகக் காட்சி - முத லியவற்றில் வல்லார் ஒரு சிலர் இருக்கின்றனர். அவர் வரலாறுகளையும் செயல்களையும் கேட்டாவது கண்டாவது பழைய இந்தியாவின் ஞானதிருஷ்டி யோகக் காட்சிகளை நம்புமாறு நம்மவர்களை வேண்டுகிறேன். அமெரிக்கா முதலிய இடங்களில் சில அறிஞர் மனிதரிடத்துள்ள மனோசக்தியை வளர்க்க முயன்று வருகிறார். எவர் முயற்சியாலாவது மனித னிடத்துள்ள பெருஞ்சக்தி வெளியாதல் வேண்டும். இச் சக்தியை மனிதன் காண்பனேல் தற்கால நாகரிக வாழ்வையே அவன் ஒழிக்க முயல்வன்.

மேலே குறிப்பிட்ட அட்டாங்க யோகத்துள் கொழு கொம்பு போன்றது பிராணாயாமம். இயமம் நியமம் முதலி யன அதற்கு அரண்செய்வனவாம். பண்டை நாளில் பிராணா யாமப் பயிற்சி ஐந்தாமாண்டில் துவங்கப்படும். பதினாறும் ஆண்டில் மனிதன் அப்பயிற்சியில் தேறிவிடுவன். பிராணா யாமப் பயிற்சியில் தேர்ச்சி பெறாதவன் இல்லறம் நடாத்த ஒருப்படான். இந்நாளில் பிராணாயாமம் எங்கே செய்வது? சாக்கடைக்காற்றும், பிற நச்சுக்காற்றும் உள்ளே நுழைந்து

நுரையீரலை எரித்து அரித்துக் காசம் என்னுங் கொடு நோயைப் பிறப்பிக்குமே. என் செய்வது? நகர வாழ்வு மனிதனுக்குக் காலனாக விளங்குகிறது.

முன்னாள் மனிதன், தன்பாலுள்ள மெய்யறிவும் மெய்யன்பும் விளங்குதற்குப் புற முயற்சியை விடுத்து, அக முயற்சியில் கவலை செலுத்திவந்தான். அறிவையும் அன்பையுங் கட்டி, அவைகளின் விளக்கத்தைத் தடைப்படுத்தியுள்ள தளைகளை அகமுக முயற்சி அறுக்கும். புறமுக உழைப்பு உடையவனுக்குச் சூக்கும காரண சரீர நினைவு எங்கிருந்து தோன்றும்? பிரகிருதியில் வாழும் அவன் அறிவு என்ன அறிவு? அஃதறிவா? பீடை! அவன் அறிவை இளகாத பனிக்கட்டிக்கு ஒப்பிடலாம். உறையாத பனிக்கட்டி திண்மையாய் வடிவமுடையதாய் ஓர் எல்லைக்கு உட்பட்டுக் கிடக்கிறது. அவ்வாறே பிரகிருதியில் வீழ்ந்த தூலதேக உணர்வுடையவனது அறிவும், ஓர் எல்லைக்குள் கட்டுப்பட்டுக் கிடக்கிறது. அவ்வறிவொளி மெய்யறிவின் சாயலாகும். ஓர் எல்லைக்கு உட்பட்டுக் கிடக்கும் பனிக்கட்டிமீது வெம்மை படப்பட, அஃது இளகி இளகி நீர்மயமாய் எல்லை கடந்து ஓடுகிறது. மேலும் அதன்மீது வெம்மை வீசவீச அந்நீர் எக்கட்டுக்கும் அடங்காத ஒரு பெருஞ் சக்தியாய்ப் பரவுகிறது. அவ்வாறே பிரகிருதி உணர்வுடையவனுக்குக், கட்டுப்பட்டுக் கிடப்பதாகக் காணப்படும் அறிவு, அகநோக்க முயற்சியால் விரிந்து பரந்து யாண்டும் ஒளிர்வதாகிறது. அவ்வொளி முன்னே ஞாயிற்றொளி என் செய்யும்? மனிதன் முயன்று முயன்று அப் பேர் அறிவை - அதன் வாயிலாகப் பேரன்பைப் - பெறுதற்குப் படைக்கப்பட்டான். அம் மனிதன் இப்பொழுது என்ன செய்கிறான்?

தற்கால மனிதன், ஆசை என்னும் பேய் வாய்ப்பட்டுத், தன்னறிவைச் சுருக்கி, விலங்கினத்திற் சேர விரும்புகிறான். தற்கால அரசியல் முறைகள் மனிதனை மிருகமாக்கி வருகின்றன என்று சுருங்கக் கூறலாம். அம்முறைகளுக்கேற்ற கல்வி வாழ்வு தொழில் முதலியன உலகில் நிலவிவருகின்றன. இவை யாவும் மனிதனைப் புறநோக்கிலேயே செலுத்தி

வருகின்றன. புறமுக உணர்வால் மனிதன் இவ்வுலக இன்பமே பேரின்பமெனக் கருதுகிறான்; கருதி அவ்வின்ப நுகரப் பிறரைத் துன்புறுத்தும் விலங்கு நீர்மையை வளர்க்கிறான். இவனுக்கு ஊனுணர்ச்சி பெருகுமா? உள்ளுணர்ச்சி பெருகுமா? இதனால் இவன்பால் அன்பெழும் ஊற்றே அடைந்துவிடுகிறது.

பண்டைக்காலத்தில் ஆச்சிரமங்களும் அட்டாங்கயோகமும், மனிதன் அறிவும் அன்பும் விளங்குதற்குச் சிறந்த சாதனங்களா யிருந்தன. இப்பொழுது அவைகளின் நிலை குலைந்துவிட்டது. இக்காலத்தில் என் செய்வது? இயம நியமங்களையாவது தவறாதாற்றி, அறிவும் அன்புமாய் விளங்கும் எல்லாம் வல்ல இறைவனைத் தியானஞ்செய்து வரலாம். ஒல்லும்வகை பேராசை எழாதவாறு தன்னைக் காத்துவரலாம். பட்ட ஆசை - பதவி ஆசை - சட்டசபை ஆசை முதலிய ஆசைகளும், அவைகளை நிறைவேற்றக் கோலப்பட்டுள்ள முறைகளும் மனிதனைப் பேயாக்கி அலைக்கின்றன. தற்கால அரசியல் என்று ஒழியுமோ? மனிதன் உள்ளத்தைத் தூய்மைப்படுத்தும் தெய்விக அரசியல் என்று தோன்றுமோ? அகவாழ்வைத் தூய்மைப்படுத்தி, மெய்யறிவை விளக்கஞ்செய்யுஞ் சமய நெறியையும், அதன் காப்புக்கெனக் கோலப்பட்ட அரசியலையும் வேறுபடுத்தி இடர்ப்படும் மனிதனல்லனோ இந்நாள் மனிதன்?

இந்நாளில் மற்றுமோர் அஞ்ஞானம் உலவிவருகிறது. சில ஞான நூல்களைக் கற்பவர் அறிஞரென்றும், 'ராம் ராம் சீதாராம்' என்றும், 'சாம்பசதாசிவ சாம்பசதாசிவ' என்றும், பஜனை செய்வோர் அனைவரும் அன்பரென்றுஞ் சொல்லப்படுகின்றனர். ஞான நூல்களைப் பயில்வதால் மாத்திரம் ஒருவனுக்கு மெய்யறிவு தோன்றாது; தெய்வ நாமங்களைப் பஜித்துக் கூத்தாடுவதால் மாத்திரம் ஒருவனுக்கு மெய்யன்பு நிகழாது. அறிவு விளக்கமில்லா விடத்து அன்பு நிகழ்ச்சியில்லை; இஃதில்லாவிடத்து அஃதில்லை. நூல்களைக் கற்றலோடு, கேட்டலோடு, அவைகள் அறிவுறுத்துமாறு ஒழுகி, முச்சரீர நிலையையும் தொடர்பையும் உணர்ந்து, ஆசைப்பேய்க்கு

இரையாகாதவாறு காத்து, அகநோக்கில் தலைப்பட்டவனுக்கு மெய்யறிவு விளங்கும். அவ்வறிவினூடே மெய்யன்பும் நிகழும். மெய்யறிவு விளங்கப்பெறாது பஜனை செய்து கண்ணீர் சொரிபவர் மெய்யன்பராகார். இன்னிசைக் கருவிகளும் பண்ணோசையும் அவர்கள் நரம்புகளைக் கிளர்ந்தெழுப்ப, அதனால் அவர்களுக்கு ஓருவிதக் கிளர்ச்சி உண்டாகிறது. அது மெய்யன்பாகுமோ? எத்துணையோ பேர் குறிப்பிட்ட சில விக்கிரகங்களையும், சில கோயில்களையுங் கண்டபோது கண்ணீர் உகுத்துக் கூத்தாடுகிறார். இவர்களருகே தீண்டாதவனென்று இவர்களால் கருதப்படும் ஒருவன் வந்து நிற்பானாயின், இவர்கள் கண்ணீர் வெந்நீராகவன்றோ மாறுகிறது? மனம் வேகிறது. வேகும் மனத்தில் அந்தண்மை ஏது? உண்ண உணவின்றி உடுக்க உடையின்றி வருந்தும் ஏழைமக்களைக் கனவிலும் கருதாது, கடவுளன்பு கடவுளன்பு என்று எத்துணைபேர் கோயில் கட்டுகிறார்! குளம் வெட்டுகிறார்! வெள்ளித்தேர் செய்கிறார்! பசுமடம் அமைக்கிறார்! இத்தொண்டை ஆண்டவன் ஏற்றுக்கொள்வனோ? தான் என்றும் வீற்றிருந்தருளும் இயற்கைக் கோயில்களாகிய மக்கள் உடலங்கள், பட்டினியாலும் பிறவற்றாலும் மெலிவுறாதவாறு காக்கும் ஒருவன் தொண்டையே ஆண்டவன் ஏற்றுக்கொள்வான். மெய்யறிவு விளங்கப் பெறுவோர்க்கு உயிர்களிடத்தன்பு இயல்பாக நிகழும். அவர் அவைகளின் துன்பத்தைத் தந் துன்பமாகப் பாவிப்பர். எல்லா வுயிர்களிடத்தும் அன்பு செலுத்துபவரே மெய்யறிவு பெற்றவராவர். மெய்யறிவுக்கு அடையாளம் அதுவே.

சிவநாம இராமநாம சங்கீர்த்தனஞ் செய்பவருள் எத்துணையோபேர் ஆடுமாடு முதலிய உயிர்களை வதைக்கிறார்? அவ்வுயிர்களில் ஆண்டவனில்லையோ? அவ்வியற்கைக் கோயில்களைச் சிதைத்துச் சிவராம சங்கீர்த்தனஞ் செய்வதால் என்ன பயன்? மெய்யறிவு பெற்றவர் சிவா இராமா என்று ஓதித் தொண்டு செய்வதற்கும், அவ்வறிவு பெறாதார் அந்நாமங்களை ஓதிக் கூத்தாடுவதற்கும் வேற்றுமையுண்டு. முன்னவர் எல்லாவுயிரும் சிவராமர் என்ற அன்புணர்வோடு

தொண்டு செய்வர். பின்னவர் சிவராமர் என்னுஞ் சொல்லைக் கொலைக்கும் தீயொழுக்கத்துக்கும் வயிற்றுக்கும் முழக்குவர்.

கடவுள் பெயரால் எத்துணைபேர் சாதிச்சண்டை சமயச் சண்டை விளைக்கிறார்? இவர் போற்றுங் கடவுள் எதுவோ! கடவுளுக்குச் சாதியும் சமயமும் உண்டோ? மனிதன் பொய்யறிவால் கற்பித்துக்கொண்ட சாதி பேதமும் சமய பேதமும் உலகை எவ்வெவ்வழியில் அல்லற்படுத்துகின்றன! மெய்யறிவாம் ஞாயிறெழுந்தால் அப்புன்மைப் பனிப்படலங்களெல்லாம் பறந்தோடும். மெய்யறிவு ஒளிர்ந்தெழுந்தால் மனிதன் அன்பனாகிறான். அவ்வன்பு நெறியே மனிதனுக்குரிய கடவுள் நெறி. இவ்வுண்மையை உலகில் தோன்றிய பெரியாரெல்லாரும் அறிவுறுத்தி யிருக்கிறார். அவர் அறிவுறுத்திய ஒரு நெறியாம் அன்புநெறி விடுத்து, அவர் பெயரால் பல சமயங்களைக் கற்பித்துப் பூசல் விளைக்கிறார் சமயவாதிகள்.

கடவுள் ஒருவர். அவரை அறியும் அறிவும் ஒன்றே; அவ்வறிவு செலுத்தும் அன்பு நெறியும் ஒன்றே. அன்பு நெறியே உலகில் சமயமென்றும் மதமென்றும் வழங்கப்படுகிறது. அச்சமயத்தை, மனிதன், தன் தூலசரீரப் பொய்யறிவால் கூறிட்டு உலகை வஞ்சிக்கிறான். இவ்வளவிற்குங் காரணம், மனிதன் தன்மாட்டுள்ள அறிவையும் அன்பையும் உணரும் உழைப்பில் தலைப்படாதிருப்பதே.

அறிவு விளக்கமும் அன்பு நிகழ்ச்சியும் குன்றியுள்ள இந்நாளில், உலகில் அவைகளை வளர்க்கவேண்டி ஒருவர் முயன்று வருகிறார். அவர் யார்? நங் காந்தியடிகள். காந்தியடிகள் சிறைக்கோட்டத்தினின்றும் வெளிவந்த சின்னாள் கடந்து 'நவஜீவ'னில் ஒரு கட்டுரை வரைந்தார். அதன்கண் நம் பெரியார் தமது அநுபவத்தைக் குறித்துக் காட்டியுள்ளார். காந்தியடிகள் விழிப்பில் (ஜாக்கிரதையில்) புலன்கள் வழி மனஞ்சென்று உழலாதவாறு காக்குமாற்றல் தமக்குற்றிருப்பதாகவும், சொப்பனத்திலும் அவ்வாற்றல் பெற முயன்று, பிரமவித்தையைக் காண உறுதிகொண்டிருப்பதாகவும் கூறியுள்ளார். காந்தியடிகள் புறநோக்கிற் சிந்தையைச்

செலுத்தாது, அதை அகநோக்கிற் புகுத்தித், தூல சரீரங் கடந்து விளங்கும் சூக்கும காரண சரீரங்களின்மீது பதித்து, உழைத்து வருவது ஈண்டு ஆராயற்பாலது. அந்நாட்ட முடைமையால் காந்தியடிகளுக்கு அறிவும், அதனூடே அன்பும் மலர்ந்திருக்கின்றன. அவ்வறிவன்பின் பெற்றி, அவராற்றும் ஜீவகாருண்யத் தொண்டால் இனிது விளங்கும். காந்தியடிகள் எல்லா உயிர்களிடத்தும் அன்புடையராயிருக் கிறார்; அவரது அன்பைச் சாதிப்பகை சமயப்பகை முதலியன சிதைக்கவில்லை. அறிவும் அன்பும் முகிழ்க்கப்பெற்றார்முன் எப்பகை என்ன செய்யும்? சமயப் பற்றென மதவெறியால் அடாத வினைகளாற்றுவோரைக் கடியாது, அவரை அன்பு வழிப்படுத்தத் தாம் உண்ணாவிரதமிருக்க அடிகள் துணிந்தது மெய்யறிவு விளக்கத்தின் பயனன்றோ? காந்தியடிகள் உலகினர்க்கு அறிவுறுத்தும் சமயம், அறிவும் அன்பும் செறிந்த திருவருள் சமயமாகும். அச்சமயம் எங்கும் பரவ ஆண்டவன் திருவருள் பாலிப்பானாக.

அறிவுக்கும் அன்புக்கும் உள்ள தொடர்பைப் பெரிதுங் கவனித்தல்வேண்டும். அறிவு விளக்கமில்லாவிடத்து உண்மை அன்பு நிகழவே நிகழாது. அறியாமையால் - போலிப் பாசத்தால் - ஆற்றப்படும் வினைகள் அன்பு செறிந்தனவல்ல. அறிவு, அன்புக்கு அடிப்படை. அன்பு, அறிவுக்கு ஈரமளிப் பது. ஆதலால், மக்கள் அறிவு விளங்கத்தக்க துறைகளில் இறங்கி உழைப்பார்களாக.

அத்துறைகள் எவை என்று காணப் பழைய நூல் களைத் தேடவேண்டுவதில்லை. அவைகளின் உள்ளுறைப் பொருளாக நம்மிடையில் மகாத்மாகாந்தி விளங்குகிறார். அவர் வாழ்வையும் அவர் வினைகளையும் சிந்தித்து, அவ் வாழ்வை நடாத்தவும் அவ்வினைகளை ஆற்றவும் முயல்வோமாக.

(10, 17-10-1924)

# தவம்

இந்தியா பண்டை நாளில் பெருமை யுற்றிருந்தது என்று இப்பொழுது கற்றவர் பலர் சொல்லிவருகிறார். இந்தியா பண்டை நாளில் பெருமையுற்றிருந்தது உண்மையே. அப்பெருமைப் பேற்றிற்குக் காரணமாயிருந்தது எது? இந்தியா அந்நாளில் கொண்டிருந்த 'தவம்' என்னுந் தன்மையே யாகும். தவம், மக்கள் வாழ்வில் ஒரு தன்மை யாய்ப் பரிணமித்தால், அவர்கள் வாழ்வு, குடும்பம், கிராமம், நாடு எப்படியிருக்கும்?

இந்தியாவின் பழைய கட்டிடங்கள், சாலைகள், கலைகள், வழக்க ஒழுக்கங்கள் முதலியவற்றைச் சிந்திக்கச் சிந்திக்க நெஞ்சில் அமைதியுறுதல் காண்கிறோம். மனிதவாழ்வு அமை திக்கென்று ஏற்பட்டது. அமைதி, வாழ்விற்கு இன்றியமை யாத தென்பதை அறியாதாரில்லை. பரபரப்பு மிகுந்த இந் நாளிலும், மக்கள் ஒரு நொடியாவது அமைதி நாடுவது இயல்பாயிருக்கிறது.

வாழ்வெல்லாம் பரபரப்பில், தோய்ந்து, ஒருபோது அமைதி நாடுவது சிறப்பாகாது. அமைதி, வாழ்விலேயே படிந்து நிற்றல் வேண்டும். அமைதி வாழ்வுக்குரிய நெறி என்னை? தவம் தவமேயாகும். தவம், அமைதி கூட்டுதல் ஒருதலை. பரபரப்பு ஒருபோதும் தவத்தைக் கூட்டாது.

தற்கால நாகரிகம், தவத்துக்கு அடிப்படையான அமை தியை வளர்த்து வருகிறதா அல்லது தவநெறியைக் குலைக்க வல்ல பரபரப்பை வளர்த்து வருகிறதா? தற்காலம், பரபரப் பைப் பலவழியிலும் வளர்த்துவரல் கண்கூடு. உலகில் அவ்வப் போது நடைபெறும் நிகழ்ச்சிமுறைகளைத் தாங்கி வெளிவரும் பத்திரிகைகளைப் பார்த்தால், தற்கால உலகின் பரபரப்பு நன்கு புலனாகும். ஸ்பெயின் புரட்சியையும், ஜெர்மெனியின் குழப் பத்தையும், சீன ஜப்பான் பிணக்கையும், இந்தியாவின் நிலைமை யையும், இன்னோரன்ன பிறவற்றையும் உணர்ந்துகொள்ள மக்கள் விரைந்து நிற்கிறார்கள். பரபரப்புச் செய்திகள் இரவி

னும் மக்களை உறங்கவிடுவதில்லை. உறக்கம் மன அமைதிக்கென இயற்கையில் அமைந்த ஒன்று. அதையும் மீறும் நிலை தற்போது ஏற்பட்டிருக்கிறது. இப் பரபரப்பு உலகுக்குத் தவத்தை நினைக்கவும் நேரம் உண்டோ ?

இப் பரபரப்பு உலகம், தனது பாழ்நிலையை உணராது, தவநெறி முதலியவற்றையும் நிந்திக்கிறது ! இது காலத்தின் போக்கு ! பரபரப்பு உலகம், 'தவம்' என்பதைத் திரிபாகக் கொண்டிருக்கிறது. 'தவம்' என்பது மண் பொன் பெண்ணைத் துறந்து காட்டுக்கு ஓடுவதென்றும், மக்கட்குச் சேவைசெய்வதைத் தகைவதென்றும் அவ்வுலகம் கூறு நிற்கிறது. தவம், மண் பொன் பெண்ணைத் துறப்பதன்று ; காட்டுக் கோடுவதன்று ; சேவையைத் தகைவதன்று. மண்ணையும் வெறாது, பொன்னையும் வெறாது, அமைதிப் பெண்ணுடன் வாழ்ந்து, பிள்ளைகளை ஈன்று, அன்பு விளங்கப்பெற்று, எவ்வுயிரையுந் தன்னுயிர்போற் கருதிச் சேவைசெய்வது சிறந்த தவநெறியாகும்.

ஒருவரை மற்றொருவரும், ஒரு வகுப்பாரை இன்னொரு வகுப்பாரும், ஒரு நாட்டாரை வேறொரு நாட்டாரும் வீழ்த்தப் பகைமை எழுகிறது. இதற்கு அடிப்படையில் நிற்பது எது ? தன்னலமன்றிப் பிறிதொன்றில்லை. அத் தன்னலத்தை அதாவது மனமாசை அகற்றுவது தவநெறி என்பது. தன்னலம் அறுந்த இடத்தில் சேவை என்னும் பணிவு ஏற்படும். தன்னலம் அறாத இடத்தினின்றெழுஞ் 'சேவை' உலகில் பலதிறப் போராட்டங்களை எழுப்பாநிற்கிறது. தன்னலம் அற்ற சேவையைக் கூட்டுவது தவநெறியாகும். இத்தவநெறியைப் பிறழக்கொண்டு, அவநெறியில் நின்று, பொறாமை பகைமைகளுக்கு இரையாகிப், பரபரப்பில் வீழ்ந்து எரிந்து கரிவது மக்கட்பிறவியின் நோக்கமாகாது. நேயர்களே ! தற்கால உலகை நோக்குங்கள் ; அதன் பரபரப்பை உணருங்கள். மனோநிலை எப்படி இருக்கிறது ? கூறவும் வேண்டுமோ ? மனத்தில் எரி பகை காழ்ப்பு முதலியன கனன்றுகொண்டிருக்கின்றன. இம்மனமா சேவைக்குரியது ? இப்பாழும் மனமன்றோ கொலை கொள்ளை குழப்பம் புரட்சி முதலிய

பேய்களை உலகில் நடமாடச் செய்கிறது? இம்மனம் பெறும் மன்பதையில் அன்பு நிலவாது; அருள் பெருகாது; அறம் வளராது. இப்பொழும் மனம் மாறுதல் அடைதல் வேண்டும். அம்மாறுதல் அடைதற்குத் தவநெறி நின்று ஒழுக முயல்வது அறிவுடைமை. பழைய இந்தியா தவநெறியில் நின்றமையால், அது மாண்பு பெற்றிருந்தது. அம் மாண்பை மீண்டும் பெற வேண்டுமானல், ஜீவகாருண்யத்தை ஓம்பவல்ல தவநெறியில் மக்கள் நிற்க முயலல்வேண்டும்.

தவநெறிக்கு அமைப்பு, தேர்தல், தலைமைப் பதவி முதலியன வேண்டுவதில்லை. தன்னந்தனியராய்த் தவநெறியில் நின்று மனமாசைக் கழுவி அன்பை வளர்க்கலாம். தவம் பெருகப் பெருகப் பரபரப்புத் தானே ஒழிந்துபடும். அத்தவ உலகம் இப்பொழுது வேண்டற்பாலது. அதற்கு மக்கள் முயலல்வேண்டும். மக்கள் மனம் மொழி மெய் மூன்றும் தவத்தில் திரும்பல் வேண்டும். திரும்பினல் மன்பதையில் சகோதர நேயம் விளங்கும். சகோதர நேயக் குறைபாடு, வகுப்பு மொழி நாடு நிறம் முதலியவற்றின்மீது கருத்தைச் செல்வித்துப், பிளவை உண்டுபண்ணிப், போராட்டங்களை எழுப்புகிறது. ஆகவே, 'மக்கள் அனைவருஞ் சகோதரர்' என்னும் உணர்ச்சியை உண்டுபண்ணவல்ல தவத்தில் மன்பதை தன் கருத்தைச் செலுத்துவதாக.

'உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு'

'வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்
ஈண்டு முயலப் படும்'

'தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்
அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு'

'தன்னுயிர் தானறப் பெற்றானை ஏனைய
மன்னுயி ரெல்லாந் தொழும்'

'அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்'

'நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழு நெறி'

'தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை'

'யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்'

'அந்தண ரென்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான்'—திருவள்ளுவர்

(27-1-1932)

## தவ நெறி

'தலைவா வுனை வேண்டிக்கொள்வேன் தவநெறியே' என்னுந் திருவாக்கு வன்றொண்டப் பெருந்தகையாருடையது. தவநெறி என்பது காலம் இடம் முதலியவற்றிற் கேற்றவாறு ஒவ்வொருவரால் ஒவ்வொரு விதமாகக் கொள்ளப்படுவதொன்று. அதைப் பற்றிய விரிந்த ஆராய்ச்சி ஈண்டு வேண்டுவதில்லை. தவத்தின் கூறுகள் பலதிறமாக அவ்வப்போது விரிந்து நிற்பினும், அதன் அடிப்படையில் நிலவும் உண்மை ஒன்றே. அஃதென்னை?

'உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை அற்றே தவத்திற் குரு' என்று தவத்தின் இயல்பை ஆசிரியர் திருவள்ளுவனார் அருளியிருத்தல் காண்க. எவ்வுயிர்க்குந் தீங்கு செய்யா ஒரு நெறியைத் தவநெறி என்று சுருங்கக் கூறலாம். எவ்வுயிர்க்கும் உறுகண் செய்யாமை என்பது யாரிடத்தில் அமையும்? எவ்வுயிரையுந் தன்னுயிர்போல் கொள்ளும் ஒருவனிடத்திலேயே அச் செம்மைஅறம் அமையும். பிறர் தனக்குச் செய்யுந் தீமைகருதி, வன்மங்கொண்டு, பழிக்குப் பழிவாங்க எண்ணாது, அத்தீமை பொறுக்கும் ஒருவனே மன்னுயிரைத் தன்னுயிர்போல் போற்றும் ஆற்றல்

பெறுவன். எவ்வுயிர்க்குந் தீங்கிழையாது உலகில் வாழ்தல் அரிதா எளிதா? மன்னுயிரைத் தன்னுயிர்போல் கொள்ளல் அல்லது எவ்வுயிர்க்கும் உறுகண் செய்யாமை என்னும் பேர் அறத்தை உன்ன உன்ன அதன் அருமை புலனாகும். அதைக் குறித்துப் பேசலாம்; எழுதலாம். அதை வாழ்வில் செயலில் கொணர்தலோ?

தவநெறியில் நின்று வாழ்வு நடாத்தவே மக்கட் பிறவி ஆண்டவனால் அளிக்கப்படுகிறது. மக்கள் பிறவியில் அந் நெறி பெறுதல் கூடும். அது மகன் நடாத்தும் வாழ்வைப் பொறுத்து நிற்கிறது. உலகில் மகன் தன் வாழ்விற்கென எத்துறை நண்ணி நடப்பினும், அத்துறை, தவநெறிக்கு மாறுபடுவதா யிருத்தல் கூடாது. தவநெறி யென்று எல்லா வற்றையும் விடுத்துக் காட்டுக்கோ மலைக்கோ ஓடுவது அந் நெறி புகுவதாகாது. எதையும் விடுதல் வேண்டுவதில்லை; எதையுந் துறத்தல் வேண்டுவதில்லை. இருப்பதில் இருந்து கொண்டே தவநெறி பற்றி வாழலாம். 'தவஞ் செய்வார் தங்கருமஞ் செய்வார் மற்றல்லார் - அவஞ்செய்வார் ஆசை யுட் பட்டு' என்றார் திருவள்ளுவனார்.

ஆண்டவன் இவ்வுலகை - வாழ்வை - ஏன் உயிர்கட்கு நல்குகிறான்? ஆண்டவன் அளித்த உலகை - வாழ்வை - ஏன் வெறுத்தல் வேண்டும்? ஏன் துறத்தல் வேண்டும்? ஆண்டவனால் தடுத்தாட்கொள்ளப்பெற்ற பின்னை, வன் றொண்டர் ஆண்டவனை நோக்கி, 'தலைவா உன்னை வேண்டிக் கொள்வேன் தவநெறியே' என்று வேண்டினார். ஆண்ட வன் வன்றொண்டர்க்குக் காட்டிய தவநெறி யாது? பரவை நாயகியாருடன் கூடிவாழும் ஒரு நெறியை அவருக்கு ஆண்டவன் காட்டினான். இதனால் தவநெறி என்பது உலக வாழ்வையே துறத்தல் அன்று என்பது விளங்குகிறது.

உயிர்க்கு உறுகண் செய்யாத பேர்அறத்தை இல்லறம் படிப்படியாக வழங்கிக்கொண்டே போகும். ஒழுங்குபட்ட இல்லறம், நாளடைவில் மக்கள் உள்ளத்தில் படிந்துள்ள அழுக்காறு அவா வெகுளி முதலியவற்றைச் செகுத்து,

நீரூக்கி, அவ்விடத்தில் அன்பு அருள் முதலியவற்றைப் படியச் செய்யும். அன்பு அருள் பெருகப் பெருக உயிர்கட்கு உறுகண் செய்யுந் தீமை தானே இறந்துபடும். ஆகவே, உயிர்க்கு உறுகண் செய்யாமை என்னுந் தவத்துக்கு இல்லறம் இன்றியமையாதது.

இல்வாழ்வு சிறந்ததென்று, 'உலகே பொருள்; உடலே உறுதி' என்று வாழ்வு நடாத்தின் தவவெறி கூடுதல் அரிது. பின்னை எவ்வாறு வாழ்தல் வேண்டும்? 'என்பாலுள்ள தீ நீர்மைகளைக் களைந்து, அருள்நெறி என்னுந் தவநெறியில் என்னை நிறுத்தித் தூய்மைசெய்ய, இவ்வுலகமும் இவ்வுடலும் இவ்வாழ்வும் ஆண்டவனால் அளிக்கப்பட்டன' என்று கருதி வாழ்தல் வேண்டும். 'இவ்வுலகம் பொய்' என்று அதைத் துறத்தலுங் கூடாது; ஆண்டவனை மறந்து 'இவ்வுலகமே எல்லாம்' என்று அதில் படிந்து மூழ்குதலுங் கூடாது. ஓரிடத்திருந்து மற்றோரிடத்துக்குச் செல்லத் துணைபுரியும் வண்டி அல்லது தோணிபோன்றது இவ்வுலகம். வண்டியிலோ தோணியிலோ செல்வோர், அவ்வண்டியையோ தோணியையோ விடுத்து நீப்பது அறிவுடைமைகொல்! ஆகவே, உலகில் ஆண்டவன் நினைவொடு மக்கள் வாழ்தல் வேண்டும்.

மனிதன் பிறக்கிறான்; இறக்கிறான். இறந்தபின் அவன் உடல் மண்ணில் புதைக்கப்படுகிறது; அல்லது தீயால் எரிக்கப்படுகிறது. உடல் மண்ணுக்கு இரையாகும் அளவுடன் மனிதன் வாழ்வு முடிந்துவிடுகிறதா? இல்லை; இல்லை. அவன் பருவுடல் மண்ணில் மறைகிறது. அவன் நுண்ணுடலோ? நேயர்களே! நம் வாழ்வை உற்றுநோக்குங்கள். நமது வாழ்வு, இவ்வுலக அளவில் முடியவில்லை; உற்றார் உறவினர் பொன் பொருள் என்னும் உயிர்ச்சார்பு பொருட்சார்பு அளவில் முற்றுப்பெறவில்லை; இவ்வுடலளவில் - சுடுகாட்டளவில் - நின்றுவிடவில்லை. இவைகட்கு மேற்பட்ட நிலையுண்டு. அப்பெருநிலைப் பேற்றிற்கெனவே நமக்கு இவ்வுலகை வாழ்வு நல்கப்பட்டது. இந்நுட்பம் ஓராது வாழ்வது மடமை.

இம்மடமையை நீக்க ஆன்றோர்கள் பலதிற உறுதி மொழிகளை நமக்கு வழங்கிச் சென்றார்கள். அவைகளுள் சில வருமாறு :—

'ஊரெல்லாங் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே'

'பண்டம்பொய்க் கூரைப் பழகி விழுதலால்
உண்டஅப் பெண்டிரும் மக்களும் உடன்செலார்
கொண்ட விரதமும் ஞானமும் அல்லது
மண்டி யவருடன் வழிநட வாதே'—திருமூலர்

'அத்தமும் வாழ்வும் அகத்துமட் டேவிழி அம்பொழுக
மெத்திய மாதரும் வீதிமட் டேவிம்மி விம்மியிரு
கைத்தல மேல்வைத் தழும்மைந் தருஞ்சுடு காடுமட்டே
பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே'
—பட்டினத்தார்

'மத்த யானையேறி மன்னர் சூழவரு வீர்காள்
செத்த போதே லாரு மில்லைச் சிந்தையுள் வைம்மின்கள்
வைத்த வுள்ள மாற்ற வேண்டா வம்மின் மனத்தீரே
அத்தர் கோயில் எதிர்கொள் பாடி என்பதடை வோமே'
—சுந்தரர்

இத் திருப்பாக்களால் அறியக்கிடப்பதென்னை ? உலகில் மக்கள் ஆண்டவன் நினைவுடன் வாழ்தல் வேண்டுமென்பது.

'ஆண்டவன் நினைவொடு வாழ்தல்' என்பதற்கு வேறு தொழில் ஒன்றுஞ் செய்தல் கூடாதென்பது பொருளன்று. எத்தொழிலுஞ் செய்யலாம். அத்தொழிலில், பொய் பொறாமை முதலியவற்றைப் புகுத்தாது, நீதி ஒழுக்கத்தைப் புகுத்தி, வாழ்வது ஆண்டவன் நினைவுடன் வாழ்வதாகும்.

மரணத்தின் பின்னே மனிதனுக்கு ஏதேனும் நிலை உண்டா இல்லையா என்பதைப்பற்றி இனி ஆராய்ந்து உண்மை காணவேண்டுவதில்லை. நமதுநாட்டுப் பெரியோர்கள், தாங்கள் பெற்ற அடைவுகளை நம்மனோர்க்கு அறிவுறுத்திச் சென்றார்கள். அவைகளை நம்புவோர் நம்புக. இப்பொழுது மேல்நாட்டு

அறிஞர் சிலரும், மரணத்தின்பின் மனிதன் அடையும்நிலையை ஆய்ந்து ஆய்ந்து, பலதிற நுட்பங்களை உலகிற்கு வெளியிட்டு வருகிறார். அவருள் தலைசிறந்தவர் ஸர் ஆலிவர் லாட்ஜ் என்பவர். இப்போதைய விஞ்ஞான உலகில் அவருக்கு ஒப்பார் மிக்கார் இலரென்றே கூறலாம். மனத்தின் பலதிற இயல்புகளை எல்லாங் கண்டவர் ஸர் ஆலிவர் லாட்ஜ். அவர் இளமையில் தாஞ்செய்த பூதபௌதிக ஆராய்ச்சியால் சில ஆண்டு நாத்திக வாழ்வு நடாத்தினவர். இப்பொழுது மரணத்தின் பின்னே மனிதன் அடையும் நிலையை ஆராய்ந்து உண்மை கண்டு, அவர் தமது நாத்திகக் கொள்கையை மாற்றிக்கொண்டார். அப்பெரியார் கண்ட பல நுட்பங்களைப் பத்திரிகை வாயிலாகவும் புத்தக வாயிலாகவும் படித்து வரும் பேற்றை யான் பெற்றிருக்கிறேன். ஸர் ஆலிவர் லாட்ஜின் ஆராய்ச்சி அமிழ்தைப் பருகப் பருக, அடியேனுக்குக் கடவுளுண்மையில் உறுதியும், அவ்வுண்மையை அறிவுறுத்திய பண்டை மூதறிஞரிடம் தணியாக் காதலும் முருகி வளர்கின்றன. ஸர் ஆலிவர் லாட்ஜ் போன்றாரின் ஆராய்ச்சியால் நந் தமிழ்நாட்டுப் பெரியோர் சிலர் அருளிய பல நுட்பங்கள் எனக்குப் புலனாகின்றன. ஸர் ஆலிவர் லாட்ஜ் வாழ்க.

மனிதன் இப்பருவுடல் (தூலசரீரம்) நீத்த பின்னே, நுண்ணுடல் (சூக்குமசரீரம்) பெற்றுச் செல்வதை, மேல்நாட்டுத் தத்துவஞானிகள் ஆராய்ச்சியால் காட்சியளவில் நிறுவிக் காட்டி வருகிறார்கள். நுண்ணுடல் பருவுடலில் புகுந்து நிற்கிறது. பருவுடல் நுண்ணுடலுக்குப் போர்வையெனத் துணைபுரிகிறது. நுண்ணுடல் உண்டா இல்லையா என்னும் ஐயம் எவருங் கொள்ளவேண்டுவதில்லை.

நமது எண்ணங்கள் யாண்டிருந்து பிறக்கின்றன? 'மனத்திலிருந்து' என்று எவருங் கூறுவர். அம்மனம் 'உண்டா இல்லையா' எனில், 'இல்லை' என்று கூறுவோர் இரார் என்று நினைக்கிறேன். மனம் நமது கண்ணால் காணுந் தகையதோ? கையால் பற்றுந் தகையதோ? காண இயலாத ஒன்றை - பற்ற இயலாத ஒன்றை - இல்லையென்று கூறலாங்கொல்?

இவ்வுலகை உற்றுநோக்குவோம். மனிதன் எத்துணைக் கட்டிடங்களைக் கட்டுகிறான்; எத்துணை ஓவியங்களை எழுதுகிறான்; எத்துணை அழகிய - கண்ணைக் கவரத்தக்க - அமைப்புக்களை நிறுவுகிறான். இப் பருமைகள் யாவும் யாண்டிருந்து தோன்றின. ஒருவன் ஒரு வீட்டைக் கட்டுதற்கு முன்னர் அவன் அவ்வீட்டை ஓர் ஓவியமாக வரைகிறான். அவ்வோவிய வடிவம் யாண்டிருந்து பிறந்தது? அன்பர்களே! உன்னுங்கள். வீடும் ஓவியமும் மனிதன் எண்ணத்தினின்றும் பிறந்தன என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? மனிதன் எண்ணங்களே (மனமே) உலகில் நமக்குக் காட்சியளிக்கும் பலதிற அமைப்புக்களாகப் பரிணமித்திருக்கின்றன. எண்ணத்தின் பரிணாமங்கள் நமது கண்ணுக்குப் புலனாகின்றன. ஆனால் அவைகளின் முதலாகவுள்ள எண்ணமோ?

காரியமாய அமைப்புக்கட்கு, வடிவம் நிறம் முதலியன இருக்கும்போது, காரணமாய எண்ணங்கட்கும் அவையிருத்தல் வேண்டுமன்றோ? எண்ணங்கட்கும் வடிவம் உண்டு; நிறம் உண்டு. அவைகளைப் பருமைக் கண்ணால் காணல் இயலாது. சிலர் அந்நுண்மையைக் காணத் தமது கட்புலனைப் பண்படுத்திக்கொள்கிறார். அப்பயிற்சியின் அருமை நோக்கி மேல்நாட்டுத் தத்துவஞானிகள் கருவிகளால் நுண்மைகளின் வடிவம் நிறம் முதலியவற்றைக் காண்கிறார்கள். மனிதன் எண்ணும் எண்ணங்கட்கு வடிவம் நிறம் முதலியன உண்டு என்று நம் பெரியோர்கள் கண்ட உண்மை, இப்பொழுது மேல்நாட்டு அறிஞரால் நிறுவிக் காட்டப்பட்டிருக்கிறது.

எண்ணத்துக் கேற்ற நுண்ணுடல் மனிதனுக்கு அமைகிறது. நுண்ணுடல் என்பது எது? மனிதன் எண்ணும் எண்ணத்துக்கு நிலைக்களனாகவுள்ள மனம். மனிதனது பருவுடல் நீங்கியதும், அவன் மனமெனும் நுண்ணுடலுடன் மேலெழும்புகிறான். நுண்ணுடலையுங் கடந்து முதலுடல் (காரணசரீரம்) என்றொன்று நிற்கிறது. அதைப் பற்றிய பேச்சே வேண்டாம். நுண்ணுடல் நிலையை யொட்டி அது நிற்றலான், மனிதன் நுண்ணுடலைப் பண்படுத்திக்கொள்ள

முயல்வானாக. வெறுமையாக 'அது; இது' என்று பேச்சில் காலங்கழித்தல் தவறு.

மனிதனது நுண்ணுடற் செம்மை, அவனது வாழ்வைப் பொறுத்து நிற்கிறது. வாழ்வு தீயவழியில் நடாத்தப்படின், அதற்கேற்ற வண்ணம் நுண்ணுடல் அமைகிறது. இதனால் நாம் எண்ணுகிற எண்ணங்கள் யாவும் நல்லனவா யிருத்தல் வேண்டும் என்பதைப் பெரியோர்கள் அறிவுறுத்திச் சென்றார்கள். நமது எண்ணங்களின் பரிணாமமே நமக்குப்பின்னே அமையும் உடலமென்க. ஆதலால் நமது உள்ளத்தில் தூய எண்ணங்களையே எண்ணி வாழ்வு நடாத்துவோமாக.

மனிதன் பருவுடல் நீத்ததும், அவனைத் தொடர்ந்து செல்வன அவனது எண்ணங்களே யாகும். இக் கருத்துப் பற்றியே, 'பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே' என்று பட்டினத்தடிகள் உலகிற்கு அறிவுறுத்திப் போந்தார்கள். பருவுடலை விடுத்து நுண்ணுடல் நீத்ததும், நுண்ணுடல் யாண்டுச் செல்கிறது? அச்செலவு, அவரவர் எண்ணங்கட் கேற்றவாறு அமையும் நுண்ணுடல் நிலையையொட்டி நிற்கிறது. பருவுடலை விடுத்துப் பிரியும் நுண்ணுடலின் படங்கள், இப்பொழுது மேல்நாட்டறிஞர் சிலரால் பிடிக்கப்பட் டிருக்கின்றன. அப்படங்களை நோக்குழிப் பலதிற நிறங்கள் காட்சி யளிக்கின்றன. எண்ணங்கட்கு நிறம் உண்டு என்பது மேலே சொல்லப்பட்டது. அந்நிறம் நுண்ணுடலில் படிகிறது. எண்ணங்கட்கேற்றவாறு அமையும் நுண்ணுடல் தன்னியல்புக்கேற்ற உலகங்களில் புகுகிறது. இம்மண்ணுலக மல்லாத மற்ற வுலகங்களின் இருப்பும், அவைகளில் உயிர்கள் அவ்வவ் வுலகிற்கேற்ற உடலங்கள் பெற்று வாழ்வதும் வான சாஸ்திரிகளால் நாளுக்குநாள் புதிது புதிதாகக் காணப்பட்டு வருகின்றன. இம்மண்ணுலகில் மனிதன் கொண்ட வாழ்வையொட்டி அமையும் நுண்ணுடல் நிலைக்கேற்றவண்ணம், அவ்வத் தத்துவ வுலகம் அவ்வவ்வுடலை ஈர்த்துக்கொள்ளும்.

ஐந்து பூதங்களால் ஆக்கப்பட்டுள்ள உலகங்கள் ஒவ்வொன்றில் ஒவ்வொரு பூதம் குறைந்தும் மிகுந்தும் நிலவும்.

நாம் வாழும் இவ்வுலகம் மண்ணுலகமென்று சொல்லப்படுகிறது. இவ்வுலகில் ஏனைய பூதங்களில்லையோ? மற்றப் பூதங்களும் உண்டு. ஆனால் இவ்வுலகில் மண்கூறு அதிகமாயிருக்கிறது. ஒருகல்லை எறிந்தால் அக்கல் மீண்டும் இம்மண்ணில் வந்து வீழ்வது காண்கிறோம். காரணமென்னை? கல்லில் மண்கூறு மிகுதியா யிருத்தலாகும். இனம் இனத்தை ஈர்த்துக்கொள்கிறது. புகைக்கூடு, ஆகாய விமானம் முதலியன காற்றில் எழுவதைப் பற்றிப் பூத பௌதிக ஆராய்ச்சி பெருகி வரும் இந்நாளில் விரித்துக் கூறவேண்டுவதில்லை. சுருங்கக் கூறின் மண்கூறு குறைவுபெற்றுக் காற்றுக்கூறு பெருகியதும் பொருள்கள் மேலெழும்புவது இயல்பு.

கற்பூரத்தைக் கொளுத்தித் தலைகீழாகப் பிடித்தாலும் நெருப்பின் நா கீழ் நோக்குவதில்லை. நெருப்பு தன் இனமாகவுள்ள உலகங்கள் வழியே நோக்க முயல்கிறது. 'மரணத்தின்பின் மனிதன் நிலை' 'நுண்ணுடல்' முதலிய பெயர்கள் தாங்கி வெளி வந்துள்ள (மேல்நாட்டுப் புலவர்கள் எழுதியுள்ள) நூல்களில் எண்ணங்களின் நிறம், நுண்ணுடல் நிலை, அது பின்னை அடையும் உலகங்கள் முதலியன ஒல்லும் வகை விளக்கமாக ஓதப்பட்டிருக்கின்றன. அந் நூற்றுணை கொண்டு, திருமூலர் முதலியோர் அருளிய திருமந்திரம் முதலிய நூல்களை ஆராய்ந்தால், பல நுட்பங்கள் உணரலாம். மேல்நாட்டில் அவ்வாராய்ச்சி பெருகப் பெருக உலகில் அறிவும் அன்பும் வளரும்.

பருவுடல் நீத்ததும் நுண்ணுடல் புகும் உலகங்களுண்மையால், மனிதன் தன்வாழ்வு, இவ்வுலக அளவோடு முடிந்துவிடுகிறது என்று கருதிக் கேடுறு திருப்பானாக; தனது பின்னிலையை ஒல்லும்வகை கல்வி கேள்விகளாலும், பூத பௌதிக ஆராய்ச்சியாலும், ஆராய்ச்சியாளர் கூட்டுறவாலும், ஒருபுடையாதல் உணர்ந்து, உய்யுநெறி பற்றி ஒழுக முயல்வானாக. அம் முயற்சியில் தலைப்படுவது மனிதனது தலையாய கடமை. அக்கடனாற்றப் புகுவது தவநெறியிற் புகுவதாகும். தவத்துக்கென 'அதை விடுத்தல்' - 'இதைத் துறத்தல்' முதலியன வேண்டுவதில்லை. எவரெவர் இயல்புக்கு எவ்வெத்

தொழின்முறை பொருந்துகிறதோ அவ்வத் தொழின்முறையில் நின்றே, அவரவர் தவஞ் செய்து வரலாம். தொழின் முறைகளிலும், வாழ்வுத் துறைகளிலும், பிறவற்றிலும் பொய் பொறாமையின்றி, நீதி ஒழுக்கம் முதலியவற்றைக் கோடல் தவத்துக்குக் கால்கொள்வதாகும். தவம் தவம் என்பது வேடமன்று ; கோலமன்று ; முரட்டு யோகமன்று. பொய் பொறாமைகளை யொழித்து, நீதி யொழுக்க நெறி நின்று, அன்பை வளர்க்க வளர்க்கப் பிறவுயிர்க்கும் தன்னுயிர்க்கும் வேற்றுமை தோன்றாது. வேற்றுமையற்ற ஒன்றைத் தவநிலையென்க. 'உயிர்கட்கு உறுகண் செய்யாது செந்தண்மை பூண்டொழுகல்' தவமாகும். தவநெறியை மக்கள் வாழ்வில் பெறுதல் வேண்டும். இதுபற்றியே 'தலைவா உன்னை வேண்டிக் கொள்வன் தவநெறியே' என்று வன்தொண்டர் ஆண்டவனை நோக்கி வேண்டி நின்றார்.

எவ்வுயிரையுந் தன்னுயிர்போல் கருதி, ஒல்லும் வகை செந்தண்மை பூண்டொழுகிய ஒருவனது நுண்ணுடல், பருவுடல் விடுத்து நீத்ததும், இன்பத்தில் திளைக்க ஒருலகம் புகும். ஆண்டிருந்து அவ்வுயிர் பெறும் நிலையைப் பற்றிய பேச்சே வேண்டாமென்று மேலே குறிப்பிட்டிருக்கிறேன். வெறும் பேச்சு எற்றுக்கு ? இவ்வுலகில் நல்வாழ்வு நடாத்த வேண்டுவது நமது கடன். அக்கடனாற்றுவோமாக. அக்கடனாற்றுதல் எளிதோ என்னும் ஐயமும் அச்சமும் பிறத்தல் இயல்பு. ஐயமும் அச்சமும் வேண்டாம். மனிதனால் ஆற்றக் கூடாத வினை இவ்வுலகில் ஒன்றுமில்லை. மின்சார சக்தியைக் கொண்டு, மனிதன் நாளுக்கு நாள் என்னென்ன புதுமைகளைக் கண்டு வருகிறான். அவ்வறிவைப் பொய் பொறாமைகளை ஒடுக்குந் துறையில் செலுத்தினால், மனிதன் தவநெறியில் எளிதில் நண்ணுதல் கூடும்.

இப்பொழுது நாம் உற்றுள்ள நிலையைக் கண்டு 'அந்தோ ! தவநெறியா ?' என்று எவரும் மருள வேண்டுவதில்லை. மேல்நாட்டு வாணிபத் துறைகளும், அத்துறை வளர்ச்சிக்கென அந்நாட்டார் வகுத்துள்ள ஆட்சிமுறைகளும்,

போர் முறைகளும், கண்டு வருமுடங் கருவிகளும், தேர்தல் விழாக்களும், பிறவும் இனித் தவநெறிக்கு இடந்தரல் அரிது அரிது என்று பலர் கூற யான் கேட்டிருக்கிறேன். மறத்துறைகளின் சூழலும், விரைவும், முனைப்பும் மக்களை அவ்வாறு கருதச் செய்கின்றன. மறத்துறைகள், இயற்கை அன்னையின் அருளால் ஒருநொடியில் வீழ்ந்துபடுங் காலம் வரினும் வரும். ஆகவே, மறத்துறைகளின் எழுச்சி கண்டு மயங்கி, அவைகட்கு இரையாதல் ஆண்டகைமை யன்று.

என்றும் ஒருபெற்றியா யிருப்பது தவநெறி. தவநெறி, ஆங்காங்குத் தோன்றிய ஆன்றோர்களால் அறிவுறுத்தப் பட்டது. ஆன்றோர் மொழிகளின் திண்மையை நாம் மறத்த லாகாது. அவர் மெய்யுரைகளில் உறுதி கொண்டு, இவ் வுலகில் நல்வாழ்வு நடாத்த நாம் முயலல் வேண்டும். நல் வாழ்வென்பது நல்லெண்ணத்துடன் வாழ்வதாகும். நல் லெண்ணத்துடன் வாழும் வாழ்விற்குக் கேடு சூழத்தக்க பலதிற இடையூறுகள் இவ்வுலகில் உண்டு. இடையூறுகட்கு நாம் எளிதில் இரையாதல் கூடும். இடையூறுகட்கு எளிய ராகாத வழியில் நிற்க மனதை உறுதிப்படுத்த உழைத்தல் வேண்டும். 'உழைத்தல் வேண்டும்' என்று சொல்வது எளிது. அதைச் செயலில் நிகழ்த்துவதோ?

முதலாவது உணவைக் கட்டுப்படுத்தல் வேண்டும். 'உணவுக் கேற்ற குணம்' என்பது கீதாசாரியர் திருவாக்கு. மனிதன் தன்னியல்புக்குப் பொருந்தாத உணவுகளை உண்டு தன்னைக் கெடுத்துக்கொள்கிறான். புலால், மனிதனுக்குப் பொருந்திய உணவன்று. புளி காரம் முதலிய கூட்டுகளும் பொருந்தியனவல்ல. பசிக்கென ஏற்பட்ட உணவுப் பொருள் களை நாச்சுவைக்கென மனிதன் மாற்றிக்கொண்டான். உணவு முறைகளைப் பற்றிய விரிவுரை ஈண்டு வேண்டுவ தில்லை. மனிதன் பொருந்திய உணவு உண்ணக்கடவன் என்று கூறுமளவில் நின்றுவிடுகிறேன். சுருட்டு, சிகரெட், பீடி, பொடி முதலியனவும் மனிதனது இயல்பைக் கெடுப் பனவாம். காபி தேநீர் முதலியனவும் பொருந்திய பானத்தின் பாற்பட்டன வல்ல. கள்ளை ஈண்டுக் குறிக்கவும் வேண்

டுமோ? இவைகளெல்லாம், மனிதனை இராஜத தாமத குணங் களில் அழுத்தி, அவனது எண்ணங்களைப் பேய்வாய்ப் படுத்துவன. ஆதலால், முதலாவது மனிதன் தவ நெறிக்குப் பொருந்திய உணவு உண்ணப் பயில்வானாக.

உணவினால் மட்டும் முழுத் தவநெறி கூடுமென்று எவருங் கனவு காண வேண்டுவதில்லை. உணவுடன் ஒழுக்க மும் வேண்டற்பாலது. மனிதனுக்கு விழுப்பந்தருவது ஒழுக்கம் ஒழுக்கமே. அவ்வொழுக்கத்தினின்றும் அவன் வழுவுதலாகாது. கொலை களவு கள் காமம் பொய்யெனும் ஐம்பெரும் பாவங்களைச் செய்யாதொழிவது ஒழுக்க நெறி யில் நிற்பதாகும். இப்பாவங்களில் பொய்யென்பதொன்றை மனிதன் விடுக்க முயன்றால், அவன் பிறவிக்கடலை நீந்துதற் குத் தவமென்னுந் தோணியைப் பற்றினவனாவன். தவநெறி யில் புகுஞ் சிலரும் சில வேளைகளில் தவறி வீழ்தல் உண்டு. மனிதன் எவ்வேளையிலாவது அறிந்தோ அறியாமலோ பாவம் புரியும் நீர்மையன். மனிதன் சிறிது வழுவினும், அவனைப் பாவப் பேய் தன் வழியில் ஈர்த்துக்கொள்ளக் காத்துக் கொண்டிருக்கிறது.

இதற்கு மனிதன் என் செய்வது? இதற்கு மனிதன் ஒரு கொழுகொம்பைப் பற்றல்வேண்டும். இக்கொழு கொம்பே அறக் கடவுள் என்பது. இக் கொம்பை உறுதி யாகப் பற்றுவோர்க்கு உய்வு உண்டு என்பது ஒருதலை. உணவு, ஒழுக்கம், கடவுள் மூன்றும் தவநெறிக்கு இன்றி யமையாதன. கடவுள் திருவடி எல்லாவற்றிற்கும் மேலா னது. மனிதன் வாழ்வில் வழுக்கி வீழ்வது இயல்பு. வழுக் கும் போதெல்லாம் கடவுள் திருவடியைப் பற்றும் உள்ளம் பெறல் வேண்டும். நாளடைவில் வழுக்கி விழுதல் அருகி விடும். ஆதலால், மனித வாழ்விற்குக் கடவுள் நினைவு மிக மிக இன்றியமையாதது.

கடவுள் எது? விரிந்த வேதாந்தம் ஈண்டு வேண்டாம். கடவுள் என்பது அன்பேயாகும். அன்பை உளத்திருத்தி, அன்பாகி, அன்பு வாழ்வு நடாத்த நடாத்த மனிதன் தவத் தின் பெற்றி உணர்வோனாவன். தவம் என்பது எவ்வுயிரை

யுந் தன்னைப்போல் கருதிச் செந்தண்மை பூண்டொழுகல் என்பது முன்னர் விளக்கப்பட்டது. அத் தவநெறி அன்பு வாழ்வில் கூடுதல் ஒருதலை. ஆகவே தவநெறிக்கு வேண்டற்பாலது அன்பு வாழ்வு என்க.

அன்பு நிலவும் உள்ளத்தில் தீய எண்ணங்கள் இடம் பெறல் அரிது. தீய எண்ணம் பிறவாத மனமே சிறந்த நுண்ணுடல் என்க. நல்லெண்ணத்துடன் வாழ்வோரது பருஉடல் நீங்கப் பெற்றதும், அவரது நுண்ணுடல் ஒரு நல்லுலகம் புகும். பருவுடல் நீத்ததும், மகன் தன் நுண்ணுடல் நல்லுலகில் புகும் முறையில் இவ்வுலகில் வாழ்வு நடாத்தல் வேண்டும். இப்பருவுடலோடு - இவ்வுலகோடு - வாழ்வு முடிந்துவிடுகிறது என்று, தீயொழுக்கத் துறைகளில் மூழ்கிக் களியாட்டயர்தல் மடமை; மடமை. இவ்வுலக வாழ்வை ஒட்டியே பின்னை வாழ்வு அமைதலால், மகன் இவ்வுலகில் அன்பு வாழ்வெனுந் தவநெறி நிற்றல் நல்லது.

தவநெறி என்பதைப் பற்றிப் பலர் பலவாறு கூறுப. அவ்வவற்றிற் சிற்சில உண்மைகளும் இருக்கலாம். எதையும் கால தேச வர்த்தமானத்துக் கேற்றவாறு கொள்ளுதல் அறம். கடவுளும் கால தேச வர்த்தமானத்தை ஒட்டி அருளாடல் புரிந்து வருகிறார்.

'காலமொடு தேசவர்த்த மான மாதி
கலந்துநின்ற நிலைவாழி கருணை வாழி'

என்றார் தாயுமானாரும்.

தவநெறிக்குச் சரியைத்தொண்டு செய்வதா? கிரியைத் தொண்டு செய்வதா? மூக்கைப் பிடித்து யோகங் கிடப்பதா? அன்பர்களே! கூர்ந்து உன்னுங்கள்; நூல்களில் சொல்லப் பெற்றுள்ள சரியை கிரியை யோகம் முதலியன நிகழ்த்துதற்குக் காலதேச வர்த்தமானம் இடந்தருமா என்பதையும் உன்னுங்கள். சரியை கிரியைக்கு உரிய கோயில்களும் பிறவும், இந்நாளில் மக்கள் வாழ்வையே கெடுக்கக்கூடிய நிலையி லிருக்கின்றன. நேரிய முறையில் சரியை கிரியை முதலியன நிகழ்த்துதற்கு உரிய இடங்களிருப்பின், ஆங்கே அவைகளை

முறைப்படி நிகழ்த்தலாம். அத்தொண்டுகளால் தீயஎண்ணங்களைச் செகுத்தலுங் கூடும். தற்கால நாகரிகம் முதிர முதிரப் பழையமுறையில் சரியை கிரியை யோகங்கள் நிகழ்த்துதற்கு உரிய இடம் பெறல் அரிது. நன்மனம் பெறுதற்குப் பின்னை எவ்வழியில் தவம் புரிவது என்னும் ஐயம் பிறக்கலாம்.

இவ்வுலக வாழ்வை வெறுத்தல் அல்லது துறத்தல் என்னும் எண்ணத்தை அறவே தொலைத்தல் வேண்டும். உலகில் வாழ்ந்து, ஏதாயினும் ஒரு தொழில் செய்து, தவம் புரியலாம். எங்ஙனம்? மனம் ஒன்றை எண்ணுமலிராது. எண்ணங்களைத் தன்னலத்துக்குப் பயன்படுத்தாது, பிறர் நலத்துக்குப் பயன்படுத்தும் பயிற்சியைப் பெறுதல்வேண்டும். இதில் அருமை ஒன்றுமில்லை. ஒவ்வொருவரும் பாடுபட்டு உழைக்கிறார். அவ்வுழைப்பைத் தனக்கு என்று ஏன் ஒருவன் கருதல் வேண்டும்? அதை மனைவிக்கு - மக்களுக்கு - மற்றவர்கட்கு - என்று ஏன் நினைத்தல் கூடாது? மனைவி மக்கள் மற்றவர்களைத் தன்னலத்துக்கு என்று கருதி ஏன் உழைத்தல்வேண்டும்? எவ்விதத்திலோ உழைப்பு நிகழ்கிறது. அதைத் தன்னலத்துக்கென்று கருதாது மற்றவர்க்கென்று நினைந்தால் என்ன கேடு விளையும்? வேண்டற்பாலது ஒன்று. அஃதென்னை? எண்ணங்களைத் தன்னலத்துக்குப் பயன்படுத்தாமை யாகும். இவ்வொன்று, சரியை கிரியை யோகப் பயனை அளிக்கும்.

மனத்தில் எழும் எண்ணங்களைப் பிறர்க்கெனப் பயன்படுத்துதற்கு என்செய்வது? மனத்தின் இயல்பு சார்ந்ததன் வண்ணமாவது. மனம் அன்பெனுங் கடவுளைப் பற்றுமேல் அது கடவுளியல்பைப்பெறும். கடவுள் இயல்பு யாது? உயிர்கட்கு நலஞ்செய்வது. உயிர்களின் நலத்துக்கன்றோ இவ்வுலகம், உடல், ஞாயிறு முதலியன இயற்கையில் அமைந்திருக்கின்றன? கடவுள் இயற்கையை உடலாக்கொண்டு உயிர்கட்கு நலஞ்செய்கிறார். நலம்புரியும் ஆண்டவனை இடையறாது மனத்தில் உன்ன உன்ன, மனமும் பிறர்நலத்தை நாடி நிற்கும். இக் காரணத்தால் கடவுள் வழிபாடு மக்கட்கு இன்றியமையாததென்று ஆன்றோர் கூறிப் போந்தனர்.

கடவுள் நினைவு இல்லாத மனம் நோயுடையதாகும். அஃது உலகில் தன்னலம், பேர், புகழ் முதலியவற்றிற்கு இரையாகிப், பின்னே நல்வாழ்வு பெறாது, பெருந் துன்பத்துக்கு ஆளாகிக் கொண்டிருக்கும். இவ்வுண்மை உணர்ந்த பெரியோர்கள், ஆண்டவனை நோக்கி, 'ஐயனே ! நின் நினைவு இடையறாதிருத்தல் வேண்டும்' என்று முறையிட்டு முறையிட்டு அழுதார்கள்.

'நினைத்த னைப்பொழு தும்மறந் துய்வனோ'

'புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என்மனத்தே
வழுவா திருக்க வரந்தரல் வேண்டும்'—அப்பர்

'இடையறா அன்புனக்கு என்னூ டகத்தே நின்றுருகத்
தந்தருளெம் முடையானே'—மாணிக்கவாசகர்

எனவரூஉந் திருவாக்குகளை நோக்குக.

மனத்தில் படியுங் கடவுள் நினைவு கெடாது நிலைத்து நிற்பதற்குப் பல முறைகள் பெரியோர்களால் கோலப்பட்டன. அம்முறைகள் நாளடைவில் சிலரால் சிதைவுபெறலும் உண்டு. அவ்வேளைகளில் அறிஞர்கள் புதுமுறை கோலுதல் வேண்டும். முறைக்கும் முதலுக்கும் உள்ள வேற்றுமையுணராது, முதலையே கவிழ்க்கச் சிலர் முயல்வர். காலதேச வர்த்தமானத்துக்கு இயைந்த வழியில் முறைகளை அவ்வப்போது ஒழுங்குபடுத்தவேண்டுவது அருளாளர் கடன். முறைகளில் பெருங்கவலை செலுத்த வேண்டுவதில்லை. நமக்கு வேண்டுவது ஆண்டவன் அருள் நினைவு. அந்நினைவைக் கெடுக்கும் முறைகளை விடுத்தும், அந்நினைவை யூட்டும் முறைகளைப் பற்றியும் வாழ்வு நடாத்துவோமாக. கடவுள் நினைவை மறவாது காக்கவல்ல நல்லாரிணக்கம் பெறுவதில் நாட்டங்கொள்ளல் வேண்டும். இதுபற்றி ஆன்றோர்கள் உலகை நோக்கி எச்சரிக்கை செய்த மொழிகள் பலப்பல. அவைகளுள் இரண்டொன்று வருமாறு :—

'கண்ணுவா ரேனும்உன்னைக் கைகுவியா ராகினின்றால்
மண்ணுவார் நட்பை மதியேன் பராபரமே'—தாயுமானர்

'நல்லா ரிணக்கமும் நின்பூசை நேசமும் ஞானமுமே
அல்லாது வேறு நிலையுளதோ'

'அடியார் உறவும் அரன்பூசை நேசமும் அன்பும்அன்றிப்
படிமீதில் வேறு பயனுளதோ'—பட்டினத்தார்

'வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்த வைத்து
இணங்கத்தன் சீரடியார் கூட்டமும் வைத்து'
—மாணிக்கவாசகர்

மனமே! தீ நட்பையும் தீயார் சேர்க்கையையும் விரும்பற்க.

ஆண்டவன் திருவடியில் பதிந்த நெஞ்சம் பெற்று, மற்றவர்க்கென வாழ்வு நடாத்துவது சிறந்த தவநெறியாகும். தவநெறி நின்று வாழ்வோர்க்கு இறப்பேது? பிறப்பேது? மண்ணிற் பிறந்த ஒவ்வொருவரும் மீண்டும் பிறவாமை என்னும் இறவா நெறியைப் பெற முயலுதல்வேண்டும். நாம் பிறந்து வளர்வது எற்றுக்கு? இறந்துபடுதற்கா? இல்லை; இல்லை. இறவா நெறியைப் பெறுதற்கு நாம் பிறந்தோம். இவ்வரிய பிறப்பை இறப்புக்கா இரையாக்குவது? 'இஃதென்ன? உலகில் நல்லாரும் இறக்கிறார்; பொல்லாரும் இறக்கிறார்; இறவாமலிருப்பவர் ஒருவரையுங் காணோம்' என்று கருதுவோரு மிருப்பர்.

இறப்பு என்பதைப்பற்றிய ஐயத்தைக் களைந்துகொள்ளல் வேண்டும். இறப்பு என்பது இப்பருவுடல் மறைவு என்று மட்டும் அன்பர்கள் கொள்ளலாகாது. பருவுடல் மறைவு நல்லார் பொல்லார் எல்லார்க்கும் நிகழும். பருவுடல் நீத்ததும் நுண்ணுடல் யாண்டுச் செல்கிறது என்பதை ஒட்டியே இறப்பு என்பது நிற்கிறது. நுண்ணுடல் பருவுடலை நீத்ததும், இன்பத் துயிலுக்குச் செல்லின், அவ்வுடல் மீண்டும் பருவுடல் தாங்காது. இதுவே இறவா நிலை - அதாவது மீண்டும் பிறவாமை. பருவுடல் நீத்ததும் நுண்ணுடல் உடனேயோ அல்லது சின்னாள் சில உலகங்களில் தங்கியேயோ மீண்டும் பிறத்தல் இறத்தலாகும். சில நுண்ணுடல்கள் சின்னாள் சில நல்லுலகங்களில் தங்கிப் பின் கீழ் நோக்காது, இன்பத் துயிலில் செல்வதும் உண்டு.

மீண்டும் பிறவி எடுக்கும் வழியில் இவ்வுலகில் வாழ்வு நடாத்துவோர் மரணம் என்னும் பேய்க்கு இரையாவர். நுண்ணுடலைப்பற்றிய ஆராய்ச்சி, தத்துவவுலகில் இப்பொழுது காட்டுத்தீப்போல் பரவிவருகிறது. ஆராய்ச்சி அளவில் நிற்பதினும், நல்வாழ்வு நடாத்தித், தவநெறி புக முனைந்து விரைந்து நிற்பது அறிவுடைமை.

மனிதப்பிறவி பெறுதற்கரியது. அவ்வரிய பிறவியாலாய பயனைப் பெறாது விடுவது மதியீனம். 'இக்காய நீக்கி இனியொரு காயத்தில் - புக்குப் பிறவாத போம்வழி தேடுமின்' என்றார் திருமூலர். அவ்வழி தவநெறியென்பது.

(31-10-1928, 7, 14-11-1928)

## இவ்வுலகிலேயே

இவ்வுலகம் பொல்லாதது, துன்பமுடையது, பொய்மையது என்று பலர் பேசுவதைக் கேட்கிறோம். இப்பேச்சு வாழையடி வாழையாக வளர்ந்து வளர்ந்து, நூல்களிலும், வாழ்விலும் நுழைந்திருக்கிறது. இவ்வுலகம் நல்லது, இன்பமுடையது, மெய்ம்மையது என்று சொல்வோரும் உளர். அவர் சிறுபான்மையோர். உலகின் உண்மை நிலை என்னை? உலகின் உண்மை நிலையை எவ்வாறு கூறுவது? உலகம் என்பது அவரவர் அநுபவத்தையொட்டி நிற்பது.

'உலகம் பலவிதம்' என்பது பழமொழி. ஒவ்வொருவர் மனத்துக்கேற்றவாறு உலகம் புலனாகிறது. பொய்யனுக்கு உலகம் பொய்யாகத் தோன்றுகிறது; பொறுமையாளனுக்கு உலகம் பொறுமையாகத் தோன்றுகிறது; அன்பனுக்கு உலகம் அன்பாகத் தோன்றுகிறது. ஆதலால், உலக நிலையை அளந்துகூறல் அரிது என்னும் முடிவிற்கு வரலாமா எனில் அதுவுங் கூடாது. உலகில் அரியது ஒன்றுமில்லை. எல்லாம் முயற்சியைப் பொறுத்திருக்கின்றன.

உலகம் பலதிறமாகக் காட்சியளிப்பது உண்மை. அப் பலதிறம் பிறக்குமிடம் உலகமா மனமா என்பது ஆராயற்பாற்று. ஆராய்ந்தால்தான் மனம்என்பது பெறலாம். மனமாசுடையோர்க்கு உலகம் மாசுடையதாகவும், அம்மாசிலார்க்கு உலகம் மாசிலாததாகவும் தோன்றும். மனமாசறப்பெற்றோர்க்குப் புலனாகும் உலகமே உண்மையுலக மென்க.

மனத்தின்கண் மாசு பல வழியிலும் புகுந்து அடர்ந்து இடர்ப்படுத்துகிறது. அம் மாசைக் கழுவுவதற்கு இவ்வுலக வாழ்வு ஆண்டவனால் நல்கப்பட்டிருக்கிறது. அத்தகை உலக வாழ்வில் நுழைந்து மாசகற்ற முயலல்வேண்டும். உலக வாழ்வில் நுழையாது, உலகத்தைப்பற்றி ஒருவித முடிவிற்கு வரல் அறிவுடைமை யாகாது. எடுத்ததும், 'உலகம் பொய், துன்பம், பொல்லாதது' என்றுகொண்டு, வெறுப்புடன் வாழ்வது இன்பத்தைத் துறந்து நிற்பதாகும். இன்பத்தைத் துறக்க ஒருப்படுவதினும், இறக்க முயல்வது நலந் தருவதாகும். ஆதலால், 'உலகம் அத்தகைத்து இத்தகைத்து' என்று நினையாது, உலகவாழ்வை மேற்கொள்ளல் வேண்டும். மக்கட்குத் துன்பத்தை யூட்டவா ஆண்டவன் இவ்வுலகைப் படைத்தான்? அன்பு வடிவான ஆண்டவன் அத்தீவினை ஆற்றான் ஆற்றான். ஆண்டவன் தொழிலெலாம் அன்புடையனவாம். அவைகளினிடத்துத் துன்பம் அரும்பாது.

மனத்தின்கண் படியும் மாசுகள் பலதிறத்தன. அவைகளையெல்லாம் ஈண்டு விரிக்கிற்பெருகும். முதலாவது மனிதனிடத்தில் ஒரு பொருள்பற்றி எழும் பற்றுக் காரணமாக, அவா - பொறாமை - சினம் - பகைமை முதலியன உண்டாகின்றன. இவைகள் வகுப்பு, மதம், மொழி, நாடு முதலியவைகள் வாயிலாக வளர்கின்றன. பொறாமை முதலியன சில போழ்து தன்னந் தனியரிடத்திலும், சிலபோழ்து வகுப்பு முதலியவற்றைப்பற்றியும் எழுகின்றன. நிறம் மொழி முதலியன இயற்கைக் கேற்றவாறு ஆண்டாண்டுப் பரிணமிக்கின்றன. அவைகளை மனத்தில் மாசைப் பெருக்குதற்குப் பயன்படுத்தல் அறியாமை. ஆகவே, உலகியல் நடைமுறைக்கு ஏற்பட்டுள்ள சிலவற்றைத் தங்களுக்குரிய உடைமைக

ளாக்கிக்கொள்ளும்போதும், அவைகளால் விளையும் பகைமை முதலியவற்ருல் பீடிக்கப்பெற்று அயர்வுறும்போதும் உலகம் துன்பமாகவும், பொய்யாகவும், வெறுப்பாகவும் தோன்றும். அத் தோற்றத்துக்குக் காரணர் யாவர்? மனிதரல்லரோ? இதற்கு உலகம் என் செய்யும்?

இவ்வுலக உண்மையைக் காணவேண்டுமானுல், மனிதன் எதனிடத்தும் தனித்த பற்றுக்கொள்ளாது வாழ முயலல் வேண்டும். தனித்த பற்றை அறுப்பது எளிதோ என்று சிலர் கருதலாம். மிக எளிது என்பது எமது கருத்து.

மக்களுக்குள்ள பசி பிணி மூப்பு சாக்காடு போன்ற பொதுமைத் தன்மைகளைக் கூர்ந்து ஓர ஓரச் சகோதர தர்மம் இயல்பாகத் தோன்றும். மக்களிடைக் காணப்படும் சில வேறுபாடுகள், இயற்கையின் வேறுபாட்டானும், உலகியல் நடைமுறை குறித்தும் ஏற்பட்டன என்றும், அவைகளைக் காரணமாகக் கொண்டு பிணக்குறல் சகோதர தர்மத்தை அழிப்பதென்றும் கொள்ளப்படல் வேண்டும். இப்பயிற்சி முதிர முதிர உலகில் துன்பக்காட்சியும் அருகிப்போகும்.

உலகில் மனிதன் பிறந்து வளர்ந்து அறிவுபெற்றதும் படிப்படியாகத் தான் இம்மொழியான், இம்மதத்தான், இந்நாட்டான் என்று தன்னைக் கருதவோனுகிருன் ; மொழி நாடு முதலியன ஒருவனுக்கு இயல்பாகக் கடவுளால் கொடுக்கப்பட்டன. இவைகளைப் பெற்ற இவன் பிறநாடு பிறமொழி முதலியவற்றின்மீது ஏன் பொருமை கோடல் வேண்டும்? சில இடங்களில் நாட்டுக்குள் பிணக்கு நிகழ் தலும் உண்டு. உதாரணமாக நமது நாட்டை எடுத்துக் கொள்வோம். நமது நாட்டவருக்குள் ஹிந்து முஸ்லிம் பிணக்கு, ஹிந்துக்களுக்குள் சாதி சமயப் பூசல் முதலியன தோன்றி இருக்கின்றன. இப்பிணக்கும் பூசலும் உலகை இன்பமயமாக எவ்வாறு காட்டும்? ஆதலால், மக்கள் இப் பிணக்குக்கும் பூசலுக்கும் இரையாதலாகாது.

ஹிந்துக்களைப்பற்றிச் சில உண்மைகள் கூற விரும்பு கிரேம். ஹிந்துக்கள் சமய உண்மையை நோக்குழி அது

பரந்து விளங்குவதாய், கட்டுப்பாட்டுக் கடங்காததாயுள்ள ஒருபெருங் கடல்போன்றது. அச்சமய வழிப்படி ஹிந்துக்கள் உலகை நோக்கினுல், அஃது இன்பமயமாகவே தோன்றும். அச்சமயவழி நின்ற பெரியோர்களும், 'எந்நாளும் இன்பமே துன்பமில்லை' என்று கூறிப்போந்தார்கள். ஹிந்து வேத வேதாந்த நூல்களை ஆராய்ந்தால், அவைகளில் 'சாந்தம் சிவம் அத்வைதம்' என்னும் முடிந்த நிலை மிளிர்தல் காண்கிறோம். அவ்வுயரிய நிலை அடைதற்கன்றோ மக்கள் இவ்வுலகில் படைக்கப்படுகிறார்கள்? மக்கள் சாதி சமயம் பாஷை முதலிய வற்றால் எரிக்கப்பட்டால், அவர்கள் சாந்தநிலை எவ்வாறு பெறுதல் கூடும்? வாயால், 'சாந்தம் சிவம் அத்வைதம்' என்று பேசிப், பிறப்பால் சாதி வேற்றுமையையும் பிற வேற் றுமையையும் கருதிப் போர் விளைத்து வருவதன் நோக்கம் விளங்கவில்லை. பெண்மக்களிடத்தும் தீண்டாதாரிடத்தும் சிவத்தைக்காண மனம்பொருத ஒருவன் யாண்டுஞ் சிவத்தை எங்ஙனங் காண வல்லான்? மற்றவரை வேருகவும் தாழ்வாக வும் நினைப்பது அத்வைத தர்மத்துக்கு மாறுபடுவதாகும். யாண்டுங் கடவுள் கலப்பைக் கண்டு ஒன்றுவதன்றோ அத் வைத நிலை? அந்நிலையை ஒவ்வொருவரும் பெறல்வேண்டுமா? வேண்டாமா? பிறப்பை யொட்டிய வேறுபாடுகள் முதலியன அந்நிலையை எய்தாவாறு தகைந்தே நிற்கும். மரணம் வரை, வேறுபாடுகளில் வீழ்ந்து, உலகைத் துன்பமாகக் கண்டு மறைகிறவன், ஏனோ இவ்வுலகில் பிறந்தான்? பிறப்பது எற்றுக்கு? மனமாசகற்றி உயரிய அத்வைத நிலை எய்தற் கன்றோ? உலகில் வேறுபாடுகளிலேயே கருத்து இருத்தி வாழ்கிறவன் எப்பிறப்பில் பிறவிப்பே றெய்துவன்?

'சாந்தம் சிவம் அத்வைதம்' என்னும் பெருநிலையை இவ்வுலகிலேயே அடையலாம். எக்காரணம் பற்றியோ உல கியல் நடைமுறைக்கு ஏற்பட்ட வேறுபாடுகளைச் சமயக் கோட்பாடுகள் என்று கொள்ளாமலும், அவைகளில் தோயா மலும், எல்லாம் இறைவன் வடிவம் என்னும் எண்ணம் வளரத்தக்க முறைகளில் படிந்து, அவைகட்கேற்ற வாழ்வு நடாத்தல் வேண்டும். ஆண்டவன் உலகிற்கு வேருகவும்

உயிருக்கு வேருகவும் நிற்கவில்லை என்னும் உறுதியில் நிலைத்து நின்று, எவ்வுயிரிடத்தும் பொருமை பகைமை எழாத வழியில் வாழ்வை ஒழுங்குபடுத்திக்கொள்ளல் வேண்டும்; அந் நிலையைக் கெடுக்கத்தக்க முறைகளினின்றும் விலகல்வேண் டும். இவ்வாறு வாழ்ந்துவரின், இவ்வுலகிலேயே பேரின்ப நிலையைப் பெறலாம். இவ்வாறு எவ்வுயிரிடத்தும் அன்பு கொள்வோர் உள்ளத்தில் மாசு படியுங்கொல்! படியாது. மாசிலா மனத்துக்கு உலகந் துன்பமாகத் தோன்ருதென்க.

இப் பெருவழியை அறிஞர்கள் அறிவுறுத்தியும், மனிதர்கள் நன்னெறி பற்றி ஒழுகாதொழிவது பெருவியப்பே. கரும்பிருக்க வேம்பைத் தின்போர் இவரல்லரோ? மனமாசகற்றி, உலக இன்பத்தை நுகர விரும்பாது, மாசுச் சேற்றில் நெளிய மனிதன் விரும்புவதென்னை?

'சாந்தம் சிவம் அத்வைதம்' என்னுந் திருமொழி பிறந்த நமது இந்தியா தேசம், சாதிவேற்றுமை சமயவேற்றுமை பாஷைவேற்றுமைகட்கு இரையாகி, இன்பநிலையை இழந்து நிற்கிறது. எக்காரணம் பற்றியோ தோன்றிய சாதி முதலிய வேற்றுமைகளைத் தொலைக்கவே வேதாந்தநெறி கருவியாக இருந்துவந்தது. இப்பொழுது அந்நெறி நிற்க ஒருப்படுவோரும் இல்லை. இப்பொழுது இந்தியமக்கள் மனம், அரசியலில் - தேர்தலில் - வீழ்ந்து கிடக்கிறது. இவ்வரசியல் நெறியும் தேர்தலும் வகுப்புரிமை என்னும் இருட்குழியில் மக்களை வீழ்த்தித் துன்புறுத்துகின்றன. ஆகவே, இந்தியாவில் துன்பந்தரத்தக்க சாதி முதலியன மீண்டும் நிலைபெறலாயின. சாதி வேற்றுமை கருதாதாரும் இந்நாளில் தேர்தலில் வெற்றி பெறவேண்டிச் சாதிப்பிணக்கை எழுப்புகிருர். சாதி வேற்றுமை வேரூன்றி வருகிறது. எல்லாத் துறைகளிலும் சாதி வேற்றுமை பாராட்டப்படுகிறது. இப்பாகுபாடு இன்ப நிலையை என்றேனும் கூட்டும்? ஒரு சாதியாரை மற்றொரு சாதியார் சீறி நோக்கும்போது, அவர்பால் கடவுளில்லை என்று சீறுவோர் கருதுகிருர் போலும்!

உலகிலுள்ள மற்றத் தேசங்களும் ஒவ்வொருவிதக் குற்றத்துக்கு உள்ளாகி வருகின்றன. வாணிபப் பொருமை

மேல்நாட்டை எரிக்கிறது. மேல்நாட்டு வாணிபமுறைக்குத் துணைபோகும் நெறியில் அரசுகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அவ்வரசுகளின் போர் இன்னும் ஒழிந்தபாடில்லை. இதுபோழ்து ஆண்டுத்தோன்றியுள்ள தொழிலாளர் இயக்கத்தானும், சர்வதேச சங்கத்தானும் அப்போர் ஒழியுங் குறிகள் புலனாகின்றன.

நமது தேசத்தில் தோன்றியுள்ள வகுப்புப் பூசல் என்றே ஒழியும்? இப்பொழுது இந்தியாவில் வகுப்புப் பூசல் கனன்று மூண்டிருப்பதுபோல என்றும் மூண்டதில்லை. அதைத் தணிக்க முயலல்வேண்டும்.

'சாந்தம் சிவம் அத்வைதம்' என்னும் ஒரு நிலையை அடைய ஒருவர் இருவர் முயல்வதால் பயனில்லை. தேசத்தாரை அவ்வழியில் நிறுத்த உழைப்பது நலம். இந்திய தேசத்தில் மனிதர்கள் நிகழ்த்தும் கொடுமைகளுக்கு அஞ்சிச் சிலர் காடுகள் போந்து தனித்து வாழ்ந்து இன்ப நுகர்வது வழக்கம். சமரச ஞானம் விளங்கப்பெற்றவர்கள்கூட ஒதுங்கியே நிற்கிறார்கள்; சிலர் பாடல்கள் மட்டும் பாடிச் செல்கிறார். இவர்களைக் காணும் மற்றவர்கள், 'சமரசநிலை என்பது துறவறத்தார்க்கு' என்று கருதிவிடுகிறார்கள்; கருதிப், 'பேதம்' என்னும் இருளினின்றும் வெளிவர முயல்கிறார்களில்லை. இனிச் சாந்தமெனும் சமரசஞானங் கைவரப்பெறுவோர், நாட்டிலிருந்தே தாம் பெற்ற இன்பத்தை மற்றவரும் பெறத் தொண்டு செய்தல்வேண்டும். பேதவாதிகள் சில காலம் இடர்செய்வார்கள். அவ்விடரைப் பொருட்படுத்தாது பொறுத்துச் சமரசத்தைப் போதித்துவரின் பின்னை நலன் விளையும்.

இன்பநிலை என்பது அத்வைத நிலையிலிருப்பது. அந்நிலை கூட்ட வல்லது இவ்வுலக வாழ்வேயாகும். அத்தகை உலகில் பேதவுணர்வை வளர்க்கவல்ல துறைகளில் நண்ணி நிற்பது அறியாமை. பேதவுணர்வை ஒழித்துப் பார்ப்பின், எல்லாம் சாந்தமயமாக - சிவமயமாக - அத்வைதமாகப் புலனாகும். அதை இவ்வுலகிலேயே பெறலாம். (16-4-1926)

# எந்நாளும் இன்பமே

'எந்நாளும் இன்பமே துன்பமில்லை' என்று அப்பர் உலகிற்கு அறிவுறுத்தியிருக்கிறார். அவர், இத் திருமொழியை வானுலகினின்றும் வழங்கினாரில்லை; கடவுள் வடிவு தாங்கிக் கழறினாரில்லை; இவ்வுலகிலிருந்தே, மானுடச் சட்டை தாங்கியே 'எந்நாளும் இன்பமே துன்பமில்லை' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

அப்பர் அருளிய மெய்யுரைக்கு முற்றும் மாறாக உலகம் உழன்றுகொண்டிருத்தல் கண்கூடு. 'அப்பா உலகமா! துன்பம்! துன்பம்!' என்று கூறுவோர் உலகில் பலராய் இருக்கிறார். 'இவ்வுலக வாழ்வு, என்று தொலையப் போகிறது?' என்று தவங்கிடப்போரும் உளர்.

இவ்வுலகம் துன்பமா இன்பமா என்பது உன்னற்பாற்று. அப்பர் சுவாமிகளுக்கு இன்பமாகத் தோன்றிய உலகம், மற்றவர்க்குத் துன்பமாகத் தோன்றுவானேன்? உலகிடைத் துன்பம் இருப்பதாகத் தோன்றவில்லை. துன்ப உளத்தாருக்கு உலகந் துன்பமாகத் தோன்றுதல் இயல்பு.

பொய், பொறாமை, பேராசை முதலிய பேய்கள் உலவும் உள்ளம் துன்ப மயமாயிருக்கும். இப்பேய்களை ஓட்டினால் உலகம் இன்பமாகவே தோன்றும். இப்பேய்களை எப்படி ஓட்டுவது? பலர் பலவழி கூறுப. 'எந்நாளும் இன்பமே' என்று அருளிய அப்பர் கொண்ட வழி யாது? 'அப்பர் ஆண்டவன் திருவடியைக் கொழுகொம்பாகப் பற்றி நின்றார். அதனால் அவர் துன்பமில்லாப் பேறுபெற்றார்.'

ஆண்டவன் திருவடியை எங்ஙனம் பற்றுவது? சொல்லாலா? கோலத்தாலா? அன்று; அன்று. பொய் பொறாமை முதலிய பேய்களை ஓட்ட அப்பர் கொண்ட கருவிகளென்னை?

'மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாங் களையைவாங்கிப் பொறையெனும் நீரைப்பாய்ச்சித்

தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வேலி யிட்டுச்
செம்மையுள் நிற்ப ராகிற் சிவகதி விளையு மன்றே '

என்று அவர் அருளிய திருப்பாடலை உற்று நோக்குக. நோக்கி அக்கருத்துப்படி வாழ்வு நடாத்தினால், ஆண்டவன் திருவடி கொழுகொம்பாகித் துணைபுரியும்.

ஆண்டவன் திருவடி, பொய் பொறாமை முதலிய தீமைகள் அகன்ற இடத்தில் ஒளிர்வது. அத்திருவடி பதியப் பெற்ற அன்பர்கட்குரிய அடையாளங்கள் பலவுள. அவை களுள் தலையாயது அஞ்சாமை. அச்சம் கடவுளுண்மை யுணர்வை மறைப்பது. அச்சமுள்ள ஒருவன் கடவுள் அன்ப னாதல் அரிது.

கொலைக்கருவி தாங்கிப் போர்புரிவோர் அஞ்சாநெஞ்சின ரல்லர். அவர் அச்ச மேலீட்டானல்லவோ கருவி தாங்கி நிற்கிறார்? பொய் பொறாமையுள்ளமட்டும் அச்சம் நீங்காது. பொய் பொறாமை முதலியன, ஒருவர் வாயில் திட்டுக்களாக வும், கையில் கருவிகளாகவும் உருக்கொள்கின்றன. அச்ச மில்லா ஒருவன் பிறர் திட்டலையுந் தாங்குவன்; கருவிப் பாய்ச்சலையுந் தாங்குவன். எனவே, பொய் பொறாமை முதலியவற்றைக் கடந்து நிற்குங் கடவுள் திருவடியினிடத் துப் பற்று வளர வளர அச்சம் தேய்ந்துபோகும்.

ஆகவே, பொய் பொறாமையினின்றெழும் அச்சம் நீங்கக், கடவுள் திருவடியைப் பற்றுக்கோடாகப் பற்றல் வேண்டும். அவ்வுறுதி நிலவிய உளமுடையார்க்கு இவ்வுலகம் இன்பமாகத் தோன்றும். அப்பர், அவ்வுறுதியில் திளைத்து நின்றவராதலால், அவர் 'எந்நாளும் இன்பமே' என்று அருளினார். அப்பர் சுவாமிகள் கடவுளிடத்துத் தாங் கொண்ட உறுதிநிலையைப் பலவாறு பாடியிருக்கிறார்.

'புத்திவட் டத்திடைப் புக்குநின் றானையும் பொய்யென்பனோ'

'பனைக்கை மும்மத வேழ முரித்தவன்
நினைப்ப வர்மனங் கோயிலாக் கொண்டவன்

அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனைத்
தினைத்த னைப்பொழு தும்மறந் துய்வனே'

எனவரூஉந் திருவாக்குகளை நோக்குக.

ஆண்டவன் திருவருளால் அஞ்சாநெஞ்சம் பெற்றமையான் அப்பர் சுவாமிகள்,

'நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே எந்நாளுந் துன்ப மில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
சங்கரன்நற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே'

என்று வீறுகொண்டு கூறும் பேறு பெற்றார். அப்பேற்றை மக்களாகப்பிறந்த ஒவ்வொருவரும் பெற முயலல்வேண்டும்.

'நாமார்க்குங் குடியல்லா' ஒரு பெருநிலை எய்தினாலன்றி, 'எந்நாளும் இன்பம்' நுகரும் பேற்றை அடைதல் இயலாது. இந்திய மக்களாகிய நாம், 'நாமார்க்குங் குடியல்லோம்' என்று கூறும் நிலையிலிருக்கின்றோமா? நேயர்களே! சிந்தியுங்கள். புறஉலக உரிமையும் நமக்கில்லையே! அவ்வுரிமையையும் இழந்துள்ள நாம் யாண்டு நிற்கின்றோம்? அப்பர் சுவாமிகள் வீர உரை யாண்டு நிற்கிறது? எந்நாளில் நாம் 'எந்நாளும் இன்பமே துன்பமில்லை' என்று முழங்கிப் பீடு கொண்டு நடக்கப்போகின்றோம்? 'எந்நாளில்' என்று நடுக்குற்றுக் கிடத்தல் வேண்டாம். நாமும் மனிதர்களே. அப்பர் சுவாமிகளைப்போல ஆண்டவனிடத்து உறுதிகொண்டு இன்று எழுவமேல், அவனருட்டுணை பெற்று 'நாமார்க்குங் குடியல்லா'ப் பெருநிலையைப் பெறலாம்.

இப்பொழுது புறஉலக உரிமைக்குக் கேடுசூழ்ந்திருப்பன பல. அவையிற்றுள் சிறப்பாக இரண்டைக்குறிக்கலாம். ஒன்று நமது நாட்டுக் கல்வியாளர்க்குப் பதவிக்கணுள்ள வேட்கை;

மற்ருென்று நாட்டின் விடுதலைப்போர் முழக்க முன்னணியில் நிற்போர்க்குள் எழும் பொருமை. இவ்விரு பிணிகள் விடுதலை நெறிக்குப் பெருந்தடையாக நிற்கின்றன. அடிமைத் துன்பக் கடலைக் கடக்கும்போதெல்லாம் இவ்வேட்கைப் பாறைகள் தகைந்து நமது முயற்சியென்னுங் கப்பலைக் குலைத்துவிடுகின்றன. இதற்கு என்செய்வது? இதற்கும் ஆண்டவனை நோக்கி அழுதல்வேண்டும். வேறென்செய்வது?

'மனமெனுந் தோணி பற்றி மதியெனுங் கோலை யூன்றிச்
சினமெனுஞ் சரக்கை யேற்றிச் செறிகட லோடும் போது
மதனெனும் பாறை தாக்கி மறியும்போ தறிய வொண்ணு
துனையுனும் உணர்வை நல்காய் ஒற்றியூ ருடைய கோவே'

என வரூஉம் அப்பர் அருண்மொழியைக் காண்க.

இப்பொழுது நமது நாட்டில் கடவுள் உண்மையில் உறுதி குன்றிவருவது வெள்ளிடைமலை. அவ்வுறுதி குன்றுமிடத்தில் பொய் பொருமை முதலியன நிலவுதல் இயல்பு. பொய் பொருமை உள்ள இடத்தில் அச்சப்பேய் குடிகொள்ளலும் இயல்பு. நமது நாட்டில் எங்கணும் அச்சம்; எங்கணும் நடுக்கம். இச்சிறுமைகளை ஒழித்து, 'எந்நாளும் இன்பமே துன்பமில்லை' என்னும் ஒரு நிலை பெறுதற்குக் கடவுளிடத்து உறுதி வேண்டும். அவ்வுறுதி பெற்ருல் ஆற்றக்கூடாத தென்னை?

கடவுளிடத்து உறுதிகொண்டால் உயிர்களிடத்து அன்பு ஏற்படும். கடவுள், உயிர்கள் உள்ளத்துக் கோயில் கொண்டிருப்பவர். உயிர்கள் வழிபாடு கடவுள் வழிபாடாகும். ஆதலால் கடவுளிடத்து உறுதிபெறும் முறையில் வாழ்வு நடைபெறல்வேண்டும்.

'துறப்பேனல்லேன் துன்பம் துறவாது நின்னுருவம்
மறப்பேனல்லேன் என்றும் மறவாது யான்உலகில்
பிறப்பேனுக எண்ணேன் பிறவாமை பெற்றதுநின்
திருத்தேனு தன்மையால் திருவிண் ணகரானே'

—திருமங்கையாழ்வார்

'நாளாய போகாமே நஞ்சணியுங் கண்டனுக்கே
ஆளாய அன்புசெய்வோம் மடநெஞ்சே அரன்நாமம்
கேளாய்நங் கிளைகிளைக்குங் கேடுபடாத் திறமருளிக்
கோளாய நீக்குமவன் கோளிலியெம் பெருமானே'

—திருஞானசம்பந்தர்

'யானே பொய்என் நெஞ்சும் பொய்என் அன்பும்பொய்
ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே
தேனே அமுதே கரும்பின் தெளிவே தித்திக்கும்
மானே அருளாய் அடியேன் உனைவந் துறுமாறே'

—மாணிக்கவாசகர்

'ஈசனுக் கன்பில்லார் அடியவர்க் கன்பில்லார்
எவ்வுயிர்க்கும் அன்பில்லார் தமக்கும் அன்பில்லார்'

— அருணந்தி சிவம்

'நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம்அன்பே
மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய் பராபரமே'

'கெட்டவழி ஆணவப்பேய் கீழாக மேலான
சிட்டருனைப்பூசை செய்வார் பராபரமே'

'அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே'

'எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே'

—தாயுமான சுவாமிகள்

(13–4–1927)

## எல்லாம் ஆண்டவன் செயல்

'எல்லாம் ஆண்டவன் செயல்' என்னும் வாக்கியத்தை உலகத்திலுள்ள பலர் - ஏறக்குறைய எல்லாரும் - கூறுவது வழக்கம். இவ்வாக்கியத்தை முயற்சியுடையாரும் மொழிகிறார்; சோம்பேறிகளுஞ் சொல்லுகிறார். 'எல்லாம் ஆண்டவன் செயல்' என்று கூறிப் பகலில் திண்ணைத்தூங்கி, இரவில் கொள்ளையடிப்போரும் உளர்; 'எல்லாம் ஆண்டவன் செயல்' என்று வாயால்சொல்லி, 'நாளைக்கு என்செய்வோம்' என்று பயந்து உழைப்போரும் உளர். துன்பம் வந்து இடர்ப்படுத்தும்போது 'எல்லாம் ஆண்டவன் செயல்' என்றும், இன்பம் வந்து இடர் களையும்போது 'எல்லாம் நம்செயல்' என்றும் வாழ்வோரும் உளர். 'எல்லாம் ஆண்டவன் செயல்' என்னும் முதுமொழி, பலதிற மக்கள் வாயில் பலதிறப் பொருள் குறிக்கொண்டு உழன்று வருகிறது.

'எல்லாம் ஆண்டவன் செயல்' என்னும் வேதாந்த மொழியே நமது தேசத்தை அடிமைக் குழியில் வீழ்த்தி விட்டது என்று சிலர் கருதி, 'எல்லாம் மனிதன் செயல்' என்ற கொள்கையைத் தேசத்தில் பரப்ப முயல்கின்றனர். 'எல்லாம் ஆண்டவன் செயல்' என்ற முதுமொழியின் உண்மை கண்டோர் அதை இழித்துக் கூறார். வேதவேதாந்த ஆராய்ச்சி குன்றியுள்ள இந்நாளில் 'எல்லாம் ஆண்டவன் செயல்' என்னுந் திருமொழியின் நுட்பம் புலனாவது அருமை. இளமை தொட்டுத் தமது அறிவு உழைப்பை அடிமைக் கல்வியில் - அடிமைத் தொழிலில் - செலவழிப்போர்க்கு, ஆண்டவன் செயலும் அதன் நுட்பமும் புலனாகுமோ? சொப்பனத்திலும், சட்டநூல், நீதிபதி வடிவம், நீதிஸ்தலக் கட்டிட அமைப்பு முதலியன தோன்றப் பெறுவோர் 'எல்லாம் ஆண்டவன் செயல்' என்ற ஞான உணர்வை எளிதில் பெறுவரோ? நமது வாழ்வின் நோக்கமே மாறுபட்டுள்ள இவ்வேளையில் 'எல்லாம் ஆண்டவன் செயல்'

என்னுந் திருவாக்குச் சோம்பேறிகளிடத்தில் - திண்ணைத் தூங்கிகளிடத்தில் - கள்ளர்களிடத்தில் - உலவாது வேறெவரிடத்தில் உலவும்?

நமது வாழ்வின் நோக்கம் 'எல்லாம் ஆண்டவன்செயல்' என்ற உண்மையை உணர்ந்து இன்பந் துய்ப்பதாகும். பிரமசரிய வாழ்வு, கிருகஸ்த வாழ்வு, வானப்பிரஸ்த வாழ்வு, சந்நியாச வாழ்வு ஆகிய நான்கு வாழ்வும் 'எல்லாம் ஆண்டவன் செயல்' என்ற வேதாந்த உண்மையைப் படிப்படியாக உணரும் பொருட்டு வகுக்கப்பட்டன. 'எல்லாம் ஆண்டவன் செயல்' என்பதை அறிவுறுத்துவது நமது நாட்டுக் கல்வி; அதை வளர்ப்பது நமது நாட்டுத் தொழில்முறை. நம்மவர்கள் குறிக்கோளும், அவ்வுண்மை காண்பதாகும். நம் முன்னோர்கள் இத்தகை வாழ்வை நடாத்தி இன்ப நுகர்ந்தார்கள்.

நம் முன்னோர்கள், கடவுள் இருப்பு யாண்டும் நீக்கமற நிறைந்திருப்பதை உணர்ந்து, 'எல்லாம் கடவுள் மயம்' - 'எல்லாம் அவன் செயல்' என்ற உண்மையில் திளைத்திருந்தார்கள். நால்வர், ஆழ்வார், அவர் முன்னிருந்தார், பின் வந்தார் எல்லாரும் பாடிய பாடல்களை உற்று நோக்கினால், 'எல்லாம் ஆண்டவன் செய'லாக இருப்பதைக் காணலாம். 'எல்லாம் ஆண்டவன் செயல்' என்னும் உண்மை கண்டோர் நமது தேசத்தில் பண்டை நாளில் பெருகியிருந்தமையால் நமது நாட்டில் அமைதி நிலவியிருந்தது. இடைக்கால இந்தியாவையும் இக்கால இந்தியாவையும்பற்றி நாம் ஈண்டுப் பேசவில்லை. பண்டைக்காலக் கடவுள் இந்தியாவை — 'உண்ணும் சோறும் பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம், கண்ணன் எம் பெருமானென்றென்றே கண்கள் நீர் மல்கி'க்கொண்டிருந்த இந்தியாவை — நேயர்களுக்கு நினைவூட்டுகிறோம். அத்தகைய இந்தியா இப்பொழுது உலகாயத தேசமாக மாறிவருவதைக் கண்ணாரக் காணுங் காலமும் வந்ததே!

'எல்லாம் ஆண்டவன் செயல்' என்பது, சிறந்த ஆத்திக தருமத்துக்கு அடிப்படையாக மிளிர்வது. வாயால் ஆத்திகம் பேசி, 'நாளைக்கு நாமென்ன செய்வோம்' என்று அச்ச

முறுவோர் ஆண்டவன் உண்மையில் ஐயுறுவோரே யாவர். 'நாளைக்கு என்று கவலையுறாதே' என்று கிறிஸ்துநாதர் அருளியிருக்கிறார். 'சென்றது கருதார் நாளை சேர்வது நினையார்' என்றார் கைவல்லியக்காரரும். 'இருக்குமிடந் தேடி என்பசிக்கே அன்னம் - உருக்கமுடன் கொண்டு வந்தால் உண்பேன்' என்று பட்டினத்தடிகளுந் திருவாய் மலர்ந்தருளி யிருக்கிறார். ஆண்டவன் உண்மையில் உறுதி கொண்ட மார்க்கண்டர், பிரகலாதன் முதலியோர் ஏமாற்ற மடைந்தனரோ? 'எல்லாம் ஆண்டவன் செயல்' என்ற வாழ்வே இன்ப வாழ்வு.

உள்ளத்துள்ளே உள்ள அகங்காரக் கொடுங்கிழங்கைக் கல்லி எறியாது, அதன்வழி உழல்வோர், 'எல்லாம் ஆண்டவன் செயல்' என்று கூறுவது விகடமே யாகும். அன்னார் 'எல்லாம் ஆணவத்தின் செயல்' என்று கூறுவது சிறப்புடைத்தாம்! ஆணவமேலீட்டால் செய்யப்படுவது ஆண்டவன் செயலாகாது. ஆணவமற்றோர் செய்யும் செயல் ஆண்டவன் செயலாகும். 'எல்லாம் ஆண்டவன் செயல்' என்று பேசும் உரிமை, அறியாமை நீங்கப்பெற்றவர்க்கே உண்டு. ஆண்டவன் செயலை மறைக்கும் அறியாமையை ஒழிக்க நம் முன்னோர்கள், பல முறைகளைக் குறிப்பிட்டார்கள். அம்முறைகள், தற்காலக் கல்வியாலும், தற்காலத் தொழின்முறையாலும், தற்கால நாகரிகத்தாலும் பட்டுவருகின்றன. அதனால் இந்திய சுயராஜ்ஜியநெறி அழிந்தது. இந்திய சுயராஜ்ஜியம் என்பது அஞ்ஞான நீக்கமாகும். எல்லாப் பொருளையும், எல்லா உயிரையும் கடவுள் மயமாகக் காண்பது சுயராஜ்ஜியமாகும். இப்பொருளின்படி எந்தத் தேசமும் இதுகாலை சுயராஜ்ஜியம் பெற்றிருப்பதாகத் தெரியவில்லை. இவ்வுண்மையை வங்காளத் தலைவராகிய சித்தரஞ்சன தாஸர் சிறையிலிருந்து வந்த நாள்முதல் முழங்கிக்கொண்டிருக்கிறார். 'எல்லாம் ஆண்டவன் செயல்' என்ற உண்மையைக் காண, ஒவ்வொருவரும் தம்பாலுள்ள அஞ்ஞானத்தைப்போக்கும் முறைகளைக் கடைப்பிடித்தொழுகுவதில் அறிவைச் செலுத்துவாராயின், உலகத்தில் இராஜாங்கங்களே வேண்டுவதில்லை. ஆதலால்,

மக்கள் என்றும் போரில் புத்தி செலுத்தும் இராஜாங்கங்களை ஒழுங்குபடுத்த முயல்வதைப் பார்க்கிலும், அஞ்ஞானத்தைக் களையவல்ல ஒரு ஞான இராஜாங்கத்தை அமைத்துக் கொள்ள முயல்வது நலம்.

உலக முழுவதும் ஞான இராஜாங்கத்தை அமைத்து, அதன் வாயிலாக 'எல்லாம் ஆண்டவன் செயல்' என்று உண்மை உணர்த்துங் கல்வி, தொழில், வாழ்வு முதலியவற்றைப் பண்படுத்த மகாத்மாகாந்தி தோன்றியிருக்கிறார். இப்பொழுது அவர் ஞான உலகத்துக்கு - அஹிம்சை உலகத்துக்கு - சுயராஜ்ஜியத்துக்கு - நாயகராக விளங்குகிறார். அவர்க்கு அமைச்சராக சித்தரஞ்சின தாஸர் புறப்பட்டிருக்கிறார். அவர் சொற்படி இந்தியா நடந்தால் அவர் வாழும் சுயராஜ்ஜியத்தில் வாழலாம்.

'எல்லாம் ஆண்டவன் செயல்' என்ற தருமத்தால் கொலை களவு கள் காமம் பொய் என்னும் பஞ்சமா பாதகங்கள் ஒழியும் என்பதை விரித்துரைக்கவேண்டுவதில்லை. ஆயுத பயம், மாற்றார்பயம், அடக்குமுறைப்பயம் முதலிய பயங்கள் ஒழிய 'எல்லாம் ஆண்டவன் செயல்' என்ற தருமத்தை வளர்க்கும் சுயராஜ்ஜியம் பெற முயலவேண்டுவது நமது கடமையன்றோ? எல்லாவற்றையும் ஆண்டவனில் கண்ட பாரதப் புதல்வர் வழி வழி வந்த இந்தியர்களே! எல்லாவற்றிலும் ஆண்டவனைக் காண எழுங்கள்; 'எல்லாம் ஆண்டவன் செயல்' என்று உங்கள் தற்போதச் செயலை ஒடுக்க எழுங்கள். தற்போதத்தால் உலகம் பட்டது போதும்! போதும்! அதை ஒடுக்க எழுங்கள். கீழ்வரும் உங்கள் முன்னோர் மொழிகளை நோக்குங்கள்.

'பெய்வளைக் கைகளைக் கூப்பிப் பிரான்கிடக் குங்கட லென்னும்
செய்யதோர் ஞாயிற்றைக் காட்டிச் சிரீதரன் மூர்த்தியீ தென்னும்
நையும்கண் ணீர்மல்க நின்று நாரண னென்னுமன் னேயென்
தெய்வ வுருவில் சிறுமான் செய்கின்ற தொன்றறி யேனே'

"அறியும்செந் தீயைத் தழுவி அச்சுத னென்னும் மெய்வேவாள்
எறியும்தண் காற்றைத் தழுவி என்னுடைக் கோவிந்த னென்னும்

வெறிகொள் துழாய்மலர் நாறும் வினையுடை யாட்டியேன் பெற்ற
செறிவளை முன்கைச் சிறுமான் செய்கின்ற தென்கண்ணுக்
[கொன்றே'

'ஒன்றிய திங்களைக் காட்டி ஒளிமணி வண்ணனே யென்னும்
நின்றகுன் றத்தினை நோக்கி நெடுமாலே வாவென்று கூவும்
நன்றுபெய் யும்மழை காணில் நாரணன் வந்தானென் றாலும்
என்றின மையல்கள் செய்தார் என்னுடைக் கோமளத் தையே'

'கோமள வான்கன்றைப் புல்கிக் கோவிந்தன்மேய்த்தன வென்னும்
போமிள நாகத்தின் பின்போ யவன்கிடக் கையீ தென்னும்
ஆமள வொன்று மறியேன் அருவினை யாட்டியேன் பெற்ற
கோமள வல்லியை மாயோன் மால்செய்து செய்கின்ற கூத்தே'

'திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே யென்னும்
உருவுடை வண்ணங்கள் காணில் உலகளந் தானென்று துள்ளும் [ம்
கருவுடைத் தேவில்க ளெல்லாம் கடல்வண்ணன் கோயிலேஎன்னு
வெருவிலும் வீழ்விலும் ஓவாக் கண்ணன் கழல்கள் விரும்புமே'

'விரும்பிப் பகைவரைக் காணில் வியலிட முண்டானே யென்னும்
கரும்பெரு மேகங்கள் காணில் கண்ணனென் றேறப் பறக்கும்
பெரும்புல ஆநிரை காணில் பிரானுள னென்றுபின் செல்லும்
அரும்பெறல் பெண்ணினைமாயோன் அலற்றி அயர்ப்பிக்கின்றானே'

'கடல்ஞாலம் செய்தேனும் யானே யென்னும்
கடல்ஞால மாவேனும் யானே யென்னும்
கடல்ஞாலம் கொண்டேனும் யானே யென்னும்
கடல்ஞாலம் கீண்டேனும் யானே யென்னும்
கடல்ஞால முண்டேனும் யானே யென்னும்
கடல்ஞாலத் தீசன்வந் தேறக் கொலோ
கடல்ஞாலத் தீர்க்கிவை யென்சொல் லுகேன்
கடல்ஞாலத் தென்மகள் கற்கின் றவே'

'காண்கின்ற நிலமெல்லாம் யானே யென்னும்
காண்கின்ற விசும்பெல்லாம் யானே யென்னும்
காண்கின்ற வெந்தீயெல் லாம்யானே யென்னும்
காண்கின்ற இக்காற்றெல் லாம்யானே யென்னும்

காண்கின்ற கடலெல்லாம் யானே யென்னும்
காண்கின்ற கடல்வண்ண னேறக் கொலோ
காண்கின்ற உலகத்தீர்க் கென்சொல் லுகேன்
காண்கின்ற என்காரிகைசெய் கின்றவே'

'துன்பமு மின்பமு மாகிய செய்வினை யாயுல கங்களுமாய்
இன்பமில் வெந்நர காகி இனியநல் வான்சுவர்க் கங்களுமாய்
மன்பல் லுயிர்களு மாகிப் பலபல மாய மயக்குக்களால்
இன்புறு மிவ்விளை யாட்டுடை யானைப்பெற்றேது மல்லலிலனே'

'உன்னைச்சிந்தை செய்துசெய் துன்னெடு மாமொழி யிசைபாடி
முன்னைத் தீவினைகள் முழுவே ரரிந்தனன்யான் [யாடியென்
உன்னைச் சிந்தையினு லிகழ்ந்த இரணிய னகல்மார்வம் கீண்டஎன்
முன்னைக் கோளரியே முடியாத தென்னெனக்கே'—நம்மாழ்வார்

(1–9–1922)

## ஆண்டவனே !

நாம் பிறந்த தேசத்தை நோக்குகிறோம் ; வானத்தைப் பார்க்கிறோம் ; இமயமலையை எண்ணுகிறோம் ; கங்கையைக் கருதுகிறோம் ; கண்ணீர் விடுகிறோம்.

சந்திரன் ஒளிவீசுகிறது ; நட்சத்திரங்கள் மின்னுகின்றன ; குளிர்காற்று வீசுகிறது. இவைகளைக் காண்கிறோம்; பரிசிக்கிறோம். ஆனால் மனத்தில் மகிழ்ச்சி யுண்டாகவில்லை. எந்த இயற்கையும் எமக்கு இன்பமூட்டவில்லை. சங்கீதமும் எமக்கு வெங்கீதமாகிறது. மனைவி மக்கள் இன்பமும் இன்பமாகத் தோன்றவில்லை. சுற்று முற்றும் பார்க்கிறோம். எல்லாம் துன்பமயமா யிருக்கின்றன. எமக்கு வேறு நினைவு தோன்றவில்லை.

ஆண்டவனே ! உன் நினைவு தோன்றும்போதோ எல்லையில்லா இன்பமும் மன உறுதியும் எம்மையறியாமல் எழுகின்றன. அவ்வேளையில் நாம் பிறந்த தேசமும், வானமும்,

இமயமும், கங்கையும் எம்முடையன என்ற எண்ணம் பிறக்கிறது ; சந்திர ஒளியும், நட்சத்திர மின்னலும், குளிர்காற்றும் இன்பத்தை ஊட்டுகின்றன. மனைவி மக்களும் இன்பமாகத் தோன்றுகிறார்கள். இஃதென்ன இரகசியம்? ஆதலால் உன் நினைவே எமக்கு என்றும் வேண்டும். 107, 108, 124எ, 144, 153 முதலிய சட்டங்கள் நினைவே வேண்டாம். அந்நினைவால் இன்பமுண்டாகாது.

இவ்வுண்மை கண்டே தேசபக்தர்கள் - மகமதலி, ஷாக்குதலி, நேரு முதலியோர் - ஏகாந்தவாசம் பெற்று இன்ப நுகர்கிறார்கள். 'அங்கத்தை மண்ணுக் காக்கி ஆர்வத்தை உனக்கே தந்து' என்றார் அப்பர் சுவாமிகள். மாயா காரியமான உடல் எவரால் எவ்வாறு பந்திக்கப்படினும் படுக. அதன்மீது பற்றுக்கொண்டுள்ள மட்டும் எல்லாம் துக்க மயமாகவே தோன்றும். அவ்வுடற்பற்று அறுந்ததும், எல்லாம் இன்பமயமாகத் தோன்றும். அவ்வுணர்வு பெற்றவர்களே மக்களெனப்படுவார்கள்.

ஆண்டவனே ! உன்னைவிட வேறு களைகண் காணோம். எல்லாம் நீ. உன்னை மறப்பது துன்பம் ; உன்னை நினைப்பது இன்பம். இவ்வுணர்வு உலகம் முழுவதும் பரவுமாறு அருள் செய்க. உலகம் பேய்க்கு இரையாகிறது. உன்னால் படைக்கப்படும் பொருள்கள், உன் பிள்ளைகளாயுள்ள எல்லார்க்கும் பொதுவாகவல்லவோ இருத்தல் வேண்டும்? கள்ளர்கள், முரடர்கள், பலசாலிகள் அதிகங் கவர்ந்துவிடுகிறார்கள். பொதுவாக எல்லாவற்றையும் பகிர்ந்து கொடுக்கும் கடமையை நீயே இனி ஏற்றுக்கொள்ளல்வேண்டும். எமக்குரிய உரிமைப் பொருளை எமக்கு நல்க வேண்டுவது உனது கடமை. அன்றாட அப்பத்தையன்றோ அன்றாடம் பெற்று மனிதன் வாழ்தல்வேண்டும்? சென்றது கருதாமலும் சேர்வது நினையாமலுமன்றோ மனிதன் வாழ்தல்வேண்டும்? இந்த ஞானம் உலகத்தில் மறைந்துவிட்டதே! ஒருவர் உடைமையை மற்றொருவர் கவர்ந்தன்றோ வாழமுயல்கிறார்? ஆண்டவனே! நீதான் எமக்குத் துணை ! (9-12-1921)

# என்னிலும் இனியன்

'இவ்வுலகில் எனக்கினியர் யாவர்' என்று ஒருவன் உன்னி உன்னி ஆராயத் தலைப்படுகிறான். 'அவர் இனியர் இவர் இனியர்' என்னும் முடிவு பெற்றுப் பெற்று, இறுதியில் ஒவ்வொருவர்பால் ஒவ்வொரு குறை, தன்னலம் முதலியன காணப்பெற்று, 'எனக்கு நான் இனியன்; என்னினும் இனியர் எனக்கு ஒருவருமில்லை' என்னும் முடிவிற்கு அவன் வருகிறான். ஏனையோர் இனியரல்லர் என்னும் முடிவைப்பற்றி விரிந்த ஆராய்ச்சி வேண்டுவதில்லை. 'தனக்குத்தானே இனியன்' என்று மனிதன் கருதுவதைச் சிறிது ஆராய்ந்தே தீரல் வேண்டும்.

உலகில் ஒருவன், பிறரை வஞ்சித்தலையும் பிறர்க்குக் கேடு சூழ்தலையுங் காண்கிறோம்; கேட்கிறோம். அவன் தன்னைத்தான் வஞ்சிக்கவாதல் தனக்குத்தான் கேடு சூழவாதல் நினைவளவிலேனும் எண்ணுவனோ என்பது உன்னற்பாலது. 'உலகில் தற்கொலைபோன்ற எண்ணங்களும் வினைகளும் நிகழவில்லையோ? அவை, தன்னைத்தான் வஞ்சித்துத் தனக்குக்கேடு சூழ்தலின்பாற் பட்டனவல்லவோ' என்னும் ஐயம் பிறக்கலாம். தற்கொலை போன்ற வினையாற்றப் பொதுவாக எவரும் ஒருப்படுவதில்லை. மனிதன் எதற்கும் ஒருப்படுவன்; ஆனால் அவன் தற்கொலைக்கு மட்டும் ஒருப்படல் அரிது அரிது. சில இடங்களில் தற்கொலை நிகழ்வதின் உட்கிடக்கை என்னை? மானக்கேடு முதலியன தற்கொலை நிகழ்வதற்குக் காரணமாக நிற்கின்றன. மானக்கேடு முதலிய காரணங்களை உற்று நோக்கினால், 'தன்னலன்' அவைகளின் அடியில் கிடத்தல் உணரலாம். 'தன்னை' அதிகமாகக் கொண்டு மகன் தற்கொலையில் தலைப்படுகிறான். ஆண்டும் அவன் தன்னையே அதிகம் நேசித்தல் விளங்குகிறது. எனவே, உலகில் ஒருவன் 'தனக்குத்தானே இனியன்' என்னும் எண்ணங்கொண்டு வாழ்ந்து வருதலைச் சிந்தித்துப் பார்க்க.

உண்மையில் ஒருவன் தனக்குத்தான் இனியனாக வாழ்கிறானா? இல்லை. 'தனக்குத்தான் இனியன்' என்பது ஆராய்ச்சியில் போலியாக முடிதல் காணலாம். பத்துவயதில் ஒருவனுக்கு எது நல்லதாகத் தோன்றிற்றோ, அஃதே அவனுக்குப் பதினைந்து வயதில் தீயதாகத் தோன்றுகிறது. இருபதாம் ஆண்டில் ஒருவன் எதை ஏற்றமாகக் கொண்டானோ, அதையே அவன் முப்பதாம் ஆண்டில் தாழ்வாகக் கொள்கிறான். நாற்பதில் இனிமை பயக்கும் ஒன்று, ஐம்பதில் இன்னா பயப்பதாகிறது. கல்வி, நட்பு, ஆட்டம், ஒருத்திபால் நேயம், உடை, உணவு, தலைமயிர் வெட்டு, சமயக் கோலம், கொள்கை முதலியவற்றை உளங்கொண்டு, தமது வாழ்வு நூலை ஒவ்வொருவரும் ஆராயப் புகுந்தால், அவரது மாறுபட்ட உணர்வு அவருக்கே புலனாகும். ஆதலால், உலகில் எவரை இனியராகக் கொள்வது?

ஒருபோது இனியதாகத் தோன்றும் ஒன்று, மற்றொரு போது இன்னாததாகத் தோன்றுவானேன்? மூல காரணங் காண முயலுதல்வேண்டும். முயன்றால் என்ன பெறுவோம்? அறியாமை யன்றி வேறென்ன பெறுவோம்? அறியாமை தேயத்தேய மனிதனுக்குப் பொருள் விளக்கம் புலனாகிக் கொண்டே போகிறது. அறியாமை ஒவ்வொருவர்பால் ஒவ்வோர் அளவாக நிலவிக்கொண்டிருக்கிறது. முழு அறியாமை தேய்ந்து முழு அறிவு விளங்குதற்குள் மரணம் நேரலாம். என்செய்வது? மனிதன் நிலை இவ்வளவிலிருக்கிறது! இவ்வறியாமையால் தொடக்குண்டு கிடக்கும் மனிதன், உலகில் எத்துணை இடர் விளைக்கிறான்! எவ்வளவு இடர்ப் படுகிறான்!

பின்னை எவ்வாறு உலகில் வாழ்வு நடாத்துவது? 'நான் அறியாமையால் பீடிக்கப்பட்ட ஒருவன்; குறையுடையேன்' என்னும் உணர்வோடு மனிதன் வாழ்வு நடாத்தினால், அவன் உய்யுநெறி காண்பன் என்று சுருங்கச் சொல்லுதல் கூடும். ஸோக்ரதர் என்னுங் கிரீஸ் தேசத்து ஞானி இந்நுட்பத்தை உலகிற்கு அறிவுறுத்தினர். மனிதன் தன் குறைபாட்டை உணர உணரக் குறைவிலா நிறைவாக உள்ள ஒன்றன் துணை

கூடும். ஆகவே, 'தனக்குத்தான் இனியன்' என்பதில் உண்மை யில்லை என்க.

மன்பதைக்கு நல்வழி காட்டப் போந்த பெரியோர் பலர். அவருள் நமது தமிழ் நாட்டில் தோன்றிய ஒரு பெரியார்மீது நெஞ்சம் பதிகிறது. அவர் யாவர்? அவரே அப்பரென்னும் அறவோர். அப்பர் எம்பெருமானுர் உலகுக்கு உண்மையை அறிவுறுத்துகிறுர்; அது வருமாறு:—

'என்னில் யாரும் எனக்கினி யாரில்லை
என்னி லும்இனி யான்ஒரு வன்உளன்
என்னு ளேஉயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்கு
என்னு ளேநிற்கும் இன்னம்பர் ஈசனே.'

அன்பர்களே! தமிழில் எழுந்த இவ்வறிவுரையை - அன்பு மொழியை - அருளமுதை - கண்ணாரக் கண்டு, உளத்தால் முகந்து, உணர்வில் கூட்டுங்கள். அப்பர் எம்பெருமானுர் 'எவர் இனியர்' என்று காட்டுகிறுர். கண்காள் காண்மின்கள்! நெஞ்சே நினைவாய்!

தொடக்கத்தில் உலகோர் கருதுமாறு, 'என்னில் யாரும் எனக்கினியா ரில்லை' என்று குறித்துப் பின்னை மயக்கந் தெளிய, 'என்னிலும் இனியான் ஒருவன் உளன்' என்று அப்பர் அருள்கிறுர். அதற்குமேல் என்ன முயற்சி எழும்?

'என்னிலும் இனிய ஒருவன் யாண்டுளான்' என்னும் ஆராய்ச்சியும், அவனை உணரல்வேண்டும் என்னும் வேட்கையும் முருகி எழுமல்லவோ? அவ்வொருவன் யாண்டுளான்? 'யாண்டுளான்' என்று உலகெலாஞ் சுற்ற வேண்டுவதில்லை; நூல்களைப் புரட்ட வேண்டுவதில்லை; கழகங் கூட்ட வேண்டுவதில்லை. இவைகளால் அவனை உணரல் இயலாது. ஒருவன் எங்கே வீற்றிருக்கிறுன்? திருமூலர்,

'மாயனை நாடி மனநெடுந் தேரேறிப்
போயினம் நாடறி யாதே புலம்புவம்
தேயமும் நாடுந் திரிந்தெங்கள் செல்வனைக்
காயமிந் நாட்டிடைக் கண்டுகொண் டேனே'

என்று அவ்வொருவனது இடங் காட்டுகிறுர்.

'இனியன் இன்னவன்' என்று அறிவு கொளுத்திய அப்பரும், அவ்வினியன் இருக்குமிடங் குறிக்கிறார். 'என்னுள்ளே நிற்கும் இன்னம்ப ரீசனே' என்று அவர் அருளுமாற்றானறிக.

ஈசன் இருக்குமிடம் உள்ளம். உள்ளத்துள்ள ஒருவனை இத்துணை நாள் உணராது கிடந்த அறியாமை என்னே! ஆண்டவன் உயிர்கள் பொருட்டு, உலகைக் கொடுத்து, உடலைக் கொடுத்து, அவைகளை நல்வழிப்படுத்தி ஆட்கொள்ள, உள்ளத்திலும் வீற்றிருக்கிறான்! இக்கருணையை என்னென்று கூறுவது? இதை நினையாத மனிதன் மனிதனா? ஆண்டவன் அருள் என்னே! என்னே!

அப்பருள்ளிட்ட பலரும் ஆண்டவன் உள்ளங் கோயில் கொண்டுள்ள உண்மையைப் பல இடங்களில் பகர்ந்துள்ளார். ஒவ்வொருவரும் தொடக்கத்திலேயே அந்நுட்பத்தை அறிவுறுத்தி யிருக்கிறார். 'தோடுடைய செவியன்' என்னும் முதற் றிருப்பதிகத்தில் திருஞானசம்பந்தர், 'என்னுள்ளங் கவர் கள்வன்' என்றும், 'கூற்றாயினவாறு' என்று தொடங்கிய உடனே திருநாவுக்கரசர், 'பிரியாது வணங்குவன் எப்பொழுதும்' என்றும், அங்ஙனே வன்தொண்டரும், 'பித்தா பிறைசூடி' என்னுந் தேவாரத்தில் 'நினைக்கின்றேன் மனத்துன்னை' என்றும், வாதவூரடிகளும், 'நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க - இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க' என்றும் திருவாய் மலர்ந்துள்ளார். மற்றைய பெரியோர்களும் இவ்வுண்மையைச் செவ்வனே உலகிற்கு ஓதியிருக்கிறார்கள்.

மிக அணித்தாக உள்ளத்துள் எழுந்தருளி, நம்மை இயக்கும் ஒரு பொருளே நமக்கு இனியது. அப்பொருளினிடத்து நாட்டங்கொண்டு, அதன்வழி நின்று இயங்கின், நமக்கு எல்லாம் இனியனவாகப் புலனாகும். அவ்வினிய ஒன்றை எங்ஙனம் உணர்வது? முதலாவது அவ்வொன்றே இனியது என்னும் உறுதிகொண்டு, அதனை அறிவால் அடைதல் வேண்டும்; அடைந்தால், அதன் இனிமையை

உணர்தல் கூடும். இதனை மற்றுமோரிடத்தில் அப்பர் சுவாமிகள்,

‘ கனியி னுங்கட்டி பட்ட கரும்பினும்
பனிம லர்க்குழல் பாவைநல் லாரினும்
தனிமு டிகவித் தாளும் அரசினும்
இனியன் தன்னடைந் தார்க்கிடை மருதனே ’

என்று விளக்கியிருத்தல் காண்க.

மற்றுமொன்று ஈண்டுக் குறிக்கத்தக்கது. அஃது உள்ளே நிற்கும் இனியனைப் பற்றியது. அவன், ‘என்னுளே உயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்கு... நிற்பவன்’ என்று அடிகள் உணர்த்துவதை நோக்குதல் வேண்டும்.

உயிர்ப்பு என்பது பிராணன். பிராணன் வாழ்வுக்கு இன்றியமையாதது. அஃது ஒடுங்கின் உயிர் நீங்கும். ஆண்டவன் உயிர்ப்பின் வழியே வாழ்வு நல்கி வருகிறான். ஆகவே, உயிர்ப்பு, முறையாக உள்ளே போகவும் முறையாக வெளியே வரவும், அதை ஒழுங்குபடுத்திக்கொள்ளுதல் நலன். ஒழுங்கு முறைகளைத் தக்கவர்பால் கேட்டுப் பயிற்சிசெய்தல் வேண்டும். ஞாயிற்றொளி காற்று முதலியன இயற்கைவழி உடலோம்புதலைக் கருதுக. உள்ளங் கோயில்கொண்டுள்ள ஆண்டவனை உணர்தற்கு நல்லுடல் தேவை. இதுபற்றி ஈண்டு விரிவுரை வேண்டுவதில்லை.

உள்ளங் கோயில்கொண்டுள்ள இனிய இறைவனை அடைதற்குரிய வழி யாது? வழிகள் பற்பல கூறலாம். பொதுவாக ஈண்டு ஒன்று குறிக்கலாம். ஆண்டவனிடத்தில் கருத்தைச் செலுத்தியதும், அவன் அறிவிக்கத் தான் அறிவதையும் - அவன் ஆட்டத் தான் ஆடுவதையும் - அன்பன் நாளடைவில் உணர்வன். அவ்வுணர்வு, ‘ஐயனே! இத்துணை நாள் உன்னுள்ளத்துள்ள பொருளுண்மை உணராது, எத்துணைப் பொய்ம்மைகள் நிகழ்த்தி வந்தனை; அவைகளையெல்லாம் அப்பொருள் முன்னிலையில் ஆற்றியிருக்கின்றனை; நீ எண்ணும் எண்ணங்களையும் நீ ஆற்றும் வினைகளையும் காணவல்லது ஒன்றுமில்லை என்பது உனது முன்னைய

எண்ணம். இனி அங்ஙனம் ஒன்றுங் கருதாதே; ஒன்றுஞ் செய்யாதே. உள்ளும் புறமும் ஒத்த ஒன்றையே நினைந்து செய்வாயாக. பொய்ம்மையில் தலைப்படாதே' என்று இன்னுரை பகரும். அவ்வுள்ளொளி எழும்போது பொய்ம்மகன் மெய்ம்மகனாகிறான். 'இத்துணைநாள் கெட்டேன்; குருடனாயிருந்தேன்; ஆண்டவனை ஏமாற்றி நான் ஏமாந்தேன்; ஆண்டவன் முன்னே என்னென்ன நினைந்தேன்; என்னென்ன செய்தேன்! ஐயோ! பாவியானேன்' என்று மகன் அழுகிறான்; பதைக்கிறான். மகனுடைய அழுகை கேட்குந் தந்தை வாளா கிடப்பனோ? அவன் அருளாளன்; மகனைத் தள்ளமாட்டான்; ஆட்கொள்கிறான். அன்பர்களே! அந் நிகழ்ச்சியை என்னென்று சொல்வேன்? சொல்வதற்கு அருகனுமல்லேன். அடியார்கள் அருளிய திருப்பாடல்களைப் பாருங்கள்; படியுங்கள்; கசிந்து கசிந்து உருகி இனிய இறைவனை நோக்கி அழுங்கள். 'யானே பொய் என் நெஞ்சும் பொய் என் அன்பும் பொய், ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே' என்று அழுதடியுடைந்த அன்பர் மொழியைப் போற்றுங்கள். இவ்வொருவழி சாலச் சிறந்தது. இவ்வழி இனியன் எவன் என்பதை இனிது உணர்த்தும்.

'பத்திலனேனும் பணிந்திலனேனும்உன்
உயர்ந்த பைங்கழல் காணப்
பித்திலனேனும் பிதற்றிலனேனும்
பிறப்பறுப் பாயெம் பெருமானே
முத்தனை யானே மணியனை யானே
முதல்வனே முறையோ என்று
எத்தனை யானும் யான்தொடர்ந் துன்னை
இனிப்பிரிந் தாற்றேனே'

'தாமே தமக்குச் சுற்றமும் தாமே தமக்கு விதிவகையும்
யாமார் எமதார் பாசமார் என்ன மாயம் இவைபோகக் [கொண்டு
கோமான் பண்டைத் தொண்டரொடும் அவன்றன் குறிப்பே குறிக்
போமாறமையின் பொய்நீக்கிப்புயங்க னாள்வான் பொன்னடிக்கே'

—மாணிக்கவாசகனார்

(26-10-1927)

# முருகன்*

கல்கத்தாவில் நடைபெற்றுவரூஉம் 'மாடர்ன் ரெவியூ' என்னும் மாதாந்தத்தைப் போன்ற ஒரு மாதாந்தம் தமிழ் நாட்டில் தமிழ் மொழியில் நடைபெறல் வேண்டுமென்று நீண்டகாலமாக எண்ணியிருந்தேன். இதுபோழ்து, ஸ்ரீமான் சொ. முருகப்ப செட்டியார் அவர்களை ஆசிரியராக்கொண்டு 'குமரன்' என்னும் ஒரு தமிழ் மாதாந்தப் பத்திரிகை காரைக்குடியில் வெளிவருவதைக் கேட்டுப் பெருமகிழ் வெய்தினேன். ஆசிரியர் தமிழ் நாட்டின் நலத்துக்கெனக் 'குமரனைப்' பயன்படுத்துவாரென்று எதிர்பார்க்கிறேன். நாட்டுக்கோட்டை நகரச் செட்டியார் ஒருவரால் 'குமரன்' நடத்தப்படுதலால், அப்பத்திரிகை கல்கத்தா 'மாடர்ன் ரெவியூ' போலத் தமிழ்நாட்டில் பொலிந்து, தமிழ்நாட்டின் பழமையை விளங்கச் செய்யுமென்று நம்புகிறேன். ஆசிரியர் பெயர்க்கும் பத்திரிகைப் பெயர்க்கும் உள்ள தொடர்பு நோக்கி, முதல் முதல் 'முருகன்' என்னுங் கட்டுரை எழுதப் புகுகிறேன்.

முருகன் எவன்? முருகையுடையவன் முருகன். முருகு என்றால் என்னை? முருகு என்பது பலபொருள் குறிக்கும் ஒருசொல். முருகு என்னுஞ் சொல்லில் சிறப்பாக நான்கு பொருள் அடங்கியிருக்கின்றன. அவை : மணம், இளமை, கடவுள்தன்மை, அழகு என்பன. இந்நான்கு பொருளடங் கிய ஒரு சொல்லால் பண்டைத் தமிழ்மக்கள் முழுமுதற் பொருளை அழைத்தது வியக்கத்தக்கது. இயற்கை மணமும், மாறா இளமையும், எல்லாப் பொருளையுங் கடந்தொளிருந் தன்மையும், அழியா அழகும் இறைவனிடத்தில் இலங்குவது கண்டு, அப்பொருள்கள் முறையே உறைதற்கிடம்

---

*இக்கட்டுரை பின்னே 'முருகன் அல்லது அழகு' என்னும் நூலாக விரித்து எழுதப்பட்டது.

பெற்றுள்ள முருகன் என்னுஞ் சொல்லை, அவ்விறைவ னுக்குச் சூட்டியதன் திறமையை நோக்குழிப் பழந்தமிழ் மக்களின் கூர்த்தமதி புலனாகிறது.

உலகத்தின் நானு பக்கங்களிலும் வாழ்ந்து வரும் மக்கள், தங்கள் தங்கள் அறிவாற்றலுக் கேற்றவாறு தங்கள் தங்கள் மொழியில் கடவுளுக்குப் பலதிறப் பெயர்கள் சூட்டியிருக்கிறார்கள். அப்பெயர்கள் ஒவ்வொன்றிலும் ஒவ் வொரு சிறப்புப் பொருள் விளங்குகிறது. சிலவற்றில் பொருத்தமில்லாப் பொருள்களும் உண்டு. முருகன் என்னுஞ் சொல்லிலோ அறிஞர் போற்றும் பொருள்கள் மிளிர்கின்றன. ஆதலால், போற்றற்குரியதும், மகிழ்ச்சி யூட்டக்கூடியதும், பொருத்தமுடையதுமாக இருப்பது முருகன் என்னுந் திருப்பெயர். மணமுடைமை, இளமை யுடைமை, கடவுள் தன்மையுடைமை, அழகுடைமை ஆகிய இவைகளைப் போற்ற மறுப்போர், முருகனைப் போற்ற மறுப் போராவர். மணமுடைமை முதலிய நான்கினையும் போற்ற மறுப்போர், இருப்புநெஞ்சமும் வன்கண்மையுமுடைய முரட ராயிருப்பர். அன்னார் உள்ளத்தில் முருகு அலர்தல் அரிது.

இனி, மணம், இளமை, கடவுள்தன்மை, அழகு என் னும் நான்கு பொருளில், அழகு என்பதை மட்டும் நான் ஈண்டுச் சிறப்பாக எடுத்துக்கொள்கிறேன். என்னை ? அழகு உள்ள இடத்தில் ஏனைய மூன்றும் விரவி நிற்றலின் என்க. அழியா அழகில் மணமும் இளமையும் இறைமையும் கலந்து நிற்றல் இயல்பு. ‘ அழியா அழகு ’ என்று ஈண்டுக் குறிப் பிட்டது கருதற்பாலது. கைபுனைந்தியற்றா ஓரழகே அழியா அழகெனப்படும். கைபுனைந்தியற்றும் அழகு அழியுந் தன்மையது. ‘ கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பு ’ என்றார் நக்கீரனாரும். கையால் செய்யப்படுவது செயற்கை. கையால் செய்யப்படாதது இயற்கை. மலையும் ஆறும் காடும் கடலும் எவர் கையால் ஆக்கப்பட்டன ? அவை எக் கருவி களால் செய்யப்பட்டன ? ஞாயிறும் திங்களும் விண்மீன் களும் எவரால் செய்யப்பட்டன ? புனலுக்குத் தண்மை ஈந்தவர் எவர் ? நெருப்புக்கு வெம்மை யூட்டினவர் யாவர் ?

இயல்பாக அரும்பிய இவைகளின் அழகே கைபுனைந்தியற்றாக் கவின்பெறு வனப்பாகும். மற்றையது போலி.

இயற்கை அழகு உள்ளத்தைக் கவர்ந்து இன்பமூட்டுகிறது. இயற்கை அழகில் கருத்தைப் பதியவைத்துள்ள ஒருவன், அதனோடு புணருந்தோறும் புணருந்தோறும், அவனுள் கிளர்ந்தெழும் இன்பம் பேரின்பமாகும். இவ்வின்பத்துக்கிணையாக மற்றுமோர் இன்பமும் உளதோ? இவ்வின்பத்தையன்றோ வன்தொண்டர் நுகர்ந்தார்? மாணிக்கவாசகர் பருகினார்? இவ்வின்ப ஊற்றைத் திறக்கத்தக்க அழகு இயற்கை வாயிலாக உணரக்கிடக்கிறது. அவ்வழகே அழியா அழகு. அதுவே முருகு என்னும் பேரழகு.

பண்டைத் தமிழ்மக்கள், இயற்கைவழி வாழ்வுசெலுத்தி, அதற்கு அடிப்படையாகவுள்ள இறைவனுண்மை கண்டு, அவனழகால் இயற்கை அழகு பெறுவதுநோக்கி, அவ்விறைவனை அழகன் என்னும் பொருள்பட முருகன் என்னும் பெயரால் அழைத்தார்கள். இவர்கள் இயற்கை வாயிலாக முருகைக்கண்டு நுகர்ந்த இன்பத்தைக் கலித்தொகை, பத்துப்பாட்டு, திருக்கோவையார் முதலிய நூல்களில் காணலாம்.

முருகன் மலையாக நின்றும், ஆறாக ஓடியும், காடாக விளங்கியும், கடலாக ஒலித்தும், உடலாக உடனிருந்தும் உயிர்களை ஓம்பிவரும் திருவருட்டிறத்தை எவரே புகழ வல்லார்? எம்பெருமான் நீலக்கடலில் காலையில் நெருப்புப் பிழம்புபோல ஞாயிறாகப் புறப்பட்டு உலகுக்கு உதவாவிடின், உலகம் என்ன பாடுபடும்? அவன் திங்களாக அமுதம் பொழிந்து உலகுக்கு இன்பமூட்டுவதை உணராத புலன்களும் புலன்களாமோ? முருகன் இயற்கை வாயிலாக ஆடிவரும் திருவிளையாடல்களை ஈண்டு விரிக்கிற் பெருகும்.

இயற்கை வாயிலாக முருகு என்னும் அழியா அழகைக் கண்டவர்பால், என்றும் மணமே கமழ்ந்துகொண்டிருக்கும். அவர்மீது புலால் மணங் கமழாது. அவர் மணத்துக்கென வேறு செயற்கை வாசனைகளைத் தேடவேண்டுவதில்லை. இயற்கை மணம் வீசப்பெறுவோர் என்றும் இளமையுடை

யரா யிருப்பர். என்றும் இளமையுடையவராக வாழ விரும்புவோர், எம்பெருமான் முருகனை எப்பொழுதும் நினைந்தவண்ணமா யிருப்பாராக. இயற்கைக்குக் காரணமாக உள்ள முருகு என்றும் இளமையா யிருப்பதால், இயற்கைப் பொருள்கள் தங்கள் கடமைகளைச் செவ்வனே ஆற்றுகின்றன. முருகின் இளமை குன்றுவதாயின், இயற்கையும் தன் செயலில் குன்றும். ஆனால், இயற்கை எத்துணைக்காலம் எவ்வெவ் வழியில் தொழிற்படினும், அஃது இளைத்துச் சலித்துச் சாய்வதில்லை. என்னை ? காரணமாகவுள்ள முருகு, என்றும் இளமையாயிருப்பதால், காரியமாகிய இயற்கையும் என்றும் இளமை என்னும் வளமை குன்றாமல், ஒரு பெற்றியாய்த் தன் செயலைச் சலிப்பின்றிச் சாய்வின்றி நடாத்திக் கொண்டு போகிறது. ஆதலால், இயற்கைவழி முருகைக் காண்போன் என்றும் இளையனாய் இருப்பன்.

மலைக்கிழங்கை உண்டும், காட்டுப்பழங்களைத் தின்றும், வயல் தானியங்களைப் புசித்தும், கடற்காற்றைப் பருகியும் வாழ்வோரை விரைவில் முதுமை அணுகாது. இயற்கைப் பொருள்களைத் தங்கள் விருப்பப்படி வேறு பல பொருளோடும் புலாலோடும் கலந்து வேகவைத்துப் பதஞ்செய்து விலாப் புடைக்க உண்பதிலேயே காலங்கழிக்கும் மனிதர்களை விரைவில் முதுமை அடர்ந்து வருத்தும்.

இயற்கை மணமும் மாறா இளமையும் உடைய ஒன்று தத்துவத்தில் கட்டுப்பட்டுக் கிடக்காது. அது தத்துவங் கடந்த தனிப்பொருளாய் - கந்தழியாய் - இலங்கும். ஆகலால், கடவுள் தன்மை, மணமும் இளமையும் உடைய முருகனிடத்தில் இயல்பாகவே அமைந்து கிடக்கிறது. மணமும் இளமையும் கடவுள் தன்மையும் ஆகிய இம்மூன்றையும் உடைய ஒன்றன் அழகை எழுத்தால் எழுதல் முடியுமோ ?

முருகன் என்னுஞ் சொல் வழக்கு எந்நாளில் உண்டாயிற்று என்பதை உறுதியாகக் கூறுதல் முடியவில்லை. ஆராய்ச்சிக்காரர், இற்றைக்குச் சுமார் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே முருகன் என்னுஞ் சொல் ஆட்சியிலிருந்தது

என்று கூறுப. இன்னும் அம்மொழி இறந்துபடவில்லை. முருகனைப் போற்றுவோர் இன்னும் உளர். என்றும் மாறு இளமையுடைய முருகன் தொன்மைமிகுந்த பெருங் கிழவன் போலும் !

தமிழ் மக்கள் முருகனை மலைநிலக் கடவுளாகக் கொண்ட தொன்றே, அப்பெருமானின் தொன்மையை நனி விளக்கும். ஆசிரியர் தொல்காப்பியனார் உள்ளிட்ட பல்லோர், 'சேயோன் மேய மைவரை யுலகம்' என்றும், 'குறிஞ்சிக் கிழான்' என்றும், 'மலை கிழவோனே' என்றுங் கூறிப்போந்தனர். தமிழ் மக்கள் வாழ்வு முதல் முதல் தொடங்கப்பட்ட இடம் மலையே யாகும். அவர்கள் ஆண்டிருந்து பிற நிலங்களுக்குப் பின்னே போந்தார்கள். மலையில் வாழ்ந்த மக்கள், பிற நிலங்களில் குடிபுகுந்து, அவ்வந் நிலங்களின் இயல்புக் கேற்ற கடவுளர்களைக் குறித்துக்கொள்ளினும், முதல் முதல் தாங்கள் கொண்ட மலைநிலக் கடவுளாகிய முருகனையே அவர்கள் தங்கள் குலதெய்வமாகப் போற்றுவாராயினர். தமிழ்க் கடவுள் என்பது முருகனுக்கே சிறப்பாக வழங்கப் படுகிறதன்றி, ஏனைய நிலக் கடவுளர்க்கு அப்பெயர் வழங்கப் படுவதில்லை. தமிழ் மக்கள் வாழ்வு, என்று மலைநிலத்தில் துவங்கப்பட்டதோ, அன்று தொட்டு இன்றுவரை, முருகன் தமிழ் நாட்டுத் தெய்வமாகப் போற்றப்பட்டு வருகிறான். இன்னும் அவன் இளையனாகவே இருக்கிறான் ; இன்றும் என்றும் அவ்வாறிருப்பன். அவன் அழகன்றோ அழகு ?

எங்கணும் இயற்கை வடிவாக நீக்கமற நிறைந்துள்ள இறைவனும் முருகனை வழிபட் டுய்யும்பொருட்டு, மெய்யடியார்கள் பல இடங்களில் அவனுக்குத் திருக்கோயில்கள் கட்டினார்கள். அக்கோயில்களில் முருகன் வீற்றிருந்தருளுவதோடு, ஒவ்வொரு சிவாலயத்திலும் அப்பெரியோன் வீற்றிருந்தருள்கிறான். முருகன் திருவுருவை வழிபடுவோர், அவர் விரும்பும் எல்லா நலங்களையும் பெறுவர். முருகன் மக்கட்கு இன்றியமையாத அருட்செல்வம் பொருட்செல்வம் முதலிய எல்லாச் செல்வங்களையும் அளிப்பன். முருகப்பெருமான் தன்னை வழிபடும் அன்பர்கட்குத் தோன்றாத் துணையாக

நின்று செய்துவரும் பேருதவி, அவன் அடியவர்க்குத் தெரியும். நம்பிக்கையால், முருகனிடத்து எல்லாம் பெறலாம்.

பண்டைக்காலத் தமிழ்மக்கள் பெரிதும் மருந்தையும் மருத்துவனையும் நாடி ஓடினார்களில்லை. மருந்தும் மருத்துவனும் முருகனே என்று அவர்கள் கருதி வாழ்ந்தார்கள். அவ்வழக்கம் இன்றும் பல இடங்களில் ஆட்சியிலிருக்கிறது. தமிழ் மக்கள் நோயால் பீடிக்கப்படும்போதும், வேறு பல குறைகளால் வருந்தும்போதும், முருகனை நோக்கி வேண்டுதல் செய்து, அவன் திருக்கோயில் சென்று, தொண்டு புரிந்து நோயும் குறைகளும் நீங்கப்பெறுவார்கள். முருகக்கடவுள் எழுந்தருளியுள்ள திருத்தணிகை, திருப்போரூர், திருமயிலம், திருவாவினன்குடி, திருப்பரங்குன்றம், திருச்செந்தூர் முதலிய திருப்பதிகளில் மக்கள் நம்பிக்கை மேலீட்டால் செய்யுங் காரியங்களை இன்றுங் காணலாம். நம்பிக்கை விசுவாசத்தால் எல்லாக் காரியங்களையுஞ் செய்யலாம். இதைப்பற்றிக் கிறிஸ்துநாதர் மிகத் திறம்பட உலகிற்கு அறிவுறுத்தியிருக்கிறார். இந்நாளில் பேய் நாகரிகத்தால் நம்பிக்கை என்பது இறந்துபட்டு வருகிறது. நம்பிக்கை ஒழிந்து வருவதால், பிரார்த்தனைகளுங் கைகூடுவதில்லை. 'பெந்தகொஸ்தெ' சபையில் சேர்ந்த பல்லோர், அமெரிக்கா முதலிய இடங்களில் கடவுளை நோக்கி ஜெபஞ்செய்து நோய்களைத் தீர்த்துவருவதைச் சஞ்சிகைகளில் நம்மவர்கள் படித்து மகிழ்ச்சியடைகிறார்கள். நோயாளியிடத்தும் ஜெபஞ்செய்வோனிடத்தும் நம்பிக்கை பூரணமாக இருத்தல்வேண்டும். இல்லையேல் விரும்பியது நிறைவேறாது. நம்பிக்கையால் மனிதன் தேவனாகலாம்.

நம்பிக்கையில்லாதார் நோய்வாய்ப்படும்போது மருந்துகளையும் மருத்துவரையும் கட்டி அழுதுகொண்டிருப்பர். பண்டைக்கால மக்கள், மனோ உறுதியால், முருகனை வழிபட்டுச் செயற்கருஞ் செயல்கள் செய்திருக்கிறார்கள். முருகனை வழிபட்டு நம்பிக்கையால் செயற்கருஞ் செயல்களைச்செய்யும் ஆற்றலை நாட்டில் வளர்க்க ஆங்காங்குள்ள சமயச் சங்கங்கள் உழைத்தல்வேண்டும். இப்பொழுது கிறிஸ்தவர்கள்,

நம்பிக்கை வித்தையால் தங்கள் மதத்தைப் பரப்ப முயன்று வருவதை நேயர்கள் கவனித்து வேண்டுவ செய்வார்களாக. அந்த நம்பிக்கை வித்தையைக் கண்ணுற்று வியப்படையும் நம்மவர்கள், முருகனை வழிபட்டு, நம்பிக்கையால் செயற்கருஞ் செயல்கள் செய்து, பெறற்கரிய பேறு பெற்றோர் வரலாறுகளை வாசித்து உண்மை உணர்வார்களாக. நமது நாட்டுத் தற்கால 'மூதறிஞர்கள்', நம்பிக்கையால் முருகனை வழிபடும் அடியார்களின் மனை உறுதியைக் கெடுக்க முயற்சி செய்யாதிருப்பார்களாக. முருகப்பெருமானை வழிபட்டு நம்பிக்கையால் குணமடைந்தவர் வரலாறுகள் எண்ணிறந்து கிடக்கின்றன. அவைகளை விரிக்கிற் பெருகும். இன்றும் நம்பிக்கை உடையார் குறைகளை முருகன் நீக்கியே வருகிறான்.

இனிப் புராணங்களில் முருகக் கடவுள் வரலாறு ஓதப்பட்டிருப்பதைக் குறித்துச் சில உரை கூறி இக்கட்டுரையை முடித்துவிடுகிறேன். முருகன் திருவிளையாடல்களைக் கூறும் புராணங்கள் பல. அவைகளுள் தலையாயது கந்தபுராணம். அதிலுள்ள கதையை ஆராய்ந்தாலும் முருகன் இயற்கைக் காரணன் என்பது புலப்படும். முருகன், சிவபெருமான் திருக்கண்களினின்றும் தோன்றி, வாயுவாலும், அக்னியாலும் தாங்கப்பெற்று, சரவணப் பொய்கையில் குழந்தையாகி, பூமியில் திருவிளையாடல் புரிந்தான் என்று புராணங் கூறுகிறது. இதனை ஆராய்ந்தால், முருகன், மண் புனல் தீ வளி வெளி என்னும் ஐந்து பூதங்கட்கும் காரணன் என்பது புலனாகும். சிவம்-வெளி; வாயு அங்கியங்கடவுள் - முறையே காற்று தீ ; சரவணப் பொய்கை - புனல் ; பூமி - மண். இவ்வுண்மை கண்ட கச்சியப்ப முனிவர் தமது தணிகைப் புராணத்தில்,

' ஓங்கொளியாய் விசும்பாதி தொறுமியலுந்
தனதியல்பை உருவின் மாட்டும்
டாங்குபெறத் தெரித்ததுபோற் பலபொறியாப்
பாமர்விழி பயந்த ஞான்று

தேங்கொளியாய் வெளியடர்ந்து வளிதொடர்ந்தொள்
ளொளிபடர்ந்து தெளிநீர்ப் புக்கு
நீங்கிவிளை யாட்டயர்ந்து தணிகையமர்
பெருவாழ்வை நினைந்து வாழ்வாம்'

என்று முருகனைப் போற்றி யிருப்பது ஈண்டு உன்னற்பாலது. இச் செய்யுட்களுள்ள நுட்பம் அறிஞர் கருத்தைக் கவரும்.

முருகக் கடவுள் ஆறுமுகங் கொண்டது, வேல் தாங்கியது, சூரர்களைத் தடிந்தது, இருமாதர்களை மணந்தது முதலிய வரலாறுகளிலுள்ள உண்மைகளைக் குமார தந்திரம், கந்த புராணம், திருப்புகழ், சுப்ரமண்ய பராக்கிரமம், பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் பிரபந்தங்கள் முதலிய நூல்களிற் காண்க. ஆறுமுகம் - பிரணவத்தோடு கூடிய பஞ்சாக்கரம். சூரர்கள் - ஆணவம் கன்மம் மாயை. வள்ளி - இச்சா சக்தி. தெய்வயானை - கிரியா சக்தி. வேல் - ஞான சக்தி. முருகனுடைய இச்சையால் கிரியையால் ஞானத்தால், மக்களிடத்துள்ள இச்சையும் கிரியையும் ஞானமும் கூர்ந்து விளங்க வேண்டுமாதலால், அவன் முறையே மூன்றற்கும் அறிகுறியாக வள்ளி - தெய்வயானை - வேல் - என்னும் மூன்று சக்திகளையுந் தாங்கியுள்ளான். முருகனை வழிபடுவோர் இம் மூன்றும் விளங்கப்பெறுவர். முருகன் வழிபாடு இப்பொழுது குறைவுற்றுள்ளமையால், மக்கள் இச்சை கிரியை ஞானம் விளங்கப்பெறாது, வறுமை முதலிய சிறுமைகளுக்கு அடிமைப்பட்டு இடர்ப்படுகிறார்கள்.

சிவபெருமானை வழிபட்டு நால்வர் தமிழ் வேதம் பாடினர். திருமாலை வழிபட்டுப் பன்னிருவர் தமிழ் வேதம் ஓதினர். முருகனை வழிபட்டு அருணகிரிநாதர் தமிழ்வேதம் அருளினர். வாக்கிற் சிறந்த அருணகிரிநாதர் அருளிய திருப்புகழை ஓதும்போதும், பிறர் ஓதக்கேட்கும்போதும், முருகக் கடவுளின் நுண்ணிய உருவம் அகத்தில் புலனாவது போன்ற ஒரு தோற்றமும், ஒருவித அன்பும் நிகழ்வதைக் காணலாம். இக்காலத்துப் பாவலராக இலங்கிய நம் சுப்பிரமணிய

பாரதியார் முருகக்கடவுளைப்பற்றிப் பாடிய பாடல்களிலும் முருகைக் காணலாம். விரிவஞ்சி இவ்வளவில் நின்று விடுகிறேன்.

தமிழ்மக்களே! முருகன் எல்லாப் பொருள்களிலும் நீக்கமற நின்று அவைகளை அழகு செய்வதை உங்கள் முன்னோர்கள் கண்டு இன்பநுகர்ந்தார்களல்லவா? அவ்வின்பத்தை இப்பொழுது நீங்கள் நுகர்கிறீர்களா? இயற்கை, முருகன் வடிவாயிருப்பது உங்கட்குப் புலனாகிறதா? முருகனைக் காண முயலுங்கள். அவன் செந்நெறியை ஓம்பினால் அவனைக் காணலாம். முருகனுக்கு ஏராளமான கோயில்களிருக்கின்றன. இனிப் புதிதாகக் கோயில்கள் கட்டுதல் வேண்டாம். எங்கும் நிறைந்துள்ள அவனுக்கு எக்கோயிலும் வேண்டாம். அவன் செந்நெறியை வளர்க்கச் சபைகள் காணுங்கள்; அவன் பெயரால் பத்திரிகை நடத்துங்கள்; பாடசாலை அமையுங்கள்; திருப்புகழைப் பொருளுணர்ந்து ஓதுங்கள்; இயற்கையிலுள்ள அவனழகை நூல்களாக எழுதுங்கள்; போலிஞானம் பேசி முருகனிடத்துள்ள அன்பை - நம்பிக்கையை - மன உறுதியைக் - கெடுத்துக் கொள்ளாதேயுங்கள்; முருகன் பெயரால் பிணியை ஓட்ட முயலுங்கள்; நம்பிக்கை மதத்தை வளருங்கள்; முருகன் திருவருளால் கட்டுக்களை அறுத்துக் கொள்ளுங்கள். முழு அழகு உங்கள்பால் பொலியும். (16–6–1922)

# கிறிஸ்து

## I

நாளை கிறிஸ்து பிறந்த திருநாள். அந்நாள் உலகின் ஒவ்வொரு மூலையிலுங் கொண்டாடப்படும். கிறிஸ்து பிறந்த திருநாள் பெரிதுங் கிறிஸ்துவர்கள் என்று சொல்லப்படுவோரால் மட்டுங் கொண்டாடப் பெற்று வருகிறது. அவர்களுடன் மற்றவர்களும் அத்திருநாளைக் கொண்டாடுதல் வேண்டும். அக்காலம் விரைந்து விரைந்து நெருங்கிக்

கொண்டே வருகிறது. அக்காலத்தைக் காண ஆங்காங்குள்ள அன்பர்கள் முயற்சியும் வேண்டற்பாலது.

கிறிஸ்து ஒருநாட்டார்க் கென்றுதல், ஒரு மொழியார்க் கென்றுதல், ஒரு வகுப்பார்க் கென்றுதல், ஒரு நிறத்தார்க் கென்றுதல், ஒரு சமயத்தார்க் கென்றுதல் தோன்றியவரல்லர். அவர் மன்பதைக்கெனத் தோன்றியவர். அவரை ஒரு கூட்டத்தார் கட்டில் புகுத்துவது அறிவுடைமையாகாது.

கிறிஸ்துவைப்போலவே மற்றப் பெரியோர்களும் மன்பதைக்கென்றே தோன்றியவர்கள். அவர்களையும் ஒவ்வொரு கூட்டமென்னும் எல்லையில் உலகம் கட்டுப்படுத்தியிருக்கிறது. உலகர்நிலை எவ்வாறாயினும், அப்பெரியோர்களிடத்தெழும் அன்புநீர், எவர் கட்டுக்கும் அடங்காது, பொதுவாக மன்பதை என்னும் வான்பயிர் நோக்கியே பாய்ந்து வருகிறது.

முன்னைநாளில் தற்போதைய போக்குவரவு சாதனங்கள் இல்லை. அதனால் ஒரு நாட்டார் மற்றொரு நாட்டாருடன் அடிக்கடி கலந்து அளவளாவும் வாய்ப்பு அந்நாளில் நேரவில்லை. இப்பொழுது எந்நாட்டிற்கும் எல்லா நாட்டாரும் அடிக்கடி போகுஞ் சாதனங்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஒரு நாட்டில் பல நாட்டார் வதியும் பேறும் இந்நாளில் கிடைத்திருக்கிறது. இந் நற்காலத்தில், அன்புநெறி ஓம்ப ஆங்காங்கே தோன்றிய பெரியோர்களை, நாடு மொழி முதலிய வேற்றுமைகளால் பிரித்து, அவர்களை ஒவ்வொரு கூட்டத்தாரிடத்தில்மட்டுங் கட்டுப்படுத்துவது அறிவுடைமையாகத் தோன்றவில்லை. உலகில் பல பாகங்களிலுந் தோன்றிய பெரியோர்கள் எல்லாரும் மன்பதைக்குரியார் என்னும் ஒரு பெருங்கொள்கை நிலவுங்காலம் சேய்த்தே நிற்கவில்லை.

கிறிஸ்துபெருமானைக் கடவுள் குமாரரென்றும், கடவுள் அவதாரமென்றுஞ் சிலர் சொல்கிறார்; அவரைச் சிலர் தீர்க்கதரிசி யென்று செப்புகிறார்; சிலர் சீவன் முத்தரென்று கூறுகிறார்; சிலர் அரசியல்வாதி என்றும் இயம்புகிறார். இன்னும் அவரை வெவ்வேறு துறையினர் என்று நவில்வோரும் உளர். கிறிஸ்துவைப்பற்றி எவர் என்ன கூறினுங்

கூறுக. அக்கூற்றுக்கண் மனம் விடுத்து மயக்குற வேண்டுவது அநாவசியம். கதையுலகம் வேறு ; சரித்திர வுலகம் வேறு ; அன்புலகம் வேறு.

கிறிஸ்துவின் திருவாய்மொழிகளைத் திரட்டி அன்பர்களாகிய மார்க்கும், லூக்கும், மத்தேயுவும், யோவானும் நமக்கு உதவியிருக்கிறார்கள். அத் திருவாய்மொழிகளில் நெஞ்சை இருத்த இருத்த, அவைகளிடைக் கிறிஸ்து பெருமான் புலனாவர். வாயினால் இத்தகைத்தெனச் சொல்ல முடியாத ஓர் அன்புவடிவங் காட்சியளிக்கும். அக்காட்சி, பேயின் மருளாடும் நெஞ்சை, ஆண்டவன் அருளாடும் சிற்சபையாக்கும். 'சுவிசேஷம்' என்னுந் தெய்வ மறைவழிக் கிறிஸ்து பெருமானைக் காண முயல்வதே அறிவுடைமை.

யான் கிறிஸ்துவைப் பள்ளிக்கூடத்தில் பயின்று வந்தபோது, 'சுவிசேஷ' மொழிகளைப் படித்ததுண்டு ; மனப்பாடஞ் செய்ததும் உண்டு. கிறிஸ்துபெருமான் மலைப்பொழிவைப் பன்முறை யான் பாராயணஞ் செய்திருக்கிறேன். அப்பொழுது எழுத்தையுஞ் சொல்லையுமே பார்த்தேன் ; படித்தேன். ஆனால் இளமையில் விழுந்த விதை வீண்போகவில்லை.

குழந்தைப் பருவத்திலேயே 'இந்நாட்டான் ; இவ்வகுப்பான் ; இச்சமயத்தான்' என்னும் வேற்றுமைப் பேச்சுக்கள் காதில் விழுந்துவிடுகின்றன. அவை, பின்னே படிப்படியாக வளர்ந்து வளர்ந்து, சகோதர நேயத்துக்கே கேடு சூழ்ந்து, மகன் அறிவைச் சிறைப்படுத்துகின்றன. நாடு, நிறம், சமயம் முதலியவற்றைப்பற்றி உலகில் எழுந்த வாதங்களெத்தனை ! போர்களெத்தனை ! கொலைகளெத்தனை ! இவ்வறியாமையை என்னென்று கூறுவது ? குழந்தைப் பருவத்திலேயே வேற்றுமை நஞ்சூட்டப்பெறுவது நிறுத்தப்பெறல் வேண்டும். சேய்களுக்குச் சமரச சன்மார்க்க அமிழ்தூட்டப் பெற்றோர்கள் பயில்வது நலம்.

இளமையில் என்னுள்ளத்தில் விழுந்த 'சுவிசேஷ' விதை, ஓங்கி வளர்தற்குப், பின்னே பெரிதும் பல சமயநூல்

களை ஆராய நேர்ந்தமையும், பாதிரிமாருடன் நெருங்கிப் பழக நேர்ந்தமையும், பிரமஞான சங்கப் பெரியோர்களின் கூட்டுறவு பெற்றமையும், காந்தியடிகள் வாழ்வையும் நல் லுரைகளையும் ஆயுப்பேறு கிடைத்தமையும், இன்னோரன்ன பிறவும் நீராகவும், காற்றாகவும், ஒளியாகவும், பிறவாகவும் துணைபுரியலாயின. இவ்வேளையில் 'ஒன்றே குலமும் ஒரு வனே தேவனும்' என்னுஞ் சமரச சன்மார்க்கச் சுவையை அருந்தா நிற்கிறேன்.

இந்நாளில் உலகப் பெரியாரென்று அறிஞரால் போற் றப்பெறும் மகாத்மா காந்தியின் வாழ்வை ஒழுங்குபடுத்தி யது கிறிஸ்துவின் மலைப்பொழிவு என்பது உலகறிந்த தொன்று. காந்தியடிகளே பன்முறை அவ்வாறு கூறியிருக் கிறார். கிறிஸ்துவின் மலைப்பொழிவில் படியும் ஒவ்வொரு வரும் காந்தியாதல் ஒருதலை. காந்தியடிகள் நிகழ்த்தும் பொறுமைப் போர் மலைப்பொழிவில் மிளிர்வது. வாழ்விற் குரிய அன்புத் துறைகளெல்லாம் அப் பொழிவிடை மிளிர் கின்றன. அதன்கண் பொறுமைமலை நிற்கிறது; அன்பு ஊற் றுக்களிருக்கின்றன; அவைகளினின்றும் அருள்நீர் பெருக் கெடுத்து அருவிகளாக இழிதருகிறது; அந்நறுநீரால் வளரும் இன்பப்பொழில் காட்சியளிக்கிறது. அப் பொழிலின் தண் ணிழல், பிறர் குற்றத்தைப் பாராட்டத் தூண்டாது; தன் குற்றத்தைக் களையத் தூண்டும்; இகலை இருந்தவிடந் தெரி யாமற் போகச்செய்யும்; பகைவரிடத்தும் அன்பு காட்டும் பெருநிலையை உணர்த்தும்; ஆண்டவன் உண்மையை அறி வுறுத்தும். மனித வாழ்விற்குரிய அமிழ்தம் அங்கே திரண்டு கிடக்கிறது. அதைப்பருகுதற்கு எவ்விதக்கட்டுப்பாடுமில்லை.

'தீமையோடு எதிர்த்து நிற்கவேண்டாம்; ஒருவன் உன்னை வலது கன்னத்தில் அறைந்தால், அவனுக்கு மறு கன்னத்தையும் திருப்பிக் கொடு.' 'உங்கள் சத்துருக்களைச் சிநேகியுங்கள்; உங்களைச் சபிக்கிறவர்களை ஆசீர்வதியுங்கள்; உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மை செய்யுங்கள்; உங்களை நிந்திக்கிறவர்களுக்காகவும் உங்களைத் துன்பப் படுத்துகிறவர்களுக்காகவும் ஜெபம் பண்ணுங்கள்.'

**இஃது அவ்வமிழ்தத்தில் ஒரு திவலை.**

உலகில் இதுபோழ்து கிறிஸ்துவுக்கு மாறுபட்ட மறவினைகளும், உடன்பட்ட அறவினைகளும் நிகழ்ந்து வருகின்றன. நாளடைவில் முன்னையன அருகியும் பின்னையன பெருகியும் மன்பதைக்கு நலஞ்செய்யும். இந்நலம் பற்றியே இந்தியாவில் பொறுமைப் போர் நிகழ்ந்து வருகிறது. இந்தியாவில் நடைபெற்றுவரும் பொறுமைப் போரின் பெற்றியைக் கிறிஸ்துவின் 'சுவிசேஷம்' நன்கு அறிவுறுத்துகிறது. இளைஞர்கள், பொருமை கொள்ளாது, பொறுமைகொண்டு, அடியுதைகளைத் தாங்குவது ஈண்டு உன்னத்தக்கது. கிறிஸ்து பெருமான், அன்று மலைமேல் பொழிந்த அன்பு மழை, இன்று உலகிடை இழிந்துவரத் தொடங்கி யிருக்கிறது. கிறிஸ்து பெருமானும் உலகைநோக்கி வருகிறார். உலகில் சமரச சன்மார்க்கம் ஓங்க ; உலகம் அன்பு மயம் ஆக.

கிறிஸ்து பெருமான் வறியர் வீட்டில் பிறந்தவர் ; தமது நாளில் பன்னிருவரையே மாணாக்கராகப் பெற்றவர். அவருடையபோதனை, அவர்நாளில் திரிபாகக்கொள்ளப்பட்டது. அவர் அரசாங்கத்தாரால் கொல்லப்பட்டார். கிறிஸ்து எந்நிலையிலும் உறுதியினின்றும் பிறழ்ந்தாரில்லை; தமக்குக் கேடு சூழ்ந்தவரிடத்தும் அவர் இகல் கொண்டாரில்லை. தம்மை வெறுத்தோர் விரும்பினோர் எல்லோரையும் அவர் ஒருமையுணர்வால் நோக்கினார். தம்மை விருப்பி அணைந்தோரிடம் அன்பு செலுத்தியதைப் பார்க்கிலும், வெறுத்து ஒதுங்கியவரிடம் அவர் பேரன்பு செலுத்தினாரென்று கூறல் மிகையாகாது. காணாமற்போன 'ஓர் ஆட்டை'த் தேடுவது கிறிஸ்துவின் அன்பு. கிறிஸ்து அன்பு வடிவம்.

'மனிதன் குறையுடையவன். ஆண்டவன் ஒருவனே நிறையுடையவன்' என்று கிறிஸ்து பெருமான் உலகிற்கு அருளியுள்ளார். மனிதன் குறைபாட்டால் சிற்சில தவறுதல்களை அறியாமையாற் செய்யும் இயல்பினன் என்றும், பின்னே நல்லறிவு பெற்று, அவன் ஆண்டவனை நோக்கி அழுது அழுது முறையிட முறையிட உய்வு பெறுவான்

என்றும் கிறிஸ்து பெருமான் அறிவுறுத்தி யிருக்கிறார். இது பெரிதுங் கருதற்பாலது. 'ஆண்டவனிருக்கிறான் மன்னிக்க. நாம் குற்றஞ் செய்துகொண்டே யிருக்கலாம். முறையிட்டுக் கொண்டே யிருக்கலாம்' என்று தவறுதலாகக் கிறிஸ்துவின் கருத்தைத் திரித்தலாகாது. அறியாமையினால் குற்றம் செய்து, பின்னே உணர்வுபெற்று, ஆண்டவனை நோக்கி அழும் ஒருவன், மேலும் மேலுங் குற்றஞ்செய்ய ஒருப்படு தல் அரிது. மகன் அழும் அழுகையும், செய்யும் முறையீடும் உண்மையின்பாற்பட்டனவா அல்லவா என்பது ஆண்டவ னுக்குத் தெரியும். ஆண்டவனை ஏமாற்றுதல் எவராலும் இயலாது. உண்மையான அழுகையும் முறையீடும் பின்னே மேலும் மேலும் பாவ வினைகட்கு எளிமையாகாத ஆற்றல் வழங்கும். இந்நுட்பம் உணராது கிறிஸ்துவின் கருத்தைப் பிறழக்கொள்ளல் அறியாமை.

கிறிஸ்து பெருமான் ஆண்டவனுண்மையில் உறுதி கொள்ளுமாறு பலமுறை பகர்ந்துள்ளார்; அவ்வுறுதியைச் செயலிலுங் காட்டியுள்ளார்.

'ஆகாயத்துப் பட்சிகளைக் கவனித்துப் பாருங்கள்; அவைகள் விதைக்கிறதுமில்லை; அறுக்கிறதுமில்லை; களஞ்சி யங்களில் சேர்த்து வைக்கிறதுமில்லை; அவைகளுக்கும் உங் கள் பரமபிதா பிழைப்பூட்டுகிறார்; அவைகளைப் பார்க்கிலும் நீங்கள் விசேஷித்தவர்கள் அல்லவா?'

'உடைக்காகவும் நீங்கள் கவலைப்படுகிறதென்ன? காட் டுப் புஷ்பங்கள் எப்படி வளர்கின்றனவென்று கவனித்துப் பாருங்கள்; அவைகள் உழைப்பதுமில்லை; நூற்பதுமில்லை.'

'ஆகையால், நாளைக்காகக் கவலைப்படாதிருங்கள்; நாளையதினம் தன்னுடையவைகளுக்காகக் கவலைப்படும். அந்தந்த நாளுக்கு அதனதன் பாடு போதும்.'

நேயர்களே! இத்திருமொழிகளை உற்று நோக்குங்கள். வெறுமையாகக் 'கடவுள் உண்டு' என்று வாதிப்போர் அனை வரும் ஆத்திகராகார். ஆத்திகம் பேச்சில் இருப்பதன்று. "நாளைக்கு எப்படிப் பிழைப்போம்' என்று அஞ்சுகிறவர்கள்

கடவுளை மறந்தவர்களே யாவார்கள். ஆகாயத்துப் பறவைகளையும், காட்டுப் பூக்களையும் கிறிஸ்து பெருமான் சுட்டிக் காட்டிக் கூறிய மொழிகளைப் பாருங்கள். நாளைக்கென்று கவலையுறாது, ஆண்டவன் உண்மையில் உறுதிகொண்டு நிற்பவன் எவனோ, அவனே ஆத்திகனாவன். 'அன்றாட உணவை எங்களுக்கு அன்றாடந் தாரும்' என்றே கிறிஸ்து பெருமான் வேண்டுதல் செய்தார்.

'என்னிமித்தம் உங்களை நிந்தித்துத் துன்பப்படுத்திப் பலவித தீமையான மொழிகளையும் உங்கள் பேரில் பொய்யாய்ச் சொல்வார்களானால் பாக்கியவான்களா யிருப்பீர்கள்' என்று கிறிஸ்து அருளிச் செய்ததை நேயர்கள் ஊன்றிக் கவனிப்பார்களாக. இந்நாளில் - அரசியல் கட்சிகள் மிகுந்துள்ள இந்நாளில் - பொய்ம்மைகளும், நிந்தனைகளும், பிற இழிவுகளும் அளவின்றி எழுகின்றன வல்லவோ? அவைகளைச் சகிக்கவேண்டுமென்பது கிறிஸ்து பெருமான் கட்டளை. சகிக்கும் மனம் வேண்டும். அம்மனம்பெற முயலல் வேண்டும். கிறிஸ்துபெருமான் எத்துணை வசைமொழிகளை - பழிமொழிகளை - கொடுமைகளை - ஏற்றார்; பொறுத்தார். அப்பொறுமைக் கிறிஸ்துவைப்பெற - காண - முயலவேண்டுவது நம்பெருங் கடனன்றோ?

'கிறிஸ்து இப்பொழுது இருக்கிறாரா' என்று சிலர் கேட்பர். இதற்கு என்ன பதிலிறுப்பது? கிறிஸ்து என்றும் இருக்கிறாரென்றே நான் நம்புகிறேன். பொறுமையும் தியாகமும் அன்பும் கிறிஸ்துவாக வீற்றிருத்தலை மறுக்க மனம் எழுங்கொல்? இந்நாளில் பல இடங்கள் போந்து சன்மார்க்கத்தை அறிவுறுத்திவந்த சாது சுந்தரசிங் என்பார் கனவுலகில் தாங்கண்ட காட்சியை ஓரிடத்திற் குறிப்பிடுகிறார்.

'* * * அரியாசனத்தின் நடுவண் என்றும் வீற்றிருக்கும் கிறிஸ்துவின் வடிவம் சொல்லுக்கடங்காதது; வருணனைக்கு எட்டாதது. கிறிஸ்துவின் மெய்யருள் பெற்றவேளையில் என் புறக்கண் கண்ட முகத்தையே, இப்பொழுது அகக்கண் காணும் முகமும் ஒத்திருக்கிறது. இரத்தஞ் சொரியுங்

தழும்புகள் அவர் வடிவில் இருக்கின்றன. அவைகள் அவலட்சணமாக இல்லை. அவைகள் மிக ஒளியாகவும் அழகாகவும் இருக்கின்றன. அவரது தாடி நெஞ்சைக் கவர்கிறது. அவரது சடைக்கற்றை ஒளியுமிழும் பொன்மயமாயிருக்கிறது. அவரது முகம் ஞாயிறுபோன்றொளிர்கிறது. அவ்வொளி உறுத்துவதில்லை; இன்பமா யிருக்கிறது; புன்முறுவல் அரும்பிய வண்ணமாயிருக்கிறது. அம்முறுவலில் அன்பு ஒழுகுகிறது. அச்சமென்பதே அங்கில்லை. * * *'

சாது சுந்தரசிங்கின் அகக்கண் கண்ட காட்சியைக் கண்ணுள்ளவர்கள் காண்பார்களாக.

கிறிஸ்துவின் ஒளி யாண்டும் பரவுதல் வேண்டும். அதற்குப் பொறுமை, தியாகம், அன்பு முதலியனவேண்டும். இவைகளைக் கிறிஸ்துவின் 'சுவிசேஷம்' - சிறப்பாக மலைப்பொழிவு-கூட்டும். கிறிஸ்துவெனில் இன்று கல்லெறிவோர் நாளை மலர் தூவுவர். இது கிறிஸ்துவின் மாண்பு. ஆதலால், அன்பர்களே! கிறிஸ்துவை நினையுங்கள்; அவர் சொல்வழி நில்லுங்கள். அவர் மன்பதைக்கே உரியவர். அவரை, நாடு, நிறம், மொழி, வகுப்பு, சமயம் முதலிய கட்டுகளால் கட்டிப் பார்க்க முயலாதேயுங்கள்; சமரச சன்மார்க்க வெளியில் நின்று அவரை நோக்குங்கள்; வேற்றுமை கருதாது அவர் திருநாளைக் கொண்டாடுங்கள். கிறிஸ்துவின் அன்பரசு - அமைதி ஆட்சி - விரைவில் உலகில் வருவதாக. சாந்தி! சாந்தி! சாந்தி! (24-12-1930)

## II

கிறிஸ்துபெருமான் பிறந்த திருநாள் வரும் வெள்ளிக்கிழமை உறுகிறது. அத்திருநாள் உலகின் நானாபக்கங்களிலும் கொண்டாடப்படுவது வழக்கம். கிறிஸ்து பெருமான் பிறந்த திருநாளை இப்பொழுது 'கிறிஸ்துவர்கள்' என்று அழைக்கப்படுவோர் மட்டுங் கொண்டாடுதல் வேண்டும் என்னும் நியதியில்லை. அத்திருநாளை எல்லாருங் கொண்டாட

லாம். கிறிஸ்து உலகுக்காக வந்தவரேயன்றிக் குறிப்பிட்ட ஒரு கூட்டத்தார் பொருட்டு வந்தவரல்லர்.

கிறிஸ்துவைப் பின்பற்றுவோர் அனைவரும் கிறிஸ்தவரே யாவர். புரோகிதர்களால் ஞானஸ்நானம் பெறுகின்றவர் மட்டுங் கிறிஸ்துவர் என்று சொல்லப்படுவது நியாயமாகாது. புரோகிதர் ஞானஸ்நானத்தில் பரிசுத்த ஆவி உலவாது.

ஞானஸ்நானம் வேண்டும். எந்த ஞானஸ்நானம் வேண்டும்? பரிசுத்த ஆவியின் ஞானஸ்நானம் வேண்டும். புரோகிதர் ஞானஸ்நானம் அநாவசியம்.

பரிசுத்த ஆவியின் பதிவு ஞானஸ்நானத்துக்கு அறிகுறி யாகும். கிறிஸ்து பெருமான் ஞானஸ்நானம் பெற்றதும், அவர்மீது பரிசுத்த ஆவி, புறுவாக இறங்கியதென்பது, மத்தேயு முதலியோர் எழுதிய சுவிசேஷங்களால் நன்கு விளங்குகிறது. கிறிஸ்துவுக்குப் பின்னே, அவரது நற் செய்தியைப் பரப்பப் புகுந்த பேதுரு - பவுல் முதலியோர் களும் பரிசுத்தஆவி பதியப்பெற்ற கிறிஸ்துவர்களே யாவார் கள். புரோகிதர்களால் ஞானஸ்நானம் பெற்றவர்களே கிறிஸ்துவர்கள் என்று கொள்வது தவறு.

உலகில் தோன்றிய பெரியோர்கள், காலதேச வர்த்த மானத்துக் கேற்ற முறையில் கடவுள் நெறியெனுஞ் சமயத்தை ஓம்பிச் சென்றூர்கள். பின்னே அச் செந்நெறியில் சம்பிரதாயங்கள் நுழைந்துவிடுகின்றன. சம்பிரதாயங்கள், கட்டுப்பாடுகள் என்னும் நச்சுக்குழவிகளைப் பெறுகின்றன. இச் சம்பிரதாயங்களும், கட்டுப்பாடுகளும் கடவுள்நெறி யெனுஞ் சமயமாக மக்களால் கொள்ளப்படுகின்றன. இவ் வாறு உலகம் பேய்க்கு இரையாகிறது. கடவுள் நெறியெனுஞ் சமயம் வேறு, சம்பிரதாயம் வேறு என்பதைத் தெளிந்து நடப்பதே சிறப்பு.

கிறிஸ்துபெருமான் எப்பொழுது உலகில் தோன்றினூர்? உலகின் பல பகுதிகள் ரோம ராஜ்யத்தால் இடருற்றுக் கொண்டிருந்த வேளையில் - கடவுள் பெயராலும் சமயப் பெயராலும் சம்பிரதாயச் சடங்குப் பேய் நடம் புரிந்த

சமயத்தில் - கோயில்களெல்லாம் கள்ளர் குகைகளாக மாறுபட்ட காலத்தில் - பெருமான் தோன்றினார். அவரது வருகையின் அவசியம் அதுபோது நேரலாயிற்று. அவர் வந்தார்; வந்து ஆண்டவன் உண்மை நெறியை அறிவுறுத்திப் போந்தார். அவர் பிறந்த திருநாள், வரும் வெள்ளிக் கிழமை உறுகிறது. அத்திருநாளை எல்லாருங் கொண்டாடுவாராக.

கிறிஸ்து பெருமானைப் பற்றிச் சரித்திரக்காரர்களும், ஆராய்ச்சிக்காரர்களும், சம்பிரதாயக் 'கிறிஸ்துவர்'களும், மற்றவர்களும் ஒவ்வொருவிதமாகக் கூறுகிறார்கள். அக் கூற்றுக்களின் நுட்பங்கள் எவ்வாறாயினும் ஆக. கிறிஸ்து என்னுங் குமரனிருத்தல் உண்மை. அக்குமரனை அன்பினாலும், ஆராய்ச்சியினாலும், அறியாமையினாலும் பலர் பலவாறு போற்றுகிறார். போற்றுவதில் மனந் திரும்பலும் உண்மைக் கசிவும் இருத்தல்வேண்டும். இருப்பின் கிறிஸ்துவின் ஒளியைப் பெறலாம்; காணலாம். கிறிஸ்து சத்தியமாகவும் ஒளியாகவும் நித்திய ஜீவனாகவும் இருக்கிறார். இடையறாத ஜெபமும், செய்த குற்றங்களைக் குறித்த உண்மை அழுகையும் மனந்திரும்பலை நல்குவது ஒருதலை. உயிர்களின் உண்மை அழுகையைக் கேட்கக் கிறிஸ்து இருக்கிறார் ; கேட்டு அவைகளின் பாவத்தைக் கழுவி ஆட்கொள்ள அப்பெருமான் வீற்றிருக்கிறார்.

கிறிஸ்து என்னும் மொழியைக் கண்டு எவரும் மருள வேண்டுவதில்லை. அஃது எபிரேய மொழி. அவர் அபிடேகம் பெற்ற குமரனாயிருந்து உயிர்கட்கு அருள்செய்வதொன்றே கொள்ளற்பாலது. மொழி வேற்றுமைகளை நீக்கிப் பொருளொற்றுமையைக் கொள்வோர்க்கு ஐயந்திரிபு மயக்கந் தோன்றுதல் அருமை. ஆகவே, மொழி வேற்றுமைகளை விடுத்துப் பொருளிற் கருத்துச் செலுத்துவது நியாயம்.

என்றுங் குமரனாயுள்ள கிறிஸ்துபெருமான், உலகிடைத் தோன்றிப், போதனையினாலும் சாதனையினாலும் உலகிற்கு ஒளி வழங்கியிருக்கிறார். அவ்வொளியைக் கண்ணுள்ளோர் கண்டே வருகிறார். அப் பேற்றிற்கு வேண்டற்பாலது

அன்பு ஒன்றே. அன்புள்ள இடத்தில், பிறர்க்குத் தீங்கிழைத்தல், பிறர்குற்றம் பாராட்டல், பிறர்பொருள் கவரல், அழுக்காறு, அவா, வெகுளி முதலிய பேய்க்குணங்கள் இருக்குங்கொல்? இரா; இரா. அன்பு, பிறர்க்கினிமை செய்யும் ; பிறர் குற்றம் பாராட்டாது ; பிறர்குற்றத்தை மன்னிக்கும்; தீங்கு செய்வோரிடத்தும் அருள் செலுத்தும் ; பொறையளிக்கும். அன்பே கிறிஸ்து. அன்பை வளர்க்கவே அவர் தோன்றினார்; தோன்றி அன்பையே வளர்த்தார். அவர்தம் அன்பை அளந்து கூறல் இயலாது. அவரே அன்பு ; அன்பு அவரே. தம்மைச் சிலுவையில் அறைந்தவர்களையும் அன்பால்நோக்கி, 'அந்தோ ! இவர்கள் என்ன செய்கிறார்கள் என்பது இவர்கட்குத் தெரியவில்லையே' என்று இரக்கங் காட்டிய கருணைமூர்த்தி நமது கிறிஸ்து பெருமான். 'பாவிகளுக்காகவே நான் வந்தேன்' என்று திருவாய்மலர்ந்தருளிய அருளாளர் நமது கிறிஸ்துபெருமான். அன்பே அன்பே திரண்ட குமர வடிவம் நமது கிறிஸ்துபெருமான். அப்பெருமான் பிறந்த திருநாள், வரும் வெள்ளிக்கிழமை உறுகிறது. அத்திருநாளைச் சாதி மதம் நிறம் மொழி நாடு முதலிய வேற்றுமைகளைக் கருதாது மக்கள் கொண்டாடுவார்களாக.

இப்பொழுது உலகம் போற்றும் ஒருவராகவுள்ள மகாத்மா காந்தி அறிவுறுத்தி வரும் சத்தியாக்கிரகத்துக்கு - அஹிம்ஸா தர்மத்துக்கு - அடிப்படையாக நிற்பது எது? கிறிஸ்துபெருமான் மலைப்பொழிவே யாகும். அப்பொழிவு தம்மைச் சத்தியாக்கிரகத் தருமத்தில் செலுத்தியதென்று மகாத்மா காந்தி பன்முறை கூறியுள்ளார். காந்தியடிகள் கிறிஸ்துவின் ஒளியில் நிற்கிறாரென்று கூறல் மிகையாகாது. காந்தியடிகள் வாயிலாகக் கிறிஸ்துவின் அறம் ஆங்காங்கே பரவி வருகிறது.

'மேல்நாட்டில் பல இடங்களில் - சிறப்பாக ருஷ்யாவில் - கிறிஸ்து மதம் வீழ்ந்துபட்டு நாத்திகம் பரவுகிறதே. கிறிஸ்துவின் ஒளி எங்கே போயிற்று' என்று சிலர் கேட்பதுண்டு. கிறிஸ்துவின் சுவிசேஷத்தை நன்கு உணர்ந்தவர் இக்கேள்வியைக் கேட்கவே மாட்டார்.

கிறிஸ்துவின் பெயரால் சொல்லப்படுவன எல்லாம் கிறிஸ்துவின் அறமாகா. கிறிஸ்துவின் பெயரைமட்டும் உதட்டில் முழக்கிக் கிறிஸ்துவுக்கு மாறுபட்ட செயல்களை நிரப்பும் புரோகித மதத்தைக் கிறிஸ்து மதமென்று கருதுவது தவறு. மேல்நாட்டில் இப்பொழுது உடைபட்டு வருவது புரோகித மதமேயாகும்.

புரோகித மதத்தைத் தொலைக்கவே கிறிஸ்து பெருமான் தோன்றினர். வேதபாரகர், பரிசேயர், சதுசேயர் முதலியவர்கள் கடவுள் பெயரால் அனுட்டித்து வந்த சம்பிரதாய வழக்க ஒழுக்கங்களையும், தேவாலயங்கள் கள்ளர் குகைகளாக மாறியதையும் கடிந்து, கிறிஸ்துநாதர் நிகழ்த்திய அறச் செயல்களைக் கூர்ந்து நோக்குவோர்க்குப், புரோகித மதம் வேறு என்பதும் கிறிஸ்துநெறி வேறு என்பதும் நன்கு புலனாகும்.

உண்மைக் கிறிஸ்துவை மறந்ததனாலேயே இப்பொழுது உலகம் இடர்ப்படுகிறது. உலகம் இன்னும் நல்லறிவு பெறவில்லை. போர்களும், புரட்சிகளும், கலகங்களும், குழப்பங்களும் பெருகுதற்கு மக்கள் இவ்வேளையில் முயன்றுவருகிறார்கள். இவைகளால் மோதுண்ண மோதுண்ண மக்கட்கு நல்லறிவு பிறக்கும். உண்மைக் கிறிஸ்துவின் நினைவு பின்னே தோன்றும். அவ்வேளை சேய்மையில் இல்லை ; அணிமையில் நிற்கிறது.

1928-ம் ஆண்டு முதல் 1936-ம் ஆண்டுவரை உலகம் பலதிற அல்லலுக்குட்படுமென்று நாம் அடிக்கடி 'நவசக்தி' யில் எழுதி வந்திருப்பதை நேயர்கள் மறந்திருக்க மாட்டார்கள். அக்கால எல்லையின் மத்தியப் பகுதி 1932-ம் ஆண்டு.

1932-ம் ஆண்டைப் பற்றிப் பலதிற ஜோசியங்கள் வெளிவருகின்றன. ஆபு மலைப் பெரியார் பொன்மொழி முன்னரே 'நவசக்தி'யில் வெளிவந்திருக்கிறது. இப்பொழுது மேல்நாட்டுக் கணிகளின் கருத்துக்கள் சில கிடைத்திருக்கின்றன. திரு. நெய்லர் என்பவர், இம்முறை 'கிறிஸ்மஸ்' நற்காலத்தில் தோன்றவில்லையென்றும், 1932-ம் ஆண்டில்

இந்தியாவில் மிக பயங்கரமான நிலை ஏற்படுமென்றும் கூறி யுள்ளார். இன்னொருவர் 1932-ம் ஆண்டில் இந்தியாவுக்கும் பிரிட்டனுக்கும் நல்ல காலம் பிறக்குமென்றும், உலகில் வாணிபம் முதலியன நலனுறுமென்றும், கப்பல் விபத்துக்கள் நேரிடுமென்றும், மின்சாரப் புதுமைகள் காணப்படு மென் றும், கோடை காலத்தில் ஆசியாவில் போர் நிகழு மென்றும் கூறியிருக்கிறார். இவர் ஜோசியம், சமீபத்தில் பிரிட்டனில் நடைபெற்ற தேர்தலிலும், தேசீய அரசாங்க அமைப்பிலும் உறுதிப்பட்டதென்று சொல்லப்படுகிறது.

ஜோசியக் கூற்றுக்கள் எங்ஙனமாயினும் ஆக. ஆண்ட வன் ஆணைப்படி எல்லாம் நடக்கும். கிறிஸ்துவுக்கு நல்ல நாள் தீயநாள் என்பன இல்லை. நல்லநாள் தீயநாள் என்பன கிறிஸ்துவை மறந்தவர்களையே பாதிக்கும். 'ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி சனிபாம் பிரண்டு முடனே - ஆசறு நல்லநல்ல அவை நல்லநல்ல அடியாரவர்க்கு மிகவே' என்றார் ஞானசம்பந்தர்.

சோதிடர் நெய்லர், இந்தியக் குழப்பத்தைக் குறிப்பிட்டு, இந்தியாவில் அடக்குமுறையைக் கையாளுதல் வேண்டு மென்று சொல்கிறார் பாவம்! அவர்நிலை இரங்கத்தக்கது. கிறிஸ்து அவரை மன்னிப்பாராக. கஷ்டத்தைக் குறிப்பிட்ட ஜோசிய நிபுணர், கடுமையான முறையில் கருத்தைச் செலுத்து வானேன்? 'கிறிஸ்துவை நினையுங்கள்; கிறிஸ்துவின் அன்பு நெறியைக் கடைப்பிடித்து நில்லுங்கள்' என்று அவர் சொல்லலாகாதா?

வருவது நல்லதாயினும் ஆக; தீயதாயினும் ஆக. 'நலந்தீங்கிலும் உன்னை மறந்தறியேன்' என்ற ஆன்றோர் முதுமொழிப்படி, நலந்தீங்கு இரண்டிலும் ஆண்டவனை மறவாது வழுத்துவது சிறப்பளிக்கும். எந்நிலையிலும் எச் சமயத்திலும் ஆண்டவனை மறத்தலாகாது.

கிறிஸ்து பெருமானே! 1932-ம் ஆண்டு ஒரு பெருஞ் சோதனைக் காலமா யிருக்கலாம். எல்லாச் சோதனையும் நின் வழி நிகழ்தல் வேண்டும்; உன்னருள் வேண்டும்; மக்கள்

குற்றங்களையுங் குறைகளையும் மன்னித்தருள்க; பொறுத்தருள்க; உலகமெங்கும் அன்புநெறி பரவ அருள்செய்க; எல்லா அரசும் நின்வழி இயங்கல் வேண்டும்; எங்கணுஞ் சமாதானம் நிலைபெறல் வேண்டும்; எங்கணும் நின்னொளி பரவுதல் வேண்டும்; எங்கணும் நின்பேச்சே பேசுதல் வேண்டும்; அந்நிலையை உலகுக்கு அருள்க; அதற்குரிய இந்திய நாட்டுக்கு விடுதலை அருள்க; ஏழை இந்தியாமீது கருணை சொரிக; சொரிக. அடைக்கலம்; அடைக்கலம்.

(23-12-1931)

## நபிநாயகத்தின் திருநாள்

உலகம் ஒருபோது அறியாமை என்னும் இருளில் வீழ்ந்து, கண்மூடி வழக்க ஒழுக்கங்களைக் கடவுள் வழிபாடென்றும், அகண்டாகாரமாகவுள்ள ஆண்டவனைக் கண்டப் பொருளென்றும், இவ்வண்டங்களையெல்லாம் ஆக்கி அளிக்க வல்ல முழுமுதற் பொருள் இல்லையென்றுங் கருதி இடர்ப் பட்டுக்கொண்டிருந்த வேளையில், அவ்விருள் கடிய ஒரு செஞ்ஞாயிறு தோன்றிற்று. அஞ்ஞாயிறு தோன்றிய பின்னை, கண்மூடி வழக்க ஒழுக்கங்கள், நாத்திகக் கொள்கைகள் முதலிய இருட் படலங்கள் இரிந்தோடின.

அஞ்ஞாயிறு எது? அராபியாவில் தோன்றிய நபி நாயகமென்னுஞ் செஞ்ஞாயிறே யாகும். அராபியாவில் மக்கமாநகரில் நபி நாயகம் தோன்றியபின்னை, எங்கும் நீக்கமற நிறைந்துள்ள ஆண்டவன் ஒருவனே என்றும், அவ்வாண்டவன் பிறப்பிறப் பில்லாதவன் என்றும் மக்கள் கொள்ளலானார்கள்; கண்மூடி வழக்க ஒழுக்கங்களும், நாத்திகமுந் தொலைந்தன; நாளுக்குநாள் நபிநாயகத்தின் ஒளி உலகின் நாலு பக்கங்களிலும் வீசலாயிற்று. இப்பொழுது அவருடைய அறிவுறுத்தல் பரவாத நாடு இல்லை என்றே சொல்லலாம்.

நாத்திகப் பேயை ஓட்டி, ஆண்டவனுண்மையை அறிவுறுத்திய நபிநாயகத்தின் திருநாளைக் கொண்டாட உலகம் கடமைப்படல் வேண்டுமென்று சொல்லவும் வேண்டுமோ? அத்திருநாள், வரும் ஞாயிற்றுக்கிழமை உறுகிறது. அப்பெருநாளை உலகம் கொண்டாடுவதாக. 'ஆண்டவன் ஒருவனே; அவன் யாண்டும் நீக்கமற நிறைந்திருப்பவன்; பிறப் பிறப்பில்லாதவன்; அவனுக்கு ஒப்பாகவும் உயர்வாகவும் பிறரையாதல் பிறவற்றையாதல் கருதலாகாது' என்னும் விழுமிய கொள்கையும், எவ்வுயிரையும் தன்னுயிர்போல் பார்க்குஞ் சகோதர நேயமும் மன்பதைக்கு இன்றியமையாதன. இவைகளில் உறுதியுடையார் அனைவர்க்கும், நபிநாயகத்தின் திருநாள் உரிமையுடைத்தாகும். ஆகவே மக்கள் நபிநாயகத்தின் திருநாளை யாண்டுஞ் சிறப்பாகக் கொண்டாடுவார்களாக.

இப்பொழுது 'கடவுள் வேண்டாம், மதம் வேண்டாம்' என்னும் பாழுங்கொள்கையும், வகுப்புப் பிணக்கும், வேறு பல சிறுமைகளும் நாட்டை அரித்துவரல் கண்கூடு. இவ்வேளையில், நபிநாயகத்தின் நினைவும், அவர் அறிவுறுத்திய அறத்தின் நினைவும் எத்துணை நலஞ்செய்யுமென்பதை விளக்க வேண்டுவதில்லை.

நபி நாயகம் உலகை உய்விக்க வந்தவர். அவர் ஒரு நாட்டார்க்காதல் ஒரு கூட்டத்தார்க்காதல் உரியவரல்லர். ஆகவே, அவர் திருநாளை உலகங் கொண்டாடுவதாக; கொண்டாடிச் சகோதர நேயத்தை நிலைபெறுத்துவதாக.

(14-8-1929)

# சித்தர்கள்

பண்டை நாளில் நமது நாட்டில் சித்தர்கள் என்றொரு குழுவினர் வதிந்திருந்தார்கள் என்பது, சில நூல்களாலும், அவர்கள் கண்ட மணிமந்திர ஔடதங்களாலும், வேறு பல முறைகளாலும் தெரியவருகிறது. தாயுமானர் போன்ற உண்மை ஞானிகள் பலர், சித்தர்கணத்தைப் போற்றியிருக்கிறார். சித்தர் நூல்களைப் பயின்றால், 'சித்தர் உலகம் ஒரு தனி உலகம்' என்பது புலப்படும். போலி மாயவித்தைகள் செய்து ஊரை ஏமாற்றுவோர், சித்தர் இனத்தில் சேர்ந்தவரல்லர் என்பது ஈண்டுச் சிறப்பாகக் கவனிக்கத்தக்கது.

உலகிலுள்ள எண்ணிலாப் பிறவிகளுள் மனிதப் பிறவி அரிது அரிது என்று பல அறிஞர் கூறிப்போந்தனர். இப் பிறவியிலுள்ள அருமை என்னை? மனிதன் பிறக்கிறான்; வளர்கிறான்; பொருளீட்டுகிறான்; பிள்ளைகளைப் பெறுகிறான்; சாகிறான். மனிதன் வாழ்வு இவ்வளவினதோ? இவ்வளவினதாயின் மனிதப் பிறவிக்கும் மற்றப் பிறவிகட்கும் வேற்றுமை ஒன்றுமில்லாதிருத்தல் வேண்டும். மனிதன் பலவழியில் மற்ற உயிரினங்களோடு மாறுபட்டு வாழ்வதைக் கண்கூடாகக் காண்கிறோம். பறவைகள் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் எத்தகைக் கூடுகளைக் கட்டி வாழ்ந்தனவோ, அத் தகைக் கூடுகளையே இன்னுங் கட்டிக் காலங்கழிக்கின்றன. விலங்கு முதலிய அஃறிணை உயிர்களின் வாழ்வும் அத்தன்மைத்தே. மனிதனே நாளுக்குநாள் பலதிறப் புதுமைகளைக் கண்டு வாழ்ந்து வருகிறான். இதற்குக் காரணம், மற்ற உயிர்த்தொகுதியின் மாட்டில்லாச் சிறப்பியல்புகள் மனிதன் மாட்டிருத்தலாம்.

இப்பொழுது மனிதன் ஆற்றிவரும் அருஞ்செயல்களைக் கொண்டு மனிதன் ஆற்றலை அளவிடுதல் கூடாது. மின்சாரத் துணையானும் நீராவித் துணையானும் மனிதன் கண்டுவரும்

புதுமைகள் அவனது முழு ஆற்றலைப் புலப்படுத்துவனவாகா. தற்காலத்தை, மனிதன் தன்பாலுள்ள பேராற்றலைக் காணாது வாழுங் காலமென்று கூறலாம். மனிதன் தன்பாலுள்ள முழு ஆற்றலையுணர்ந்து வாழ்ந்த காலமொன்றிருந்தது. அக் காலமே சித்தர்கால மென்பது.

மனிதனிடத்தில் எல்லாம் அறியவல்ல - எல்லாம் நிகழ்த்தவல்ல - ஓராற்றல் அமைந்திருக்கிறது. அவ்வாற்றல் கைவரப்பெற்றோர் சித்தரெனப்படுவர். அவர்வழி நின்று இயற்கையும் பணிசெய்யும். அச்சித்தர் கூட்டத்தார், தாங் கண்ட உண்மைகளைப் பின்வருவோர்க்குப் பயன்படுமாறு எளிய நடையிலும் அரிய நடையிலும் நூல்களாக யாத்துப் போந்தனர். அவர்தங் கல்விமுறை, வழிவழி வளர்ந்திருப் பின், இவ்வுலகம் எப்பொழுதோ கடவுட்டன்மை எய்தி யிருக்கும். நாளடைவில் மனிதன் தன்பாலுள்ள நுண்மைக் கூறுகளை ஆராயாது, பருமைப்பாத்திகளை ஆராய்வதில் கருத் தைச் செலுத்தினமையால், சித்தர் கல்விமுறை இறந்துபட லாயிற்று.

சித்தர்கள் பலதிறப்படுவார்கள். அவ் வகுப்புக்களை ஈண்டு விரித்துக்கூற வேண்டுவதில்லை. நிலைபெறாக ஒரே யிடத்தில் வீற்றிருப்போர் ஒரு கூட்டத்தார்; உலக நடை முறைகளைக் கூர்ந்து கவனித்து, அம்முறைகளைப் பெரிய சித் தர்க்கு அறிவிப்போர் மற்றொரு கூட்டத்தார்; உலகம் அற நெறி விடுத்து மறநெறி பற்றி உழலுங்காலத்து, உலகைப் பண்படுத்த உடல் தாங்கி மக்கள்போல் வருவோர் வேறொரு கூட்டத்தார். இம்முறையைச் சிறிது மாறுபடுத்திக் கூறு வோரும் உளர்.

இப்பொழுது உலகம் பொய்ம்மைக்கு இரையாகி வரு தல் கண்கூடு. இந்நாளில் எந்த முறையில், எந்தத் துறையில், எந்தக் கல்வியில், எந்தத் தொழிலில் பொய்ம்மை புகாமல் இல்லை? எங்கணும் பொய்ம்மை புகுந்திருந்தால் மெய்ம் மையை யாண்டுக் காண்பது? மெய் மனிதனல்லனோ தன்பா லுள்ள பேராற்றலை அறியவல்லான்? சித்தர் நிலைக்கு அடிப் படை மெய்ம்மை. அம்மெய்ம்மை இந்நாளில் மறைதற்குரிய

ஆட்சிமுறைகள் உலகில் நடைபெறுகின்றன. தற்கால அரசியல் முறையும், அம்முறைப்பற்றிப் பிரியும் அரசியல் கட்சிகளும், அக்கட்சிக்காரர்களின் பத்திரிகைகளும் பொய்ம்மையை ஈனுந் தாய்தந்தையர்களாக இருத்தலால், உலகில் எம்மூலையிலும் மெய்ம்மை காண்டல் அரிதாகிவிட்டது. இக்காலத்து மனிதனுக்குச் 'சித்தர்' என்னும் மொழியே வேம்பாகத் தோன்றும். உலகம் அறநெறி விடுத்து மறநெறியில் வீழ்ந்து இடர்ப்படுங் காலம் இக்காலம். ஆனால் இக்காலமே சித்தர் வருங் காலம்.

சித்தர்கள் உலகில் தோன்றச் சித்தமா யிருக்கலாம். அவர்களைப் பெறத்தக்க தாய்தந்தையர்கள் இருக்கிறார்களா? உலகம் பொய்ம்மைக்கு இரையாகிறதே! 'உலகம் உய்ய வேண்டும்' என்று எவர் தவங்கிடக்கிறாரோ அவர்வழிச் சித்தர் தோன்றுவர். பண்டைக்காலப் பெரியோர்களின் பிறப்பு வரலாறுகளை ஆராய்ந்து பார்க்க. அவர்கள் தாய் தந்தையர்கள், உலகில் அறநெறி ஓம்பவல்ல புதல்வரைப் பெற அருந்தவம் புரிந்தவர்கள் என்பது பெறப்படும். தவம் நற்புதல்வர்களை நல்கும்.

புத்திரப்பேறு குறித்துத் தவமுஞற்றும் எண்ணம் பிறக்கத்தக்க கல்வி, தொழில், சார்பு முதலியன தேவை. தற்போதைய கல்வியும் பிறவும் விலங்கு நீர்மையுடைய பிள்ளைகளைப் பிறப்பிக்குந் தகையனவா யிருக்கின்றன. தற்காலக் கல்வி ஏற ஏற, அதன் பயன் உள்ளத்தில் பதியப் பதிய, மகன் விலங்காய் மரமாய் மாள்கிறான். மகளும் அவ்வாறே. இவர்கள் வயிற்றிலா சித்தர்கள் பிறப்பார்கள்? சித்தர்கள் உலகில் தோன்றி அறநெறி நிறுத்த விரும்புகிறார்கள். ஆனால் அவர்களையீனும் நல்வயிறு காணோம்.

நன்மக்களைப் பெறுதற்கு முதலாவது நல்லுடல் தேவை. அவ்வமைப்புக்குச் சித்தர்கள் தங்கள் நூல்களில் பலவழிகள் காட்டியுள்ளார்கள். அவர்கள் நூல்களில் மணிமந்திர மருந்து முறைகள் யோகமுறைகள் முதலியன பலபட விரித்துக்கூறப் பட்டிருக்கின்றன. நல்லுடல் அமைப்புக்காதல் சித்தர்கள் நூல்களைக் கற்கலாமன்றோ? உடலை ஓம்புமாறு சித்தர்கள்

அறைகூவி அறிவுறுத்தி யிருப்பதுபோல, வேறெவரும் அறிவுறுத்தவில்லை. வளமில்லா உடல், பிணத்தை ஒத்தது. வளமுற்ற உடல்கொண்டு, உலகிற் செயற்கருஞ் செயல்கள் செய்யலாம். சித்தர்கள் முறைகளைக் கையாண்டால் உடலை வச்சிரம்போ லாக்கிக் கொள்ளலாம்.

நல்லுடலுக்கு அறிகுறி, மூலம்-இதயம்-மூளை இம்மூன்றும் ஊறின்றியிருப்பது. மூலத்துக்கு ஊறு நிகழின், ஏனை இரண்டுக்கும் ஊறு இயல்பாக நிகழும். மூலத்தில் ஊறு நிகழாதவாறு காக்குமுறை உணரப் பொருள் செலவுசெய்து ஜெர்மெனிக்கு ஓடவேண்டுவதில்லை. மூலநோய்க்குக் காரணம் பலபடக் கூறலாம். சித்தர் தலைவர் திருமூலனார் சுருங்கிய முறையில் கூறியது வருமாறு :—

காயத்தில் மூலம் கண்ட விதங்களு
பாயொத்த தீபனம் பரிந்தே அடக்கினும்
மாயை மயக்க மலத்தை அடக்கினும்
ஓயுற்ற குண்டலிக் குட்புகும் வாயுவே.

வாயு புகுந்து மலத்தோ டபானத்தைத்
தேயுவைக் கூட்டித் திரட்டிக் கருக்கிடும்
தோயும் மலம்வரிற் சுருக்கிமுன் னேநின்று
ஆயு மூளைபோ லபானன் இருக்குமே.

இறுக்குஞ் சிலமூல மெழுமண் டலம்போல
மறுக்கர ணங்கொண்டு வருகுஞ் சிலமூலம்
உறுக்கிய வாயுவால் உதிரமும் தான்கூடித்
தறுக்கி விழுக்காட்டும் தான்ரத்த மூலமே.

மூல மெழுந்திடில் முன்னே பசிபோகும்
மூல மெழுந்திடில் முனைவிந்து நாசமாம்
மூல மெழுந்திடில் முழங்கு மிரைச்சல்தான்
மூல மெழுந்திடில் முகியாக் கழிச்சலே.

இப்பாக்களை உற்றுநோக்குக. இந்நாளில் பசியோடு தொழில் புரிவோர் எத்துணை பேர் ? மலமடக்கி வினையாற்றுவோர்

எத்துணை பேர் ? அந்தோ கொடுமை ! விலங்குகளும் பறவைகளும் மலசலத்தைக் காலத்துக்குக் காலங் கழிக்கும் உரிமை பெற்றிருக்கின்றன. ஏழைகளோ ! தொழிலாளிகளோ ! —உள்ளம் உருகுகிறது. உலகம் நோய்க்கு இரையாகிறது. தற்கால நாகரிகம் மனிதனைப் பலவழியிலும் இடர்ப்படுத்துகிறது. இந்நாளில் சித்த நூலாராய்ச்சி மிக இன்றியமையாதது.

சித்த நூல்களை ஆடவர் மகளிர் இருபாலாரும் பயில்வது நலம். இருபாலார் உள்ளமும், சித்தர் நூலில், சித்தர் வரலாற்றில், சித்தர் திருவடியில் பதிந்து கிடத்தல்வேண்டும். அவ்வுள்ள முடையார் வயிற்றில் பிறக்கும் பிள்ளைகள் சித்தர்களாவார்கள். கீழான எண்ணங்களை எண்ணும் உள்ளமுடையார் வயிற்றில் பன்றிகள் பிறக்கும்.

இவ்வுலகில் பெறற்கரிய மக்கட்பிறவி பெற்று, அதனை நோய்க்கு இரையாக்கிப், பெறவேண்டிய பேற்றை இழப்பதினும் அறியாமை வேறொன்றுண்டோ ? இவ்வறியாமைக்குக் காரணம், மனிதன் தன்பாலுள்ள ஆன்மசக்தியை உணராது வாழ்வதும், அவன் வாழ்விடைப் பொய்ம்மை பரவி நிற்பதுமாகும். பொய்ம்மை, ஆன்மசக்தியை ஒடுக்கும் பெரும்பாறை.

பொய்யே மனிதனை எல்லா வழியிலும் கெடுக்கிறது. பொய்யர் பெருகப் பெருக உலகம், பொய்மய மாகிவிடும். இன்னுஞ் சில இடங்களில் மெய்ம்மையாளர் உண்மையால் உலகில் ஒருவாறு அறநெறி நிலவிவருகிறது. உலகிடைப் பொய்யைப் பெருக்கத் தேர்தல்கள் முளைத்திருக்கின்றன. தேர்தல் காலங்களில் வெற்றியைக் குறிக்கொண்டு மனிதன் எவ்வளவு பொய் சொல்கிறான் ? எவ்வளவு தற்பெருமை பேசுகிறான் ? எவ்வெவ்வழியில் பிறரைப் புறங்கூறுகிறான் ? பொய்ம்மையையும், தற்பெருமையையும், புறங்கூறலையும் புற்றீசல்போலப் படைக்குந்தேர்தல் முதலிய தற்கால நாகரிக முறைகள், பழமை வாய்ந்த நமது நாட்டிடைப் புகுந்து இன்னல் விளைக்கின்றன. அறவோர் மறவோராகிறார். அந்தணர் செந்தண்மை யிழக்கிறார். ஆன்மநேயக் கல்வி

முறைகள், பாட்டழகு நுட்பம், காதலின்பம் முதலிய இன்பத்துறைகள் அழிகின்றன. பிறர் அழிவு நினைவும், போர் நினைவும், பிறரை ஏமாற்றும் நினைவும் வளர்கின்றன. தற்கால மனிதன் தன்னைப் பண்படுத்திக்கொள்ள முயலவேண்டும். அம்முயற்சியில் அவன் தலைப்படுவனோ? தலைப்படும் நிலை ஏற்பட்டே தீரும். பொய்யும் பூசலும் பொறாமையும் மலிந்து நெருக்கு நாளில், மனிதன் தீமைகளை வெறுக்க முயலுங் கடப்பாடுடையனாவன். இவ்வேளையில் ஆங்காங்குள்ள அறிஞர், சித்தர் கல்விமுறைகளை உயிர்ப்பிக்க முயலல் வேண்டும்.

பொதுவாக உலகிலும், சிறப்பாக இந்தியாவிலும் வகுப்புப் பூசல், சாதிச்சண்டை, சமயப்போர் முதலியன நிகழ்ந்து வருவது எவரும் அறிந்ததொன்று. சித்தர் கல்வி இப்போர்களைப் போக்கவல்லது. மனிதன் தன்பாலுள்ள ஆன்மசக்தியைக் காணவும் பெறவும் முயலும்போது, சாதிமதச் சண்டை முதலியவற்றில் கருத்தைச் செலுத்தான். ஆன்மசக்தி நினைவூட்டுங் கல்வி இப்பொழுது வேண்டற்பாலது.

நமது தமிழ்நாட்டில் வடமொழி தென்மொழிச் சண்டை ஒருபால் வளர்ந்துவருகிறது. சித்தர்கல்வி அச்சண்டையையும் போக்கும். சித்தர்கள் இருமொழியையுங் கொண்டவர்கள். நாட்டுக்கு நலம் பலவழியிலும் நல்கவல்ல சித்தர் கல்வியைப் பரப்ப ஓர் இயக்கந் தோன்றுதல் வேண்டும். அவ்வியக்கத்தில் ஈடுபட்டு உழைக்கத்தக்க சமரச நோக்குடைய சாந்த மூர்த்திகளும் வேண்டும்.

பாரதப் புதல்வர்களே! உங்கள் முன்னோர்கள் யோகிகளாய், முனிவர்களாய், சித்தர்களா யிருந்தார்கள். நீங்கள் எப்படி யிருக்கிறீர்கள்? உங்கள் கல்வியெங்கே? உங்கள் ஆன்மஞான மெங்கே? உங்கள் வைத்திய முறைகளெங்கே? உங்கள் செல்வங்களெல்லாம் போயின; வறியர்களாகத் தவிக்கிறீர்கள்; சித்தர் காலத்தை நினையுங்கள்; அக்காலம் மீண்டும் வருமா? வரும் என்று, 'உள்ளுவ எல்லாம் உயர்வுள்ளி' எழுங்கள்; சித்தர்களைப் போற்றிப் போற்றிச் சித்தர்களைப் பெற முயலுங்கள்.

'பொய்திகழும் உலகநடை என்சொல்கேன் என்சொல்கேன் பொழுதுபோக் கேதென்னிலோ பொய்யுடல் நிமித்தம் புசிப்புக் கலந்திடல் புசித்தபின் கண்ணுறங்கல், கைதவமலாம லிது செய்தவம தல்லவே கண்கெட்ட பேர்க்கும் வெளியாய்க் கண்டதிது விண்டிதைக் கண்டித்து நிற்றலெக்காலமோ அதை அறிகிலேன், மைதிகழு முகிலினங் குடைநிழற் றிடவட்ட வரையினொடு செம்பொன்மேரு மால்வரையின் முதுகூடும் யோகதண் டக்கோல் வரைந்துசய விருது காட்டி, மெய்திகழும் அஷ்டாங்க யோகபூ மிக்குள்வளர் வேந்தரே குணசாந்தரே வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை பெற்ற வித்தகச் சித்தர் கணமே' —தாயுமானார்.

(5-6-1925)

# கண்ணன் காட்சி

பசுமை பாந்த மாத்தடியில் பசுக்கள் ஒரு பக்கமும், பெண்மக்கள் மற்றொரு பக்கமும் சூழக் கண்ணன் குழலூதி நிற்குங் காட்சியைக் காணுங்கள்; கருதுங்கள்; அக்காட்சியில் ஒன்றியிருங்கள்.

பச்சை மாம் - இயற்கை; கண்ணன் - இறை; குழலோசை - இசை மயம்; பசுக்கள் - சாந்தம்; பெண்மக்கள் - அமைதிநிலை.

இயற்கை உடல். இறை உயிர். நமது உயிர் உண்மையை நாம் எப்படி உணர்கிறோம்? நமது உடலைக்கொண்டு நமது உயிருண்மையை நாம் உணர்கிறோம். அதேபோல இயற்கை என்னும் உடலைக்கொண்டு, இறை என்னும் உயிரை உணர்தல் வேண்டும். இயற்கையோடியைந்து, அதனை உன்னி உன்னி, அதனில் ஒன்ற ஒன்ற, அதன் உட்பொருளாயுள்ள இறையின் உண்மையை உணர்தல் கூடும். பச்சை மாம் இயற்கை என்பதையும், கண்ணன் அதனடியில் நிற்பது அவ்வியற்கையின் உள்ளுறை இறை என்பதையும் அறிவிப்பன.

இயற்கையில் இறை எவ்விதமாக வீற்றிருக்கிறது? இயற்கையில் இறை இசைமயமாக நீக்கமற வீற்றிருக்கிறது.

இறைஇசை யில்லாத இடமேயில்லை. எங்கணும் எங்கணும் இறைஇசை! கண்ணன் குழலோசை, இறை இசைமயமா யிருத்தலை உணர்த்துவதாகும்.

இசையின் இயல்பைப்பற்றி விரித்துக் கூறவேண்டுவ தில்லை. இசையில் படியப் படிய, அவ்விசை, புலன்களை ஒன்றுவித்துக், கருவி கரணங்களை ஓய்வித்துச், சாந்தமூட்டி அமைதியில் நிறுத்தும். கண்ணனைச் சூழ்ந்துள்ள பசுநிரையும், பெண்ணினமும் முறையே சாந்தத்தையும், அமைதியையும் குறிப்பன. (பெண்மை - அமைதி.)

எங்கும் என்றும் எழும் இறையின் இசையை இயற்கை வாயிலாகக் கேட்கப் பயிலல்வேண்டும். அப்பயிற்சியை எப்படிப் பெறுவது? அதற்கெனப் பெருமுயற்சி வேண்டுவ தில்லை. கடலும் ஆறும், செஞ்சாலிகளும் மூங்கில்களும், வண்டுங் குயிலும், பூவையும் வானம்பாடியும், இன்ன பிறவும் பெரிய இசை ஆசிரியர்களாக விளங்குகின்றன. இவ்வாசிரி யர்கள் நல்லவர்கள்; மிக நல்லவர்கள்; தங்களுக்கென வாழாதவர்கள்; பொருளாசை சிறிதும் இல்லாதவர்கள். இவர்கள் நம்பொருட்டு இசையை முழக்கிய வண்ணமா யிருக்கிறார்கள். செவி சாய்க்கவேண்டுவது மட்டும் நமது கடமை. இவ்வாசிரியர்கள் நம்மைத் தங்கள் வயப்படுத்தி, எங்குமுள்ள இறையின் இசையை நாளடைவில் கேட்கச் செய்வார்கள். இயற்கையில் நீக்கமற நிறைந்துள்ள இறையின் இசையைக் கேட்கக் கேட்கச் சாந்தமுண்டாகும். சாந்தத் தால் அமைதி நிலவும். அமைதி, உயிர்கள் அடையத்தக்க இறுதிப்பேறு.

இன்னோரன்ன நுட்பங்களை அறிவுறுத்தும் பச்சை மரத்தடியில் பசுக்களும் பெண்மக்களும் சூழக் குழலூதுங் கண்ணன் காட்சியைக் காணுங்கள்; கருதுங்கள்; அக்காட்சி யில் ஒன்றுங்கள். அக்காட்சியைக் காணக் காணப் புலன்க ளெல்லாம் கண்களாகும்; கருதக் கருதக் கரணங்களெல் லாம் சிந்தையாகும்; அக்காட்சியில் ஒன்ற ஒன்ற குணங்க ளெல்லாம் சாத்துவிகமாகும். முடிவில் பெண்மை என்னும்

அமைதிநிலை கூடும். எல்லா உயிரும் பெண்மை என்னும் அமைதிநிலை பெற்று இயற்கை இறைவனை அடைதல் வேண்டும்.

இயற்கையில் இசை மயமாயுள்ள இறையாகிய கண்ணனுக்குரிய தீபாவலித் திருநாள் வரப்போகிறது. அத்திருநாளில் கண்ணன் இயற்கைக் கோயில்களாகிய உயிர்களைச் சிறப்பாகப் போற்றல் வேண்டும். போற்றுதற்குப் பதிலாக வேறொன்று செய்தல் பாவம்; பெரும் பாவம். தன்னுயிரைப்போல் மன்னுயிரைப் பார்ப்பது கண்ணன் குழலிசை கேட்பதாகும்.

கண்ணன் குழலிசை கேளுங்கள்
கவலை துன்பம் மீளுங்கள்.

## தருமம் தலைகாக்கும்

'தருமம் தலைகாக்கும்' என்னும் பழமொழி, நமது நாட்டில் ஆண்மக்களாலும், பெண்மக்களாலும், சிறுவர்களாலும், சிறுமியர்களாலும் சர்வ சாதாரணமாக ஓதப்படுவது. நம் முன்னோர்கள் செய்த தரும காரியங்களின் பயனாக அப்பழமொழி பிறந்திருத்தல் வேண்டும். நம் முன்னோர்கள், தருமத்தின் உண்மையைத் தெரிந்து, அதைக் கடைப்பிடித்து ஒழுகினமையால், அவர்கள் மதம் இன்னும் இறந்துபடாமல் நிலவி வருகிறது. தருமத்தை அடிப்படையாகக்கொண்டு செய்யப்படுஞ் செயல்களும், காணப்படும் பொருள்களும், பேசப்படும் பேச்சுகளும் என்றும் அழிவுபெறா என்பது திண்ணம். பஞ்ச பூதங்கள், சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் அழியினும் தருமம் அழியாது. உலகம் மாறினும் தருமம் மாறாது. தருமத்துக்குள்ள ஆற்றல் வேறு எதற்கும் இல்லை. தருமமுள்ள இடத்தில் வேறு எல்லா நலங்களுமிருக்கும். தருமவழி நிற்போர் ஆண்டவன் வழி நிற்போராவர்.

தருமவழி கடைப்பிடித் தொழுகுவோர், எந்நிலையில் நிற்பினும், எத்துன்பத்துக்காளாயினும், எவ்வகைச் சிறுமை அவரைத் தொடரினும், அவருக்கு ஆபத்து விளையாது. இவ்வுண்மைகண்டே நம்மவர்கள் 'தருமம் தலைகாக்கும்' என்று பேசி வருகிறார்கள்.

தருமம் என்பது எல்லா நறுங்குணங்களுஞ் சேர்ந்த ஒரு ஜீவ விருட்சம். அதற்குக் கிளைகளாகக் கொல்லாமை, கள்ளாமை, கள்ளுண்ணாமை, பொய்யாமை, ஒப்புரவு முதலிய ஒழுக்கத் துறைகள் மிளிர்ந்துகொண்டிருக்கின்றன. தருமத்தினிடத்தில் மாசு கிடையாது. அகக் குற்றம் புறக் குற்றம் அற்ற இடமே தருமம் என்பது.

'மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற'

என்னுந் திருக்குறளை நோக்குக. உலகத்தில் மனிதன் கல்வி கற்பதும், தொழில் புரிவதும், மனைவியோடு வாழ்வதும், பிள்ளை பெறுவதும், துறவு பூண்பதும் தரும வளர்ச்சியின் பொருட்டே யாகும். மனிதன் உலக மாயையோடு போர் புரிவதும் தருமத்தின்பொருட்டே யாகும். தருமத்தை நிலை நிறுத்த நூலும், சன்மார்க்கமும், சங்கமும், அரசாங்கமும், இன்ன பிறவும் ஏற்பட்டிருக்கின்றன. இவை யெல்லாவற்றினுஞ் சிறந்தது அரசாங்கம். அரசாங்கம் எல்லா அங்கங்களினும் தலையாயது; உயிர் போன்றது. அது, தருமவழி பிறழ்ந்து நடைபெறுமாயின், பிற அங்கங்களும் தருமவழி பிறழ்ந்து நடைபெறும். ஆதலால் தருமவழிக்குக் கேட்டினைச் செய்யாத ஓர் அரசாங்கத்தை, ஆங்காங்கு அமைக்க, உலகத்தில் பிறந்த மக்கள், இயல்பாக முயற்சி செய்வது வழக்கம். இது மக்கள் இயல்பு.

ஒரு மனிதனோ, ஒரு குடும்பமோ, ஓர் அரசாங்கமோ தருமமல்லாத கருமங்களைச் செய்து, இம்மையில் புகழை நிறுத்த முயல்வதையும் நாம் உலகத்தில் காண்கிறோம். 'அந்தோ! அதர்ம வழியைக் கடைப்பிடித்தமையாலன்றோ அவன் இவ்வளவு செல்வம் பெற்றிருக்கிறான்' என்று சிலர்

எண்ணி, அதர்ம வழியைக் கடைப்பிடித்தலும் உண்டு. இவ்வாறு உலகத்தில் அதர்மம் பரவுகிறது. தருமத்தால் விளைவது உண்மையான இன்பம். அதர்மத்தால் விளைவது துன்பம். இதுபற்றியே திருவள்ளுவரும்,

'அறத்தால் வருவதே இன்பம் மற்றெல்லாம்
புறத்த புகழு மில'.

என்று திருவாய் மலர்ந்திருக்கிறார். தருமவழி நின்று செல்வம் பெறுவோன் உள்ளத்தில் அமிர்த தாரை போல இன்ப ரசம் சொட்டிக்கொண்டிருக்கும். அஃதல்லாத பிற நெறி படர்ந்து செல்வம் பெறுவோன் உள்ளத்தில் இன்பத் தேன் பிலிற்றுவதில்லை. இவன் மனத்தில் அமைதியும் நிலவுவதில்லை. இன்ப ஊற்றில்லா மனமுடைய ஒருவன், மண்ணை யாண்டாலென்ன? விண்ணையாண்டாலென்ன? தரும வழியில் பொருளீட்டி, அதனை அவ்வழியில் செலவழிக்கும் ஒரு தொழிலாளிக்குள்ள இன்பம், அதருமவழியில் பொருளீட்டி, அதனை அவ்வழியில் செலவழிக்கும் ஓர் அரசனுக்கும் இராது. இன்பத்துக்கு அடிப்படை தருமமாகும்.

தருமவழி விடுத்துக் கருமஞ் செய்வோர், சின்னாள் இன்பம் நுகரினும், பின்னர்த் துன்பம் அனுபவிக்க வேண்டியவரே யாவர். கருமத்துக்குத் தக்க பயன் உண்டு என்று ஒழுக்க நூல்கள், ஞான நூல்கள், பூதபௌதிக நூல்கள் கூறுகின்றன. 'மனிதன் எதை விதைக்கிறானோ, அதையே அறுக்கிறான்' என்று கிறிஸ்துநாதர் அருளிச்செய்திருக்கிறார். நெல் கமுகாக முளையாது. தீவினை செய்வோன், அதன் பயனை அனுபவிப்பான்; நல்வினை செய்வோன், அதன்பயனை அனுபவிப்பான். இதை உலக அநுபவத்திலும் காணலாம். அநியாயஞ் செய்பவன், இரண்டொருநாள் அறியாமையால் களிக்கடலாடினும், பின்னை அவன் துன்பத்துக்கு ஆளாவன்.

சூரபத்மன், இரணியன், இராவணன் முதலியோர் வாழ்வின் முடிவு எவ்வாறாயிற்று? இவர்கள் வர பலமும், தேக வலிமையும், சேனைப்பெருக்கும், செல்வச் செருக்கும், மாயாவித்தைகளும் முடிவில் எங்கே போயின? இரணியன்

செல்வத்தையும் வர பலத்தையும் வருணித்தல் வேண்டுமா? இப்பொழுதுள்ள அரசர்களின் செல்வங்கள், அவன்பால் குற்றேவல் செய்துகொண்டிருந்த சிறு வேலையாளின் செல்வத்துக்கும் ஈடாகா. அவ்வளவு செல்வம் பெற்றிருந்த அவன், தருமவழி விடுத்து, அதருமவழி பற்றி, உலகத்தை வருத்தி வந்தமையால், அவன் வயிற்றில் பிறந்த குழந்தையே அவனைக் கொல்விக்கும் அஸ்திரமாயிற்று.

இரணியன், தன் வயிற்றில் பிறந்த பிள்ளையையும் செருக்கால் அதர்மவழிநின்று அலைத்தானல்லவோ? அவன் கொடுமை என்னே! என்னே!! அளவிலாச் செல்வமும், வலிமையும் அவனுக்கிருந்தும், அவன் அதர்மவழி பற்றி ஒழுகினமையாலன்றோ அவன் நரசிம்மத்துக்கு இரையானான்? இரணியன் செல்வமும், வரமும், வலிமையும், பிறவும் என்ன செய்தன? இறுதியில் அவன்செய்த அதர்மம் அவனை அழித்தது.

தற்போது ஐரோப்பாக் கண்டத்தில் சில அரச வாழ்வு குலைந்ததை நாம் கண்கூடாகக் கண்டோம். ஆதலால், அதர்மம் எப்பொழுதும் நாசத்தைக் கொடுக்கும். இம்மையில் தண்டனை பெறாத அதர்ம 'மூர்த்திகள்', மறுமையில் பெருந்தண்டனை அடைவார்கள் என்பது நிச்சயம். எட்டி விதை எட்டிக்காயை உதவியே தீரும். அஃது அமிர்தத்தை நல்கவே நல்காது. அதர்மம் அதன் பயனை அளித்தே தீரும்.

சிறப்பு நேரினும், சிறுமை நேரினும், அரசவாழ்வு அணையினும், ஆண்டிவாழ்வு அணையினும், செல்வஞ் சேரினும், வறுமை வரினும், அவைகளால் இறுமாப்பாதல் சோர்வாதல் கொள்ளாது, தருமவழியே செல்லவேண்டுவது மக்கள் கடமை. தருமம் மனிதனை என்றும் இடர்ப்படுத்தாது; அவனுக்குத் தெரியாமலே அவனை அது காத்துவரும். தருமம் உயிர்க்குத் துணைசெய்வதைப்போல வேறெதுவுஞ் செய்யாது. இத்துணைச் சிறப்புவாய்ந்த தருமத்தை நிலைநிறுத்த எவ்விதத் தியாகத்துக்கும் உட்படலாம்.

தருமத்துக்காகப் புத்தர்பெருமான் எல்லா நலங்களையும் துறந்தார். தருமத்துக்காகக் கிறிஸ்துபெருமான் தம் உயிரையே கொடுத்தார். தருமம் சிதைந்துவருங் காலத்தில், கடவுள் தன்னருளைச் சில அன்பர்கள் உள்ளத்தில் பதிய வைத்து, அவர்கள் வாயிலாகத் தருமத்தை நிலைபெறுத்துவது வழக்கம். கடவுள் வடிவம் தருமம்.

இப்பொழுது நமது நாட்டில் தருமங் குன்றிவருவது வெள்ளிடைமலை. தருமத்துக்கு உறையுளாக உள்ள இந்தியாவிலும், தருமஞ் சிதைவதைக் கண்டுங் கேட்டும், அதை நிலைபெறுத்த முயலாதவர்கள் மனிதர்களாகமாட்டார்கள். அதர்ம போதனையும், அதர்ம நீதியும், அதர்மச் செயலும், அதர்ம வாழ்வும் இந்தியாவைக் கெடுத்து வருகின்றன. தரும உபதேசஞ் செய்கிறவர்கள் சந்தேகிக்கப்படுகிறார்கள்; ஏழைகளுக்காக உழைக்கப் புகுவோர்மீது வழக்குத் தொடுக்கப்படுகிறது; 'குடியாதே' என்று சொல்வது குற்றமாகப் பாவிக்கப்படுகிறது; நன்மக்கள் சிறைக்கனுப்பப் படுகிறார்கள். தேசத்துரோக அதர்மிகள் போற்றப்படுகிறார்கள்; பட்டமளிக்கப் பெறுகிறார்கள்; புகழப்படுகிறார்கள். தேசத்தின் உண்மை நிலையையும் தேசபக்தர்கள் மனோ நிலையையும் அறியும் ஆற்றல் தற்கால ஆட்சிமுறைக்கு இல்லை.

'தருமந் தலைக்காக்கும்' என்ற பழமொழியில் நம்பிக்கையுடைய சத்தியவான்கள், எவ்விதத் துன்பத்துக்குட்பட்டாவது, துக்கத்துக்குட்பட்டாவது, கஷ்டத்துக்குட்பட்டாவது, உடலையோ பொருளையோ உயிரையோ தியாகஞ் செய்தாவது, தருமத்தை நிலைநிறுத்த முற்படல் வேண்டும். தருமம் தலைகாத்தே தீரும். தருமத்துக்காக நாம் முயற்சி செய்யுங் காலத்தில், நமக்குப் பலவித கஷ்டங்கள் உண்டாகலாம். அக்கஷ்டங்களைச் சகித்துக்கொண்டு முயற்சி செய்தால், தருமவடிவான கடவுள் உதவி நமக்கு வரும். இப்பொழுதே ஆண்டவன் உதவி நமக்கு வந்துகொண்டிருக்கிறது.

ஐரோப்பா யுத்தத்தை உண்டாக்கினவர் யார்? ரஷ்யா குழப்பத்தை உண்டாக்கினவர் யார்? தொழிலாளர் கிளர்ச்சியை உண்டாக்கினவர் யார்? கிலாபத்துக் கிளர்ச்சியைக் கிளப்பினவர் யார்? ஒத்துழையா இயக்கத்தை எழுப்பினவர் யார்? இப்பொழுது இங்கிலாந்தில் தொழிலாளர் வாயிலாகச் சிறு குழப்பத்தைத் தோற்றுவித்தவர் யார்? சகோதரர்களே! யோசியுங்கள்; தரும சொரூபமான ஆண்டவன் உதவி வந்துகொண்டிருப்பதைக் கூர்ந்து கவனியுங்கள்; தருமவழி பிறழாது கிளர்ச்சி செய்யுங்கள்; ஆண்டவன் உதவி பூரணமாக நமக்குக் கிடைக்கும். தருமம் தலைகாக்கும். அது தவறாது. தருமவான்களே! தரும ஆவேசங்கொண்டு பணி செய்ய வாருங்கள். உலகம் உங்கள் உதவியை நாடுகிறது. தருமம் தலைகாக்கும்; தருமம் தலைகாக்கும்; தருமம் தலைகாக்கும். இது சத்தியம்; சத்தியம்; சத்தியம். (15-4-1921)

## அறக் குலைவு

அறம் அறம் என்று வாயால் பேசலாம்; கையால் எழுதலாம். பேச்சும் எழுத்தும் அறமாகப் பரிணமித்தல் அரிது. அறம் என்பது, ஒவ்வோர் ஆடவர் மகளிர் உள்ளத்திற் படிந்து, குருதியிற் றோய்ந்து, வாழ்வில் மலர்தல் வேண்டும். மக்கள் வாழ்வு, அறத்தை அடிப்படையாக் கொண்டெழுந்து நிலவுமேல், உலகிடை அறக்கடவுளுக்கும் இடனுண்டாகும். அவ்வறமில்லா வாழ்வில் அமைதியாதல் அன்பாதல் இன்பமாதல் எங்ஙனம் நிலவும்?

அறவாழ்வாவது என்னை? பொறாமை அவா முதலியன படியாத வாழ்வு அறவாழ்வாகும். மனிதனிடத்துப் பொறாமை அவா முதலியன இயல்பா யமைந்துகிடத்தல் கண்கூடு. அத் தீமைகளைப் படிப்படியாகக் களைதற்கு அவையில்லா ஒன்றனது கலப்பு வேண்டற்பாலது. பொறாமை அவா முதலியன இல்லாப் பொருளே கடவுள் என்று

சொல்லப்படுவது. அழுக்காறு அவா முதலிய சேற்றில் வீழ்ந்து இடர்ப்படும் மனிதனுக்கு, அவையில்லாக் கடவுள் நினைவு வழிபாடு முதலியன எவ்வளவு இன்றியமையாதன என்பதைச் சொல்லவேண்டுவதில்லை. மனிதனுக்கும் கடவுளுக்கும் தொடர்பிருந்தே தீரல்வேண்டும். இல்லையேல் உலகிடை அறவாழ்வு மிளிர்தல் அருமை.

முன்னைநாளில் மனிதன், கடவுள் கடவுள் என்று வாழ்வு நடாத்தினமையால், உலகம் அன்பு வாழ்விற்கும் அற ஒழுக்கத்துக்கும் தோற்றுவாயாக இருந்தது. அந்நாளில் மக்கள்மாட்டு அமைதி காத்தற்பொருட்டுக் கொடுஞ் சட்டங்களாதல், அடக்குமுறையாதல், போர்க்கருவிகளாதல் அரசேறி நின்றதாகத் தெரியவில்லை. இதுபோழ்து இவையின்றி அரசுகள் இயங்க இயலாது கிடக்கின்றன. இவை வேண்டாத அரசுகள் இனி உலகில் இயங்குமா என்று ஐயுறுதார் இலர் என்றே கூறலாம்.

மக்கள் கடைப்பிடித்தொழுகும் நாகரிகத்தினின்றும் அரசு என்பது தோன்றுவதால், செங்கோலுக்குங் கொடுங் கோலுக்குங் காரணர் குடிமக்களாகவே யிருக்கிறார். குடிமக்கள், அழுக்காறு அவா மேலீட்டான் பிறரை வருத்தப் புகுந்து, ஆன்ம உணர்ச்சி யிழந்து, கடவுளை மறந்தமையான், உலகில் மறக்கோலாட்சி யாண்டும் மலியலாயிற்று. அம் மறக்கோலாட்சி வீழவேண்டுமானால், குடிகள் அறவழி நின்று கடவுள் நினைவுடன் வாழ முயலல்வேண்டும்.

கடவுள் நினைவு என்றதும், சிலர் 'பழைய காலம்' என்கிறார். பழைய காலத்துக்கும் இக்காலத்துக்குமுள்ள வேற்றுமையை உற்று நோக்கி ஆராயும் வாய்ப்புப் பெறாதாரே 'கடவுள் நினைவை' எள்ளுவர். பண்டைநாளில் உலகில் அமைதி நிலவியிருந்ததா இந்நாளில் அமைதி நிலவுகிறதா என்று ஆராய்ந்து உண்மை காணுமாறு அவரைக் கேட்கிறோம். போர்க்கப்பல், புகைவண்டி, வானவூர்தி முதலிய புதுமைகளைக் கண்டு, இக்காலம் பண்டைக் காலத்

தினும் விழுமிய நாகரிகமுடையதென்று கூறுவது அறிவுடைமை யாகாது. பண்டைநாளில் முதலாளி தொழிலாளி போராட்டம், பெண்மக்கள் ஆண்மக்களோடு வாழ ஒருப்படாமை, இவர்கள் அவர்களை வருத்தல், படிப்போர்க்குக் காமக்குரோதங்களை எழுப்பவல்ல பத்திரிகைத் தோற்றம், மக்கள் வரிப்பணத்தில் ஒரு பாதி இராணுவத்துக்குச் செலவழித்தல் முதலியன இருந்தனவோ? இல்லையே! இக்கொடுங் காட்சியால் உலகைக் கவலைக்கு இரையாக்கி வரூஉம் இக்கால நிலை வெறுக்கத்தக்க தாகும்.

தற்போதைய மேல்நாட்டு நிலையைச் சிறிது கருத்தூன்றிக் கவனிப்போம். இங்கிலாந்தில் நிகழ்ந்தேறிய வேலை நிறுத்தமும், ருஷ்யாவில் ஒரு கிராமத்தில் பெண்மக்கள் ஆண்மக்களோடு கூடிவாழ மறுத்ததும் எம் முன்னே போந்து உலவுகின்றன. இங்கிலாந்தில் ஏற்பட்ட வேலை நிறுத்தத்துக்குக் காரணம் முதலாளி தொழிலாளி போராட்டத்தையொட்டியது. இப்போராட்டத்துக்கு அடிப்படை யாது? மனிதன்மாட்டுள்ள அவாவன்றோ? முதலாளியின்பாலுள்ள பேராசை இதுபோழ்து உலகை ஆண்டு வருகிறது; அதனால் ஏற்படுந் தொழிலாளர் தொல்லை உலகை நடுக்குறுத்துகிறது.

கடந்த ஒருவாரமாக இங்கிலாந்துநிலை எப்படியிருந்தது? என்னுமோ என்னுமோ என்று ஏக்குறாத ஆங்கில மகனும் இருந்திருப்பனோ? தொழிற்றலைவர்கள் முயற்சியால் தொழிலாளர் கலகம் குறைந்து நின்றது. ஒருசில தலைவர்கள் வழி அமைதி காக்கப்படுவது அமைதியாகாது. அமைதி என்பது மக்கள் வாழ்வினின்றும் இயல்பாக எழுந்து நிலவுதல் வேண்டும். அத்தகை அமைதி இதுபோழ்து எழுந்து எளிதில் நிலவுமோ? மனிதனிடத்துள்ள அவா என்னும் நஞ்சு இறங்கினாலன்றி அன்பிடைப்பட்ட அமைதி நிலவலரிதே.

இங்கிலாந்தில் ஏற்பட்ட பொதுவேலை நிறுத்தம் ஒழிந்ததாக நேற்றைய செய்தி தெரிவிக்கிறது. ஸர் ஹெர்பர்ட் சாமியல் என்பவர் தம் பொறுப்பில் நின்று தலையிட்டுத் கிளத்திய ஓர் அறிக்கை இப்பொழுது எழுந்த எரியைத் தணித்திருக்கிறது. என்றுந் தணிவு ஏற்படும் முறை காணப்பெறல்

வேண்டும். அவாவால் விழுங்கப்பெற்ற முதலாளியும், அது கண்டு பிணக்குறுந் தொழிலாளியும் உள்ளவரை தணிவு ஏற்படுதல் எங்ஙனம்? முதலாளி தொழிலாளி என்னும் பிரிவு, அறவே ஒழியும் நாளே அறம் வளரும் நாளென்க.

இங்கிலாந்தில் ஏற்பட்ட வேலைநிறுத்தம், பொதுவாக உலகத்துக்கு நல்ல பாடத்தைக் கற்பித்திருக்கிறது. 'தொழிலாளரை அடக்கியாளல் எவராலும் இனி இயலாது' என்னும் பாடத்தை உலகம் கற்றுக்கொண்டிருக்கும். இங்கிலாந்து தொழிலாளர் வேலைநிறுத்தத்துக்கு உலகில் எப்பகுதியில் அநுதாபம் இல்லாமற் போயிற்று? எப்பகுதியிலும் அநுதாபம் இருந்துவந்தது.

ஒரு நாட்டில் தொழிலாளர்க்கு ஏற்படும் குறை, மற்ற உலகிலுள்ள தொழிலாளரது குறையாகக் கருதப்படும் நாளை நாம் பார்க்கிறோம். நாட்டையொட்டி, மொழியை யொட்டி, பிற வழக்க ஒழுக்கங்களையொட்டித் தொழிலாளர்க்குள் எவ்வித வேற்றுமையும் எழுதலில்லை. தொழிலாளர் அனைவரும் ஒன்றியிருப்பது பின்னை அறநெறிக்கு வித்தாவதென்க. தொழிலாளர்வழி, அரசாங்கமும் முதலாளியும் இணங்கி நடத்தல் நல்லது.

இங்கிலாந்தில் போல்ஷ்விக் பிரசாரம் ஒருபுடை நடந்து வருகிறது. தொழிலாளருள் பெரும்பான்மையோர் அப்பிரசாரத்துக்குச் செவி சாய்ப்பதில்லை. அன்னார் குறைகள் களையப்படாது விடப்படுவது அவர் மனதைக் காழ்ப்பில் அழுத்துவதாகும். அதன்பயன் போல்ஷ்விக் எழுச்சிக்குத் துணைநிற்கவுந் தூண்டும். அந்நிலை எய்தாவாறு காக்க முதலாளியும், அரசும் தொழிலாளர் குறைகளைத் தீர்க்கக் கடமைப்பட்டிருக்கிறார்.

தொழிலாளர் தலைவர்கள் அமைதிமுறையை அறிவுறுத்தியும், தொழிலாளர்கள் தங்கள் கருத்தைப் போர்க்கண் செலுத்தாமலிருந்தும், சிற்சில இடங்களில் குழப்பம் ஏற்படாமலில்லை. சில இடங்களில் போலீசார் மிக முயன்று வருந்தி அமைதி காத்திருக்கிறார். தற்போது தொழிலாளர்

வேலைநிறுத்தம் ஒருவாறு ஓய்வுபெற்றிருப்பினும், அஃது என்றுதல் மீண்டுங் கிளம்பாமற் போகாது. இவ்வாறு அடிக்கடி வேலைநிறுத்தமும் குழப்பமும் நிகழாவாறு காக்கப்படவேண்டுமேல், மக்கள் உள்ளம் அறத்தில் படிதல்வேண்டும்; கடவுள் நினைவு உள்ளத்தில் ஊர்தல் வேண்டும்.

ருஷ்யாவிலுள்ள ஒரு கிராமத்தில் அணித்தே நடந்தேறிய பெண்மக்கள் வேலைநிறுத்தம், உலகில் கடவுள் நினைவு அற்றுப் போயதைப் புலப்படுத்துகிறது. அக் கிராமத்தில் பெண்மக்கள் நலன்நாடும் ஒரு சங்கத்துக்கு ஒருத்தி சென்றிருந்தாள். அக்கூட்டங் கலைதற்குச் சிறிது நேரமாயிற்று. வீட்டிலுள்ள நாயகன், நாயகியின் வரவு நோக்கி நோக்கிக் கண்பூத்துப் பூத்துக் கனன்றுநின்று, அவள் வருகையைப் பேராவலோடு எதிர்பார்த்திருந்தான். அவள் வீடு புகுந்ததும், அவள் நாயகன் அவளை நையப் புடைத்து வீழ்த்தினன். பின்னை அவள் எழுந்து, நள்ளிருளில் கிராமத்துள்ள பெண்மக்களைத் திரட்டி, அவரவர்களை ஆண்மக்களிடத்திருந்து பிரித்துப் பெருவேலைநிறுத்தந் துவங்கினள். அக் கிராமத்துள்ள பெண்மக்களனைவரும் ஒற்றுமையாக ஒரு கோயிலில் நுழைந்து வீற்றிருந்தனர். வீடுகளிலோ குழந்தைகள் அழுகையும், அடுப்பெரியாக் காட்சியும், உணவுக்கூச்சலும், பிற தொல்லைகளும் வீறிட்டெழுந்தன. ஆண்மக்கள் என் செய்வார்கள்! தங்களாலியன்ற அளவு சாம பேத தான தண்ட முறைகளைப் பெய்து பார்த்தார்கள். ஒன்றாலும் பயன் விளையவில்லை. பின்னை ஆண்மக்கள், பெண்தெய்வங்களின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, இனி வருத்தாது சம உரிமை நல்கி ஒத்து வாழ்வதாக உறுதிமொழி பகன்று, அவர்களை வீடுகளுக்கு அழைத்துச் சென்றார்கள். பெண்மக்கள் இவ் வேலை நிறுத்தஞ் செய்ததற்குக் காரணமென்னை? ஆண்மக்கள் அறக்கடவுளை மறந்து, பெண்மக்களைச் சடப்பொருளாகக் கருதி வருத்தியதே யாகும். தெய்வம் உறையும் பெண்ணுடலை வருத்தும் ஆடவனுக்குக் கடவுள் நினைவு யாண்டிருந்து வரும்? ஆண்மக்கள் முதலாளி போன்றவர்கள்;

பெண்மக்கள் தொழிலாளி போன்றவர்கள். பெண்ணை இழிவாகக் கருதும் மறமும் உலகைவிட் டகலல்வேண்டும்.

பத்திரிகைகளால் உலகம் அரிக்கப்பட்டு வருவதைப் பற்றியும் பிற கொடுமைகளைப்பற்றியும் இன்று இவண் விரிக்கிற் பெருகும். இதுபோழ்து பொதுவாழ்வில் தலைப்படுவோருள்ளும் பொறாமை அவா முதலியன எழுந்து ஆடல் புரிகின்றன. அடிமைநாட்டில் வாழும் நம்மனோர் நமக்குள் பகைமை விளைத்துக் கலாம் நிகழ்த்துவதும் - அடிமைத் தளையறுக்கப் புகுவதாகச்சொல்லிக் கிளம்புஞ் சில தலைவர்கள் தலைமைப்பேறு கருதியும், வேறு பேறு உன்னியும், நாட்டில் பிறந்த மற்றவர்மீது பொல்லாப்பழி சுமத்தி வைவதையே பெரிய சுயராஜ்யப் பேறாக எண்ணி, அதற்கென உழைத்து வருவதும் - அறக்குலைவிற்குச் சான்றுகளாக விளங்குகின்றன. போரையும் பகைமையையும் பொய்யையும் பரப்புதற்கெனப் பத்திரிகைகள் தோன்றியுள்ள இந்நாளில் அறக்கடவுளுக்கு இவ்வுலகில் இடன் ஏது?

இவ்வேளையில் இலைமறை காயென ஆண்டாண்டுள்ள அறவோர் அறநிலை ஓம்ப முற்படல் வேண்டும். அறநிலைக்கு மாறுபட்டோர் சுமத்தும் பழிகளுக்கு அஞ்சாது கடனாற்றும் மனஉறுதி அன்னார்க்கிருத்தல் வேண்டும். ஒரு சிறு அறக்கூட்டத்தார், பிறர் புகழ் இகழ் ஒன்றையுங் கருதாது அறத்தொண்டாற்ற எழுவாராக. அன்னார் முயற்சிக்கு ஆண்டவன் துணைசெய்வானாக. (14–5–1926)

# பொங்கலோ பொங்கல்

## I

வருந் தைத்திங்கள், முதல்நாள், பொங்கல் விழா என்பது நேயர்கட்குத் தெரியும். பொங்கல் விழாவைப் பற்றிப் பல புராணக் கதைகளுண்டு. அவ்விழா உத்தராயனத் தொடக்கத்தில் கொண்டாடப்பெறுகிறது. அயனம் என்பது ஓராண்டின் ஒருபகுதி; அதாவது ஆறுமாதம். ஒன்று உத்தராயனம். மற்றொன்று தட்சணாயனம். உத்தராயன முதல்நாள், நாட்டார் பலர் பொங்கலிட்டுப், 'பொங்கலோ பொங்கல்' என்று ஆர்ப்பரிக்கிறார்.

பொங்கல் விழாவின் நோக்கம் என்னை? அது வெறும் அரிசிப்பொங்கலைமட்டுங் குறிப்பதன்று; மக்கள் உள்ளத்தெழும் மகிழ்ச்சிப் பொங்கலையே பெரிதுங் குறிப்பதென்க. நன்செய் புன்செய்களின் செழிய விளைவால் வீடுகளில் தானியங்கள் களஞ்சியங் களஞ்சியமாகத் தைமாதத்தில் குவியும். அதுகண்டு மகிழும் மக்கள், புதிய அரிசிகொண்டு பொங்கலிட்டு, அதைத் தங்களுக்கருளிய ஆண்டவனுக்கு வணக்கங் கூறுவது வழக்கம். மக்கள் உள்ளத்தெழும் மகிழ்ச்சிப் பொங்கலே பொங்கல் விழாவாகும். மக்கள் மகிழ்ச்சிக்குப் புலங்களின் விளைவு காரணம் என்பதை மறத்தலாகாது.

ஏறக்குறைய நூறாண்டுதொட்டு நாளுக்குநாள் இந்திய மக்கள் மகிழ்ச்சி குலைந்து வருவது கண்கூடு. இதற்குச் சிறப்பாக இரண்டு காரணம் கூறலாம். ஒன்று, நாட்டில் சுயஆட்சி இன்மையால் நாட்டுப்பொருள் நாட்டில் நில்லாது மற்ற நாடுகளுக்குச் செல்வதும் அதனால் சுதேசியம் அருகுவதுமாகும். இன்னொன்று, அவ்வப்பொழுது காலத்தில் மழை பெய்யா தொழிவது. இவ்விரண்டும் நாட்டின் மகிழ்ச்சியைக் குலைக்கின்றன. ஒருநாட்டின் செழுமை அந்நாட்டின் பொருட் செல்வ நிலையைப் பொறுத்து நிற்கிறது. பொருட்செல்வம்

பெரிதும் மழை நிலையைப் பொறுத்து நிற்கிறது. அம் மழை வளஞ் சுருங்கின் நாட்டில் என்ன நடைபெறும்?

'வானின் றுலகம் வழங்கி வருதலால்
தானமிழ்த மென்றுணரற் பாற்று'

'சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு'

'தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்'

எனவரூஉந் திருவள்ளுவர் திருவாக்கை ஓர்க.

இவ்வாண்டைய மழைநிலை நேயர்கட்குத் தெரியும். விண் பொய்த்துவிட்டது. மண் வறண்டுவிட்டது. மக்கள் நிலை என்னை? தமிழ் நாட்டின் நெற்களஞ்சியமென்னுந் தஞ்சையின் வளமே சுருங்கி நிற்கிறதெனில் பிற இடங்களின் நிலையைப்பற்றிப் பேசவும் வேண்டுமோ?

நெல் மிகுதியால் நெல்லூர் எனப் பெயர்பெற்ற இடமும் விளைவின்றி வாட்டமுற்று நிற்கிறது. மக்கள் உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்கவில்லை. இப் பொங்கலின்றிச் செய்யப்படும் பொங்கல் எங்ஙனம் விழாவாகுங்கொல்! 'சிறப்பொடு பூசனை செல்லாது வானம் - வறக்குமேல் வானோர்க்கு மீண்டு' என்னுந் திருமொழி பொய்யாமொழி யன்றோ?

நாடு இந்நிலையுற்றிருக்கிறது! நாட்டிலோ அரசியல் கட்சிகளும், வகுப்புப் பூசல்களும், சமயப் போர்களும் மலிந்து கிடக்கின்றன. நாட்டுத்தலைவர்கள் உள்ளத்தில் பிணக்குகள் உலவுகின்றனவே யன்றி நாட்டின்நிலை உலவுவதில்லை. நாட்டுப்பொருள்மீது கவலை செலுத்துவோர் மிக மிகச் சிலரே. எங்கணும் மேல்நாட்டுப் பொருள்கள் காட்சியளித்தவண்ணமா யிருக்கின்றன. விண்ணும் கண்திறக்கவில்லை. என்செய்வது? ஆண்டவனையன்றி வேறு களைகணில்லை. ஆண்டவனை நோக்கி அழவேண்டுவது நமது கடன். 'அழுதால் உன்னைப் பெறலாமே' என்றார் மணிவாசகனாரும்.

ஒருபோது அன்பிற்கும் அறத்திற்கும் நிலைக்களனு யிருந்த நமது நாடு, இந்நிலையுற்றதற்குரிய புறக் காரணங்கள் பலவாயினும் அகக் காரணங்களுஞ் சிலவுண்டு. அவைகளுள் பெண்ணுரிமை களைந்தது, மக்களுள் தீண்டாமை வகுத்தது, நாட்டவர்க்குள் அன்பு நிலவாதவாறு உயர்வு தாழ்வு கொண்டது, கோயில்களிலும் கட்டுப்பாடு கோலியது முதலியவற்றைச் சிறப்பாகக் கூறலாம். இவை, நாட்டுக் கட்டை, அதாவது ஒருமைப்பாட்டைக் குலைத்து, நாட்டில் பொய் பொறாமை முதலிய அலைகளை எழுப்பிவிட்டன. அவ்வலைகள் அடங்கும்வரை, ஆண்டவன் அருள் நாட்டில் நிலவுதல் அரிது. நாடு செழியநிலை அடையவேண்டுமானல் ஆண்டவன் அருள்உதவி வேண்டும். அவ்வருளுக்கு மன்பதையில் வாய்மை, உயிர்களிடத்தன்பு, மக்களுக்குள் சகோதரநேயம் முதலியன வேண்டற்பாலன. இவைகளை விடுத்து 'ஆண்டவனே ஆண்டவனே' என்று பன்முறை கூவி அவனை அழைப்பினும், அவன் அருள் சுரக்க மாட்டான்.

'நீதியால் நினைசெய் நெஞ்சே'

'பொருந்திய குரம்பை தன்னுட் பொய்நடை செலுத்துகின்றீர்'

'ஒருத்தனை உணர மாட்டீர் உள்ளத்திற் கொடுமை நீக்கீர்'

'ஓதியே கழிக்கின் றீர்கள் உலகத்தீர் ஒருவன் தன்னை
நீதியால் நினைய மாட்டீர் நின்மலன் என்று சொல்லீர்'

'கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை'

'வஞ்சகர்க் கரியர் போலும்'

'கள்ளம் உள்ளவ ருக்கருள் வானலன்'

'பொக்க மிக்கவர் பூவுநீ ருங்கண்டு
நக்கு நிற்பன் அவர்தமை நாணியே'

எனவரூஉம் அப்பர் அருண்மொழிகளை நோக்குக. மற்றுமோரிடத்தில் அப்பர்சுவாமிகள், 'அட்ட மாமலர் தூவி வலஞ் செய்யின், கெட்டுப்போம் நமதுள்ள வினைகளை' என்றார்.

இங்கே குறிப்பிட்ட எட்டு மலர்கள்: கொல்லாமை, ஐம்பொறி அடக்கல், பொறுமை, இரக்கம், அறிவு, மெய், தவம், அன்பு என்பன. இவைகள் அகப் பூசைக்குரிய எட்டு மலர்கள் என்று நூல்கள் கூறுகின்றன. இவ்வெட்டு மலர் தூவி வழிபட்டுப் பலர் கடவுளுக்கு அன்பராயினர். இவ் வழிபாடு வேண்டற்பாலது.

நாட்டில் நிலைபெறுக உள்ள குறைகளோடு தேர்தல் காலங்களில் பெய்யப்பெறும் பொய்கள் நாட்டை எரிக்கின்றன. இப் பாவங்கட்குக் கழுவாய் தேட நாட்டவர் வரும் பொங்கல் நாளன்று கால்கொள்வாராக.

வரும் ஆண்டில் நாட்டில் மழைக்குறைவால் பெரும் பஞ்சம் நேரலாம். அப் பஞ்சத்தைத் தணிக்குமாறு மக்கள் பொங்கல்விழாவில் ஆண்டவனை நோக்கி வழுத்துவாராக. நாட்டுக்கு நலம் பொங்குக. (7-1-1927)

## II

'பொங்கலோ பொங்கல்' என்னும் உள்ளங் கவர்ந்தெழும் மகிழ்ச்சி யொலிக்குரிய திருநாள் வருஞ் சனிக் கிழமை உறுகிறது. 'பொங்கலோ பொங்கல்' என்னும் இன்ப ஒலி இப்பொழுது நகரங்களில் பெரிதும் எழுவதில்லை. இவ்வொலி கிராமங்களில் இன்னும் முழங்கப்படுகிறது.

பொங்கல் விழாவைப் பற்றிப் பலதிறப் புராணக் கதைகள் உண்டு. அவைகள் நாட்டில் பல இடங்களில் பலவாறு வழங்கப்படுகின்றன. இவ்விழா மிகவுந் தொன்மையது.

பொங்கல் என்பதன் பொருள் என்னை? மகிழ்ச்சியின் எழுச்சியே பொங்கல். மகிழ்ச்சி இல்லாத இடத்தில் பொங்குதலும் இராது. மகிழ்ச்சி எப்பொழுது எழும்? துன்பத்திடை மகிழ்ச்சி எழுங்கொல்! எழாது. இன்பத்திடையே மகிழ்ச்சி பொங்கும். பொங்கல் விழா, இன்பத்திடை எழும் மகிழ்ச்சிக்கு அறிகுறியென்க.

மகிழ்ச்சிக்குரிய துறைகள் பற்பல. அவைகளை ஈண்டு விரிக்கிற் பெருகும். உலகியல் நெறிநின்று நோக்குழி, மகிழ்ச்சியூட்டுந் துறைகளுள் தலையாயது - உயிர்போன்றது - அரசியல் என்பது விளங்கும். உலகில் எல்லா வளனுஞ் செறியினும், அரசியல் என்பதொன்று கோடி நிற்பின், வாழ்வில் மகிழ்ச்சி பொங்கல் அரிதாகும். ஆதலால், மக்களின் இன்பவாழ்வு, அரசியலைப் பொறுத்து நிற்றல் உன்னத்தக்கது.

'நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்'—புறநானூறு

பண்டை நாளில் அரசியல் நமது நாட்டின் இயல்புக்கு அரண் செய்வதாக அமைந்திருந்தது. நாட்டுச் செல்வம் நாட்டிற்கே பயன்பட்டு வந்தது. செல்வச் செழுமையால் நாட்டிடை அறத்துறைகள் வளர்ந்து வந்தன. வறுமை மிக்க நாட்டில் அறத்துறைகளின் நினைவும் அரும்புதல் அரிதன்றோ? முன்னாளில் செல்வச்சீரும் அறவொழுக்கமும் நாட்டில் மல்கிக் கிடந்தமையான், மக்கள் உளத்தில் மகிழ்ச்சி பொங்கிப் பொங்கி வழிந்தது.

நல்லரசும் ஒழுக்கமும் மழையைக் காலந் தவறாது பொழிவித்து வந்தன. நல்லரசுக்கும், ஒழுக்கத்துக்கும், மழைக்கும் என்ன தொடர்பு?

மழைக்குரிய இயற்கை அமைப்புகட்கு இடையூறு நேராதவாறு காக்கவேண்டுவது நல்லரசின் கடமை. வானுற ஓங்கி வளர்ந்துள்ள காடுகள், மழைக்குப் பெருந்துணை செய்வன. காடுகளின் செழுமைக்கும் மழைவளனுக்குமுள்ள தொடர்பு இக்காலப் பள்ளிப்பிள்ளைகட்குந் தெரியும். பண்டைக்காலக் காடுகள் நிலையையும் இக்காலக் காடுகள் நிலையையும் நேயர்கள் உன்னுவார்களாக. காடுகளின் அழிவு, மழைவளஞ் சுருங்குதற்கு ஒரு காரணமாகலானும், காடுகளை நமது விருப்பப்படி ஓம்பும் உரிமை நம்மாட்டு இதுபோழ்து இன்மையானும், மழை பொய்த்துப்

போகிறது. நல்லொழுக்கமும் மழைக்கு ஒரு காரண மென்பது நம்பிக்கை உலகிற்கு உரியதென்க.

முன்னை நாளில் நமக்குரிய அரசியலாலும், ஒழுக்கத்தாலும் காலமழை பொய்யாது பெய்துவந்தது. மழையால் பெற்ற வளமை, மக்களைப் பொங்கச் செய்தது. பொங்கல், இயற்கைக் கடவுளுக்கு நன்றி தெரிக்கும் வாழ்த்து விழாவாகவுங் கொண்டாடப் பெற்றது.

‘ சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு ’—திருக்குறள்

நாட்டில் ஐப்பசி கார்த்திகையில் மழை பொய்யாது பெய்து, நாட்டு வளனுக்குத் துணை செய்துவந்தது. ஆறுகளிலும், ஏரிகளிலும், குளங்களிலும், கேணிகளிலும், கிணறுகளிலும் நீர் நிரம்பி வழங்குங் காட்சி, மக்களை மார்கழியில் தட்டியெழுப்பித் தையில் பொங்கச் செய்யும். மழையால் ஏரி குளம் நிரம்பியுள்ள காட்சி, கடவுள் காட்சியை ஒக்கும்.

‘ ஏரி நிறைந்தனைய செல்வன் கண்டாய் ’

என்று பொங்கிப் பாடிய அப்பர் மொழி கண்டு பொங்குக.

முன்னைநாளில் பொங்கல் விழாவன்று வீடுதொறும் பொங்கல்-தெருவுதொறும் பொங்கல்-ஊர்தொறும்பொங்கல்-நாடெலாம் பொங்கல் - எங்கணும் பொங்கலோ பொங்கல். இப்பொங்கலுக்கு அறிகுறியாக மக்கள், ஆண்டவனருளால் பெற்ற அரிசிகொண்டு, பசிய பாற்பொங்கலிட்டு, ஆண்டவனை வழுத்துவார்கள். ஆண்டவனுறையும் திருக்கோயில்களாக உள்ள மக்கள், ஒருவரோடொருவர் அளவளாவி, ஒருவரை ஒருவர் வாழ்த்தி வணங்குவார்கள் ; பற்பல வழிகளில் மக்கள் தங்கள் மகிழ்ச்சியைப் புலப்படுத்துவார்கள். தைத்திங்கள் முதல்நாள், மக்கள் மகிழ்ந்து பொங்குதற்குரிய நாளாகக் கருதப்பட்டு வந்தது.

அத் திருநாள் வருஞ் சனிக்கிழமை யுறுகிறது. அன்று வழக்கத்தை யொட்டி அரிசிப் பொங்கலன்றி, அதன் உள்ளுறையாகக் கொழிக்கத்தக்க மக்கள் மனமகிழ்ச்சிப்

பொங்கல் எழுமோ ? நாட்டில் மகிழ்ச்சி இல்லை ; வீட்டிலும் மகிழ்ச்சி இல்லை. என் செய்வது ! இன்பந் துன்பமாக மாறி விட்டது ! இந்நிலையில் பொங்கல் விழா நிகழ்தல் வேண்டும் !

வரும் பொங்கல் திருநாளை எங்ஙனங் கொண்டாடுதல் வேண்டும் ? முறைகள் வழக்கம்போல நடைபெறுக. அன்று மக்கள், முதலாவது சோர்வைப் போக்கிக்கொள்ளல் வேண்டும். 'என்ன ! நமக்கோ உரிமையில்லை ; தலைவர்களால் ஒன்றுஞ் செய்தல் இயலவில்லை ; நாட்டுக்கு இனி உய்வில்லை ; பாரத மாதா துஞ்சுவளோ' என்னுஞ் சோர்வு நாட்டிடை யாண்டும் பரவிப் பதிந்து கிடக்கிறது. அச் சோர்வைப் போக்குதற்குரிய வழிகளும் உலகியல் துறைநின்று பலப்பல குறிக்கலாம். எல்லாவற்றிற்கும் அடிப்படை ஆண்டவ னிடத்து உறுதி. ஆண்டவன் உண்மையில் கொள்ளும் உறுதி என்ன செய்யாது ? என்ன நல்காது ? 'ஆண்டவன் ஆண்ட வன்' என்று பொய்ம்மைகளைப் போற்றலாகாது. ஆண்டவன் உண்மை என்பதை மறத்தலாகாது. உண்மை ஆண்டவனைப் பற்றினால் எல்லாம் பெறலாம்; நம்மைப் பற்றியுள்ள அச்சம், சோர்வு, பொய்மை, பேய்மை எல்லாந் தொலையும்.

'குலம்தரும் செல்வம் தந்திடும் அடியார் படுதுய ராயின வெல்லாம்
நிலந்தரஞ் செய்யும் நீள்விசும் பருளும் அருளொடு பெருநில மளிக்கும்
வலந்தரும் மற்றுந் தந்திடும் பெற்ற தாயினும் ஆயின செய்யும் [நாமம்'
நலந்தருஞ் சொல்லை நான்கண்டு கொண்டேன் நாராயணா என்னும்

'பவனமாய்ச் சோடையாய் நாவெழாப் பஞ்சுதோய்ச் சட்டஉண்டு
சிவனதாள் சிந்தியாப் பேதைமார் போலநீ வெள்கினையே
கவனமாய்ப் பாய்வதோர் ஏறுகந் தேறிய காளகண்டன்
அவனதா ளூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்சல்நெஞ்சே'

எனவரூஉம் ஆன்றோர் மொழியை நோக்கி, ஆண்டவன் உண்மையில் உறுதி கொள்க ; உறுதிகொண்டு பாரதநாட் டைப் பழைய செல்வ நிலைக்குக் கொணரவல்ல ஊக்கம், ஒற்றுமை முதலியன நாட்டிடை நிலவுமாறு ஆண்டவனை

வேண்டுக; வேண்டிச் சுதேசியத்தில் பற்றுக் கொள்க; கொண்டு சுதேசியாக முயல்க; முயன்று சுதேசியத்துக்கு இலக்கியமாக உள்ள காந்தியடிகள் அறவழி நிற்க ஒருப்படுக; ஒருப்பாட்டான் பாரத மாதாவின் உளத்துக்கினிய சுதேசியாகிய காந்தியடிகள்மீது கருத்துப் பதியும்போது நம்மையறியாத ஒருவித மகிழ்ச்சி பொங்கும். அப்பொங்கலிடை மூழ்கிப் 'பொங்கலோ பொங்கல்' என்று முழங்குக. இம் முழக்குடன் நாமும் நமது பொங்கல் வாழ்த்துச் செய்தியை நேயர்கட்குத் தெரிவிக்கிறோம். (11-1-1928)

## III

இன்று பொங்கல் திருநாள். இத்திருநாளில் 'பொங்கலோ பொங்கல்' என்று மக்கள் ஆர்ப்பரிப்பது வழக்கம். பொங்கல் என்பது என்னை? பொங்கல் என்பது மகிழ்ச்சியின் எழுச்சி யன்றோ? மகிழ்ச்சி இல்லா இடத்தில் பொங்கல் எழுங்கொல்?

பச்சரிசிப் பொங்கலன்றோ 'பொங்கல்' என்று வழங்கப் படுகிறது என்று சிலர் கருதலாம். பச்சரிசிப் பொங்கல், மகிழ்ச்சியால் மதர்த்தெழும் பொங்கலின் அறிகுறியாகும்.

இயற்கை அன்னையின் திருவருளால் மழை பொழியும்; நீர்நிலைகள் நிரம்பும்; எங்கணும் புதுப்புனல் பாயும். புதுப்புனல் மக்களைப் பொங்கச் செய்யும்.

புதுப்புனல் பாய்ந்து வளஞ்செய்து அளிக்கும் செழுந் தானியங்கள் - கொழுமணிகள் - உயிர்கட்கு எத்தகை மகிழ்ச்சியை யூட்டும்? அம்மகிழ்ச்சி எத்தகைப் பொங்கலை எழுப்பும்? சொல்லவும் வேண்டுமோ?

மகிழ்ச்சி பொங்குதற்குக் காரணமாக நின்ற இயற்கை அன்னைக்கு நன்றி தெரிக்க மக்களால் கொள்ளப்பெற்ற நாளே உத்தராயன முதல் நாள் அதாவது தைத்திங்கள் முதல் நாள். இந்நாளில் தானியங்களுள் சிறந்த அரிசி பசுமையாகப் பொங்கப்படுவதும், அதுகொண்டு இயற்கை ஞாயிறு

போற்றப்படுவதும், அதனைத் தொடர்ந்து மற்றிரு நாளும் ஆடல் பாடல் காண்டல் முதலியவற்றிற்குப் பயன்படுத்தப் படுவதும் நேயர்கட்குத் தெரியும். எல்லாவற்றிற்கும் அடிப் படை மகிழ்ச்சியின் பொங்கல் என்பது கவனிக்கற்பாலது.

சில காலமாகப் பொங்கல் திருநாள் தன் பொருளிழந்து நிற்றல் வெள்ளிடைமலை. இப்பொழுது மகிழ்ச்சி பொங்குவ தில்லை. அரிசி மட்டும் பொங்குகிறது. அகத்தில் மலர்ச்சி இல்லை ; புறத்தில் மட்டும் பொருளற்ற வினை நிகழ்கிறது.

மகிழ்ச்சிக்கு அடிப்படை உரிமை என்பதைச் சொல்ல வேண்டுவதில்லை. உரிமை இல்லா இடத்தில் இயற்கையால் வரும் இன்பமும் மகிழ்ச்சி யூட்டாது.

நமது அருமைத் தமிழ்நாடு, உரிமை இழந்து ஏறக் குறைய ஆயிரம் ஆண்டுகளாயின. ஒவ்வொருபோது, ஒவ் வொருவிதக் கட்டுப்பாடு, தமிழ்நாட்டில் நுழைந்து நுழைந்து, தமிழ் நாட்டையே விழுங்கிவிட்டது. தமிழ் மக்கள், இயற் கையினின்றும் வழுக்கி, பலதிறச் செயற்கைகளில் வீழ்ந்து, மதி மயங்கிக் கிடக்கிறார்கள். தமிழர்கள் தங்கள் நிலையை மறந்துவிட்டார்களென்றே கூறலாம். இவர்களைப் போலத் தங்கள் நிலையை மறந்திருப்பவர்கள் பிறர் உளரோ என்றும் ஐயுறுகிறோம். சிறுமைக்கும் மடமைக்கும் விரைவில் எளிமை யாய்விடுவதே தமிழர்கள் வீழ்ச்சிக்குக் காரணம் போலும் !

எவ்வெக் காரணத்தாலோ தமிழ்நாடு சின்ன பின்னப் பட்டுக் கிடக்கிறது. தமிழ்நாடு மீண்டும் உருப்படுமா என் றுஞ் சிலர் ஐயுறுகிறார். அதை உருப்படுத்தவுஞ் சிலர் முயல் கிறார். அம்முயற்சி பலதிறப்பட்டு நிற்கிறது. அரசியல் சீர்திருத்த முயற்சி ஒருபால் - சமூகச் சீர்திருத்த முயற்சி மற்றொருபால் - வாழ்க்கைச் சீர்திருத்த முயற்சி இன்னொரு பால் - பற்பலவாறு முயற்சிகள் நிகழ்கின்றன. இம்முயற்சி களினின்றும் பிறக்குங் கவடுகள் பல ; கோடுகள் பல. இவைகளினின்றும் பிறக்கும் பிணக்குகள் பல. பிணக்கு களால் நாடு பலவழியிலுங் குலைந்து வருகிறது.

ஒவ்வொரு துறையிலும் நின்று முயல்வோர் அனைவரும் நல்லெண்ண முடையவரே. ஆனால் எண்ணத்தினின்றெழும் முயற்சியால் பிணக்குகளே நிகழ்கின்றன. என் செய்வது ?

தமிழ் நங்கையை உற்று நோக்கினால் அவள் உருவம் புலனாகிறதா ? தலைவேறு - கைவேறு - கால்வேறு வேறாகக் கூறுபட்ட காட்சியே புலனாகிறது. தமிழ்நாட்டை நாடாகக் காண்டல் வேண்டும் ? தமிழ் நங்கையை உருவுடையவளாய்க் காண்டல் வேண்டும். இதற்கு வழி என்ன ?

'யாதும் ஊரே யாவருங் கேளிர்' என்னும் உணர்வு மீண்டும் புத்துயிர் பெற்றுலவுமேல், தமிழ்நாட்டை நாடாகக் காணலாம்; தமிழ் நங்கையின் ஒன்றிய உருவையுங் காணலாம்.

பொங்கல் திருநாளாகிய இன்று - பெரும் பெருந் தலைவர்கள் உரிமை வேட்கை மேம்பாட்டால் சிறைக்கோட்டம் நண்ணியுள்ள இவ்வேளையில் - நாட்டின் தலைவிதி லண்டனில் எழுதப்படுகிறது என்று சொல்லப்படும் இச்சமயத்தில் - பலவழியிலுங் கூறுபட்டுள்ள தமிழ்நாட்டுக்கு எவ்விதச் செய்தியை அனுப்புவது ? 'யாதும் ஊரே யாவருங் கேளிர்' என்னும் புறநானூற்றுப் பொன்மொழிமீது நமது கருத்துச் செல்கிறது.

'யாதும் ஊரே யாவருங் கேளிர்' என்னும் மொழி தமிழ்நாட்டில் பிறந்த ஒன்று. அத் திருமொழி பிறந்து எத்துணையோ நூற்றாண்டுகளாகின்றன. அதைத் தாங்கியுள்ள புறநானூறு, காலத்தால் தொல்காப்பியத்திலுந் தொன்மையது என்று சில ஆராய்ச்சிக்காரர் கூறுகிறார். தொன்மை வாய்ந்த ஒரு நூற்கண் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னும் மணிமொழி மிளிர்கிறது.

'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னும் மொழிப் பொருள் எல்லாக் கட்டுகளையுங் கடந்து விளங்குவது. சாதிப்பித்து, மதவெறி, நிறக்குறும்பு, நாட்டுத்திமிர் முதலிய பலதிறக் கட்டுகள் மன்பதையைப் பலவழியிலுங் கூறு

படுத்தி யிருத்தல் கண்கூடு. சகோதர நேயத்துக்கு இக் கட்டுகள் எவ்வளவு இடையூறு நிகழ்த்தி வருகின்றன என்பதை அறியாதாரில்லை. இக்கட்டுகளினின்றும் விடுதலை யடைய மன்பதைக்கண் போராட்டம் துவங்கப்பட்டிருக் கிறது. இப்போராட்டத்தின் பயனாக ஆங்காங்குள்ள அறிஞர்களிடத்திருந்து சகோதரநேய மொழிகளும் செயல் களும் பிறந்து வருகின்றன.

'நாகரிகஞ் செறிந்த நூற்றாண்டு' என்று சொல்லப்படும் இந்நூற்றாண்டில், அறிஞர்களிடைப் பிறந்துவருஞ் சகோதர நேய மொழிகளெல்லாம் ஒருங்கு திரண்டாலெனப் பண் டைத் தமிழ் நூலொன்றில், 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னும் பொன்மொழி பிறங்கிக் கொண்டிருக்கிறது. இத்திருமொழியால் பழந்தமிழர்கள் வாழ்வு, சாதி - மதம் - நிறம் - நாடு - முதலிய கட்டுகளைக் கடந்து நின்றதென்பது புலனாகிறதன்றோ? அப் பெருவாழ்வு பெற்றிருந்த நாட்டின் தற்கால நிலை என்ன? பிளவு - பிரிவு - பிணக்கு - பகை - பூசல்-முதலிய நானாவிதச் சேற்றில் விழுந்து நமது அருமைத் தமிழ்நாடு நெளிகிறது.

தமிழ்நாடு உய்யவேண்டுமானால் - நன்னிலை எய்த வேண்டுமானால் - அது 'யாதும் ஊரே யாவருங் கேளிர்' என்னுந் தன் பண்டைக் கொள்கையை உயிர்ப்பிக்க முயலல் வேண்டும். அம்முயற்சிக்கு அன்புவேண்டும்; இகல்கூடாது.

நிறப்பித்தும் நாட்டுப்பித்தும் மேல்நாட்டை அலைக் கின்றன. சாதிவெறியும் சமயவெறியும் கீழ்நாட்டை அலைக் கின்றன. அப்பித்தும் இவ்வெறியும் 'யாதும் ஊரே யாவருங் கேளிர்' என்னும் மொழியின் உள்ளுறையாயுள்ள அன்பின் முன்னே நிற்குங்கொல்!

பித்தைப் போக்கப் பித்தும், வெறியைப் போக்க வெறி யும் கோடல் அறியாமை. இம்முறை மேன்மேலுஞ் சகோதர நேயத்துக்குக் கேடு சூழ்ந்துகொண்டே போகும். ஆவேசக் கிளர்ச்சிகளால் பயன் விளையவே விளையாது. எக்காரணம் பற்றியும் ஆவேசம் கூடாதென்பது நமது கருத்து.

'யாதும் ஊ'ரா யிருக்கும்போது, 'யாவருங் கேளி'ரா யிருக்கும்போது, இடையில் இகல் என்னும் நஞ்சு எற்றுக்கு? இகல் எழின் அதை இகலால் தொலைக்க முயலுதல் ஆகாது. 'தீமையை எதிர்த்து நில்லாதே' என்று கிறிஸ்துநாதர் திருவாய்மலர்ந்தருளினர். தீமையுடன் போராடுதலால் நற்பயன் விளைவதில்லை.

தீமையெழுந்து விளையாடித் தானே ஒடுங்கும். எதிர்ப்பால் அஃது ஒடுங்குதல் அரிது. பொறுமையும் மன்னிப்பும் வேண்டற்பாலன. இவை 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னுங் கொள்கையை வளர்க்கும். ஆதலால், 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னும் அன்பை வளர்க்க, அன்பு நெறியைக் கடைப்பிடித் தொழுகுவது அறிவுடைமை. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னுங் கொள்கை பெருகப் பெருகச் சகோதர நேயத்துக்கு மாறுபட்ட கட்டுகளெல்லாந் தாமே இரிந்தோடும். இருளை ஒழித்தற்கு வேண்டுவது எது? ஒளியா? இருளா?

இருளால் இருள் ஓடாது. வேண்டற்பாலது ஒளி. இப்பொழுது எங்கணும் இருள் சூழ்ந்து நிற்கிறது. இவ்விருளைப் போக்க ஒளி வேண்டும். அவ்வொளி, 'யாதும் ஊரே யாவருங் கேளிர்' என்னுஞ் சீரிய அறமாகும்.

இப் பேரறத்தைப் பண்டைநாளில் பலர் ஓம்பிச் சென்றார். இந்நாளில் காந்தியடிகள், ரவீந்திரநாத் தாகூர், ஜெகதீஸ சந்திரபோஸ் முதலியோர் முயன்று வருகிறார். முன்னைநாளில் தன்மாட்டுப் பிறந்த அறத்தின்வழித் தமிழ்நாடு இந்நாளில் நிற்கக் கடமைப்படுதல் வேண்டும்.

இன்று, பொங்கல் திருநாளில் 'யாதும் ஊரே யாவருங் கேளிர்' என்னும் புறநானூற்றுப் பொன்மொழியை ஒரு பெறும் நற்செய்தியாக நேயர்கட்குத் தெரிவித்துக் கொள்கிறோம்.

'யாதும் ஊரே யாவருங் கேளிர்'—இப்பேரறம் எங்கணும் ஓங்கி வளர்க. (14–1–1931)

# IV

நாளை வியாழக்கிழமை பொங்கல் திருநாள். பொங்கல் திருநாளைப்பற்றிப் புராணக் கதைகள் பல உண்டு. இயற்கை நிகழ்ச்சிகளை உருவகப்படுத்திப் புராணக் கதைகளைச் செப்பஞ் செய்வது ஒருவித மரபு. அம்மரபொன்றில்லாவிடின், கவிகளின் மகிழ்ச்சிப் பொங்கல், காவியங்களாக உருக்கொண்டிராது. ஆகவே, இயற்கை நிகழ்ச்சிகளை உருவகப்படுத்திப் பாமணங் கமழக் கதைகளாகக் கவிகள் உதவும் மரபும் வாழ்வுக்கு வேண்டற்பாலது.

பொங்கலைப்பற்றிய புராணக் கதைகள் பலவும், அவ்வப்போது சைவ வைணவ சமண பௌத்தப் புலவர்களால் புனையப்பட்டன. அவ்வக் கதையில் அவ்வச் சமய நுட்பமும் அறமும் பிறவும் மலியும் முறையில் புராணங்கள் யாக்கப்படுவது வழக்கம். புராணக் கதைகளையெல்லாந் திரட்டி, அவைகளின் உள்ளத்தைத் துருவி ஆராயின், அவை யாவும் இயற்கை நிகழ்ச்சிகளாகவே புலப்படும்.

மழை வளத்தால் ஆறு குளம் ஏரி முதலியன நிரம்பி, வயல்களில் தானியமணிகள் கொழித்தலைக் காணும்போதெல்லாம், மக்கள் உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்கிப் பொங்கித் ததும்பி வழியும். மகிழ்ச்சி பொங்கும் உள்ளம், அப்பொங்கலுக்குக் காரணமாகவுள்ள இயற்கையினிடத்து அன்பு கொள்கிறது; நன்றி செலுத்த எழுகிறது. அன்புக்குரிய நன்றி செலுத்தலுக்கென ஏற்பட்ட விழா பொங்கல் விழாவாகும். வெறும் பச்சரிசிப் பொங்கல் பொங்கல் விழாவாகாது. பச்சரிசிப் பொங்கல் உள்ளத்துறும் மகிழ்ச்சிப் பொங்கலுக்கு ஓர் அறிகுறியேயாகும்.

மனமகிழ்ச்சியைப் புத்தம் புதிய பச்சரிசிப் பொங்கல் வழியே காட்டித், தானிய வளத்துக்குக் காரணமாக நின்ற இயற்கையை வழிபட்டுத், தங்கள் அன்புக்குரிய நன்றியைச் செலுத்துவது மக்கள் வழக்கம். இயற்கையரசு ஞாயிறுதலின், அதைப் போற்றும் முகத்தான், இயற்கை அன்னைக்கு

மக்கள் நன்றி செலுத்துவார்கள். ஆகவே, பொங்கல் விழா என்பது, இயற்கையாற் பெறும் நலத்துக்குக் கைம்மாறாக இயற்கையை மகிழ்ச்சி பொங்க வழிபடுவதென்க.

வயல்களில் பயிர்களெல்லாம் செவ்வனே விளைந்து, கதிர்கள் சாய அசையுங் காட்சியைக் காணும் மக்கட்கு எத்தகைய மகிழ்ச்சி பொங்குமென்பதை எழுத்தால் எழுத வேண்டுவதில்லை. அம்மகிழ்ச்சி மனத்துடன் இயற்கையை நோக்கும்போது, அவர்கட்கு எத்தகைய இன்பமெழும் என்பதையுஞ் சொல்லவேண்டுவதில்லை. கதிரின் ஒளியும், திங்களின் நிலவும், விண்மீன்களின் மின்னலும், நீர்நிலைகளின் நிறைவும், மயிலின் ஆடலும், குயிலின் குரலும், கிளியின் மழலையும், பெண்மக்களின் பொலிவும், குழந்தைகளின் அழகும், பிற இயற்கைக் கூறுகளும் மக்களின் உள்ளத்துறும்போது, அவர்கள் இன்பக் கடலிலன்றோ திளைப்பார்கள்? எல்லாவற்றிற்கும் அடிப்படை மனத்திற் பொங்கியெழும் மகிழ்ச்சி மகிழ்ச்சியே யாகும். மனமகிழ்ச்சி இல்லையாயின், மற்ற இடங்களில் மகிழ்ச்சி தோன்றாது.

மனமகிழ்ச்சியின் பொங்கல், அதற்கு அறிகுறியாக நிகழ்த்தப்பெறும் பொங்கல் விழாவில், என்னென்ன செய்யுமென்பதை நமது நாட்டவர்க்கு விரித்துக் கூறவேண்டுவதில்லை. பொங்கலிடல், புதுவேஷ்டி கட்டல், இயற்கையைப் போற்றல், ஆக்களை அலங்கரித்தல், ஒருவர் ஒருவரைக்கண்டு ஆசிகூறல், வாழ்த்தல், நற்செய்தி அனுப்பல், ஊர்வலம் வரல், ஏழைகட்கீதல், உண்டாடல், களியாடல் முதலியன நமது நாட்டில் எங்கணும் நிகழும்.

இப் பொங்கல் விழாவிற்கெனத் தைத்திங்கள் முதல் நாளும், அதைத் தொடர்ந்த இருநாளும் குறிக்கப்பட்டிருக்கின்றன. சூரியன் மகரத்தில் புகும் நாளே தைத்திங்கள் முதல் நாளாகும். அந்நாளே உத்தராயனத் தொடக்கமாகும். இதுபற்றியும் சில கதைகள் நமது நாட்டில் வழங்கப்படுகின்றன. அக்கதைகளின் நுட்பத்தை ஆராய்ந்தால் வான சாத்திரத்தின் பல நுட்பங்கள் புலனாகும்.

இவ்வாண்டுப் பொங்கல் திருநாள், நாளை வியாழக் கிழமை யுறுகிறது. மன்பதைக்கண் மகிழ்ச்சி பொங்கித் ததும்பி வழிகிறதா? மகிழ்ச்சியைக் காணோம். மகிழ்ச்சி இல்லாத இடத்தில் பொங்கல் ஏது?

இயற்கையில் ஏதேனுங் குறைபாடு நிகழ்ந்திருக்கிறதா? ஞாயிறு ஒளியைப் பொழிந்துகொண்டே யிருக்கிறது. திங்கள் நிலவைக் கான்றிக்கொண்டே யிருக்கிறது. வானில் மீன்கள் ஒளிர்ந்துகொண்டே யிருக்கின்றன. மழையும் பொழிகிறது. ஏரி குளங்களும் நிரம்புகின்றன. அலைகள் பாடாமலில்லை. மயில்கள் ஆடாமலில்லை. குயில்கள் கூவாமலில்லை. வண்டுகள் பாண் மிழற்றுமலில்லை. எல்லாம் இயற்கைவழி நிகழ்ந்தவண்ணமா யிருக்கின்றன. நிகழ்ந்தும் மன்பதையில் மகிழ்ச்சி பொங்குதல் காணோம். நாளைப் பொங்கப்போவது பச்சரிசியா மனமகிழ்ச்சியா என்பதை நேயர்கள் உன்னுவார்களாக. இந்நிலையில் நேயர்கட்கு நாம் எம்மகிழ்ச்சிச் செய்தியை அனுப்ப வல்லேம்! ஆண்டவனே ஓலம்! ஓலம்!

மன்பதையில் மகிழ்ச்சி பொங்குதல் குன்றியிருத்தற்குரிய காரணங்களைப் - பத்திரிகை மிகுந்த இக்காலத்தில் - கிளந்து கூற வேண்டுவதில்லை. துன்பம்; துன்பம்; எங்கணும் துன்பம்; உலக முழுவதும் துன்பம்; உலகம் துன்பத்தில் நெளிகிறது! 'ஜனநாயக அரசியல்' என்பதொன்று, உலகில் என்று கால்கொண்டதோ, அன்றுதொட்டு உலகம் இன்பத்தை இழந்து கிடக்கிறது. அரசியற் பெயரால் எங்கணுங் குழப்பம் கொள்ளை கொலை நிகழ்ந்த வண்ணமாயிருக்கின்றன. அரசியல் என்னும் பேய்க்கு உலகம் இரையாகி வருகிறது. இத்துன்பம் எப்பொழுது எப்படி நிவர்த்தியாகும்? மன்பதையில் எப்பொழுது மகிழ்ச்சி பொங்கும்?

தற்போது உலகை மூடியுள்ள துன்ப இருள் இரிய வேண்டின், மன்பதைக்கண் மகிழ்ச்சி பொங்கவேண்டின், மக்கள் மனத்தில் பலதிற மாறுதல் நிகழ்தல் வேண்டும். இந்நாளில் மக்கள் உள்ளங்களெல்லாம் அரசியலில் படிந்து படிந்து, குழப்பம் கொள்ளை கொலை முதலிய எரியில் வீழ்ந்து

கிடக்கின்றன. அவ்வெரி தணிதல் வேண்டும். தணிதற்குரிய வழிகள் பல கூறப்படுகின்றன. அவைகளுள் தலையாயது சன்மார்க்கமாகும்.

சன்மார்க்கத்தைப் பற்றி நாம் பன்முறை எழுதி யிருக்கிறோம். சத் + மார்க்கம் = சன்மார்க்கம். சத் - உண்மை; மார்க்கம் - நெறி. உண்மையையே எல்லாம்வல்ல கடவுள் என்று ஆன்றோர் கூறிப்போந்தார். அதற்குரியநெறி இயற்கையாகும். மார்க்க மென்னும் இயற்கைவழி நிற்க நிற்கச் சத்தென்னுஞ் செம்பொருளினிருப்புப் புலனாதல் ஒருதலை. இப்பொழுது இயற்கை நெறிக்கு மாறுபட்ட வாழ்வு உலகில் பெருகி வருகிறது. இதனால் சத்தென்னுஞ் செம்பொருளுணர்வு அரும்புதற்கு இடமில்லாமற் போகிறது. தற்போதைய உலகத் துன்பத்துக்கு இதுவுங் காரணமாகும்.

மார்க்க மென்னும் இயற்கை நெறியை மறப்பவர்களை, நாடு நிறம் மொழி மதம் சாதி முதலிய பேய்கள் அலைத்தல் இயல்பு. இப்பொழுது உலகம் இப்பேய்களால் அலக்கணுறுகிறது. இப்பேய்களைத் துரத்தும் ஆற்றல் சன்மார்க்கத்துக்கு உண்டு.

உலகில் நானா பக்கங்களிலுந் தோன்றிய பெரியார்கள் சன்மார்க்கத்தையே அறிவுறுத்திச் சென்றார்கள். அவர்கள் அறிவுறுத்தலை நெகிழவிட்டு, அவர்களின் உருவத்தை மட்டும் உலகம் வழிபடுவதில் முனைந்து நிற்கிறது. பெரியார்கள் அறிவுறுத்திய சமரச சன்மார்க்கம் இப்பொழுது மக்கள் வாழ்வில் படிதல் வேண்டும். படிந்தால் மக்கள் நெஞ்சம், காவியம், ஓவியம், இசை, வழிபாடு முதலியவற்றில் நிலைக்கும் வழி ஏற்படும்; குழப்பம், கொள்ளை, கொலை முதலிய எரிகள் தணியும். மன்பதையில் மகிழ்ச்சிப் பொங்கலை எழுப்பும் ஆற்றல் சன்மார்க்கத்துக்கு உண்டு. ஆதலால், நாளை பொங்கல் விழாவின்போது, மக்கள், மார்க்கமென்னும் இயற்கைநெறி நிற்கவும், அதனை ஓம்பவும் நோன்பு கொள்வார்களாக; அதனை ஓம்பிச் சென்ற விருஷபதேவர், கண்ணபிரான், புத்தர், கிறிஸ்து, நபிகள்நாயகம், திருவள்ளுவர், நால்வர்,

ஆழ்வார் முதலியவர்களை நினைந்து போற்றுவார்களாக; சன்மார்க்கம் எங்கணும் ஓங்கி வளரவேண்டுமென்று ஆண்டவனை நோக்கி வழுத்துவார்களாக.

ஆண்டவனே! உலகம் உன்னை மறந்துவருகிறது; உன் நெறியை மறந்து வருகிறது; உன்னால் அனுப்பப்பெற்ற பெரியோர்களை மறந்து வருகிறது; அதன் பயனாகக் குழப்பத்துக்கும் கொள்ளைக்கும் கொலைக்கும் இரையாகிறது. மெய்த்தேவனே! உலகத்துன்பத்தை நோக்கியருள்க; அத் துன்பத்தைப் போக்கியருள்க; எங்கணும் நின்வாழ்த்தொலி மல்கவேண்டும்; எங்கணும் நின் அருள்நெறி பெருகல் வேண்டும்; கொலைநெறி ஒழிதல் வேண்டும்; இப்பொழுதேற்பட்டுள்ள இடர்களைக் களைய நின் திருவருட்டுணை வேண்டும்; அது குறித்து இரவு பகல் உன்னை வேண்டுகிறோம்; கருணை செய்க; செய்க; வேறு களைகணில்லை. என்செய்வோம்! அறிவில்-ஆற்றலில்-அன்பில்-எல்லாவற்றிலும் ஏழைகள் நாங்கள்; என் செய்வோம்! பிழைபொறுத்து ஆண்டருள் செய்க.

நேயர்களே! நாளை பொங்கல் திருநாள்; ஆனால் உள்ளத்தில் மகிழ்ச்சிப் பொங்கலில்லை. என்செய்யப்போகிறீர்கள்? ஆண்டவனை நினைந்து, அவனது நெறியாகிய சன்மார்க்கம் பெருகி அன்பும் மகிழ்ச்சியும் எங்கணும் பொங்கித் ததும்பி வழிதல்வேண்டுமென்று எண்ணி எண்ணிப், 'பொங்கலோ பொங்கல்' என்று ஆர்ப்பரியுங்கள். ஆண்டவன் மகிழ்ச்சிப் பொங்கலை அருள் செய்வான். பொங்கலோ பொங்கல்! பொங்கும் மங்களம் எங்குந் தங்குக.

சாதியில் அடிமை மதத்தினில் அடிமை
தங்கிடும் வீதியில் அடிமை
நீதியில் அடிமை நிறத்தினில் அடிமை
நிலவுல கெங்கணும் அடிமை
ஆதியே! அடிமை நோயினை அகற்ற
அருளொளி ஆண்மையே வேண்டு
கோதிலாச் சென்னிக் குணமலை யரசே
குவலயத் திடர்களை யாயே.

உலகினை அளித்தாய் உயிரெலாம் வாழ்ந்தே
உன்னொளி காணுதற் பொருட்டே
கலகமே செய்து காலமே கழித்துக்
கடவுளே உன்னையும் மறுத்தே
அலகையாய் உயிர்கள் அழிநிலை நோக்கி
அடியனேன் படுதுயர் அறிவாய்
திலகமாய்ப் பொலியுஞ் சென்னிவாழ் சிவமே
தீமையைக் களைந்தருள் செய்யே.

அரசியற் பெயரால் ஆருயிர்க் கொலைகள்
அவனியில் நாளுநாள் பெருகிப்
பரவுதல் கண்டுங் கேட்டபோ தெல்லாம்
படுதுயர் பரமனே அறிவாய்
கரவுள நெஞ்சம் எங்கணும் மலிந்தால்
காசினி எந்நிலை உறுமோ
திருவெலாம் பொலியுஞ் சென்னிமா மலைவாழ்
சித்தனே திருவருள் செய்யே.

(13-1-1932)

## 'மணி'மரஞ் சாய்ந்தது

தமிழ்நாட்டில் பல்லாண்டுகளாக ஒளி வழங்கிக்கொண்டிருந்த சோதி விருட்சம் - மணிமரம் - சாய்ந்தது! மணிமரம் சாய்ந்தது என்று ஈண்டு எழுதவும் கை நடுக்குறுகிறது. அம் மரம் ஒருவித ஒளியையா வீசிக்கொண்டிருந்தது? பலதிற ஒளியை வீசிக்கொண்டிருந்தது. அத்தகைய மரம் சாய்ந்தது!

நமது மணிமரம் அறிவு அன்பு என்னும் இரண்டு கிளைகளை யுடையது. அக் கிளைகளினின்றும் பிரிந்த கலைகளாம் கவடுகளுக்கும் கோடுகளுக்கும் அளவில்லை. ஒருவிதக் கலையா - பலதிறக் கலைகள் - வடமொழிக்கலை, தென்மொழிக்கலை, ஆங்

கிலக்கலை முதலியவைகள். கலைகளாம் கவட்டினும் கோட்டினும் அரும்பிய பூக்களோ உலகைக் கவர்வன. மறைப்பூ, தத்துவப்பூ, பௌதிகப்பூ, சரித்திரப்பூ, சட்டப்பூ, நீதிப்பூ, வீரப்பூ முதலிய பூக்களை ஈண்டு என்னென்று விரிப்பது ? இப் பூக்களைப் பூத்துக் காய்கனிகளை வழங்கிவந்த மணிமரம் சென்ற வெள்ளிக்கிழமை சாய்ந்தது. அம் மரத்தின் கிளைகளில் வாழ்ந்த பறவைகளும், நிழலில் வதிந்த உயிர்களும் இனி என்ன பாடுபடும் ? அத்தகைய மரம் இந்நாளில் தோன்றுமா ?

தமிழ் நாட்டில் சோதி விருட்சமா யிலங்கிய நமது டாக்டர் சுப்பிரமணிய ஐயர் 'மணி ஐயர்' என்று அழைக்கப்பட்டவர். அப்பெயர் அவர்க்குக் காரணப் பெயராக வழங்கி வந்தது. பல கலைகளில் மணியாயிலங்கிய 'தமிழ் மணி' மறைந்தது ! என் செய்வோம் !

நமது நாட்டில் சுதந்திர வேட்கையை எழுப்பினவருள் மணி ஐயரும் ஒருவர். அவ்வக்கால நிலைக்கேற்ப மணி ஐயர் தேசத்தொண் டாற்றினர். பல காங்கரஸ் மேடைகளில் அவர் சொற்பொழிவு நிகழ்த்தி மக்களுக்கு ஊக்கமூட்டினர். மணி ஐயர் நியாய துரந்தரராகவும் நீதிபதியாகவும் நிறுத்திய பெயர் என்றும் அழியாதது. நார்டன், வெட்டர்பர்ன் முதலிய மேல்நாட்டுப் பாரிஸ்டர்கள், இந்தியர்களின் சட்ட ஞானத்தை மதிக்குமாறு விதை விதைத்தவர் நமது மணி ஐயரே யாவர். சிக்கலுள்ள வழக்கு நுட்பங்கள் மிக விரைவில் விளங்கப்பெறுங் கூர்த்த மதியினரென்று பல நீதிபதிகளால் மணி ஐயர் போற்றப்பெற்றவர்.

ஐயரது பரந்த அறிவு, சட்ட அளவில் - நீதிபதி வேலையளவில் - கட்டுப்பட்டுக் கிடக்கவில்லை. வடமொழிக் கலைகளாராய்ச்சி யென்ன - தென்மொழிக் கலைகளாராய்ச்சியென்ன - வேறு பல ஆராய்ச்சிகளென்ன - இவ்வாராய்ச்சிகளில் அவர்தம் மதி தன் கலைகளைப் பரப்பிக்கொண்டிருந்தது. அவரில்லம் ஒருபெருங் கழகமாகப் பொலிந்து வந்தது.

மணி ஐயர் வடமொழிப்புலமை நிரம்பப்பெற்றிருந்தார். அதற்குச் சமமாகத் தமிழ்ப் புலமையும் பெற்றிருந்தார்; அரசர் பெருமான் இளவரசராகச் சென்னை போந்தபோது, 'மகன்தந்தைக் காற்று முதவி இவன்தந்தை - என்னோற் ருன்கொல் என்னுஞ் சொல்' என்னுந் திருவள்ளுவர் மொழியால் அவரை நம் ஐயர் வரவேற்ருர். மணி ஐயர், தம்பால் வருந் தமிழ்ப் புலவர்களைத் திருக்கோவையார் என்னும் அரிய நூலினுள்ள சில பாக்களுக்குப் பொருள் கேட்பார்; திறம்படப் பொருள் கூறிப் புலவர்களை மகிழ் விப்பார். இலெளகிக பதவியில் உயர்ந்து இந்நாளில் வாழும் 'பெரியோர்' பலருக்குத் திருக்கோவையார் என்னுஞ் சீரிய நூலொன்று தமிழ் நாட்டிலிருப்பதுந் தெரியுமோ? ஐயர் வாழ்வு முழுவதும் கல்வி கேள்வி ஆராய்ச்சியிலே கழிந்தது. அத்தகைக் கல்விக் கழகம் மறைந்தது!

சுவாமி விவேகாநந்தர் மேல்நாடு சென்று, வேதாந்தம் பரப்பப் பெருந் துணைவராக நின்றவர் நமது மணி ஐயர். அவர் உதவி அப்பொழுதில்லையேல், விவேகாநந்தர் பத்தில் பதினொருவராக இருப்பர். பிளவட்ஸ்கி அம்மையாரால் காணப்பெற்ற தியாசாபிகல் சங்கம் நமது சுப்பிரமணியைப் பெருவிடின், அஃது எப்பொழுதோ ஒடுங்கிப்போயிருக்கும். அச்சங்கத்துக்கு உயிரளித்து வந்தவர் நம் ஐயர். டாக்டர் பெஸண்டுக்கு நாட்டில் ஏற்பட்ட ஆக்கத்துக்குக் காரணர் நமது மணி ஐயரென்று கூறுவது மிகையாகாது.

டாக்டர் சுப்பிரமணிய ஐயர் தமது காளைப்பருவத்தை அரசாங்க ஊழியத்திற் கழித்தாரேனும், அவர் உள்ளத்தில் உரிமைவேட்கையும்தேசபக்தியும் ததும்பிக்கொண்டேயிருந் தன. அஞ்சாமை என்பது அவரோடு பிறந்த குணம். அவ ரிடை ஒடுங்கிக்கிடந்த இந்நீர்மைகள், பெஸண்ட் அம்மையார் உள்ளிட்ட மூவர், காப்பில் வைக்கப்பட்டபோது வெளி யாயின. 'சுயஆட்சிக்கிளர்ச்சி நியாயவரம்புக்கு உட்பட்டது. அதை ஒடுக்கும் முயற்சியால் மக்களுரிமைக்குக் கேடு நிகழு மாயின் அந்நிகழ்ச்சியை எதிர்த்து நிற்பேன்' என்று கர்ச் சித்த கிழச்சிங்கம் நமது மணியன்றே? இந்தியாவின் நிலை

யைப் பிரஸிடெண்ட் வில்ஸனுக்கு அஞ்சாது தெரிவித்த அஞ்சாநெஞ்சம் எது? நமது மணியன்றோ? அது காரணமாக எழுந்த சில பேச்சுகள் செவிக்கு எட்டியதும் 'ஸர்' பட்டத்தைத் துறந்த துறவு நமது மணி. மகாத்மா காந்தியின் சத்தியாக்கிரக அறிக்கையில் கைச்சாத்திட நமது மணி தியங்கிற்றோ? இல்லை. இன்னோரன்ன செயல்களைக் கவனித்தால் நமது மணி ஐயரை ஒத்துழையாமைக்குக் கால்கொண்டவரென்றுங் கூறலாம்.

அருமைத் 'தேசபக்தன்' ஈடுகாணம் பறிமுதல் செய்யப்பட்டபோது, மணி ஐயர் அரிய கட்டுரையொன்றெழுதிச் சிறு உதவி நல்கியதும், லார்ட் வெல்லிங்டன் ஆட்சியில் தொழிலாளர் துயருற்றபோது 'நியாயம் தொழிலாளர் பக்கமேயிருக்கிறது' என்று அவர் எழுதியதும் மறக்கற்பாலனவல்ல.

மணி ஐயரின் உடல் மெலிந்த ஞான்று அவர்தம் மாலைப் பொழுது பெரிதும் முனிவர் வாழ்க்கையில் கழிந்தது. அவர் நினைவால் தொண்டுசெய்து, உள்ளத்தை ஆண்டவனிடத்தில் பதிய வைத்திருந்தார்.

அம் முனீந்திரர் நம்மைவிட்டு நீங்கினார். நாம் எதற்கழுவோம்? அவரது சட்ட ஞானத்துக்கு அழுவோமா? நீதிநிலைக்கு அழுவோமா? கலைஞானத்துக்கு அழுவோமா? அஞ்சாநெஞ்சத்துக்கு அழுவோமா? பரோபகார உழைப்புக்கு அழுவோமா? எதுகுறித்து அழுவோம்? பல பெருங் கலைஞானத்தைத் தன்னகத்தே அடக்கிக் கொண்டிருந்த சோதி விருட்சத்தை - மணி மரத்தை - இனி என்றே காண்போம். மணி ஐயரது பூதஉடல் போயினும், அவரது புகழுடல் எங்கணு மிலங்குகிறது. அழியாப்புகழ் நிறுவிய ஐயர் போதனைகளும், செயல்களும், குணங்களும், வாழ்வும் எம்மெதிரில் நிற்கின்றன. அவைகள்வழி நின்று, 'அவர் ஆன்மா சாந்தநிலை பெறுக' என்று வாழ்த்துகிறோம். சாந்தி! சாந்தி!! சாந்தி!!! (12-12-1924)

# பெருங்கிழவர் பிரிந்தார்

நம் பெருங்கிழவர் ஸர். பி. தியாகராஜ செட்டியார் சென்ற செவ்வாய்க்கிழமை இரவு நம்மை விட்டுப் பிரிந்தார்; இவ்வுலக வாழ்வு நீத்தார்; விண்ணுலகெய்தினர். அன்னர் அரசியல் நோக்கத்துக்கு மாறுபட்டு நிற்கும் மனமுடையோமாயினும், அவரது பிரிவு, எமது உள்ளத்தை உருக்குகிறது. எழுதலும் முடியவில்லை. தியாகராஜர் பிரிவை உன்னுங்கால், அப்பிரிவு - ஆறும், மலையும், கூவலும், குளமும், கலையும், தொழிலும், மக்களும், ஒழுக்கமும் பலபடச் செறிந்த ஒரு பெருந் திருநகரம் திடீரென மறைந்ததுபோல் எமக்குத் தோன்றுகிறது. 'அந்தோ! தியாகராஜ மலையுஞ் சாய்ந்ததோ' என்று அழுகிறோம். இராஜ கெம்பீரத் தோற்றமும், திருநீற்றொளியும், சிங்கநோக்கும், மலர்ந்த முகமும், பீடுநடையும், அஞ்சா நெஞ்சும், ஆவின் இயல்பும் உடைய ஒரு பெரும் வடிவை இனி என்றே காண்போம்! எமதாருயிர்த் தியாகராஜரை இனி என்றே காண்போம்!

தியாகராஜர் பருஉடல் மறைந்தாலும் அவர் நுண்ணுடல் நாட்டிடை உலவுகிறது. அப்பெரியார் வாழ்வு பின் வருவோர்க்குப் பேரிலக்கியம் போன்றது. தியாகராஜர் 1852-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 27-ந் தேதி இம்மாநிலத்தில் உதித்தார். அவர் 1925-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 28-ந் தேதி மறைந்தார். எழுபத்து மூன்றாண்டு இவ்வுலகிடை வாழ்ந்த ஒரு பெரியார் வாழ்வு போற்றுந் தகையதன்றோ? வாழ்வெனில் எத்தகை வாழ்வு? அடிமை வாழ்வா? உரிமை வாழ்வு - ஒழுக்க வாழ்வு! அத்தகை வாழ்வு ஒருபெரும் இலக்கியமாகாதோ?

தியாகராஜ செட்டியார் தேவாங்கர் குலத்துதித்தவருள் முதன் முதலாக பி. ஏ. பரீட்சையில் தேறினவர். அந்நாளில் அப் பரீட்சை அடிமைத் தொழிலுக்குப் பெரிதும் பயன் பட்டு வந்தது. திருமிகு செட்டியார் தமது கல்வி அறிவை

அடிமைத் தொழிலுக்கு அந்நாளில் பயன்படுத்தினு ரில்லை. அவர்வாழ்வு, உரிமையில் தோன்றி, உரிமையில் அலர்ந்து, உரிமையில் காய்த்து, உரிமையிலேயே கனிந்து சென்றது.

வாழ்விற் சிறந்த செட்டியார், நாற்பதாண்டு நகர பரி பாலன சங்கத்தில் இடைவிடாது அங்கம் பெற்று, அக்காலத் தின் இறுதியில் மூவாண்டு அச்சங்கத்தலைவராக வீற்றிருந்து, சென்னைக்குச் செய்த சேவையைச் சென்னைமாதே அறிவாள். தற்போதைய சென்னை நகரம் செட்டியாரது உழைப்பின் பரிணுமம் என்று கூறுவது மிகையாகாது. சென்னையி லோடுங் கூவ நதியைத் தூய்மைப்படுத்த வேண்டுமென்பது அவர்தம் பெருந்தவம். அதுபற்றி அவர் பெருமுயற்சி செய்துவந்தார். உயிர் துறப்பதற்குச் சின்னுள் முன்னரும் சென்னைக் கவர்னருடன் கூவநதியைப்பற்றி அவர் பேசினு ராம். கூவநதியைச் சீர்மைப்படுத்த வேண்டுமென்று செட்டி யார் உள்ளத்திலெழுந்து நிலவிக்கொண்டிருந்த சீரிய எண்ணம், விரைவில் நிறைவேறுங் காலம் வருமாறு ஆண்ட வனை வேண்டுகிறோம்.

காலஞ்சென்ற தியாகராஜ செட்டியார், இந்தியக் கைத் தொழில் வளர்ச்சியிலும், இந்திய வயித்திய முயற்சியிலும் பெருங்கவலை செலுத்தி வந்தார். சுருங்கக் கூறின், செட்டி யார்க்குச் சுதேசியத்தில் இடையறுப் பேரன்பு உண்டு என்று கூறலாம். செட்டியார் எந்நாளும் ஆங்கில உடைக்கோலத்தை விரும்பியதில்லை. இந்திய வெள்ளிய உடையே போர்வையாக அவரை அழகு செய்துகொண்டிருக்கும். அவர், இளவரசர் - இராஜப் பிரதிநிதி - முதலியோரைக் காணப் போம்போதும் தாம் என்றும் இயல்பாக அணிந்துலவும் வெள்ளிய உடை யணிந்தே போவார். திருவாளர் செட்டியார் நாட்டு மருந் தையே பெரிதும் உண்பார். நாட்டு மருந்தில் அவர்க்குள்ள பற்றுக்கு ஓர் அளவில்லை.

தியாகராஜப் பெரியார் கடவுள் வழிபாட்டினும், வைதிக ஒழுக்கத்தினும் அன்பு வாய்ந்தவர். அவர் பிராமணரல்லா தார் இயக்கத்தைக் கிளப்பியபோதும், வைதிக பிராமணர்பால்

தமக்குள்ள நேயத்தைப் புலப்படுத்தியது பலர் அறிந்த தொன்றே. தியாகராஜ செட்டியார் திருமுகத்தில் சமயச் சின்னம் என்றும் பொலிந்துகொண்டிருக்கும்.

தியாகராஜ செட்டியார் வாழ்வில் அறியக்கிடக்கும் நறுங்குணங்கள் பல. அவைகளுள் தலையாயது அவர்பால் சுயநலமின்மை என்பது. அவர் பருவுடல் மறையுமட்டும் தமது நலங்கருதி எச்செயலும் நிகழ்த்தியதாகத் தெரிய வில்லை. லார்ட் வெல்லிங்டன் காலத்தில் தமக்கு நல்கப்பட்ட மந்திரி பதவியை வேண்டாமென்று செட்டியார் மறுத்த தொன்றே அவரது சுயநல மின்மையை வலியுறுத்தும். இக் குணம் அவர்பாலிருந்தமையாலன்றோ அவர் அரசியல் வாழ் வில் பிற்போக்குடையவரா யிருந்ததையுங் கவனியாது, சென்னை வாசிகள் அவரைச் சட்டசபை அங்கத்தவராகத் தெரிந்தெடுத்தார்கள்? சென்றமுறை அவர்க்கு மாறாக அவர் கட்சியாருள்ளிட்ட பல கட்சியார் பிரசார வேலை செய்தும், சென்னை, செட்டியாரைக் கைவிடாது காத்தது. இதற்குக் காரணமாக நின்றது அவர்பால் சுயநலமின்மையே என்று சொல்லலாம்.

ஒழுக்கத்திற் சிறந்த செட்டியார், எவர்க்கும் அஞ்சாது, தமது மனச் சான்றுக்குத் தோற்றுவதை உள்ளவாறே வெளியிடுவர். பிறர் புகழ்வதை எதிர்நோக்கிச் செட்டியார் எதையும் மறைத்துப் பேசமாட்டார். அவர் பளிங்கனைய மனமுடையார். தியாகராஜ செட்டியார் நோக்கு, சிங்கம் போன்றதாயினும், அவர் இயல்பு ஆவை யொத்தது. இஃது அவரோடு பழகிய நண்பர்கட்குத் தெரியும். தியாகராஜர் எக்கருமத்தையுங் காலத்திற் செய்பவர். காலதேவதையின் சீற்றத்துக்கு அவர் என்றும் ஆளானதில்லை.

தியாகராஜ செட்டியார் தமது வாழ்வில் எத்துணையோ அறநிலையங்கட்கும், வாணிபச் சங்கங்கட்கும், கல்விக் கழகங்கட்கும் தலைவராகவும் அங்கத்தவராகவும் இருந்து தேச சேவை செய்திருக்கிறார். அவரது வாழ்வு பெரிதும் பரோபகார வாழ்வாகவே நடந்து வந்தது. இல்லறத்திருந்து

இத்துணைத் தொண்டு செய்த ஒருவர் வாழ்வு பின் வருவோர்க்கு இலக்கியம் போன்றதென்பது மிகையாகாது.

தியாகராஜ செட்டியார் அரசியல் வாழ்வில் குறிக்கத் தக்கது ஒன்றுளது. அஃது, அவர் தமது முதுமைக் காலத்தில் தோற்றுவித்த 'ஜஸ்டிஸ்' கட்சியென்னும் ஒரு கட்சியைப் பற்றியதாகும். அக்கட்சியின் ஆக்கங் குலைவுற்றிருப்பினும், அதன்பயன், நாட்டில் பலமுகங்கொண்டு, நுண்மையாகப் பலதிறச் சீர்திருத்த வேலைகளைச் செய்து வருவதுண்மை. வகுப்புவாரிப் பிரதிநிதித்துவப் பாடல் சுயராஜ்யப் பாடலாக மாறவேண்டுமென்பது நமது விருப்பம்.

செல்வத்திற் சிறந்த தியாகராஜ செட்டியார், பரந்து விரிந்த சோலைகள் சூழ்ந்த அரண்மனை யென்று சொல்லத் தக்க தமது பெருமாளிகையில், கிராமத்தாரைப் போலத் தோய்த்து உலர்ந்த வேட்டிக ளிரண்டு - கீழொன்று மேலொன்று - அணிந்து, தம்மைக் காண வருபவரோடு பேசுங் காட்சி, எமது முன்னே தோன்றித் தோன்றி, எமது உள்ளத்தைக் குழையச்செய்கிறது. குழைந்துருகும் உள்ளத்தோடு அவரது குடும்பத்தார்க்கு எமது அநுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம். பெருங்கிழவர் ஆன்மா சாந்த நிலை எய்த எல்லாம் வல்ல இறைவனை வழுத்துகிறோம்.

(1-5-1925)

# கற்பகத்தை இழந்தோம்

கல்கத்தா கற்பகமே! வங்கச் சிங்கமே! தேசபந்துவே! சித்தரஞ்சன தாஸரே! பிரிந்தீர்கொல்! கல்கத்தாவை - வங்கத்தை - தேசத்தை - விடுத்து எவ்வாறு பிரிந்தீர்? உமது பிரிவை மனத்தாலும் நினைத்தல் முடியவில்லை; வாயாலும் சொல்லல் முடியவில்லை; எழுத்தாலும் எழுதல் முடியவில்லை; ஊன் உடல் உயிர் எல்லாம் உருகுகின்றன. என் செய்வோம்? பெறற்கரிய கற்பகத்தை இழந்தோம்.

சென்றமாத இறுதியில் காந்தியடிகளுடனும் பெஸண்ட் அம்மையாருடனும் தேசவிடுதலை குறித்துப் பேசிய பெரியீர்! உமது உயிரா பிரிந்தது? பாரதநாட்டை வாழ்விக்க வந்த பெருவாழ்வே! உமது உயிரா பிரிந்தது? உமது பிரிவை எவ்வாறு ஆற்ற வல்லோம்? ஆறாத்துயரம்! ஆறாத்துயரம்! அஃது ஒருநாளில் ஆறுமோ? ஓராண்டில் ஆறுமோ? என்றும் ஆறாது; ஆறாது.

'தேசபந்து தாஸர் உயிர்நீத்தார்' என்ற செய்தி செவிக்கெட்டியதும், ஒரு மின்சார இடி, உச்சியில் விழுந்து உள்ளங்கால் வழியோடியதுபோல, ஒருவித நடுக்கந் தோன்றி எம்மைத் திடுக்கிடச் செய்தது. துக்க இருள் கொண்டல் கொண்டலாகக் கிளம்பிச் சூழ்ந்தது. பின்னைத் தேசபந்துவின் கெம்பீர வடிவம், அவர் கல்வி செல்வம் தியாகம் வீரம் பக்தி முதலியன ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றித் தோன்றி, எமது உள்ளத்துள் புகுந்து புகுந்து, உள்ளத்தை உருக்கி உருக்கிக் கண்ணீர் பெருக்கின. உருகுதற்கு ஓர் உள்ளம் போதவில்லை; நீர் உகுத்தற்கு இருகண் போதவில்லை. தேசபந்துவின் பிரிவுகுறித்து உருகாத உள்ளமும் இருக்குமோ? நீர் உகுக்காத கண்ணும் இருக்குமோ?

சென்ற செவ்வாய்க்கிழமை, தார்ஜிலிங்கில், இயற்கையரசி உடல் பனித்து, மலர்க்கண்களில் நீர் பெருக்கிச்,

செம்மேனிகொண்ட வேளையில், நமது தேசபந்து தாஸர் தமது இன்னுயிர் நீத்தார். அவர் பிரிவு எவரைக் கலக்குறச் செய்யாது? தேசபந்து எனில் என்ன? தேசத்திலுள்ள கலைகளெல்லாவற்றையுந் தன்னகத்தே தாங்கி, அவைகளின் பயனை மற்றவர்க்குத் தந்துவந்த ஒரு கற்பகமன்றோ? எல்லாம் பெற்ற அக்கற்பகம் நீண்டநாள் ஒன்றைப் பெறாதது நமது தவக்குறைவேயாம்.

தேசபந்துவெனும் ஒரு கற்பக வீழ்ச்சி, பலதுறையில் நாட்டுக்கு நஷ்டம் விளைத்திருக்கிறது. கல்வி ஒரு கல்வியாளரை இழந்தது; செல்வம் ஒரு செல்வரை இழந்தது; வண்மை ஒரு வள்ளலை இழந்தது; தியாகம் ஒரு தியாகியை இழந்தது; வீரம் ஒரு வீரரை இழந்தது; இளமை ஓர் இளைஞரை இழந்தது; தேசம் ஒரு தேசபக்தரை இழந்தது. தாஸர் பிரிவு எவ்வளவு நஷ்டம் விளைத்திருக்கிறது!

எத்தகைப் பெரியாரை எவ்வயதில் நாம் இழந்தோம்? ஐம்பத்தைந்து வயதில் முப்பதுகோடி மக்களுக்கு உயிராயிருந்த ஒருவரை இழந்தோம். இத்தகைத் தேசபந்துவை இழந்து அவர் மனைவி மக்கள் உற்றார் உறவினர் எப்படி வாழ்வர்? கல்கத்தாநகரம் எங்ஙனம் வாழும்? வங்காளம் எவ்வண்ணம் வாழும்? தேசம் எவ்வாறு வாழும்?

தேசபந்து ஒரு நற்குடியில் பிறந்தவர். அவர் தந் தந்தையார் கல்விச் செல்வமும் பொருட்செல்வமும் ஒருங்கே பெற்றவர். 'செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல்' என்னும் ஆன்றோர் உரைப்படி, அவ்வறிஞர் தமது செல்வப் பொருளை உற்றார் உறவினர்க்கு உதவுவதிலும், தமது அருமைப் புதல்வர்க்குக் கல்வி பயிற்றுவிப்பதிலும் செலவழித்தார். முடிவில் பொருள் முடை நேர்ந்தது. அவர் பதினாறு லட்ச ரூபா கடன்பட்டார். அவர் கடன்தீர்க்க எவ்வழியுங் காணாது வருந்தும் உளத்தராய் நியாயமன்றக் காப்புப் பெற்றார். நமது தேசபந்து உற்றவயதடைந்து பொருளீட்டத் தொடங்கிய காலத்தில், தமது குடிமைக்கு நேர்ந்த பழியை ஒழிக்க முயன்று, அப்பதினாறு லட்சக்

கடனையுங் கொடுத்தார். தந்தையார் பட்ட கடனை - அதுவும் காப்புச் சரண்பெற்றதைத்-தீர்க்க இளமைப்பருவத்திலேயே நம் தாஸர் நினைந்து செயலிற் காட்டினாரெனில், அவரது அற ஒழுக்கத்தை என்னென்று வருணித்துக் கூறுவது? அவ்வறவொழுக்கமே பின்னைச் சித்தரஞ்சனரைத் 'தேசபந்து'வாக்கிற்று. அவ்வருஞ் செயல் செய்த தாஸரை அவரது குடும்பம் எப்படிப் பிரிந்து வாழும்?

குடிப்பெயரை நிலைபெறுத்தத் தாஸருக்கு உறுதுணையாயிருந்தவை அவர் கல்வி கேள்வியாராய்ச்சி முதலியவை. தேசபந்து தாஸர் இளமையிலேயே வங்காளத்தில் கல்வி பயின்று பி.எ. பட்டம் பெற்றார்; பின்னை இங்கிலாந்துசென்று பாரிஸ்டர் பரீட்சையில் தேறினார். இக்கல்வியோடு தாஸர் நின்றாரில்லை. 'இக்கல்வி வயிற்றுக்கல்வி; ஆன்மஞானக் கல்வியன்று' என்பது தாஸருக்குத் தெரியும். சித்தரஞ்சனர் தாய்மொழியாகிய வங்கமொழி பயின்று அம்மொழியில் பாட்டியற்றவல்ல புலமை பெற்றார். தேசபந்து வேத வேதாந்த ஆராய்ச்சியுஞ் செய்தவர். மேல்நாடு கீழ்நாடு என்னும் இருநாட்டுக் கல்வி நிலை கண்டவர் தாஸர் என்று சுருங்கக் கூறலாம். இத்திறக் கல்வியின் பயன் என்னை? பொருள் திரட்டித் தன்னலவாழ்வில் தோய்ந்துகிடப்பதோ?

வெறுஞ் சர்வகலாசாலைப்படிப்போடு தாஸர் நின்றிருப்பாராயின், அவர் வாழ்வு வேறுவழியாக முடிந்திருக்கும். அவர் அக்கல்வியோடு நில்லாது, ஆன்மஞானக் கல்வியும் பயின்றவராதலால், தமது வாழ்வை மற்றவர்க்குப் பயன்படுத்தி வந்தார். சித்தரஞ்சனர் வங்கமொழியில் இனிய பாவலர். பல பாக்களும் அவரால் யாக்கப்பட்டிருக்கின்றன. பாக்களைப் பாடியாவது அவர் காலங்கழித்தாரா? இல்லை. தாஸர் சொற்புலவராக மாத்திரம் வாழ்ந்தாரில்லை. அவர் மக்கள் இயற்கை நிலையை அளந்துணரும் ஆற்றல் பெற்றிருந்தார். அவர் மனம், பாட்டுறைவிடமாகிய மக்கள்மீது சென்றது. இஃதன்றோ கற்றதன் பயன்? நம் மக்கள் உண்ண உணவின்றி, உடுக்க உடையின்றி, வருந்திவருந்தி, அழகு குலைந்து, பாட்டு நிலை தளர்ந்திருப்பது பா இன்பமூரும் தாஸர்

உள்ளத்தைக் கரைத்தது. இயற்கைப் பாவலராகிய தாஸர், பா இல்லங்களாம் மக்கள் நிலையைப் பண்படுத்த முயன்றார். இம் முயற்சியில் தலைப்படவும் - அதன் பொருட்டு உடல் பொருள் ஆவி மூன்றையும் அர்ப்பணஞ் செய்து அஞ்சா நெஞ்சங்கொண்டு உழைக்கவும் - தூண்டுங் கல்வியே கல்வி யாகும். அக்கல்வி யுலகில் வாழ்ந்த தாஸரை அக்கல்வியுலகம் எவ்வாறு பிரிந்து வாழும் ?

பிறர்க்குதவுங் கல்விபெற்றோர் ஈட்டுஞ் செல்வம் யாருடையது ? தேசபந்து தாஸர் மாதம் மாதம் குறைந்தது ஐம்பதினாயிரம் ரூபா ஈட்டும் பேர் பெற்ற வக்கீலாக விளங்கினார். அவ்வளவு பொருளீட்டிய தேசபந்து இறுதிக்காலத்தில் தமக்கென ஒரு காசுமின்றி உயிர் துறந்தார். தேசபந்து ஈட்டிய பொருளெல்லாம் மற்றவர்க்கே பயன்பட்டன. தேசபந்து எத்துணை மாணாக்கர்களைப் பாதுகாத்து வந்தார் ! எத்துணைக் குடும்பங்களைக் காப்பாற்றி வந்தார் ! எத்துணைத் தேசபக்தர்களுக்கு உதவி புரிந்து வந்தார் ! தேசபந்து தேசபந்துவாகவே வாழ்ந்து வந்தார். தேசபந்து ஏழைமக்களுக்கு நிழல்தருவாய், நீரளிக்கும் ஊருணியாய், பிற உதவி புரியுங் காமதேனுவாய் வாழ்ந்தவர் என்று கூறுவது மிகை யாகாது. அத்தகைத் தரு வீழ்ந்தது; ஊருணி வறண்டது; காமதேனு துஞ்சிற்று. ஏழைமக்கள் என் செய்வார்கள் ? அவர் பிரிவை நினைக்கும்போது கண்ணீர் பெருகுகிறது. அற வழியில் பொருளீட்டித் தக்கார்க்கு உவகையோடு உதவி வந்த ஒரு செல்வரைப் பிரிந்து வாழ எவரே மனந்துணிவர் ?

பண்டைநாளில் எத்துணையோ கொடை வள்ளல்களை ஈன்ற நாடு நமது நாடு. ஆயினும் இந்நாளில் - அறம் தேய்ந்து மறஞ் செறிந்த இக்காலத்தில்-தேசபந்து என்னுங் கர்ணனை நமது நாடு ஈன்றது. அக் கர்ணனை எங்ஙனம் இழந்து வாழ்வோம் ?

தேசபந்துவின் தியாகத்தை உன்னும்போது ஊனும் உருகுகிறது ; உடலும் உருகுகிறது. என்ன தியாகம் ! என்ன தியாகம் ! தியாக மூர்த்தி என்றால் தாஸருக்கே

தரும். காந்தியடிகளின் ஒத்துழையா இயக்கத்துக்கு உயிரளித்த செல்வர் நம் தாஸர். காந்தியடிகளின் ஒத்துழையாமைக்கு இன்றியமையாதது தியாகம் தியாகம் என்று சொல்வது வழக்கம். அச்சொல்வழி நின்று ஒழுகித் தியாகத்தின் பெற்றி தெரித்த பெருமை தாஸருக்கு உரியது. இலட்சக்கணக்கான பொருள் வருவாயளித்துவந்த வக்கீல் தொழிலை என்றும் விட எவரே துணிவர்? நம் தாஸர் துணிந்தார். அவ்வளவோடு நில்லாது, உள்ள பொருளையும் அவர் உதறித் தள்ளினர். 'மீண்டும் - என்றும் - இறக்கும் வரை - வக்கீல் தொழில் செய்வதில்லை' என்று உறுதிமொழி கூறிய உத்தமரல்லரோ நம் தாஸர்? தாஸர் வக்கீல் தொழிலை விட்டதும்-பொருட் செல்வத்தைத் துறந்ததும்-அவ்வளைப்பற்றியன. உயிர்ச்சார்புகளாகிய மனைவியை - மைந்தனை - உறவினரைத் - தம் வழியில் நிறுத்தித் தியாகத்துட்படுத்தல் எவரால் முடியும்? அதுவும் தாஸரால் முடிந்தது.

இளவரசர் இந்தியா போந்திருந்தபோது, தாஸர் மனைவியும், மைந்தனும், சகோதரிகளும் உடலுயிரை மதியாது தொண்டுசெய்ததை அறியாதார் யாரே? தாஸருக்கு முன்னே அவரது மனைவியும் மைந்தனும் சிறைபுக உறுதிகொண்டதை நினைந்தால் தாஸரின் தியாக உணர்வு புலப்படும். கற்பகத்தை யணைந்திருப்பதும் கற்பகமாதல் இயல்பன்றோ? 'தாஸ்' என்னுஞ் சொல்லுக்குத் தியாகம் என்னும் பொருள் கூறலாம். அத்தகைத் தியாகமூர்த்தியை இழந்து தேசம் வருந்துகிறது.

தேசபந்துவின் வீரத்தை விளம்ப நாம் அருகரல்லோம். இளவரசர் போந்தபோது, தாஸர் காட்டிய வீரம், வங்காள சரித்திரத்தில் என்றும் பதிந்து கிடக்கும். அந்நாளில் அதிகாரவர்க்கத்தார் அடக்குமுறையால் ஆற்றிய கொடுமைக்கு ஓர் அளவில்லை. ஹிம்சைக்கு அறிகுறியாகக் காளியை வணங்குங் கூட்டத்தாராகிய வங்காளிகளை அஹிம்ஸா தர்மத்தில் நிறுத்தி ஆண்ட வீரர் நம் தாஸர். பிறர் துன்பத்தைப் பொறுப்பதும் அவர்க்குத் திரும்பத் தீங்கு செய்யாதிருப்பதுமே சிறந்த வீரம். அவ்வீரத்தை வளர்த்தவர் நமது வங்க வீரர்.

சபையில் மாறுதல் வேண்டாதார் வழியே காங்கரஸ் இயங்கினதைக் கண்ட தாஸர், 'வரும் ஆண்டிற்குள் காங்கரஸை என்வழியே திருப்புவேன்' என்று சபதஞ் செய்து, குகையினின்றுங் கிளம்புஞ் சிங்கம்போலக் கிளம்பிச், சுயராஜ்யக்கட்சி கண்டு, தேசத்தின் நாலுபக்கமும் சுழன்று சுழன்று, திரிந்து திரிந்து கர்ச்சித்து, அடுத்த ஆண்டிற்குள் காங்கரஸைத் தமக்கு இணங்குமாறு செய்த வீரம் என்றும் மறக்குந் தகையதன்று. 'சட்ட சபையில் நுழைந்து முட்டுக் கட்டை போடுவேன்; இரட்டை ஆட்சியை அழிப்பேன்' என்று கொண்ட விரதத்தைச் செயலில் நடாத்திக் காட்டிய வீரர் நம் தாஸர். தாஸர் வடிவம் வீரவடிவம்; அவர் பார்வை வீரப்பார்வை; அவர் மொழி செயல் எல்லாம் வீரம். அவ் வீரரைப் பிரிந்த வீரர் எவ்வண்ணம் வாழ்வர்?

தேசபந்து என்றும் இளைஞரோடிருப்பவர். அதனால் அவரை இளைஞரென்றுஞ் சொல்லலாம். தேசபந்துவின் பேச்சுஞ் செயலும் இளைஞரிடத்திருந்து பிறப்பனபோலவே யிருக்கும். அவரைச் சூழ்ந்து என்றும் பிரியாது நீர் நிழல் போல நின்றவர்கள் இளைஞர்கள். தாஸருடன் வாழ்ந்துவந்த இளைஞர்கள் தங்கள் உயிராகிய தேசபந்துவைப் பிரிந்து எங்ஙனம் வாழ்வார்கள்? சிறைப்பட்டுள்ள இளைஞர்கள் மனம் எவ்வாறு பதறும்? அந்தோ கடவுளே! நின் கருணை இருந்தவாறென்னே!

தேசபந்துவின் தேசபக்தி மாசில்லாதது. தேசபந்து தேசத்தைக் கடவுளாகக் கொண்டவர். 'தேசத்துக்கு ஊழியஞ் செய்வது தெய்வத்துக்கு ஊழியஞ் செய்வதாகும்' என்று அடிக்கடி அவர் சொல்வது வழக்கம். அதுவே அவரது சமயம். எவ்வழியிலாவது பாரதமாதாவின் தளையை அறுக்க வேண்டுமென்பது சித்தரஞ்சனர் தவம். அத் தவத்தை நிறைவேற்ற ஒருகாலத்தில் அவர் திலகரோடு சேர்ந்து தொண்டு செய்தார்; மற்றொருகாலத்தில் பெஸண்ட் அம்மையாருக்குத் துணைநின்றார்; இந்நாளில் மகாத்மாவுடன் கலந்து நின்றார்; பின்னே தாமே ஒரு கட்சியுண்டுபண்ணி, அதிகாரவர்க்க ஆட்சிமுறையின் கொட்டத்தைக் குலைத்து

வரலானார். இவ்வேளையில் நம் தேசபக்தர்-தேசபந்து-பெருந் தலைவர்-தாஸர்-விண்ணுலகு சென்றார். நமது தவக்குறைவு. தேசம் துக்கத்திலாழ்ந்து கிடக்கிறது.

கல்கத்தா கற்பகமே ! வங்கச் சிங்கமே! தேசபந்துவே ! சித்தரஞ்சன தாஸரே! உம்மை எவ்வாறு நீத்து வாழ்வோம்? நம்மையீன்ற பாரதமாதா காலில் விலங்கோடு, கைத்தளையோடு, உடையின்றி, முடியின்றி, வனப்பிழந்து, துச்சிற் கிடந்து துயருறுகிறாள் ; அழுகிறாள். தாயின் - விலங்கை - அவள் தளையை - உடைத்தெறியப் புறப்பட்ட வீரப்புதல்வர் நீரல்லரோ ? காந்தியடிகட்கு இனிய கண்மணியே ! உம்மை எவ்வாறு பிரிந்து வாழ்வோம். உம்மை இழந்து வாடும் மனைவி மக்கள் உற்றார் உறவினர் தேசத்தார் முதலியோர்க்கு எம்மொழியால் ஆறுதல் சொல்லவல்லோம் ? மீண்டும் வருக. ஆண்டவனே ! அருள் செய்க. (19–6–1925)

## முடிசூடா மன்னர்

முடிசூடா மன்னர் சுரேந்திர நாதர் வெஞ்சுரத்தால் பீடிக்கப்பட்டு, நேற்று இவ்வுலக வாழ்வை நீத்தார் என்னுஞ் செய்தி கேட்டுத் துயரக்கடலில் அழுந்தினேம். 'சுரேந்திரர்' இவ்வுலகில் நரேந்திரராகவே வாழ்ந்து இப்பொழுது சுரேந்திர பதவி பெற்றார். பாரதமாதாவிற்கு - ஒருவழியிலன்று- பலவழியில் - வாழ்வளித்த பெரியார் நம் சுரேந்திரநாதர். ஒரு காலத்தில் அதிகார வர்க்கத்தைக் கலக்கிய வீரருள் தலைவராய் விளங்கினவர் சுரேந்திர நாதர். லார்ட் கர்ஸன் காலத்தில் வீரமுழக்கஞ் செய்த சுரேந்திரர் நம்முன் தோன்றுகிறார். தற்கால இந்திய அரசியல் கிளர்ச்சிக்கு வித்தாயிருந்த சுரேந்திரர் நம்முன் தோன்றுகிறார். அவரை ஒருகாலத்தில் முடிசூடா மன்னரென்று தேசம் போற்றிப் புகழ்ந்தது. இந்நாளில் 'முடிசூடா மன்னர்' பதவியையும்

'தியாக மூர்த்தி' என்னும் பட்டத்தையும் மிக எளிதாக எல்லாரும் பெறலாம். அந்நாளில் உண்மை உழைப்பின்றி அப்புகழுக்கு உரியராதல் அருமை. நீர் வற்றிய ஏரியிலுள்ள உயிர்களைப்போலக் கிடந்த இந்திய மக்களைத் தமது சொன் மழையால் துள்ளி விளையாடச் செய்த பெருமை சுரேந்திர நாதருக்கு உண்டு.

சுரேந்திரநாதர் உடல் 1848-ஆம் ஆண்டில் தோன்றி நேற்று மறைந்தது. எழுபத்தேழாண்டு வாழ்ந்த இப் பெரியார் வாழ்வு தேச வளர்ச்சிக்கே பயன்பட்டது. அவர் உழைப்புக்கள் சிறப்பாக வங்காளத்திலும் பொதுவாக தேசத்திலும உருக்கொண்டு நிற்கின்றன. அவரது கல்விப் பயன் ரிப்பன் கல்லூரியாய்ப் பொலிகிறது; 'வங்காளி' பத் திரிகையாய் வளர்கிறது. அவரது பரோபகாரம் கல்கத்தா - பாரக்பூர் - நகர சங்கங்கள் வாயிலாக உயிர்கட்கு நலஞ் செய்து வருகின்றன. அவரது அரசியல் தொண்டு நாட்டின் கண்ணைத் திறந்திருக்கிறது.

காங்கரஸை ஈன்று வளர்த்த தந்தைமாருள் சுரேந்திர நாதரும் ஒருவர். சுரேந்திரர் காங்கரஸைத் தமது உயிராகப் போற்றி வந்தார். உயிராகப் போற்றி வந்த காங்கரஸை யும் கொள்கையின்பொருட்டு விட்டு விலகினவர் சுரேந்திர நாதர். தேர்தலில் வெற்றி பெறும் பொருட்டும், பாமரர் கரதாளத்துக்கும், போலிப் புகழுக்கும் மனச்சான்றை விற்கும் நீரர் அல்லர் நமது முடிசூடா மன்னர். பல ஆண்டு களாக முப்பது கோடி மக்களும் 'முடிசூடா மன்னர்' என்று போற்றி வந்த ஒரு பெருமையைக், கொள்கையின் பொருட் டுத் தியாகஞ் செய்த பெரியார் சுரேந்திரநாதர். சுரேந்திரநாத ரது பிற்காலக் கொள்கையில் நாம் மாறுபடுகிறோம். ஆனால் அவர் மனோ உறுதிக்குக் கடமைப்பட்டுப் பணிகிறோம்.

சுரேந்திரர் ஆங்கிலத்தில் பெரும் புலவர்; அம்மொழி யில் நாவன்மை வாய்ந்தவர்; 'நாவல மணி' என்று பேர் பெற்ற கிளாட்ஸ்டனால் புகழப் பெற்றவர். இங்கிலாந்தில் அந்நாளில் இந்தியர் கல்வியாற்றலைப் புலப்படுத்திய முதல்வர்

சுரேந்திரநாதரே. அவர் பேச்சைக் கேட்டவர்க்கு அவர் பேச்சு மாண்பு தெரியும். சுரேந்திரநாதரைப் போலப் பேசப் பயின்றவரும், முயன்றவரும், அவர் தஞ் சொற்பொழிவுகளை நெட்டுருச் செய்து ஒப்புவிப்பவரும் அந்நாளில் பலராயிருந் தனர். 1907, 1908-ல் சுரேந்திரநாதர் பெயர் முழங்கப் பெறாத இல்லம் இருந்திராதென்றே கூறலாம். அக்காலத் தில் - அதாவது வங்காளப் பிரிவுக் காலத்தில் - சுரேந்திர நாதர் செய்த கிளர்ச்சிக்கு ஓர் அளவில்லை.

சுரேந்திரநாதர் அஞ்சா நெஞ்சங் கொண்டு, அதிகார வர்க்கத்தைத் தாக்கிய தாக்கை எழுத்தால் எழுதல் முடியாது. அவரது அக்காலத்திய வீரப் பேச்சை இப்பொழுது படித் தாலும், இரத்த மிலார்க்கும் புது இரத்தம் பொங்கி எழும். 'வங்கச் சிங்கம்' என்றால் சுரேந்திரநாதர்க்குத் தகும். சுரேந்திரரது அந்நாளைய கர்ச்சனை, லார்ட் கர்ஸனை நடுக்குறச் செய்தது ; ஸர் புல்லரை ஓடச் செய்தது ; வங்காளப் பிரிவை ஒன்றுபடுத்தி வெற்றி யளித்தது.

சிறந்த வீரராகிய சுரேந்திரநாதர், கடந்த சில ஆண்டு களாக நாட்டில் எழுந்த அதிதீவிரக் கிளர்ச்சியில் சேராது, ஒதுங்கி நின்று, ஒத்துழைப்பில் கருத்தைச் செலுத்தினமை யால், அவர்மீது படிந்திருந்த தேசமக்கள் கருத்து வேறு வழியில் திரும்பலாயிற்று. அவரது பின்னைய அரசியல் வாழ்வு எத்தகையதாயினும், அரவிந்தகோஷ், விபினசந்திர பாலர், தேசபந்துதாஸர் முதலிய நறுங்கனிகளை நாட்டுக்குத் தந்த விருட்சம் சுரேந்திரநாதர் என்பதை இக்கால இளைஞர் எவரும் மறத்தலாகாது. இப்போது தேசபந்து தாஸர் உயிருடன் இருப்பரேல், அவர்கண்ணீர் ஆறாக ஓடும் என்பதில் ஐயமில்லை. வங்கத் தந்தையல்லரோ நம் சுரேந்திரநாதர் ?

சுரேந்திரநாதர் வாழ்வை உற்று நோக்கினால், அது முற்றும் உரிமைப்போர் நிரம்பிய ஒன்றாகவேயிருக்கும். அப் போரை இறுதியில் அவர் சுயராஜ்யக்கட்சியினிடம் செலுத்தி னார். எழுபத்தேழாவது வயதில் தமக்கு மாறுபட்ட ஒரு கட்சிமீது போர்தொடுத்து, உயிர்துறந்த முதியோரின் பழைய

சேவையை உன்னி, அவர் உழைப்புக்கு அறிகுறியாகத் தேசத்தார் தக்க ஞாபகச் சின்னங்கள் ஏற்படுத்துவாராக.

புகழோடு தோன்றிப் புகழோடு மறைந்த வீரர் சுரேந்திரநாதர். அவரது வரலாற்றை ஒவ்வோர் இந்திய மகனும் மகளும் வாசித்தல் வேண்டும். அப்பெரியார் வீரமும் போரும் கிளர்ச்சியும் எழுச்சியும் ஊக்கமும் அஞ்சாமையும் செறிந்த வாழ்வு நம்மனோர்க்கு ஓரெடுத்துக்காட் டென்பதில் ஐயமில்லை.

வங்கச் சிங்கமே! முடிசூடா மன்னவரே! சுரேந்திர மணியே! நுமது கர்ச்சனையும் ஒடுங்கிற்றோ! நுமது முடியுஞ் சாய்ந்ததோ! நுமது உடலும் மறைந்ததோ! பாரதமாதா ஒரு வீரப் புதல்வரை இழந்தாள்; ஆங்கிலமாது ஒரு நாவலரை இழந்தாள்; உலகம் ஒரு சிறந்த கர்மயோகியை இழந்தது. சுரேந்திரநாதர் ஆன்மா சாந்தநிலை எய்துக.

(7-8-1925)

## தொண்டரின் பிரிவு

உலகம் பல கற்றவரைப் பெறுதல்கூடும்; செல்வரைப் பெறுதல்கூடும்; நாவலரைப் பெறுதல் கூடும்; பாவலரைப் பெறுதல்கூடும்; வீரர்வேந்தரையும் பெறுதல்கூடும். ஆனால் ஒருசில தொண்டரைப் பெறுதல் அரிது; அரிது. அத் தொண்டர் ஒருவர் பிரிந்தால், மீண்டும் அத்தகைய ஒருவரைப் பெறுதல் எளிதோ?

அந்தோ! நமது நாட்டுத் தொண்டர் ஒருவர் பிரிந்தார்! உண்மைத் தொண்டர் ஒருவர் பிரிந்தார்! அத்தொண்டர் சென்ற வியாழக்கிழமை நம்மை விட்டகன்றார். அறிவு முகிழ்த்த நாள்தொட்டுப், பருவுடல் மறையும்வரை, 'தொண்டு தொண்டு' என்று தொண்டையே நினைந்து, தொண்டையே பேசி, தொண்டையே செய்து வாழ்ந்த பெருந்தகையை - நீதி மணியை - ஒழுக்க உறையுளை - சமரச ஞானத்தை - நமது

சதாசிவத்தை - இழந்தோம்; இழந்தோம். ஆண்டவனே! உயிர்கட்குச் சேவை செய்வது உன்னை வழிபடுவது என்று வாழ்வு நடாத்திய உனது தொண்டரை இவ்வேளையிலா அழைத்துக்கொண்டனை! ஏழைமக்கள் உளமெலாங் கவர்ந்து நின்ற ஒருவரை ஏனோ அழைத்துக்கொண்டனை!

ஸர். டி. சதாசிவ ஐயர் 1861-ம் ஆண்டிற் பிறந்தார்; பதினறுவது வயதில் பி. ஏ. பரீட்சையில் தேறினர்; பின்னை எம். எல். பட்டம் பெற்றார்; சின்னாள் வக்கீல் தொழில் புரிந்து, பின்னர் டிஸ்டிரிக்ட் முன்ஸிப் வேலையில் அமர்ந்தார்; அப்பதவியினின்றும் படிப்படியாக முன்னேறி முன்னேறிச் சென்னை உயர்தர மன்ற நீதிபதியானர்; முடிவில் சில ஆண்டுகளாக அறநிலையப் பாதுகாப்புக் கழகத் தலைவராக வீற்றிருந்தார். இத் தொழின்முறைகளில் நம் ஐயர் தம்மை மறந்து தொண்டராகவே கடனாற்றி வந்தார். அத் தொண்டரை உலகம் இழந்தது!

ஸர். டி. சதாசிவ ஐயருடைய வாழ்க்கையில் அறியக் கிடக்கும் செம்மை நலன்கள் பலப்பல. அவைகட்கெல்லாம் அடிப்படையாக நிலவியது, தம்மை ஈன்ற அன்னையாரைக் கடவுளாக இளமைதொட்டு அவர் போற்றி வந்தமையாகும். உலகில் பெரியராக ஒளி செய்தவர் அனைவரும் இளமையில் இத்தொண்டில் ஈடுபட்டவராவர். நம் ஐயர் வாழ்வு நலத்துக்கும் தொண்டின் பெற்றிக்கும் ஊற்றாயிருந்தது அவர் கொண்ட தாய்மை வழிபாடாகும். பின்னர்த் தமக்கு வாழ்க்கைத் துணையாய் அமைந்த பெண்தெய்வத்தையும் தம்மைப் போலப் பாவித்து வந்தமையும் அவர் தொண்டிற்கு உறு துணையாயிற்று. சதாசிவ ஐயர் இல்வாழ்க்கை, நல்வாழ்க்கைக்கோர் இலக்கியமாக ஒளிர்ந்தது. ஐயரின் தாய்மை வழிபாடும், ஒழுங்குபட்ட இல்லறமும் அவர் தொண்டாதற்கு மூலகாரணமாக நின்றன.

ஸர். டி. சதாசிவ ஐயர் இளமையில் அறிஞர் ரகுநாத ராயரைக் குருவாக் கொண்டனர்; பின்னே டாக்டர் பெஸண்ட் அம்மையாரைக் குருவாக்கொண்டனர். அவர்பால்

குடிகொண்டிருந்த குருபக்திக்கோர் அளவில்லை. குருபக்தி யுடையார் வாழ்வு வளம்பெறல் இயல்பன்றோ?

சதாசிவ ஐயர் கீதாசாரியரிடத்தில் பேரன்பு வாய்ந்தவர்; அவரை இடையறாது வழிபாடு செய்பவர். கீதாசாரியரின் அறிவுறுத்தல் என்னை? பயன் கருதாத் தொண்டாற்றுவ தன்றோ? அத்தொண்டராயினார் நம் சதாசிவனார்.

ஆண்டவன் நீதிவடிவினன் என்று மறை முழங்குகிறது. அவ்வுண்மை நீதிபதி - சதாசிவ ஐயர் வாழ்வில் உருப்பெற்று நின்றது. நீதிபதி வேலையில் ஐயர் நீதிமணியா யிலங்கியது உலகறிந்தவொன்று. நண்பர், நொதுமலர், மாற்றார் என்னும் உணர்வின்றி நீதி வழங்கிய அறவோர் நம் ஐயர். நீதியே! அந்நீதிபதியை மீண்டும் பெறுவைகொல்!

தொண்டர் சதாசிவ ஐயர் பிறந்தது பிராமண குலம். தம்மை அக்குலத்தாரெனக் கருதி ஐயர் செருக்குற்றுழன்றா ரில்லை. அவர் பிறப்பில் உயர்வு தாழ்வு கருதாதவர்; 'பிறப் பொக்கும் எல்லா வுயிர்க்கும்' என்னுங் கொள்கை யுடை யவர். நீண்ட நாள் பயிற்சியால் பிறப்பில் தம்மைத் தாழ்ந்த வர் என்று கருதியுள்ள ஏழைமக்கள்பால் சதாசிவ ஐயர் வைத்திருந்த அன்பிற்கோர் எல்லையில்லை. ஆண்டவன் படைப்பில் உயர்வு தாழ்வில்லை என்னும் உண்மையை, அம் மக்கட்கு அறிவுறுத்தி, அவர்களைத் தட்டி எழுப்பியவருள் ஐயரும் ஒருவர். சாதி முனைப்பாதல், பதவி மிடுக்காதல், செல்வச் செருக்காதல் சிறிதுமின்றித், தம்மை ஒரு தொண்ட ரெனக் கருதி, ஏழைமக்கள் எங்காதல் எப்பொழுதாதல் அழைப்பினும் அகமலர்ச்சியுடன் போந்து, பணியாற்றிச், சாதி வேற்றுமையைச் செயலில் களைந்து, பல வழியிலுஞ் சமரசத்தை வளர்த்து வந்த ஒரு பெரியார் விண்ணுற்றது, மண்ணிற்குப் பெரு நஷ்டம் என்று சொல்லவும் வேண்டுமோ?

ஸர். டி. சதாசிவ ஐயர் சமயப்பற் றுடையவர். சமய மெனில் எச்சமயம்? எவ்வுயிரினும் ஈசன் உறைகிறான் என்று, எவ்வுயிர்க்குந் தீங்கு செய்யாது, அவ்வுயிர் நலன்

நாடித் தொண்டுபுரியுங் கடவுள் நெறியென்க. அச்செந்நெறி பற்றி நின்ற அந்தணர் சதாசிவ ஐயர்.

சதாசிவ ஐயர் வெளிப்போந்து தொண்டாற்றத் தொடங்கிய நாள்தொட்டு, நாட்டில் கனன்று மூண்டெரிந்து வந்த சமயப்பூசல் பெரிதுந் தணியலாயிற்று. சதாசிவ ஐயர் தொண்டு பரவிய இடங்களிலெல்லாம் சமரசம் நிலவல் கண்கூடு. அச் சமரசஞானியை மீண்டும் உலகம் பெறுவ தென்றோ ?

சதாசிவ ஐயர் தொண்டிற்கோர் இலக்கியமாக விளங் கினவர் என்று சுருங்கச் சொல்லலாம். அத்தகைப் பெரி யார் இவ்வுலக வாழ்வை நீத்தார் ; உலகம் ஒரு நீதிபதியை இழந்தது ; இந்தியா ஒரு ஜனகரை இழந்தது ; தமிழ்நாடு ஒரு வள்ளுவரை இழந்தது ; தியோசாபிகல் சங்கம் ஒரு தொண்டரை இழந்தது ; உயிர்க்கினிய தோழரை நாம் இழந் தோம். என் செய்வோம் ! எல்லாம் ஆண்டவன் செயல் !

ஸர். டி. சதாசிவ ஐயர் பிரிவு குறித்து ஆற்றொணுத் துயரத்தில் வீழ்ந்து வருந்தும் அவரது வாழ்க்கைத் துணைவ ராம் எம் அன்னையார்க்கும், மற்றவர்கட்கும் எமது அநு தாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம். சாந்தி ! சாந்தி !! சாந்தி !!! (30–11–1927)

## ஒருகுலத்துக் கொருமைந்தன்

கடந்த வாரம் தமிழ்நாட்டில் 'நவசக்தி'யின் சிலம்பு ஒலியா தொழிந்ததை அன்பர்கள் கவனித்திருக்கலாம். அக் காரணத்தை வருத்தத்துடன் குறிக்கிறேன்.

' நவசக்தி ' காரிய நிருவாகரும், எனது அருமைத் தமையனுருமாகிய திரு. வி. உலகநாத முதலியாருக்கு இன் புதல்வனுய்ப் பிறந்து, எங்கள் குலத்துக்கு ஒரு மைந்தனுய், பின்னுளில் 'நவசக்தி'யை அன்புடனேற்றுத் தொண்டாற்ற

வல்லனாய், அதற்குரிய கல்வி அறிவு திறமை முதலியன வாய்க்கப் பெற்றானாய், எனக்கினியனாய்ச் செங்குருத்தென வளர்ந்து வந்த எனது கண்மணி - பாலசுப்பிரமணியன், சென்ற செவ்வாய்க்கிழமை இரவு 11-மணிக்கு இவ்வுலக வாழ்வு நீத்ததை நேயர்கட்கு ஆறாத்துயருடன் தெரிவித்துக் கொள்கிறேன். இற்றைக்குப் பத்தாண்டுக்கு முன்னர், என் மனைவி மக்களை அழைத்து, என்னைத் தன்னந்தனியனாக்கிய ஆண்டவன், தமையன்வழிப் போந்து, எனக்குப் பல வழியினும் ஆறுதலளித்து வந்த ஒரு மைந்தனையும் இப்பொழுது அழைத்துக்கொண்டான். எச்செல்வமும் பெறாத வறியேனுக்குத் தமையன்வழிக் கிடைத்த சேய்ச் செல்வமும் போயிற்று. எளியேன் வாழ்வை ஆண்டவன் திருவுள்ளப்படி நடாத்துவானாக.

எங்கள் குலத்துக்கு ஒரு மைந்தனாய், ஒரு மணியாய், அமிழ்தாய் விளங்கிய பாலசுப்பிரமணியன், 1905-ம் ஆண்டு இம்மண்ணிற் பிறந்து, 1928-ம் ஆண்டு மறைந்தான். அவன் சென்னை வெஸ்லி கல்லூரியில் இண்டர்மீடியட் வகுப்பில் வாசித்துவந்த மாணாக்கன். இடையிடையே அவன் நோய் வாய்ப் படாதிருப்பின், அவன் எப்பொழுதோ கல்லூரிப் படிப்பை முடித்திருப்பன். அவனை இடையிடையே நோய் தாக்கித்தாக்கி அவனது பள்ளி வாழ்விற்குக் கேடு சூழ்ந்து வந்தது. நோய் காரணமாகச் சில வேளைகளில் நாள் கணக்கிலும், சில வேளைகளில் திங்கள் கணக்கிலும், சில வேளைகளில் ஆண்டுக் கணக்கிலும் அவன் பள்ளியினின்றும் நிற்க நேர்ந்ததுண்டு. நோய் சிறிது ஒதுங்கினதும், மீண்டும் பள்ளி நோக்குவது அவனது வழக்கம். பள்ளியை விடுத்து முற்றும் விலகுமாறு, தாய் தடுப்பினும், தந்தை தடுப்பினும், மற்றெவர் தடுப்பினும் மைந்தன் கேட்பதில்லை. கல்விமீது அவன் வைத்திருந்த பித்துக்கோர் அளவில்லை. படுக்கையிலும் ஏதாவதொன்றை அவன் படித்துக்கொண் டிருப்பன். நோயுடைய மைந்தனது படிப்புவேட்கை உடலுக்கு ஊறு செய்யுமென்னும் இரக்கத்தால் என் தமையனார் அடிக்கடி அவனைக் கடிவதுமுண்டு.

பாலசுப்பிரமணியன் பள்ளிப் படிப்புடன் மட்டும் நிற்பதில்லை. அவன் பந்தாட்டத்தில் பேர் பெற்றவன். அவ்வாட்டத்துக்கென ஒரு சிறு கழகத்தையும் ஒழுங்குபெற அவன் நடாத்தி வந்தான். அவன் ஓய்ந்த வேளையில் 'நவசக்தி' தொழிற்சாலையுள் நுழைந்து, தொழிலாளருடன் கலந்து, ஆங்குள்ள தொழின்முறைகளைப் பயில்வன். அச்சுக்கூட வேலைகளில் பலவற்றை அவன் பயின்றிருந்தான். பசுஞ் செடி கொடிகளை வைத்து வளர்ப்பதில் அவனுக்குப் பெரு விருப்பம். செடி கொடிகளுக்கு அவன் செய்த தொண்டு அதிகம். விருந்தினர்க்கு முகங்கோணாது அவன் தொண்டு செய்வன். அவனது கல்வி அறிவுக்கேற்ற அமைதி பொறுமை அடக்கம் இரக்கம் முதலியனவும் அவன்மாட்டுப் பொருந்தி யிருந்தன. எல்லாம் பொருந்திய அருமை மைந்தனை ஆண்டவன் விரைவில் அழைத்துக்கொண்டான். அவன் செயல்களும் இயல்புகளும் உருக்கொண்டு உலவுவது போல 'நவசக்தி' நிலையத்தில் உலவி உலவி உள்ளத்தை உருக்கி வருகின்றன. பெறற்கரிய மாணிக்கத்தைப் பெற்றோம் ; இழந்தோம்.

இளமையில் தொடர்ந்த இருமல், நாளடைவில் என்புருக்கியாய் வளர்ந்து வளர்ந்து, மைந்தனைப் படுக்கையில் கிளத்தியது. பாலசுப்பிரமணியனை வெளிப்படையாக நோய் தாக்கிய கால எல்லை ஏறக்குறைய ஆறுண்டு. ஏறக்குறைய முதல் நான்காண்டு, பையனைப் படுக்கையில் கிளத்தாதொழிந்தன. பின்னிரண்டாண்டு, அவனைப் படுக்கையில் அமர்த்தி, அவனது கல்விப்பித்தைக் கடவுள் பித்தாக மாற்றின.

பாலசுப்பிரமணியனுக்கு உணவூட்டிய தந்தையார் - கல்வி யளித்த தந்தையார் - என் தமையனார் - மைந்தனுக்கு உயிர் உணவுங் கொடுத்தற்குத், தாம் வழக்கமாக நிகழ்த்தி வந்த வழிபடு கடவுட்பூசையுடன், தமக்கொரு பெரியார் அறிவுறுத்திய மண்டல பூசையுந் தொடங்கினர் போலும். அப்பூசையின் ஒவ்வொருபோதும், மைந்தன் தன்னை மறந்து அதில் மூழ்குவதை யான் பன்முறை கண்டதுண்டு. மண்டல பூசையின் முடிந்த நாளாகிய நாற்பதாம் நாள் காலையில் நிகழ்ந்த

சிறப்புக்களையும், மாலையில் நடந்த சிறப்புக்களையும், அவ் வேளைகளில் ஏழைமக்கள் உணவு கொண்டதையும், அடியார்கள் பாடிய திருப்பாக்களையுங் கண்டு கேட்டு இன்புற்று, அப்பூசை முடித்து எல்லாரும் உண்டு உறக்கத்துக்குப் போம்போது, ஆருயிர் மைந்தன் நொடிப்பொழுதில் இன்னுயிர் துறந்தான். அவ்வுயிர், அமைதியில் - ஆண்டவன் ஒளியில் - ஆறுதல் பெறுக.

இத்துணை நாள் மைந்தன் பொருட்டுத் தாயாரும், தந்தையாரும், மற்ற உறவினரும், நண்பர்களும் இடையீடின்றிச் செய்த முயற்சியை - பட்ட பாட்டை - உழைத்த உழைப்பை - எங்கும் கண்கொண்டு காணும் ஆண்டவன் அறிவன். மனித முயற்சிகள் எவ்வளவுண்டோ அவ்வளவும் ஒல்லும்வகை செய்யப்பட்டன என்று சுருங்கச் சொல்கிறேன்.

நாங்கள் மனிதர்கள் ; கடனாற்ற வல்லேம். வேறென் செய்ய வல்லேம் ? ஆண்டவன் திருவுள்ளம் வேறு விதமாயிருப்பின், மக்கள் முயற்சி என்னும் ? அவனன்றி ஓரணுவும் அசையுமோ ?

'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்னும் வேதாந்த உண்மை படிந்த உள்ளமும் மைந்தன் காதலை மறக்குங்கொல் ! மைந்தன் காதலைத் தணிக்கும் மருந்தும் உண்டோ ?

பாலசுப்பிரமணியன் பிரிவால் நெஞ்சுடைந்து கிடக்கும் அடியேன், அருமை மைந்தனை - ஒரு மைந்தனை - பண்பு வாய்ந்த மைந்தனை-இழந்த தந்தையார்-என் அருமைத் தமையனார்க்கும், நீர் நிழல்போல் மைந்தனை விடாது, சில சமயம் ஊண் உறக்கமின்றியும் இரவு பகல் பாதுகாத்த தாயார்-என் அண்ணியார்க்கும், தங்களுக்குரிய செல்வமெல்லாம் அண்ணனே என்று கருதியிருந்த அவனது இளஞ் சகோதரிகளாகிய இரண்டு அருமைப் பெண் குழவிகட்கும், 'பாலனே' எங்கள் வாழ்வு என்று எண்ணிய மற்றவர்கட்கும் எம்மொழியால் ஆறுதல் கூறவல்லேன் ? நிற்பது துன்பமலையன்றோ ? எல்லாம் ஆண்டவன் செயல்.

ஆண்டவன் எந்நோமும் என்னைச் சோதித்தவண்ணமா யிருக்கிறான் ; இப்பொழுது ஒரு பெருஞ் சோதனை செய்த னன். எல்லாம் அவன் செயலென்று வாழும் வாழ்வையே விழைந்து நிற்கிறேன்.

ஆண்டவனே ! உன்னை மறவேன் ; உன்னை விடேன் ; உன்கழலேத்துஞ் செல்வமே எனக்குரிய பெருஞ் செல்வம் ; உன்னருட் செல்வத்தை நாடி நிற்கிறேன். இந்நாட்டத்துடன் இயன்ற தொண்டாற்றி வருகிறேன். நாயேன் மனிதன் ; பாவி ; குற்றமுடையேன் ; குறையுடையேன் ; என் பிழை பொறுத்தாட்கொள்ளல் வேண்டும்.

‘ அழுக்கு மெய்கொடுன் திருவடி யடைந்தேன்
அதுவு நான்படப் பாலதொன் றானால்
பிழுக்கை வாரியும் பால்கொள்வ ரடிகேள்
பிழைப்ப னாகிலும் திருவடிப் பிழையேன்
வழுக்கி வீழினும் திருப்பெய ரல்லால்
மற்று நானறி யேன்மறு மாற்றம்
ஒழுக்க என்கணுக் கொருமருந் துரையாய்
ஒற்றி யூரெனும் ஊருறை வானே ’—சுந்தரர்.

(17–10–1928)

# இமயம் சாய்ந்ததோ ?

இமயமுஞ் சாய்ந்ததோ ? சிந்துவும் வறண்டதோ ? என்று அலறுகிறோம் ; அழுகிறோம் ; அலமருகிறோம். தலைவருள் இமயமாய்ப், பக்தருள் சிந்துவாய் விளங்கிய நம் லஜபதியும் நம்மை விட்டுப் பிரிந்தார்.

பாஞ்சால சிங்கத்தை - பாரத வீரத்தை - அஞ்சா நெஞ்சை - ஆண்டகைமையை - தியாக வள்ளலை - கல்விக் கரசை - லஜபதியை - இனி என்றே காண்போம் ! பாஞ்சாலியின் அழுகை என்றே நீங்கும் ! பாரத தேவியின் புலம்பல்

என்றே நிற்கும்! லஜபதி போன்ற தலைவரை - தேசபக்தரை - நாம் என்றே பெறுவோம்! உன்ன உன்ன ஊன் உருகுகிறது; உள்ளங் குழைகிறது.

பாரத மக்களே! நமது ஆருயிர் லாலா லஜபதிராய் எங்ஙனம் மாண்டார்? உன்னி உன்னி உருகுங்கள். நோய்வாய்ப்பட்டா? படுக்கையில் பன்னாள் புரண்டா? ஆ! ஆ! நெஞ்சந் துடிக்கிறது.

சைமன் குழு லாகூர் போந்தபோது, உரிமைப் போர்க்களத்தில், புறமுதுகிட்டு ஓடாமல், போலீஸ் அதிகாரியின் தடி அடியால், மார்பில் காயந்தாங்கி, வீரகர்ச்சனையுடன் நமது சிங்கஏறு வீரசுவர்க்கம் புகுந்தது. இவ்வாறு நாட்டுக்காக எந்தத் தலைவர் உயிர் துறந்தார்? கிழவயதில் அஞ்சா நெஞ்சுடன் பாரத நாட்டு உரிமைப் போரில் இன்னுயிர் துறந்த லஜபதியின் தேச பக்தியை - வீரத்தை - எங்ஙனம் புகழ வல்லோம்?

லாலா லஜபதிராய் எதற்கெனப் பிறந்தாரோ, எதற்கெனக் கற்றாரோ, எதற்கென உழைத்தாரோ அதற்கெனச் சிறைப்பட்டார்; அடிபட்டார்; உயிர்துறந்தார். அவர் வீரத்தில் பிறந்து, வீரத்தில் வளர்ந்து, வீரத்தில் உயிர்நீத்தார். லஜபதியின் வீரவாழ்வு வீர உலகிற்கு ஓர் இலக்கியமாகப் பொலிகிறது.

லாலா லஜபதிராய் 1895-ம் ஆண்டு இவ்வுலகில் பிறந்தார்; பிறந்து கற்க வேண்டுவனவற்றைக் கற்றார்; இல்லறம் ஏற்றார்; வக்கீல் தொழில் செய்தார்; அவ்வளவோடு அவர் வாழ்வு முடிந்துவிடவில்லை. பின்னே அவர் தொழில் முதலியவற்றை விடுத்து, 'நாடு நாடு' என்று சேவையி லிறங்கினார். அவர் தமது கல்வியை நாட்டின் உரிமைக்குப் பயன்படுத்த முயன்றார். 'நாட்டின் உரிமை' என்று லாலா லஜபதிராய் வெறுங் கூக்குரலிட்டுக்கொண் டிருந்தாரில்லை. அவர் நாட்டுக் கல்விக்கென உழைத்தார்; சமய ஞானத்துக்கெனப் பாடுபட்டார்; நாட்டுரிமைக்காகத் தமது உடல் பொருள் ஆவி மூன்றையுந் தத்தஞ் செய்தார். லஜபதியின் கல்வியும்,

சமய ஞானமும், தொண்டும், பிறவும் நாட்டுக்கு எவ்வெவ் வழியில் பயன் பெற்றன என்று நிறுவிக் காட்டுதற்குச் சான்றுகள் பல வேண்டாம். அதிகாரவர்க்கம் அவர்மீது நாட்டஞ் செலுத்தி 'அருள்' புரிந்ததொன்றே சாலும்.

பாஞ்சால சிங்கத்தை எப்பொழுதாவது அதிகாரவர்க்கம் மறந்ததுண்டா ? அதிகாரவர்க்கம் பாலகங்காதர திலகரை யாதல் ஒருபோது மறந்தாலும் மறந்திருக்கும். அது லஜபதியை ஒருபோதும் மறந்திராது. லஜபதி என்றால் அதிகாரவர்க்கத்துக்கு நடுக்கம். விசாரணை யொன்று மில்லா மல் 1907-ம் ஆண்டு லஜபதியை அதிகாரவர்க்கம் நாடு கடத் தியதும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திலேயே லாலா தமது நிழலையுங்காட்டாது அமெரிக்காவில் பல ஆண்டு வதிய நேர்ந் ததும், ஒத்துழையாமையில் நம் ராயர் சிறைப்பட்டதும், முடிவில் அதிகாரவர்க்கத்திற் சேர்ந்த போலீஸாரால் நம் வீரர் அடியுண்டு மாண்டதும் என்ன காட்டுகின்றன ? லஜபதி அதிகாரவர்க்கத்துக்கு ஓர் இடிபோல் இலங்கி வந்தார் என் பதைக் காட்டுகிறது.

லஜபதிராய் அதிகாரவர்க்கத்துடன் போர் புரிந்து நின்ற துடன், நாட்டிலுள்ள குறைபாடுகளையுங் களைய முயன்று வந்தார். தீண்டாமை விலக்கிற்கும், சாதி வேற்றுமை களை தற்கும், பெண்ணுரிமைப் பேற்றிற்கும் லாலா லஜபதிராய் உழைத்த உழைப்புக்கோர் அளவில்லை. லாலா லஜபதிராய் அமெரிக்காவினின்றும் இந்தியாவில் அடிவைத்ததும் 'தொழி லாளர் நலன் நாட்டின் நலன்' என்று முழங்கினார் ; தொழி லாளர் காங்கரஸில் தலைமை வகித்தார் ; வேறு பல வழிகளி லுங் தொழிலாளர்கட்காகப் பாடுபட்டார். லஜபதியின் தொண்டுகளையும் இயல்புகளையும் நினைக்க நினைக்கக் கண்ணீர் பெருகுகிறது.

லாலா லஜபதிராய் பொருண்மைமீது கருத்தைச் செலுத்திப் போரிடுவாரேயன்றி, மனிதர்மீது காழ்ப்போ பகைமையோ கொண்டு போர் தொடுப்பதில்லை. லஜபதிராய் அதிகாரவர்க்க அமைப்பைச் சாய்த்துப், பொறுப்பாட்சி

அமைப்பை உண்டுபண்ண முயன்றாரே யன்றிப், பிரிட்டிஷ் மக்களிடத்தில் காழ்ப்போ பகைமையோ என்றுங் கொண்டாரில்லை. லஜபதிராய் பொது அமைப்புக்கு எப்பொழுதுங் கட்டுப்பட்டு நடந்தே வந்தார். சூரத் காங்கரஸ் தலைமைப் பதவியைத் தமக்கு வழங்கப் பாலகங்காதர திலகர், அரவிந்த கோஷ் முதலியோர் முயன்றபோதும் அப்பதவி ஏற்க லஜபதிராய் விரும்பினாரில்லை. ஒத்துழையா இயக்கத்தைப்பற்றி லஜபதிராய்க்குச் சிற்சில ஐயப்பாடுகளிருந்தன. போராட்டத்தின்போது, அவைகளை அவர் பாராட்டாது, சிறை புகுந்து, அவ்வியக்கத்துக்கு ஊக்கமூட்டினார். சுயராஜ்யக் கட்சியைத் தொடக்கத்தில் லஜபதி ஆதரித்தார். பின்னே அவர் அக்கட்சியின் சூழ்ச்சியைக் கண்டு, அதை விடுத்து, நீதிவழி நின்று, தேர்தலில் இரண்டிடங்களில் வெற்றிபெற்று, அதன் புன்மையை நாட்டுக் குணர்த்தினார். அந்நாள் தொட்டுப் பண்டித மோதிலால் நேரு லஜபதிராயைத் தாக்கி வந்தார். லாலா அவர்கள், அத்தாக்குதல்களைப் பொருட்படுத்தாது, சர்வ கட்சி மகாநாட்டில் நேரு திட்டத்துக்கு ஆதரவளித்தார். பெரும்பான்மை, பேர், புகழ் முதலிய சிறுமைகட்குச் சிலர் எளிதில் மனச்சான்றை விற்றுவிடுவர். நம் லஜபதியோ வானிடிந்து வீழினும், தமது மனச்சான்றை அச்சிறுமைகட்கு எளிமை யாக்கமாட்டார். தற்போது நாட்டுக்கு வேண்டற்பாலது குடியேற்ற நாட்டுரிமை என்று தமது மனச்சான்று சென்றவழி அவர் நின்று கடனாற்றியது நேயர்கட்குத் தெரியும். அவர் 'சுயேச்சை' என்னும் வீண் கூக்குரலில் சேர விழைந்தாரில்லை. சைமன் குழுவைப் பகிஷ்கரிக்கவேண்டுமென்று காங்கரஸூம் சர்வகட்சி மகாநாடும் பணித்தது அறமென்று கருதி, அத்தொண்டில் தாமே நேரில் தலையிட்டுப் போலீஸ் அதிகாரியால் தாக்குண்டு நம் பெரியார் மரணமடைந்தார். இன்னோரன்ன அற இயல்புகள் லாலா லஜபதிராயைப் பெரியாராக்கின.

லாலா லஜபதிராய் பாரத நாட்டின் உரிமைக்கென உருத்தாங்கி வந்தவர். அவர் பாரத நாட்டையே பெருந் தெய்வமாகப் போற்றி வந்தார். 1919-ம் ஆண்டு ஓட்வியர்

அடக்குமுறைக்கும், டையர் குண்டுக்கும் பாஞ்சாலம் இரையானபோது, லஜபதிராய் அமெரிக்காவினின்றும் தாய் நாட்டை நினைந்து நினைந்து, உருகி உருகி, உரைத்த மொழி கள் ஈண்டு நினைவிற்கு வருகின்றன. 'ஐந்து நதி பாயும் எனது அழகிய நாட்டை எப்பொழுது காண்பேன் ? எனக் குச் சிறகில்லையே. சிறகிருப்பின் பறந்து செல்வேனே' என்று நாட்டை நோக்கிக் கண்ணீருகுத்த தேசபக்தர் நம் லஜபதி. அவரது பிரிவை எங்ஙனம் ஆற்றுவோம் !

லஜபதியின் வீரமொழிகளும், வீரச்செயல்களும் நாட் டில் மலையெனவும் நதியெனவும் நிற்கின்றன ; ஓடுகின்றன. பாரத நாட்டில் இப்பொழுது தோன்றியுள்ள உரிமை வேட் கைக்கும் - அஞ்சாமைக்கும் - மூலமாய் நின்ற மூவருள் நம் லஜபதியும் ஒருவர். லஜபதியின் பிரிவுகுறித்து மக்கள் மட்டுமா அழுகிறார்கள் ; மரஞ் செடி மலை மேகம் முதலியன வும் அழுவதுபோல் தோன்றுகின்றன. எங்கணும் அழுகை; எங்கணும் புலம்பல் ; எங்கணும் துயரம்.

ஐந்து நதி பாயும் அழகியநாட் டண்ணலே ! முப்பது கோடி மக்களின் ஆருயிரே ! லஜபதி ! லஜபதி ! நும் பிரிவை எங்ஙனம் ஆற்றுவோம் ! காலமெல்லாம் நாட்டின் உரிமைக் கென ஊனையும் உயிரையும் பிழிந்து பிழிந்து உயிர் துறந்த பெருமானே ! நும்மை எங்ஙனம் மறப்போம் ! இறுதிக் காலத்தும் நாட்டின்பொருட்டு அதிகாரவர்க்கத்தின் பொல் லாத அடி தாங்கியன்றோ உயிர்நீத்தீர் ? முப்பது கோடி மக்கள் தலைவரே ! எங்கள்பொருட்டு உயிர்நீத்தீர். நுந் தியாகத்தை எங்ஙனம் மறப்போம் !

பாரத மக்களே ! நாம் தொகையில் முப்பது கோடி பேர் ; நம் பெருந்தலைவரைப் போலீஸார் தடிஅடிக்கு இரை யாக்கிவிட்டோம். இனி என்செய்வது ? நமது கடமை யென்ன ? லஜபதியின் நோக்கத்தை நிறைவேற்ற முயலல் வேண்டும். லஜபதியின் பருவுடல் மறைந்தாலும், அவரது சிங்கநோக்கும், தியாகமும், வீரமும் அருவமாக நாடு முழுவ தும் பரந்து வீறிடுகின்றன; உங்களைத் தட்டி எழுப்புகின்றன.

எழுங்கள் ; எழுங்கள். அவைகளின் அறிகுறியாக ஆங்காங்கே லஜபதிக்கு உருவச்சிலை நாட்டுங்கள் ; நிலையங்கள் எழுப்புங்கள் ; மற்றும் பல அமைப்புகள் காணுங்கள். லஜபதி விடுத்துச்சென்ற உரிமைப்போர் தொடுக்க எழுங்கள் ; எழுங்கள். உரிமை நாட்டில் லஜபதிபோன்ற தலைவர் போலீஸாரால் அடிபட்டு இறப்பரோ? நாட்டின் நிலையை உன்னுங்கள் ; உன்னி உன்னி உரிமைவேட்கை கொள்ளுங்கள் ; கொண்டு எழுங்கள் ; எழுங்கள். எழுந்து அஹிம்சா தர்மப்போர் முன்னணியில் நில்லுங்கள். லஜபதிக்கு அமைக்கத்தக்க நினைவுக்குறி இதுவே.

ஆண்டவனே ! லஜபதியை அழைத்துக்கொண்டனை ; லஜபதி போன்ற ஒரு தலைவரை நல்குக ; லஜபதியின் வீரத்தை எங்களிடை நிலைபெறுத்துக.

பயன்கருதாப் பணியாற்றிப் போர்க்களத்தில் வீர முழக்கத்துடன் பருஉடலை நீத்த லஜபதியின் இன்னுயிர் ஆண்டவன் திருவடிநீழலில் ஆறுதலடைவதாக.

(21-11-1928)

## பெருநாவலர் பிரிந்தார்

தமிழ்நாட்டில் ஒரு பெரும் நாவலராயிலங்கிய அன்பர் - ம. ரா. குமாரசாமியார் சென்ற புதன்கிழமை விண்ணுற்றார். நமது உளங்கொண்ட நண்பர் - இப்பொழுது உளங்குழைக்கும் நண்பர் - குமாரசாமியாரை - அவரது மரகத வடிவை - மலர்ந்த முகத்தைக் - குளிர்ந்த நோக்கை - இனி என்றே காண்பேம் ! இடியோ மழையோ கடல்மடையோ என்னும் அவரது அரிய சொற்பெருக்கை இனி என்றே கேட்பேம் ! அந்தோ! அந்தோ! இனி ம. ரா. என்று எவரை அழைப்பேம்!

மணம்பூண்டி-குமாரசாமியாரின் பிரிவு, தமிழ்நாட்டின் மண்ணையும் உருக்கும் ; கல்லையும் உருக்கும் ; மரத்தையும்

உருக்கும். தமிழ்நாடே துன்பக் கடலில் மூழ்கிக் கிடக்கிறது. தமிழ்நாட்டில் ம. ரா. புகாத மூலை முடுக்குண்டோ? அவர் ஏருத வண்டியுண்டோ? அவர் குடியாத தண்ணீருண்டோ? எங்கணுங் குமாரசாமியார்; எக்கூட்டத்திலுங் குமாரசாமியார்; எந் நிகழ்ச்சியிலுங் குமாரசாமியார். தமிழ் நாட்டின் ஒவ்வோர் அணுவிலுங் குமாரசாமியார் தியாகமுந் தொண்டும் நுழைந்திருக்கின்றன என்று கூறுவது மிகையாகாது.

ஏறக்குறைய இருபதாண்டுகளாக ஓயாது தமிழ்நாட்டில் தொண்டாற்றியவர் நம் கோவலடிகள். அத்தொண்டரைத் தமிழ்நாடு எங்ஙனம் எளிதில் மறக்கும்? அவரது பிரிவால் தமிழ்நாட்டுக்குப் பெருங் குறைபாடு நேர்ந்திருக்கிறது. குறைபாடு ஒருவழியிலா? பலவழியிலும்; பல வழியிலும்.

அன்பர் குமாரசாமியார் இவ்வுலக வாழ்வை நீத்த போது அவர் உற்றிருந்த அகவை நாற்பத்தெட்டு. அவர், தென்பெண்ணை வளஞ்செய்யும் மணம்பூண்டியில், பார்க்கவ குலத்தில், தெய்விகன் மரபில், தமிழ்நாட்டுச் சத்தியாக்கிரகிகளுள் ஒருவராகிய மெய்ப்பொருள் நாயனர் வழியில் தோன்றியவர். அவர், திருக்கோவலூரில் பேர்பெற்ற வக்கீலெனப் பெயர் தாங்கியிருந்த இராமசாமிப் பிள்ளையின் புதல்வர்.

கோவலடிகள் இளமையில் ஆங்கிலப் பள்ளியில் பயின்ருர்; பின்னர்த் தமிழ்நூல் பல கற்ருர். அவரைச் சிவநெறியில் திருப்பியவர் இராமலிங்க சுவாமிகளின் அடித்தொண்டர் காலஞ்சென்ற கந்தசாமிப் பிள்ளையவர்கள். குமாரசாமியார் தமக்குகந்த ஆசிரியராகக் கொண்ட பெரியார் திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகள்.

அன்பர் குமாரசாமியார்க்கு இளமையிலேயே தொண்டின்மீது தணியா வேட்கையுண்டு. அவர் இளமைப் பருவத்திலேயே தமது மணம்பூண்டியில் தொண்டாற்றப் புகுந்தார். மணம்பூண்டி பால பக்தஜனசபை, பிரமஞான சங்கம் முதலிய சபைகள் குமாரசாமியாரால் காணப்பெற்றன.

பார்க்கவகுல சங்கம் என்னும் பெருஞ் சங்கமும் அன்பர் குமாரசாமியார் முயற்சியால் நிறுவப்பெற்றது.

திருவாளர் குமாரசாமியார் சைவசித்தாந்த மகாசமாஜத்தில் சேர்ந்து புரிந்த தொண்டிற்கோரளவில்லை. 1913-ம் ஆண்டில் காஞ்சிபுரத்தில் கூடிய சைவசித்தாந்த மகா சமாஜ ஆண்டு விழாவில் கோவலடிகள் நிகழ்த்திய சொற்பெருக்கு அவரை உலகறியச் செய்தது. அச்சொல் முழக்கம் இன்னும் எமது செவியில் ஒலித்துக்கொண்டிருக்கிறது.

அன்பர் குமாரசாமியார் சொற்பொழிவைப் பலர் போற்றிப் புகழ்ந்தமைக்குக் காரணமென்னை? அவரது சொற்பொழிவில் சமரச மணங் கமழ்ந்தமையாகும். அவர் நெற்றியில் திருநீறு ஒளி செய்யும்; கழுத்தில் கண்டிகை மிளிரும். பார்வைக்குப் பழைய வைதிகப் புழுங்கல்போல அவர் தோன்றுவார். அவரது கொள்கையோ சமரசம்; சமரசம். சாதி அவர்க்குச் சூந்யம். சமயவெறி அவர்க்குப் பெரும்பகை. அவரது சைவம் சமரச சைவம். கிறிஸ்து, புத்தர் முதலிய பெரியோர்களிடத்தும் அவர் அன்புசெலுத்தி வந்தார்; கிறிஸ்துவ புத்த கூட்டங்களிலும்போந்து தொண்டாற்றுவார். ஆதிதிராவிடர்களை அவர் எப்பொழுதும் அந்நியராக நினைந்ததில்லை. கோவலடிகள் தமது பதியின் சுற்றுப் பக்கத்துள்ள ஆதிதிராவிடருடன் சகோதரரெனப் பழகி வந்தார். குமாரசாமியார் வாழ்நாளில் பூண்டிருந்த சமரச ஒழுக்கத்தை, அவருடல் அடக்கம் செய்யப்பெற்ற வேளையில், இடுகாட்டில் குழுமியிருந்த மக்கள் கூட்டம் இனிது புலப்படுத்தியது. ஐரோப்பியக் கிறிஸ்துவர், இந்தியக் கிறிஸ்துவர், இஸ்லாமானவர், சைவ வைணவர் முதலிய எல்லாரும் ஆண்டு ஈண்டியிருந்தனர். ஆதிதிராவிட சகோதரர்கள் கசிந்து கசிந்துருகி ஆண்டவனை வழுத்தியது ஆகாயத்தையும் பிளந்திருக்கும். அன்று மணம்பூண்டி, குமாரசாமியாரின் சமரச மணத்தைப் பூண்டிருந்தது.

திரு. குமாரசாமியார் உடலையாதல், பொருளையாதல், உயிரையாதல் பொருளாக மதித்து வாழ்வு நடாத்தினு

ரில்லை. அவர் ஓய்வின்றி நிகழ்த்திவந்த தொண்டே அவரைப் பெருநோயாகப் பீடித்து, இறுதியில் அவர் உயிரையும் உண்டது. இவ்வுண்மை உலகறிந்தவொன்று. நோயின் பொருட்டாதல் அன்பர் குமாரசாமியார் ஓய்வு பெற்றதுண்டோ? நோயுடன் பல இடங்கள் செல்வார்; பேசுவார். பேச்சென்றால் பேச்சா? இரண்டு மூன்று மணி நேரம் கடல்மடை திறந்த பேச்சன்றோ நண்பர் பேச்சு? அப்பேச்சும் அடங்கிற்று.

குமாரசாமியார் சொல்லமிழ்தைப் பருகப் பல்லாயிரம் அன்பர்கள் கூட்டங் கூட்டமாகத் திரள்வார்கள். அவர்கள் 'குமாரசாமியார் சொற்பொழிவு எப்பொழுது; எப்பொழுது' என்று நாலு பக்கங்களிலுஞ் சுற்றி வருவார்கள். சங்கத்தார்கள் பெரிதும் குமாரசாமியார் பெயரை நிகழ்ச்சி முறையில் இறுதியிலே பொறிப்பது வழக்கம். குமாரசாமியார் மேடைமீது போந்து நின்றதும் - 'ஆனைமுகன், ஆறுமுகன்' என்னும் வாழ்த்தைத் தொடங்கியதும்-மக்கள் கடல் அலையற்றதாகும். குமாரசாமியார் வாய்திறப்பார். சொற்களும், சொற்றொடர்களும், எதுகைகளும், மோனைகளும் பிறவும் புற்றீசல்போலக் கிளம்பும். அவைகள் அவர்க்கு ஏவலாளர்போல் பணிசெய்யும். அச்சொற்பெருக்குத் திறத்தை என்னென்பேம்! என்னென்பேம்!! அதை, உயர்மலை உச்சியினின்றும் முடுகிஎழுந்து இழிதரும் அருவி என்று அறைவதா? பாபநாசச் சாரலென்று பகர்வதா? கோடைஇடி யென்று கூறுவதா? கடல்மடையென்று கழறுவதா? பெரும் புயல் மழையென்று பேசுவதா? இப்பெயர் ஒவ்வொன்றும் குமாரசாமியாருக்கு ஒவ்வோரிடத்தில் வழங்குவதுண்டு. நேரமோ இரண்டு மணி நேரம் மூன்று மணி நேரம்!

தமிழ்நாடு குமாரசாமியாரினுங் கற்றவரைப் பெற்றிருக்கலாம்; மற்றவரைப் பெற்றிருக்கலாம்; குமாரசாமியாரைப் போன்ற கோடையிடி நாவலரைப் பெற்றிருக்குமோ என்று ஐயுறுகிறோம். அவரது முப்பது நாற்பதாவது வயதுப் பேச்சுகள் எமது உள்ளத்தில் படிந்து கிடக்கின்றன. அவைகளை உன்னும்போது குமாரசாமியாரின் பிரிவால் விளைந்த குறைபாடு நன்கு புலனாகிறது.

நாற்பது வயதுதொட்டு நோய் அவரை அடர்ந்து முடுக்கலாயிற்று. நோய் அவரை மேடையில் ஒன்றுஞ்செய்வ தில்லே. குமாரசாமியார் இடிமுழக்கம் அவர் நோயையும் நடுக் குறச் செய்யும். பின்னே நோய் அவரைப் பழிவாங்கும். படுவார் பாடு. இவ்வாறு பட்டுப் பட்டு அன்பர் குமாரசாமி யார் அகாலத்தில் இன்னுயிர் நீத்தார். தமிழ்நாடே ! குமார சாமியாரைப் போன்ற ஒரு நாவலரை என்றே பெறுவை !

கோவலடிகள் நீண்ட நேரம் பேசுவார். நீண்டநேரம் அவர்க்கு நொடிப்பொழுதுபோலத் தோன்றும். அடிகள் சொற்பெருக்கு மக்கள் கருத்தை வேறிடத்திற்குச் செலுத் துமோ ? வேறிடத்திற் செலுத்தக் குமரர் சொல் விடுமோ ? குமரர் சொற்பெருக்கில் நகைச்சுவை முதலியன, 'சந்தனமும் சண்பகமும் கற்பகமும் தேமாவும் தீம்பலவும் ஆசினியும் அசோகும் கோங்கும் வேங்கையும் குரவும்' என்ன ஊடே ஊடே மிதந்தோடலான், எவருஞ் சலிப்புணர்வதில்லே. மேலும் மேலும் அவர் சொல்லமிழ்தைப் பருகவே அன்பர் கள் விழைவார்கள். அந் நகைச்சுவையை நாடு இனி என்றே பருகும் ?

மணம்பூண்டி குமாரசாமியார் குணநலமுடையார். அவர் என்றும் முகமலர்ச்சியுட னிருப்பார். அவர்மாட்டு இயல்பாக அமைந்திருந்த நகைச்சுவை அவரது உள்ள நிலேயைப் புலப் படுத்துவதொன்று. அவர் எவர்மாட்டுங் காழ்ப்பு பகைமை கொள்வதில்லே. அவர், நட்புக்குரியவர் ; ஒப்புரவாளர்; விருந் தோம்பு நீரார் ; எவர்க்கும் எளிதில் வயப்படுவோர். சுருங் கக் கூறின் அவரைக் குழந்தைபோன்றவர் என்று கூறலாம். அன்பர் குமாரசாமியார் மணம்பூண்டியில் ஓர் ஆசிரமங் கண்டு, அதன் வாயிலாகத் தொண்டு செய்ய முயன்று வந் தார். அம்முயற்சியின் பயனுக 'ஞானியார் ஆசிரமம்' என் ருென்று காணப்பட்டிருக்கிறது. அதற்கென ஒரு நிலேயம் எழுப்பப்பட் டிருக்கிறது. அது முற்றுப்பெறுதற்குள் குமாரசாமியார் பருவுடல் மறைந்தது மணம்பூண்டியின் தவக்குறை !

குமாரசாமியார் கடவுளை நினைந்து, கடவுள் திருவருட்டிறத்தைப் பேசி, கடவுள் தொண்டைச் செய்து இன்னுயிர் துறந்தார். ஒருவர், தம்வாழ்வில் எந்நெறிபற்றி நிற்கிருரோ, அந்நெறியின் பயன், அவரது வாழ்வு முடிவில் விளங்குதல் ஒருதலை. குமாரசாமியார் சமயவாழ்வு, அவரது இறுதியில் பெரும்பயன் தந்தது. கிறிஸ்து பெருமான்பால் அன்பு வாய்ந்த அடியார்கள் சூழலிடை அன்பர் வதியும் பேறுபெற்ருர். அவர்கள் கடவுளை நோக்கி வழுத்திய வாழ்த்துரைகளும், பிறவும் பிறவிப் பிணிக்கு மருந்தாயுதவின. அன்பர் குமாரசாமியாரும் அவர்களுடன் கலந்து ஆண்டவனைப் போற்றினர். முடிவில் நஞ் சைவப் பெரியார்,

'என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே இருங்கடல் வையத்து
முன்னை நீபுரி நல்வினைப் பயனிடை முழுமணித் தாளங்கள்
மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி வாணனை வாயாரப்
பன்னி யாதரித் தேத்தியும் பாடியும் வழிபடு மதனலே'

என்னுந் தேவாரம் ஓதி, ஆண்டவன் திருவடி நீழலையடைந்தார். அவரது வாழ்வுத்தொண்டு அவர்க்கு உற்றவேளையில் உறுதுணை செய்தது.

'அங்கத்தை மண்ணுக் காக்கி ஆர்வத்தை உனக்கே தந்து
பங்கத்தைப் போக மாற்றிப் பாவித்தேன் பரமா நின்னைச்
சங்கொத்த மேனிச் செல்வா சாதல்நாள் நாயேன் உன்னை
எங்குற்ருய் என்ற போதால் இங்குற்றேன் என்கண் டாயே'

எனவரூஉம் அப்பர் உரைக்கு மணம்பூண்டியார் இலக்கியமானர்.

தமிழ்நாட்டின் நாலு பக்கங்களிலும் போந்து கர்ச்சித்த சிங்கம் - முழங்கிய இடி - பொழிந்த மழை - தங்கு தடையின்றிக் கிழித்தோடிய கடல்மடை - மறைந்துவிட்டது. சைவ உலகம் ஒரு சிவனடியாரை இழந்தது ; தமிழுலகம் ஒரு நாவலரை இழந்தது ; காந்தியம் ஒரு தமிழக் காந்தியை

இழந்தது; இல்லறம் ஓர் இல்லற ஞானியை இழந்தது; நாம் பெறற்கரிய ஒரு நண்பரை இழந்தோம்.

சமரசம், தியாகம், தொண்டு, குணநலன் முதலிய எல்லாவற்றிலுஞ் சிறந்து விளங்கிய குமாரசாமியாரைப் பிரிந்து வருந்தும் அவர்தம் புதல்வர்கட்கும், அவர்தம் அருமை மனைவியார்க்கும் எம்மொழியால் ஆறுதல் கூற வல்லேம்! நமது மனமார்ந்த அநுதாபத்தை அவர்க்குத் தெரிவித்துக் கொள்கிறேம்.

தொண்டே புரிந்து தொண்டராய் வாழ்ந்த நண்பர் குமாரசாமியார் இன்னுயிர் ஆண்டவன் திருவருள் ஒளியில் அமைதி பெறுவதாக. சாந்தி! சாந்தி! சாந்தி!

வழங்குகின் றுய்க்குன் னருளா ரமுதத்தை வாரிக்கொண்டு
விழுங்குகின் றேன்விக்கி னேன்வினை யேன்என் விதியின்மையால்
தழங்கருந் தேனன்ன தண்ணீர் பருகத்தந் துய்யக்கொள்ளாய்
அழுங்குகின் றேன்உடை யாய்அடி யேன்உன் னடைக்கலமே.

—திருவாசகம்

(1–5–1929)

## யதீந்திரநாத் தாஸ்

இந்திய வீரர் - யதீந்திர தாஸர் - தமது இன்னுயிர் துறந்தார். யதீந்திரர் ஓர் இளைஞர்; மாணுக்கர். ஓரிளைஞர் தமது இளமை, எதிர்கால வாழ்வு, பேர், புகழ், உலக இன்பம் முதலியவற்றைப் பொருட்படுத்தாது உயிர்துறந்தார். அவர் அறுபத்து மூன்றுநாள் உண்ணுவிரதமிருந்து உயிர்துறந்தார். அறுபத்து மூன்றுநாள் எவ்வித உணவுமின்றிக் கருவி கரணங்களெல்லாம் நாளுக்குநாள் இறுக இறுக, ஒருவர் உயிர்துறந்ததை எந்நெஞ்சால் நினைப்பது? எவ்வாயால் சொல்வது? எக்கையால் எழுதுவது? யதீந்திரர் பிரிவைக் குறித்து அழாத கண்களுமுண்டோ? உருகாத நெஞ்சமுமுண்டோ? மக்கள் உடலெல்லாம் உள்ளமா யுருகுகின்றன.

யதீந்திரர் கொண்ட விரதம் எத்தகையது? விரதமோ உண்ணாவிரதம் - தண்ணீரும் அருந்தா விரதம். நாளோ இரண்டு மாதம் மூன்று நாள். இத்துணைநாள் யதீந்திரரின் உட்கருவிகள் எப்படிப் படிப்படியாக இறுகி இறுகி, தேய்ந்து தேய்ந்து, உருகி உருகி, மரணத்தைக் கூட்டியிருக்கும்! இறுகும் ஒவ்வொரு படியிலும், தேயும் ஒவ்வொரு நிலையிலும், உருகும் ஒவ்வொருபோதும், எத்தகை நோய் - எத்துணை நோய் - யதீந்திரரை வருத்தியிருக்கும்! ஈரல் சவலை ஒருபால்; அதன் இயக்கங் குன்றல் மற்றொருபால். ஜீரணக் கருவித் தளர்ச்சி ஒருபக்கம்; அவைகளின் வறட்சி இன்னொரு பக்கம். இரத்தங் கெடுதல் ஒருபாங்கர்; அதன் ஓட்ட நிறுத்தம் வேறொரு பாங்கர். இன்னோரன்ன துன்பத்திடை மூழ்கி நரப்புக்கட்டுகள் படிப்படியாகக் குலையக் குலைய, நுரையீரல் தன் செயலற்றுத் துவளத் துவள, மூளையின் அசைவு குறையக் குறைய, இதயம் விரிந்து விரிந்து இளக இளக, தோல் வற்றி வற்றி மரக்க மரக்க எங்ஙனம் ஆண்டவன் படைப்பு என்புக்கூடாகி யிருக்கும்! நேயர்களே! அந்நிலையை நினைந்து பாருங்கள்.

இத் துன்பநிலைகளை இன்ப நிலைகளாகக்கொண்ட ஒருவரை வீரரென்று போற்றுவதா? தியாகியென்று ஏத்துவதா? ஒருபெரும் வீரரை - உடல் பொருள் ஆவி மூன்றையும் பொருளாகக் கொள்ளாத தியாகியை - நமதுநாடு இழந்தது.

யதீந்திரநாத் தாஸர், வீர வங்காளமளித்த ஓர் இளைஞர்; ஒத்துழையாமையில் ஈடுபட்டுத் தொண்டாற்றியவர்; தேசத்தின் பொருட்டு முன்னரே சிறைக்கோட்டம் நண்ணியவர். அவர்மீதும் வேறு சிலர்மீதும் அரசாங்கத்தார் வழக்குத் தொடுத்திருப்பதும், அவ்வழக்கு லாகூரில் நடைபெற்று வருவதும் நேயர்கட்குத் தெரியும். சிறையின் நடைமுறை ஒழுங்குபடும்வரை உண்ணாவிரதமிருக்க யதீந்திரர் உள்ளிட்ட சிலர் உறுதிகொண்ட வரலாறும் அன்பர்கட்குத் தெரியும். அவ் வுண்ணாவிரதம் எவ்வாறு முடிந்தது? அந்தோ அந்தோ! அஃது உயிர்த் துறவாக முடிந்தது.

குறைபாடுகளை ஒழுங்குபடுத்தக் கொள்ளும் முறைகள் பலதிறத்தன. அவைகளுள் தலைசிறந்ததும், நாகரிகமானதும் எது? உண்ணாவிரதம் என்று சொல்ல வேண்டுவதில்லை. வேறு பல மறத்துறைகட்குப் பொறாமை, வெகுளி, காழ்ப்பு, பிறரைத் துன்புறுத்தல் முதலியன வேண்டும். உண்ணாவிரதமெனும் அறத்துறைக்கோ — அப்புனித முறைக்கோ — பொறுமை, தியாகம், அஞ்சாமை, தான் வருந்தல் முதலியன வேண்டும். அறப்போருக்கு ஆத்மசக்தி அடிப்படையாக இருத்தல் வேண்டும். இதற்கு அயர்லாந்தில் இலக்கியராக மாக்ஸ்வினி விளங்குகிறார். நமது நாட்டில் யதீந்திரர் விளங்குகிறார்; யதீந்திரரை முடிவுவரை தாங்கி நின்றது, துன்பம் பொறுத்தலெனும் ஆத்ம சக்தியே.

'யதீந்திரர் உண்ணாவிரதமிருந்தார்; இறுதியில் இவ்வுலக வாழ்வையும் நீத்தார். ஆனால் அதிகாரவர்க்கம் அசைந்ததோ; இரக்கங் கொண்டதோ' என்று சிலர் நினைக்கலாம். அதிகாரவர்க்கத்தின் அசையாமையைப் பற்றியாதல் இரக்கங் கொள்ளாமையைப் பற்றியாதல் நமக்குக் கவலையில்லை.

யதீந்திரரது உண்ணாவிரதம், பாரத சக்தியை எங்ஙனம் எழுப்பி இருக்கிறது? யதீந்திரரது உயிர்நீக்கம் நாட்டை எப்படித் தட்டி எழுப்பியிருக்கிறது? இமயம் முதல் கன்னியாகுமரிவரை யதீந்திரரின் நினைவு; யதீந்திரரின் கூட்டம். லாகூர் சிறையில் ஒரு மூலையிற் கிடந்த யதீந்திரர் இப்பொழுது எங்கும் விளங்குகிறார். இதுவே யதீந்திரர் கொண்ட உண்ணாவிரதத்தின் பயன் என்க.

யதீந்திரர் வாயிலாக எழுந்த பாரதசக்தியைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டுவது தேசபக்தர் கடமை; தேசத்தார் கடமை. ஒருவர் உண்ணாவிரதம் - ஒருவர் ஆத்ம சக்தி - ஒருவர் உயிர்த்துறவு - எவ்வளவு எழுச்சியை உண்டுபண்ணியிருக்கின்றன. இவ்வளவு எழுச்சியைச் சட்டசபைகளால், தீர்மானங்களால், பிற மறத்துறைகளால் உண்டுபண்ணுதல் இயலுமோ? யதீந்திரர்பொருட்டுக் கூட்டங்கள் ஏராளமாகக் கூடுகின்றன. சட்டசபை முழக்கம் வானளவு செல்கிறது.

தீர்மானங்கள் மலை மலையாகக் குவிகின்றன. இவைகளை நிகழ்த்திவிட்டுப் பின்னே பழையபடி அதிகாரவர்க்கத்துடன் ஒத்துழைத்தல் யதீந்திரர் தியாகத்துக்குக் கைம்மாறு செலுத்துவதாகாது. யதீந்திரர் ஆவி இவைகள்மீது வேட்கை கொண்டு நிற்கவில்லை. அவர் ஆவி நாட்டின் விடுதலைமீது வேட்கைகொண்டு நிற்கிறது.

விடுதலைக்கு வழி என்னை? கூட்டங் கூடுவதா? சட்ட சபை நடைமுறையை ஒத்தி வைப்பதா? தீர்மானங்களை நிறைவேற்றுவதா? இவைகள் பழம் பாடங்கள். பின்னை என் செய்தல் வேண்டும்? அதிகாரவர்க்கத்துடன் அறவழியில் ஒத்துழையாமை கொள்ளல் வேண்டும்.

ஒத்துழையாமையில் உறைந்து நிற்கும் காந்தியடிகளைச் சிலர் பித்தரென்று கூறுகிறார். காந்தியடிகள் பித்தரல்லர். அவர் வழியே நல்வழி. காந்தியடிகள் விதைத்த அஹிம்சா தர்ம விதை நுண்ணுலகில் நாளுக்குநாள் வளர்ந்தே வருகிறது. ஒரு யதீந்திரர் உண்ணாவிரதம், உலகத்தைக் கவர்ந்திருப்பதை உணர்வோர், காந்தியடிகள் அறத்தைக் குறை கூறார். காந்தியடிகளின் ஆன்ம சக்தி, யதீந்திரர் வாயிலாக நாட்டுக்குப் புத்துயிரளித்திருக்கிறது. சட்டசபைத் தேர்தலும், நுழைவும், பேச்சும், பிறவும் என் செய்யும்? ஒன்றுஞ் செய்யா. ஆகலான், யதீந்திரரின் பிரிவை ஒரு முன்னிலைச் சுட்டாகக் கொண்டு, பொதுவாக எல்லாரும், சிறப்பாகச் சுயராஜ்யக் கட்சியாரும் சட்டசபைகளினின்றும் வெளியேறல் வேண்டும். சுயராஜ்யக் கட்சியார் இன்னும் சட்டசபைகளில் நுழைந்திருப்பது தேசத்திற்குக் கேடு செய்வதாகும். இலட்சுமணபுரியில் கூடப்போகும் அகில இந்தியக் காங்கரஸ் இதுகுறித்து நல்வழி காட்டுமென்று நம்புகிறோம். ஒத்துழையாமையை மீண்டும் புதுக்குவது யதீந்திரர் ஆவிக்கு நல்விருந்தளிப்பதாகும். யதீந்திரர் பிரிவை முன்னிட்டுப் பஞ்சாப் சட்டசபையினின்றும் விலகிய டாக்டர் ஆலம் அவர்கட்கும், டாக்டர் கோபிச் சந்த் அவர்கட்கும் நமது வணக்கத்தைச் செலுத்துகிறோம்.

தேசபக்தர்களே! யதீந்திரர் வாயிலாக ஆண்டவன் நாட்டில் எழுச்சியை உண்டுபண்ணியிருக்கிருன். அவ்வெழுச்சியை மேன்மேலும் வளர்க்க எழுக; எழுக. பொறுமைப் போரே உங்களுக்குரியது; உங்கள் நாட்டுக்குரியது. சட்டசபை வாயிலாகவோ பதவியேற்றல் வாயிலாகவோ உங்களால் ஒன்றுஞ்செய்தல் இயலாது. வெறுங்கூச்சல் வெறுந் தீர்மானம் முதலியன இனி வேண்டாம்; வேண்டாம். ஒவ்வொருவரும் யதீந்திரராக எழுங்கள்; காந்தியடிகள் வழி நிற்க முயலுங்கள்.

பாரதமக்களே! நாட்டின் நிலையை உன்னுங்கள். தற்போதுள்ள ஆட்சிமுறையின் நிலையை ஓருங்கள். ஒரு சிறு சிறைக்கோட்டத்தின் நடைமுறையை ஒழுங்குபடுத்த அரும் பெரும் உண்ணு விரதமும் உயிர்த் துறவும் நிகழ்ந்து போயின. இன்னுமா உங்கட்கு உறக்கம்? யதீந்திரர் எவர் பொருட்டு உயிர் துறந்தார்? தம்பொருட்டா? கூர்ந்து கூர்ந்து சிந்தியுங்கள். யதீந்திரர் உங்கள் பொருட்டு உயிர் துறந்தார்; அறுபத்து மூன்றுநாள் உண்ணுவிரத மிருந்து கருவிகரணங்களெல்லாம் நாளுக்குநாள் இறுகி இறுகித், தேயத் தேய, வதைந்து வதைந்து உயிர்துறந்தார். ஒருவர் அவ்வாறு உங்கள் பொருட்டு உயிர்துறப்ப, நீங்கள் வாளா கிடத்தல் அழகோ? அறமோ? கட்சிப் பிணக்குகளை ஒழித்துக் காந்தியடிகளின் தலைமையின்கீழ் எல்லாரும் ஒன்ற எழுங்கள்; எழுங்கள்.

அதிகாரவர்க்கமே! ஒரு யதீந்திரர் போய்விட்டாரென்று கருதல் வேண்டாம். இன்னும் ஒன்பது கோடி யதீந்திரர்கள் இருக்கிருர்கள். எமது பாரதத் தாய், தன் விடுதலையின் பொருட்டுத் தனது மக்கள் சிறை புகுந்ததைக் கண்டாள்; நாடு கடந்ததையுங் கண்டாள்; தூக்கேறியதையுங் கண்டாள்; இப்பொழுது உண்ணுவிரதத்தால் உயிர்துறந்ததையுங் கண்டாள். இன்னுங் காணுங் காட்சியுளதோ? இந்திய மக்களாகிய நாங்கள் அறப்போரின் வழியே எங்கள் உள்ளக் கிடக்கையைக் கிளத்தி வருகிருேம். இதைவிட நாகரிகப் போர் ஒன்றுளதோ?

எல்லாம்வல்ல இறைவனே ! தாய்நாட்டின் பொருட்டுத் தேசபக்தர் பலர் பலவழியிலும் பாடுபடுகிறார். வங்காள இளைஞர் ஒருவர் தேசத்துக்காக உண்ணுவிரதமிருந்து உயிரையுந் துறந்தார். வேறு என் செய்யவல்லேம் ! உன் திருவருள் வேண்டும் ; வேண்டும்.

யதீந்திரர் இன்னுயிர் ஆண்டவன் அருளொளியில் அமைதிபெற்று நிலவுவதாக. (18-9-1929)

## சிங்கம் வீழ்ந்தது

இந்தியச் சிங்கம் - மௌலானு முகமத் அலி - இங்கிலாந்தில் உயிர் துறந்தார் என்று கேட்டு ஆறாத்துயருறுகிறோம். 'உரிமை இந்தியாவிற்குத் திரும்பிச் செல்வேன் ; இல்லையேல் அடிமை இந்தியாவிற்குத் திரும்பேன் ; இங்கிலாந்திலேயே உயிர்துறப்பேன்' என்று மொழிந்தபடியே மௌலானு முகமத்அலி இன்னுயிர் துறந்தார். வட்டமேஜை மகாநாடு எவ்விந்தியாவை ஈனும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ ?

எச்சமயத்தில் மௌலானு முகமத்அலி இவ்வுலகவாழ்வு நீத்தார் ! வட்டமேஜை மகாநாட்டில் தலைகாட்டிய ஹிந்து - முஸ்லிம் வேற்றுமையை ஒன்றுபடுத்த மௌலானு பாலங் கட்டுதற்குக் கால்கொண்ட வேளையில் அவர் இவ்வுலக வாழ்வை நீத்தார். இந்தியாவின் துரதிர்ஷ்டம் !

பாரதமாதாவின் அடிமைத் தளையை உடைத்தெறியப் பிறந்தவருள் மௌலானு முகமத்அலியும் ஒருவர். முகமத்அலி உரிமை விதையில் தோன்றியவர் ; உரிமைப் பாலை உண்டவர் ; உரிமைக் காற்றில் வளர்ந்தவர். அவர் எண்ணியது உரிமை ; அவர் பேசியது உரிமை ; அவர் நிகழ்த்தியது உரிமைப்போர். அவரது வாழ்வே உரிமைவாழ்வாக விளங்கிற்று. அவர் இறுதிக்காலத்தில் கூறியதென்னை ? 'உரிமை

இந்தியாவிற்கே செல்வேன் ; இல்லையேல் இங்கிலாந்தி லேயே உயிர் துறப்பேன்' என்றன்றோ கூறினார் ? அவரது உரிமை வேட்கையை என்னென் றியம்புவது ? அப் பெறற்கரிய உரிமைச் செல்வத்தை நாடு இழந்தது.

மௌலானாவின் வேட்கைக்கேற்ற நெஞ்சும், நெஞ்சுக் கேற்ற நோக்கும், நோக்குக்கேற்ற நடையும், நடைக்கேற்ற பேச்சும், பேச்சுக்கேற்ற செயலும் அவர்பால் அமைந்திருந் தன. அவரது உரிமை வேட்கையையும் - அஞ்சாநெஞ்சை யும் - சிங்க நோக்கையும் - பீடுநடையையும் - மின்னொளியை யும் - கோடை இடியையும் - பெரும் புயலையும் ஒருங்கே திரட்டி எழுப்பவல்ல பேச்சையும், விடுதலைப் போரையும் நாடு இனி என்றே கேட்கும் ? என்றே காணும் ? என்றே பெறும் ? மௌலானாவின் பிரிவால் நாட்டுக்குற்ற நட்டம் அளப்பரிது. அதற்கு ஈடுகொண்டல் இன்றில்லை.

மௌலானா முகமத்அலி இளமையில் கற்பன கற்றுக் கேட்பன கேட்டவர் ; அவர் இக்காலத்துக்கு இன்றியமை யாத ஆங்கிலத்தில் புலமை பெற்றவர். பட்டதாரி ; சமயக் கல்வியும் உடன் பெற்றவர். உரிமைப் போராட்டத்தில் அவ ரைத் தலைப்படுத்தியது அவரது சமயக் கல்வியாகும்.

மௌலானா முகமத்அலி பட்டதாரியாயிருந்தும், அதிகார வர்க்கத்தின் அடிவருடி உத்தியோக வேட்டையாட விரும் பினாரில்லை. அவர் நாட்டின் அடிமைத்தளையை உடைத்தெறி யும் முயற்சியிலே முனைந்து நின்றார். அடிமையை அறுத் தொழிப்பதில் அவரது வாழ்வு கழிந்தது.

உரிமை உணர்வுள்ள இடத்தில் தியாகமிருத்தல் உண்மை. மௌலானாவின் உரிமை வேட்கை அவரைத் தியாகமூர்த்தி யாக்கிற்று. மௌலானா 'காம்ரேட்' 'ஹாம்தார்த்' என்னும் பத்திரிகைகள் நடாத்தி நாட்டைத் தட்டி யெழுப் பியதும், அதன் பயனாகவும், வேறு சில காரணம்பற்றியும் அரசாங்கத்தார் அவர் தஞ் சொத்துக்களைப் பறிமுதல்செய்து அவரைக் காப்பில் வைத்ததும் நேயர்கட்குத் தெரியும். ஐரோப்பாப் போர்க்கால முழுவதும் நமது இந்திய சிங்கம்

காப்பிலே வைக்கப்பட்டிருந்தது. தேசத்தின் பொருட்டும், மார்க்கத்தின் பொருட்டும் தமக்கிருந்த பொருளெல்லாவற்றையும் இழந்த தியாகமூர்த்தி நம் மௌலானு முகமத்அலி.

பொருளிழப்பும், காப்பு வாழ்வும் மௌலானுவை அதிகாரவர்க்கத்துக்குப் பணியச் செய்யவில்லை. 1919-ம் ஆண்டில் அவரும் அவர் தமையனும் காப்பினின்றும் விடுதலையடைந்தனர். விடுதலை அடைந்ததும் அலிசகோதரர்கள் யாண்டுச் சென்றார்கள் ? அதுபோழ்து அமிர்தசரசில் கூடியிருந்த காங்கிரஸ் ‘வீட்டிற்கு’ நேரே போந்தார்கள். அங்கே அப்பொழுது நமது மௌலானு முகமத்அலி நிகழ்த்திய சொற்பெருக்கில் மிடைந்தெழும்பிய வீரத்தை என்னென்று எழுதுவது ? பாஞ்சாலப் படுகொலை கனன்றெரிந்த இடம் அவ்விடம் ; காலமும் அக்காலம். அவ்விடத்தில் அக்காலத்தில் மௌலானுவின் வீரப்பேச்சு நெய்யாகிக் கனன்றிருந்த நெருப்பை எழுநாவிட் டெரியச்செய்தது.

பின்னே எழுந்த ஒத்துழையா இயக்கத்தில் மகாத்மா காந்திக்கு வலதுபுறமாக நின்று மௌலானு முகமத்அலி தொண்டாற்றியது புத்தம் புதிதாக நேயர்கள் நெஞ்சில் நிலைபெற்றிருக்கும். இமயம் முதல் கன்னிவரை, இரவு பகல், இடையிடை ஊண் உறக்கமுமின்றி, காற்றெனத் திரிந்து, தமது கம்பீரத் தோற்றத்தாலும், நோக்கத்தாலும், பேச்சாலும் மக்களுக்குத் தேசபக்தியை ஊட்டியவர் நம் மௌலானு முகமத்அலி. அவர் தேசத்தின் விடுதலைக்கும், கிலாபத்தின் பெயரால் மார்க்கத்துக்கும் நிகழ்த்திய தொண்டு என்றும் மறக்கற்பாலதன்று.

ஒத்துழையா இயக்கத்தின் பயனுக மௌலானு முகமத்அலி சிறை சென்று வெளிவந்த சின்னுளுக்குள் டில்லியில் விசேஷ காங்கரஸ் கூடிற்று. அப்பொழுது ஒத்துழையாதார்க்கும் சுயராஜ்யக் கட்சியார்க்கும் பெரும் பிணக்கு நேர்ந்திருந்தது. சுயராஜ்யக்கட்சி தமக்குப் பிடியாதிருந்தும், நாட்டிடைத் தோன்றிய பிணக்கைத் தீர்க்கும்பொருட்டு மௌலானு முகமத்அலி ஒத்துழையாதார்க்குப் பலதிறச் சமாதானங்கூறி,

விசேஷ காங்கரஸை வெற்றிபெற நடப்பித்தார். பின்னே காக்கிநாடாவில் மௌலாஞ முகமத்அலி தலைமையிலேயே காங்கரஸ் கூடிற்று. ஆண்டும் புயல்கள் நாஞபக்கங்களி லுங் கிளம்பின. அவைகளே மிகத் திறம்பட அடக்கி, அமைதியுண்டுபண்ணி, மௌலாஞ நல்வழியில் காங்கரஸை நடாத்தினர்.

சுயராஜ்யக் கட்சியின் தோற்றங் காரணமாகவும், வேறு பல காரணங்களை யொட்டியும் நாட்டிடை ஆங்காங்கே வகுப் புப் பூசல் கனன்றெரியலாயிற்று. அக்கனலைக் கால தேச வர்த்தமான நிலைக்கேற்றவண்ணம் அவ்வப்போது தணிக்க வும் மௌலாஞ முகமத்அலி முயன்று வந்தார். நாட்டின் விடுதலைக்கு ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை இன்றியமையாதது என்று மகாத்மா காந்தி உணர்ந்து நடந்தது போலவே, மௌலாஞ முகமத்அலியும் உணர்ந்து நடந்து வந்தார். இஃது அவரது இயற்கை. இடையிடை அவரது இயற்கை யில் தத்தளிப்பு ஏற்பட்டதற்குக் காரணங்கள் சில இருக்க லாம்.

லாகூர் காங்கரஸ் கட்டளைவழி நின்று காந்தியடிகள் தொடுத்த போரில், மௌலாஞ முகமத்அலி கலவாது, பிரிட் டிஷ் அரசாங்கத்தார் அழைப்புக் கிணங்கி, இங்கிலாந்து நோக்கிஞலும், அவர் நெஞ்சம் நாட்டின் விடுதலையிலும், ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமையிலும் படிந்து கிடந்தது உண்மை. வட்டமேஜை மகாநாட்டில் அவர் பேசிய பேச்சு அவரது மனேநிலையைப் புலப்படுத்திற்று. அவர் இங்கிலாந்தில், 'உரிமை இந்தியாவையே நோக்குவேன், இல்லையேல் இங்கிலாந்திலேயே இறந்துபடுவேன் ; அடிமை இந்தியாவை நோக்கேன்' என்று மொழிந்ததும், 'நாங்கள் எவர் பிரதிநிதிகள் என்பது தெரியவில்லை' என்று பகர்ந் ததும், வட்டமேஜை மகாநாட்டில் எழுந்த ஹிந்து-முஸ்லிம் பிணக்கைப் போக்கக் கோலிய திட்டமும் அவரது மனே நிலையை உள்ளங்கை நெல்லிக்கனியெனப் புலப்படுத்து கின்றன. தேசபக்தர் யாண்டிருந்தா லென்ன? தேசபக்தி அவரை விடுத்து அகலாது.

மிக நெருக்கடியான வேளையில் - நோய்வாய்ப்பட்டிருந்த சமயத்தில்-மௌலானா முகமத்அலி இங்கிலாந்து நோக்கினார். அதனால் நாட்டுக்கு நலன் விளையுமென்று அவர் கருதி யிருக்கலாம். நலன் விளைவிக்கவே அவர் முயன்றார். 'உரிமை இந்தியாவைக் காணல் வேண்டும். இல்லையேல் இங்கிலாந்திலேயே உயிர் துறப்பேன்' என்று அவர் கூறியது தீர்க்கதரிசன மொழியாய்விட்டது. வட்டமேஜை மகாநாட்டில் மௌலானா போன்றார் எத்துணைப் பேரிருப்பர் என்பது உலகுக்குத் தெரியும்.

மௌலானாவின் பிரிவால் இந்தியாவிற்கும், முஸ்லிம் உலகிற்கும் பெருநட்டம் நேர்ந்தது. இந்தியா, தன் விடுதலையிலே தணியாக் காதல் கொண்டிருந்த ஒரு புதல்வரை-சிறந்த தேசபக்தரை - இழந்தது. முஸ்லிம் உலகம் ஒரு சமய பக்தரை - வீரரை - இழந்தது.

மௌலானா முகமத்அலி நாட்டு விடுதலை வேட்கையை எழுப்பிச் சென்றார்; அதை ஒவ்வொருவர் உள்ளத்திலும் பதிவித்துச் சென்றார். அவ்வேட்கையை வளர்த்து, நாட்டுக்கு விடுதலை தேடி, அவர் இறுதிக் காலத்தில் மொழிந்த 'உரிமை இந்தியா'வில் வாழ முயல்வது, அவர் தொண்டுக்குத் தேசத்தார் கைம்மாறு காட்டும் நினைவுக்குறி யாகும்.

கல்லெல்லாம் மாணிக்கக் கல்லல்ல. மனித ரெல்லாம் மனிதரல்லர். மௌலானா முகமத்அலி மனிதப் பிறவிக்குரிய வினைகளை நிகழ்த்தினார். முகமத்அலி செல்வஞ் சிறந்த குடும்பத்தில் பிறந்தார்; தேசத்தின்பொருட்டு அச் செல்வத்தை இழந்தார்; இழந்துஞ் சலிப்புறாது தேசசேவை செய்தார். இத் தியாகமூர்த்தியை அகாலத்தில் இழக்க நேர்ந்தமை குறித்து எவரே வருந்தார்? மௌலானா முகமத்அலியின் பிரிவு குறித்துப் பாரத நாடே வருந்துகிறது; முஸ்லிம் உலகம் வருந்துகிறது; அவர்தம் நண்பர் உற்றார் உறவினர் வருந்துகிறார்; எல்லாரும் வருந்துகிறார்; எல்லாம் வருந்துகின்றன.

தம்பியாரை இழந்த தமையனார் நிலை எவ்வாறிருக்கும்? மௌலானா முகமத்அலியும் மௌலானா ஷவுக்கத் அலியும் சகோதர ஒற்றுமைக்கும் நேயத்துக்கும் இந்நாளில் எடுத்துக் காட்டாக விளங்கியவர்; ஓருயிர் ஈருடலாக வாழ்ந்தவர்; அலி சகோதரர் என்றே வழங்கப் பெற்றவர். ஒருவர் பிரிவு மற்றொருவர்க்கு எப்படியிருக்கும்?

சிங்கமுகன் இறந்துபட்ட பொழுது, சூரபன்மன் அழுத அழுகை இங்கே நினைவிற்கு வருகிறது.

'பொன்னை நிலந்தன்னைப் புதல்வர்களை மங்கையரைப்
பின்னை யுளபொருளை யெல்லாம் பெறலாகும்
என்னை யுடைய இளையோனே இப்பிறப்பில்
உன்னை யினிப்பெறுவ துண்டோ வுரையாயே'

உடன்பிறப்பை மீண்டும் பெறல் அரிது; அரிது. மௌலானா முகமத்அலி பெறற்கரிய உடன்பிறப்பு. அவ் வுடன்பிறப்பை இழந்த பெரிய அண்ணா ஷவுக்கத் அலிக்கு எம்மொழியால் ஆறுதல் கூறவல்லேம்?

மௌலானா முகமத்அலி நண்ணிய துறைகளிலெல்லாம் தாமும் நண்ணி, அவர்தம் வாழ்க்கைக்கு உற்ற துணையா யமர்ந்த கற்புக்கரசியின் துயரொழிக்கத் தக்க மருந்தும் உண்டோ? மற்றவர் படுந்துயருக்கும் ஆறுதல் கூறல் இயலாது. மௌலானா முகமத் அலியின் தமையனார்க்கும், மனைவியார்க்கும், மற்றவர்க்கும் 'எல்லாம் ஆண்டவன் செயல்' என்று நமது மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

மௌலானா முகமத் அலியின் இன்னுயிர் ஆண்டவன் ஒளியில் அமைதி பெறுவதாக. சாந்தி! சாந்தி! சாந்தி!

(7-1-1931)



